## அம்பிகையின் உபாஸனுபேதங்கள்.

அம்பாளுடைய உபாஸனையானது பலவகைப்பட்டது. அவைகளில் முக்கியமானவை இரண்டு—தக்ஷிணமார்க்கம், வாமமார்க்கம். அவையிரண்டும் முறையே ஸமயமார்கமென்றும் கௌலமார்கமென்றும் சொல்லப்படும். கௌலமார்கத்திலும் பூர்வகௌலம், உத்தரகௌலமென்று இரு பிரிவுகளுண்டு. அம்பாளுடைய பூஜையானது அந்தர்முகமாகவே செய்யப்படவேண்டுமென்றும் அதிலும் அம்பாளை ஸஹஸ்ராரகமலத்திற்கு அழைத்துவந்து அவ்விடத்தில் பூஜிக்கவேண்டுமென்றும் ஸமயமதத்தின் ஸித்தாந்தம். இதற்கு வேண்டிய மனோதார்ட்யமில்லாதவர்கள் பஹிர்முகமாக பூஜை செய்பவர்கள். இவர்களில் சிலர் தங்கம் முதலியவைகளாலான தகடுகளில் ஸ்ரீசக்ரத்தை எழுதி அதோடு அபின்னமாக அம்பாளை பாவனைசெய்து பூஜிப்பார்கள். இவர்கள் மதத்தை மிச்ரம் என்று சொல்வார்கள். வேறுசிலருடைய மதத்தின் ப்ரகாரம் சிவதத்வமானது சக்தி தத்வத்தில் அந்தர்பூதமாக இருக்கிறதென்றும் இந்த சக்தி தத்வத்தின் பரிணாமமே ஜகத்தென்றும் சொல்லப்படும். ஆகவே அவர்கள் மதத்தின்படி த்ரிகோணமே பிந்துஸ்தானமாக பாவிக்கப்படுகிறது. இந்த த்ரிகோணத்தைப் பூஜிப்பதில் பூர்வகௌலர்கள் ஸ்ரீ சக்ரத்திலிருக்கும் த்ரிகோணத்தையும் உத்தரகௌலர்கள் ப்ரத்யக்ஷ த்ரிகோணமாகிய யோனியையும் பூஜிப்பார்கள். மேலும் இவர்கள் மூலாதாரத்திலிருக்கும் த்ரிகோணத்தையே பிந்து ஸ்தானமாக பாவித்து அங்கிருக்கும் குண்டலினீ சக்தியை உபாஸனை செய்வார்கள். ஆனால் இவர்கள் அந்த சக்தியை மேலிருக்கும் சக்ரங்களுக்குக் கொண்டுபோவதில்லை. எப்போதும் உறங்கிக்கொண்டிருக்கும் அந்த குண்டலினியை எழுப்புவதே இவர்களுடைய உபாஸனையின் நோக்கம். குண்டலினீ நித்ரையை விட்டு எழுந்தாலேயே இவர்கள் முக்தியடைந்துவிட்டதாக பாவிப்பதால் 'க்ஷணமுக்தா: கௌலா:' என்று சொல்லப்படுவார்கள். (கௌலர்கள் குண்டலினியை உபாஸிப்பதைப்பற்றி இங்கு லக்ஷ்மீதாருடைய அபிப்ராயத்தை அனுஸரித்துச் சொல்லியிருக்கிறது. அந்த அபிப்ராயமே ஸரியல்லவென்று சொல்லப்படும்.)

இப்படி இவர்கள் பஹிர்முகமாகப் பூஜைசெய்வதாலும் ப்ரத்யக்ஷயோனியை பிந்துஸ்தானமான த்ரிகோணமாக பூஜிப்பதாலும்

அவ்வித பூஜையின்போது பஞ்சமகாரங்களை உபயோகிப்பதாலும் லக்ஷ்மீதரர் இவர்களைப்பற்றித் தன்னுடைய பாஷ்யத்தில் மிகவும் நிந்தித்து அவர்களுடைய செய்கைகளை மனதால்கூட நினைக்கக் கூடாது என்பதாகச் சொல்லிவிட்டார். இவ்விதமான ஆக்ஷேபங் கள் ஸரியான ஞானம் இல்லாததினால் ஏற்படுகின்றனவென்றும் அவைகளுக்கு ஸமாதானம் சொல்லமுயற்சிப்பதே கூடாதென்றும் கௌலமதத்தின் ஸித்தாந்தம்.

'கௌலப்ரதிஷ்டாம் ந குர்யாத் |' (கௌலோபநிஷத்)
ஏனென்றால் அப்படி ஸமாதானம் சொல்ல ஆரம்பித்தால் அந்த விஷயங்களைத் தெரிந்துகொள்ள அதிகாரமில்லாதவர்கள் அவற்றை அறிய அவகாசம் கொடுத்து அனர்த்தம் விளையுமாதலால் அது நிஷேதிக்கப்பட்டிருக்கிறது.

"ஆனந்தம் ப்ரம்ஹணோ ரூபம், தச்ச தேஹே வ்யவஸ்திதம்,
தஸ்யாபிவ்யஞ்ஜகா: பஞ்ச மகாரா:, தைரர்ச்சனம் குப்த்யா,
ப்ராகட்யான்னிரய: |" (பரசுராம கல்பஸூத்ரம்)

இப்படி நிஷேதிக்கப்படபோதிலும் கௌலமார்கத்தைப்பற்றிய துரபிப்ராயங்களை நீக்குவதற்கும் அதின் கொள்கைகளை சரியானபடி தெரிந்துகொள்வதற்கும் முன்காலங்களில் பாஸ்கரராயர் முதலான மஹான்களும் நம்முடைய காலங்களில் ஆர்தர் ஏவலன் என்ற பெரியாரும் மிகவும் பாடுபட்டிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் எழுதியிருக்கும்படியான க்ரந்தங்களைப்படித்தபிறகுதான் நாம் ஒரு விதமான முடிவுக்கு வரலாமே தவிர லகுவாக முடிவு செய்துவிட க்கூடாது. ஸ்தூலமாகத்தோன்றும் சில ஸமாதானங்கள் மட்டும் இனி சொல்லப்படும்.

1. கௌல சாஸ்த்ரங்களை வேதபாஹ்யமென்றாவது வேத விருத்தமென்றாவது சொல்வது முடியாது. 'நிஜாக்ஞாரூப நிகமா' என்றபடி தந்த்ரங்களும் வேதங்கள் போலவே பகவானுடைய ஆக் ஞாரூபங்களாக இருப்பதால் இரண்டிற்கும் ப்ராமாண்யம் ஸமானம் தான். (இந்த விஷயத்தைப்பற்றி பாஸ்கரராயருடைய ஸேதுபந் தத்தையும் பரசுராம கல்பஸூத்ரத்திற்கு ராமேச்வர ஸூரி எழுதியி ருக்கும் பாஷ்யத்தையும் இதர க்ரந்தங்களையும் பார்க்கவும்.)

'மதித்வா ஞானதண்டேன வேதாகம மஹார்ணவம் |
ஸாரக்ஞேன மயா தேவி குலதர்ம: ஸமுத்த்ருத: ||

2. சில தந்த்ரங்களில் கௌலமார்க்கத்தைப்பற்றி நிந்தனையாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும் அது 'ந ஹி நிந்தா' ந்யாயத்தின் படி அந்த சாஸ்த்ரத்தின் ப்ரசம்ஸைக்காகச் சொல்லப்பட்டதே தவிற வாஸ்தவமாய் கௌலாசாரத்தைக் கண்டனம் செய்ததாகச் சொல்லக்கூடாது.

'கௌலமார்கரதோ தேவி ந மயா நிந்தித: க்வசித் |
ஆசார ரஹிதாயேZத்ர நிந்திதாஸ்தே ந சேதரே ||
குலமார்கமிமம் ஞாத்வா முச்யேயு: ஸர்வமானவா: |
இதி மத்வா குலேசானி மயா லோகே விகர்ஹிதம் ||
பசு சாஸ்த்ராணி ஸர்வாணி மயைவ கதிதானி ஹி |
மூர்த்ய்ந்தரந்து ஸம்ப்ராப்ய மோஹனாய துராத்மனாம் ||
ப்ராக்ருத தபோதான யக்ஞதீர்த்த ஜப வ்ரதை: |
சுத்த சித்தஸ்ய சாந்தஸ்ய தர்மிணோ குருஸேவின: ||
அதிகுப்தஸ்ய பக்தஸ்ய கௌலஞானம் ப்ரகாசதே |
சைவவைஷ்ணவ தௌர்கார்க்க காணபத்யாதிகை: க்ரமாத் |
மந்த்ரைர் விசுத்த சித்தஸ்ய கௌலஞானம் ப்ரகாசதே ||'

3. அதிகாரிகளின் பேதங்களை அனுஸரித்து வெவ்வேறான சாஸ்த்ரங்கள் பரமசிவனால் வெளியிடப்பட்டிருக்கின்றன என்பதும் ஒரு சாஸ்த்ரத்தை அப்யஸிக்க அதிகாரமுடையவன் வேறு சாஸ்த்ரங்களை அப்யஸிக்கவாவது அவைகளைப்பற்றி அபிப்ராய பேதம் கொள்ளவாவது நியாயமில்லை என்பதும் தீர்மானமான விஷயம். அவரவர்களுடைய சித்திசுத்திக்கும் சித்த பரிபாகத்திற்கும் தக்கபடி ஸோபானக்ரமமாக உபாஸனா மார்கங்கள் வெவ்வேறாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆகையினால் அந்தர்முகமான உபாஸனைசெய்யச் சக்தியில்லாதவர்கள் பஹிர்முகமாக ப்ரவ்ருத்திப்பதில் யாதொரு தோஷமுமில்லை.

'யாவத் ஆந்தரபூஜாயாம் அதிகாரம் பவேன்னஹி |
தாவத் பாஹ்யாமிமாம் பூஜாம் ச்ரயேத் ஜாதே து தாம் த்யஜேத் ||'

4. ஆத்யக்ரந்தங்களாகிய 'ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமம்' முதலியவைகளில் கௌலமார்கமும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

'கௌலமார்க தத்பர ஸேவிதா' 'ஸவ்யாபஸவ்யமார்கஸ்த்தா' 'சைதன்யார்க்ய ஸமாராத்யா,' 'ரஹோயாகக்ரமாராத்யா,' 'ரஹஸ்தர்பணதர்பிதா' 'பிந்துதர்பண ஸந்துஷ்டா' 'வீரகோஷ்டிப்ரியா' (ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமம்).

இது தவிர, 'கௌலோபநிஷத்,' 'த்ரிபுரா மஹோபநிஷத்' முதலான உபநிஷத்துகளிலும் கௌலமார்கத்தைப்பற்றி விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. (இவையிரண்டுக்கும் பாஸ்கராராயர் பாஷ்யம் எழுதியிருக்கிறார்).

5. கௌலாசாரத்தை அவலம்பிப்பவர்களுக்கு விசேஷமான குணங்களிருக்கவேண்டும். அவையில்லாத ஸாதாரணமான மனுஷ்யர்களால் அதை அனுஷ்டிக்கமுடியாது. அனுஷ்டித்தால் அனர்த்தமாகமுடியும். அம்பாளுடைய உபாஸனையே 'தாளகாணும் அஸுலபா' என்றபடி சபல சித்தத்தையுடையவர்களுக்கு ஸாத்யமல்ல.

'அயம் து பரம: கௌலமார்க: ஸம்யங் மஹேச்வரி |
அஸிதாராவ்ரதஸமோ மனோ நிக்ரஹ ஹேதுக: ||

ஸ்த்திரசித்தஸ்ய ஸுலப: ஸபலஸ்தூர்ண ஸித்தித: |
அன்யஸ்ய விபலோ து:க ஹேதுஸ்யாத் பரமேச்வரி ||'

(பரமானந்த தந்த்ரம்)

'அயம் ஸர்வோத்தமோ தர்ம: சிவோக்த: ஸுகஸித்தித: |
ஜிதேந்த்ரியஸ்ய ஸுலபோ நான்யஸ்யானந்த ஜன்மபி: ||

யத் ஊர்த்வரேதஸாம் ஸர்வத்யாகினாம் அனிகேதினாம் |
க்ஷணேன ஸ்ம்ருதமாத்ரேண மோஹமுத்பாதயத்யலம் ||

'இதோ மத்யமிதோ மாம்ஸம் பக்ஷ்யமுச்சாவசம் ததா |
தருண்யச்சாருவேஷாட்யா மதாருணவிலோசனா: |
தத்ர ஸம்யதசித்தத்வம் ஸர்வதாஹ்யதிதுஷ்கரம் |
பக்தி ச்ரத்தாவிஹீனஸ்ய கதம் ஸ்யாதேததீச்வரீ ||'

(த்ரிபுரார்ணவம்)

'தந்த்ராணாம் அதி கூடத்வாத் ஸத்பாவோZப்யதி கோபித: |
ப்ராம்ஹணோ வேதசாஸ்த்ரார்த்த தத்வக்ஞோ புத்திமான்
[வசீ ||
கூடதந்த்ரார்த்த பாவஸ்ய நிர்மத்யோத்தரண க்ஷம: |
கௌலமார்கேZதிகாரீ ஸ்யாத் இதரோ து:கபாக் பவேத் ||'
(பாவசூடாமணி)

'அஹோ புக்தம் து யன்மத்யம் மோஹயேத் த்ரிதசானபி |
தன்மைரேயம் சிவம் பீத்வா யோ ந விக்ரியதே நர: |
ஜபன் சிவபரோ பூத்வா ஸ முக்த: ஸ ச கௌலிக: ||'
(குலார்ணவம்)

அப்படி ஜிதேந்த்ரியத்வம் முதலான குணங்களில்லாதவர்கள் கௌல மார்கத்தில் ப்ரவேசிக்கவேண்டுமென்றால் முன்னதாக இதர தேவதைகளை இதர மார்கங்களால் உபாஸித்துவிட்டு அதனால் பரிபக்வமான அந்த:கரணத்தோடு கௌலமார்கத்தை ஆச்ரயிக்கவேண்டும்.

'அன்யாஸாம் தேவானாம் து பூயோபூயோ நிஷேவணாத் |
பரிபக்வமனா: கௌலே லப்தப்ராமாண்யகோ நர: |
பாஹ்யேந்த்ரியாணி ஸம்யம்ய ப்ரவிசேதத்ர நேதர: ||
(குலஸாரம்)

கௌலதர்மத்தை அனுஷ்டிப்பது கத்திமுனையில் நடப்பதுபோலும் புலியின் கழுத்தைக் கட்டிக்கொள்வதுபோலும் ஸர்ப்பத்தை அணிவதுபோலும் பயங்கரமானதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'க்ருபாண தாராகமனாத் வ்யாக்ரகண்டாவலம்பனாத் |
புஜங்கதாரணான்னூனம் அசக்யம் குலவர்த்தனம் ||'

6. மபஞ்சகத்தை தேவதாராதனத்தின்போது உபயோகிப்பது வேதங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஸௌத்ராமணி, ஜ்யோதிஷ்டோமம், வாஜபேயம் முதலான யாகங்கள் ப்ராம்ஹணோத்தமர்களால் செய்யப்படவேண்டியதாகச் சொல்லப்பட்டவை. அவைகளிலும், சாக்தர்களைக் குறித்து அனுசாரங்களென்றும் தோஷங்களென்றும் சொல்லப்படும் அம்சங்களுண்டு.

'வேததர்மேஷு ஹிம்ஸா ஸ்யாத் அதர்ம பஹுளாஹி ஸா |
ப்ரத்யக்ஷேண த்வனுசார: ஸோமபானம் நராதிப ||

பசூனும் ஹிம்ஸனம் தத்வத் பக்ஷணம் சாமிஷஸ்ய ச |
ஸௌத்ராமணௌ ததா ப்ரோக்த: ப்ரத்யக்ஷேண ஸுராக்ரஹ:|
த்யூதக்ரீடா ததா ப்ரோக்தா வ்ரதானி விவிதானி ச ||'
(தேவீபாகவதம்)

7. ம பஞ்சகத்தை உபயோகிப்பது அம்பாளுடைய ஆராதனையைக் குறித்தேயொழிய ஆத்ம த்ருப்திக்காக அல்ல.

'ந கதாசித் பிபேத் ஸித்தோ தேவ்யர்க்யம் அனிவேதிதம் |'
'பரிஸ்ருதம் ஜஷமாத்யம் பலம் ச
பக்தானி யோனீ: ஸுபரிஷ்க்ருதானி |
நிவேதயன் தேவதாயை மஹத்யை
ஸ்வாத்மீக்ருத்ய ஸுக்ருதீ ஸித்திமேதி ||
(த்ரிபுராமஹோபநிஷத்)

'பானம்து த்ரிவிதம் ப்ரோக்தம் திவ்ய வீர பசுக்ரமை:
திவ்யம் தேவ்யக்ரத: பானம் வீரமுத்வாஸனே க்ருதம் |
த்ருதீயம் து பசோ: பானம் பாபக்ருத் சோகமோஹக்ருத் |
புக்திமுக்தி ப்ரதம் திவ்யம் வீரம் புக்திப்ரதம் பவேத் ||'

8. ம பஞ்சகம் உபயோகிப்பதிலும் வர்ணபேதங்களையொட்டி வித்யாஸங்கள் உண்டு.

'க்ஷீரேண ப்ராம்ஹணைஸ்தர்ப்யா க்ருதேன ந்ருப வம்சஜை: |
மாக்ஷிகைர் வைச்யவர்ணைஸ்து ஆஸவை: சூத்ரஜாதிபி: ||
(பைரவீதந்த்ரம்)

விப்ரா: க்ஷோணிபுஜோ விசஸ் ததிதரே க்ஷீராஜ்ய மத்வாஸவை:
த்வாம் தேவி த்ரிபுரே பராவரமயீம் ஸந்தர்ப்ய பூஜாவிதௌ |'
(லகுஸ்துதி)

மேலும் இந்த ம பஞ்சக பதங்களால் எவை குறிப்பிடப்படுகின்றன வென்பதே பலவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸாதாரணமாகக்குறிக்கப்படும் வஸ்துக்கள் அல்லவென்றும் சொல்லப்படும். உதாரணமாக பஞ்ச மகாரங்களில் கடைசி மகாரத்தைப்பற்றி

'ரக்தம் து கரவீரம் வை ததா க்ருஷ்ணாZபராஜிதா |
ஏதத் ப்ரோக்தம் லிங்கயோன்யோ: புஷ்பம் தத்ர து யோஜயேத் ||'

'குஸுமே லிங்கயோன்யோர்வா ஸகாச்மீரம் ச சந்தனம் |'
என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளுக்கு ப்ரதிநிதிகளான வஸ்துக்களையே சிற்சிலர் உபயோகிக்கவேண்டுமென்றும் சொல்லப்படும்.

9. கௌலமார்கத்தை அவலம்பித்தவர்களான பாஸ்கரராயர், அபிராமிபட்டர் முதலியவர்கள் அம்பாளுடைய உபாஸனையில் மிகவும் ஈடுபட்டவர்களும் மஹாமேதாவிகளுயானவர்கள். ஆகவே அதில் உண்மையாக ஆக்ஷேபிக்கக்கூடிய அம்சங்கள் ஏதேனுமிருந்தால் அவர்கள் அந்த மார்க்கத்தில் இறங்கியிருக்கமாட்டார்கள். அவர்கள் அம்பாளுடைய ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்தாக அறிந்தவர்களென்றும் அவர்களாலேயே சாக்தமதமானது வேரூன்றிப் பரவியிருக்கிறதென்றும் சொல்லுவது மிகையாகாது.

10. ப்ரவ்ருத்தி மார்கத்திலிருந்து நிவ்ருத்திமார்கத்திற்குத் திரும்பும்போது, எந்த வஸ்துக்களால் பாசமானது த்ருடப்படுமோ அந்த வஸ்துக்களையே ஜெயித்து வசப்படுத்தி மேலேபோவது தைர்யத்தையும் வீரபாவத்தையும் காட்டுமாதலால் அதுவே ச்லாக்யமானதென்றும் சொல்லப்படும்.

'யைரேவ பதனம் த்ரவ்யை: ஸித்திஸ் தைரேவ சோதிதா |
ஸ்ரீ கௌலதர்சனே சாபி பைரவேண மஹாத்மனா ||'

ஆகவே வீரர்களான கௌலர்கள் போகத்தின் மூலமாகவே மோக்ஷத்தையுமடைந்துவிடுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'போகேன மோக்ஷமாப்னோதி போகேன குலஸாதனம் |
தஸ்மாத் யத்னாத் போகயுக்தோ பவேத் வீரவர: ஸுதீ: ||'
(குலார்ணவம்)

11. இப்படி ஜிதேந்த்ரியத்வம் முதலான உத்க்ருஷ்டமான குணங்களும் தைர்யமும் கார்யத்தை ஸாதிக்கும் பிடிவாதமும் ஒருங்கே இருக்கவேண்டியதாகையால் கௌலாசாரமே எல்லாவித ஆசாரங்களுக்கும் மேல்பட்டதென்று சொல்லப்படும். அதையே வீராசாரமென்றும் சொல்லப்படும்.

'சைவ வைஷ்ணவ தௌர்கார்க்க காணபத்யாதிகை: க்ரமாத் |
மந்த்ரைர் விசுத்த சித்தஸ்ய கௌலஞானம் ப்ரகாசதே ||

ஸர்வேப்யச்சோத்தமா வேதா வேதோப்யோ வைஷ்ணவம்
[பரம் |
வைஷ்ணவாத் உத்தமம் சைவம் சைவாத் தக்ஷிணமுத்தமம் ||
தக்ஷிணாத் உத்தமம் வாமம் வாமாத் ஸித்தாந்தமுத்தமம் |
ஸித்தாந்தாத் உத்தமம் கௌலம் கௌலாத் பரதரம் ந ஹி ||'

12. 'கௌலிகே குரவோZனந்தா:' என்றபடி கௌலமார்கத்தை உண்மையானபடி தெரியாதவர்களும் அதை அனுஷ்டிக்க அதிகாரமில்லாதவர்களும் ம பஞ்சகத்திலாசைப்பட்டு தங்களை கௌலர்கள் என்று பட்டம் கட்டிக்கொண்டு தங்களுக்கு அபக்யாதி ஸம்பாதித்துக் கொள்வதுடன் அந்த மதத்திற்கே ஒரு அபசப்தம் ஏற்படுத்திவிடுவதினால் அதைப்பற்றித் தவறுதலான எண்ணங்கள் லோகத்தில் இருப்பதற்கு இடமுண்டாகிவிடுகிறது. அதற்காக அந்த மதத்தையே நிந்திப்பது என்பது கூடாது, நியாயமுமில்லை.

ஆசார்யாளுடைய இந்த ஆனந்தகரமான ஸ்தோத்ரமானது இவ்விதமான கௌலமதகண்டனத்திற்காவது வேறுஎவ்விதமான விவாதத்திற்காவது இடம் கொடுக்கவில்லையென்பது முக்யமாக கவனிக்கவேண்டிய விஷயம். பரப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பாளுடைய உத்கர்ஷத்தையும் ஸௌந்தர்யத்தையும் அவர் இந்த ஸ்தோத்ரத்தில் வர்ணித்திருக்கிறாரே தவிர வேறு எவ்விதமான வ்யவஹாரத்திற்காவது கண்டனத்திற்காவது அவர் இறங்கவில்லை. கௌலர்களும் ஸமயாசாரபார்களும் உபாஸிக்கும் தெய்வம் உண்மையாகப் பார்க்கப்போனால் ஒன்றுதான். அதினுடைய ஸ்வரூபத்தை நாம் மனதில் ஆனந்தமாக அனுஸந்தானம் செய்வதற்குப் பேருபகாரமாகச் செய்திருக்கும் இந்த ஸ்தோத்திரத்திற்கு தான் எழுதிய பாஷ்யத்தில் லக்ஷ்மீதரர் இவ்விதம் விவாதாஸ்பதமான விஷயங்களைப்பற்றி எழுதியதினால் தான், அவைகளைப்பற்றி இங்கு கொஞ்சம் சொல்லும்படி நேரிட்டது.

இனி ப்ரக்ருத விஷயத்தைப்பற்றி மேலே சொல்லப்படும்.

## ஸ்ரீ வித்யையின் பேதங்கள்

அம்பாளை ப்ரதிபாதிக்கும் சாஸ்த்ரத்திற்கு ஸ்ரீ வித்யையென்று சொல்லப்படுவதுடன் அம்பாளுடைய மந்த்ரத்திற்கும் ஸ்ரீ வித்யை

யென்று பெயர் சொல்லப்படும். உத்க்ருஷ்டமான வஸ்துக்களின் பெயர்களுக்கு முன்பாக ஸ்ரீ என்ற பதம் சேர்க்கப்படும்.(ஸ்ரீமாதா, ஸ்ரீசக்ரம், ஸ்ரீநகரம் முதலியன). புருஷரூபமான தேவதையையுடையதற்கு மந்த்ரமென்றும் ஸ்த்ரீ ரூபமான தேவதையையுடையதற்கு வித்யையென்றும் பெயர். அப்படியிருந்தபோதிலும் சிவ சக்தி ஸாமரஸ்யரூபமான பரப்ரம்ஹமானது அம்பிகாரூபிணியாக இந்த வித்யையின் மூலமாக உபாஸிக்கப்படுவதால் ஸ்ரீ வித்யையை மந்த்ரமென்றும் அதுவே ஸகலவிதமான மந்த்ரங்களுக்குள் 'மிகவும் உயர்ந்ததென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸ்ரீவித்யைவ து மந்த்ராணும்' (ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமம்)

இப்பேர்ப்பட்ட மஹிமை வாய்ந்த வித்யையானது பன்னிரெண்டு வகைப்படும். ஒவ்வொரு பேதமும் ஒவ்வொருவரால் (வேதத்திலிருந்து) கண்டுபிடிக்கப்பட்டதால் அவ்விதமான பேதங்கள் ஏற்பட்டன. இப்படி மந்த்ரங்களைக் கண்டுபிடித்து அதன் மூலமாக ஸித்தியடைந்தவர்களுக்கு (மந்த்ர த்ரஷ்டாக்களுக்கு) ரிஷிகள் என்று பெயர். ஸ்ரீ வித்யையின் பேதங்களுடைய ரிஷிகளின் பெயர்—

'மனு: சந்த்ர: குபேரச்ச லோபாமுத்ரா ச மன்மத: |
அகஸ்திரக்னி: ஸூர்யச்ச இந்த்ர: ஸ்கந்த: சிவஸ்ததா |
க்ரோதபட்டாரகோ தேவ்யா த்வாதசாமீ உபாஸகா: ||'

இவர்களில் அகஸ்தி: என்பவர் அகஸ்த்யர். க்ரோதபட்டாரகர் என்பவர் துர்வாஸர். லோபாமுத்ரையென்பவள் அகஸ்த்யருடைய பத்னீ. லோபாமுத்ரையின் வித்யையே ஹாதி வித்யையென்று சொல்லப்படும்.

ஸ்ரீ வித்யை என்பது ஷோடசாக்ஷரீ என்றும் பஞ்சதசீ அதில் அடங்கியதென்றும் சொல்லப்படும். இதைப்பற்றி அபிப்ராயபேதமிருந்தாலும் பஞ்சதசியானது இருவகையிலும் மிகவும் முக்யமான மந்த்ரமென்பது ஒப்புக்கொள்ளப்படும் விஷயம். இவ்விதமான பஞ்சதசியின் பேதங்களில் காதி, ஹாதி என்பவைதான் முக்யமான பேதங்கள். காதிவித்யைக்கு காமராஜர் ரிஷியாதலால் அதை காமராஜவித்யையென்றும் சொல்லப்படும். ஹாதி என்பதற்கு லோபா

முத்ராவித்யை என்று பெயர் என்பதாக ஏற்கனவேயே சொல்லப் பட்டது.

'தேஷு த்வெள மனுராஜெள து வரிஷ்டெள விந்த்யமர்தன |
லோபாமுத்ரா காமராஜாவிதி க்யாதிமுபாகதெள |
ஹாதிஸ்து லோபாமுத்ரா ஸ்யாத் காமராஜஸ்து காதிக: ||'

அவைகளில் எது உயர்ந்தது என்பதைப்பற்றியும் அபிப்ராய பேதமிருந்தபோதிலும் காதி என்பதுதான் உயர்ந்தது என்பது ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்தில்

'ஸ்ரீவித்யைவ து மந்த்ராணும் தத்ர காதிர் யதா பரா |'

என்று சொல்லப்பட்டிருப்பதுடன் ஸ்ரீ லலிதாத்ரிசதியும் அதை யனுஸரித்தே அமைக்கப்பட்டிருப்பதினுல் ஏற்படுகிறது.

இப்படி ப்ராதான்யமானது காதி வித்யைக்குச் சொன்னபோதிலும் வாஸ்தவத்தில் ஸகல வித்யைகளும் அபேதமாகையால் அவைகளுக்குள் தாரதம்யம்சொல்வதானது ப்ரசம்ஸாமாத்ரமென்று பாஸ்கரராயர் சொல்லியிருக்கிருர். இவருடைய அபிப்ராயத்தில் இந்த ஸ்தோத்ரத்தின் 'சிவ சக்தி: காம:' என்ற 32வது ச்லோகத்தில் ஹாதி வித்யையானது சொல்லப்பட்டிருக்கிறதென்றும் அதனடுத்த ச்லோகத்தில் காதி வித்யை சொல்லப்பட்டதென்றும் மேலே சொல்லியபடி ஸகல வித்யைகளுடைய அபேதத்தைக் காட்டுவதற்காகவே ஆசார்யாள் இம்மாதிரி வரிசை மாற்றிச் சொன்னுரென்றும் அவரால் காட்டப்பட்டிருக்கிறது.

## ஸ்ரீவித்யையைப்பற்றிய நூல்கள்.

தேவியின் உபாஸனுமார்கமான ஸ்ரீவித்யையானது வேத சிரோபாகமான உபநிஷத்துக்களிலும் அவ்வித உபநிஷத்காண்டத்தின் சேஷமாக பரசுராம கல்பஸூத்ரம் முதலான கல்பஸூத்ரங்களிலும் யாமளாதி தந்த்ரங்களிலும் புராணங்களிலும் ப்ரதிபாதிக்கப் பட்டிருக்கிறது. தேவீ ஸம்பந்தமான உபநிஷத்துக்கள் ஸுந்தரீ தாபினீ பஞ்சகம், பாவனுேபநிஷத், கௌலோபநிஷத், குஹ்யோபநிஷத், மஹோபநிஷத், த்ரிபுரா மஹோபநிஷத், அருணுேபநிஷத், பஹ்வ்ருசோபநிஷத், காளிகோபநிஷத், தாரோபநிஷத் முதலியவை. இவைகள் நான்கு வேதங்களிலும் கிடைக்கப்பெறுகின்றன.

புராணங்களில் தேவீபாகவதம், தேவீபுராணம், மார்கண்டேய புராணம், காளிகாபுராணம், த்ரிபுராரஹஸ்யம் முதலியவை. [பாகவதம் என்ற பெயரே தேவீபாகவதத்திற்குத்தான் உரித்ததென்று தேவீ உபாஸகர்கள் சொல்வார்கள்]. இவை தவிர, ப்ரம்ஹாண்ட புராணத்தின் உத்தரபாகத்திலடங்கியதாக ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமம், ஸ்ரீ லலிதாத்ரிசதீ, லலிதோபாக்யானம் முதலியவை சொல்லப் படும்.

யாமளாதி தந்த்ரங்கள் கணக்கற்றவை. இந்த ஸ்தோத்ரத்தில் 'சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை:' என்ற ச்லோகத்தில் சொல்லப்பட்ட தந்த்ரங்களைத் தவிர இன்னம் அனேக தந்த்ரங்களிருப்பதாகச் சொல்லப்படும்.

இவைகளைத் தவிர ஸ்தோத்ரங்கள் 'ஸௌந்தர்யலஹரீ,' 'ஸுபகோதயம்,' 'லலிதாஸ்தவரத்னம்' 'மஹிம்நஸ்தோத்ரம்,' 'லகுஸ்துதி' 'மூக பஞ்சசதீ' முதலியவை ஏராளமாக இருக்கின்றன.

இவ்விதமான மூலக்ரந்தங்கள் தவிர நிபந்த க்ரந்தங்கள் அனேகம் எழுதப்பட்டிருக்கின்றன. அவைகளில் சிலவை—ப்ராணதோஷிணீ, சாக்தப்ரமோதம், சாக்தானந்ததரங்கிணீ, ப்ரஹத்ஜ்யோதிஷார்ணவம், ச்யாமாரஹஸ்யம்.

தனியாகவே எழுதப்பட்ட க்ரந்தங்கள் ப்ரபஞ்சஸாரம், சாரதாதிலகம், வரிவஸ்யா ரஹஸ்யம், காமகலாவிலாஸம் முதலியவை. இவைகளைத்தவிர பூர்வீக க்ரந்தங்களுக்கு பாஷ்யங்கள் எழுதுவதின் மூலமாக அரிய பெரிய விஷயங்களை சில மஹான்கள் சொல்லியிருக்கிறார்கள். இவைகளில் முதன்மையானவை பாஸ்கரராயர் எழுதியவை—ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம பாஷ்யம் (ஸௌபாக்ய பாஸ்கரம்), வாமகேச்வர தந்த்ரத்திலடங்கிய நித்யாஷோடசிகார்ணவத்தின் பாஷ்யம் (ஸேதுபந்தம்), வரிவஸ்யாரஹஸ்யத்தின் பாஷ்யம் (வரிவஸ்யாப்ரகாசம்). லக்ஷ்மீதரரால் இந்த ஸ்தோத்ரத்திற்கு எழுதப் பட்ட பாஷ்யமானது மிகவும் ச்லாக்யமாக இருக்கையில் அவரால் எழுதப்பட்ட 'ஸுபகோதய' பாஷ்யமும் இன்னம் விசேஷமானதாக இருக்கக்கூடுமென்று தெரிகிறது. சாரதாதிலகத்திற்கு ராகவ பட்டரால் எழுதப்பட்ட பாஷ்யமும் மிகவும் விசேஷமானது.

ஸ்ரீ லலிதாத்ரிசதிக்கு ஸ்ரீ மதாசார்யாளால் எழுதப்பட்டதாகச் சொல்லப்படும் பாஷ்யம் ஒன்று உண்டு.

புர:சரணவிஷயமாக பரசுராமகல்பஸூத்ரத்தை அனுஸரித்த நித்யோத்ஸவம், பாவனோபநிஷத்தை அனுஸரித்த பாவனோபநிஷத் ப்ரயோகம் முதலிய அனேகமிருக்கின்றன.

அம்பிகையின் உபாஸனையைப்பற்றிய க்ரந்தங்கள் இப்படி நூற்றுக்கணக்காக இருந்தபோதிலும் அந்த உபாஸனையின் தத்வங்களையும் ரஹஸ்யங்களையும் தெளிவாக எடுத்துக்காட்டி அவ்வித உபாஸனையை தர்க்க, ந்யாய, மீமாம்ஸாதி சாஸ்த்ரங்களையொட்டி ஸ்தாபித்தது பாஸ்கரராயரும் லக்ஷ்மீதரரும்தான். நமது நாட்களில் இவ்விதமான பேருபகாரம் செய்தவர் ஆர்தர் ஏவலன் என்ற மாறுபெயருடைய Sir John Woodroffe என்பவர். இவரது பிறப்பு வேறு தேசத்தில் ஏற்பட்டபோதிலும் இவர் பூர்வஜன்மத்தில் செய்த தவத்தின்பயனாக இந்த தேசத்திற்கு வேலையாகவந்து நமது சாஸ்த்ரங்களிலும், விசேஷமாக தேவீபரமான க்ரந்தங்களிலும் அன்யாத்ரு சமான ஞானத்தை ஸம்பாதித்துக்கொண்டு அதை நமக்கெல்லாம் போதிப்பதற்காக அனேக க்ரந்தங்களை வெளியிட்டிருக்கிறாரென்பது எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். இவர்கள் எல்லாரும் இம்மாதிரி ஜகன்மாதாவின் உபாஸனா தத்வங்களை நமக்குப் புகட்டி நாம் கடைத்தேருவதற்காகச் செய்திருக்கும் அனுக்ரஹத்தை நாம் எந்நாளும் மறக்கமுடியாது.

பாஸ்கரராயரியற்றிய மேலேசொல்லிய மூன்று பாஷ்யங்களை ஸ்ரீவித்யையின் ப்ரஸ்தான த்ரயமென்று சொல்லப்படும். அம்பாளுடைய அந்தர்முகமான உபாஸனையைப்பற்றியும் பொதுவாக ஸ்ரீவித்யையைப்பற்றியும் இம் மூன்று பாஷ்யங்களில் சொல்லப்படாதவிஷயம் யாதொன்றுமில்லையென்று நிச்சயமாய் சொல்லலாம்.

## ஸ்ரீவித்யையின் அதிரஹஸ்யத்வம்.

மிகவும் மஹிமை பொருந்தியதாகையாலும் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுப்பதாலும் ஸ்ரீ வித்யையை மிகவும் ரஹஸ்யமாய் வைத்துக்கொண்டு உபாஸனை செய்யவேண்டுமென்று

சொல்லப்பட்டிருக்கிறது. இதா வித்யைகள் வேசிகளைப்போல வென்றும் இந்த ஸ்ரீ வித்யையானது குலஸ்த்ரீ மாதிரியென்றும் சொல்லப்பட்டது.

'வேச்யா இவ ப்ரகடா: வேதாதி வித்யா:,
ஸர்வேஷு தர்சனேஷு குப்தேயம் வித்யா |'
(பரசுராமகல்பஸூத்ரம்)

'அன்யாஸ்து ஸகலா வித்யா: ப்ரகடா கணிகா இவ |
இயம் து சாம்பவீ வித்யா குப்தா குலவதூரிவ ||'
(குலார்ணவம்)

ஆகவே இந்த வித்யையை 'ஸ்வமாத்ரு ஜாரவத்' அதிரஹஸ்யமாகக் காப்பாற்ற வேண்டுமென்றும் 'ப்ராகட்யாத் நிரய:' என்ற கல்ப ஸூத்ரவசனப்படி அதை வெளியிட்டால் நரகமேற்படும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, இதைச் சொல்லிக்கொள்ளும் படியான யோக்யதையில்லாத பசு ஜனங்களான சிஷ்யர்களுக்கு இதை சொல்லக்கூடாதென்று தாத்பர்யம்.

'ப்ரூயாத் சிஷ்யாய பக்தாய ரஹஸ்யமபி தேசிக: |
பவதா ந ப்ரதேயம் ஸ்யாத் அபக்தாய கதாசன |
ந சடாய ந துஷ்டாய நாவிச்வாஸாய கர்ஹிசித் ||'
(ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமம்)

இந்தக்காரணத்தாலேயேதான் ஸ்ரீவித்யோபாஸகனாக இருப்பது பிறருக்குத் தெரியாதபடி நடந்துகொள்ளப்பட வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'அந்த: சாக்த: | பஹி: சைவ: | லோகே வைஷ்ணவ: |
(கௌலோபநிஷத்)

அந்த: சாக்தா: பஹி: சைவா: ஸபாயாம் வைஷ்ணவா மதா:|
நாநாரூபதரா: கௌலா: விசரந்தி மஹீதலே ||'
(காளீவிலாஸதந்த்ரம்)

அதாவது, சக்தியின் உபாஸனையானது அந்த:கரணத்திற்கு மட்டும்தான் தெரியும்படியாக இருக்கவேண்டியது என்று தாத்பர்யம். உதாரணமாக: ஸ்ரீவித்யோபாஸகர்கள் நெற்றியில் புருவங்களுக்கு நடுவில் ஸ்ரீ பாதுகையின் அர்ச்சனையின் ப்ரஸாதமான

ஸிந்தூரத்தை(குங்குமத்தை) எப்போதும் தரித்துக்கொள்ளவேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'ப்ருவோர்மத்யே ஸ்ரீபாதுகார்ச்சனப்ரஸாத: | ஸிந்தூரம் |'
(அகஸ்த்ய ஸூத்ரம்)

'கு சந்தனேன சாக்தானும் ப்ருமத்யே பிந்துரிஷ்யதே |'

ஆயினும் அப்படி தரிப்பதில் விபூதிதாரணம் முதலான சைவ சின்னங்களால் அதை மறைக்கவேண்டுமென்று சொல்லப்பட்டி ருக்கிறது. சிவனும் சக்தியும் அபேதமாகையால் அவ்விதம் செய் யலாம். அதேமாதிரி,

'மாமேவ பௌருஷம் ரூபம் கோபிகா நயனாம்ருதம் |'
'கதாசித் லலிதேசானீ பும்ரூபா க்ருஷ்ண விக்ரஹா ll'

என்பவை முதலான வசனங்களின்படி அம்பாளும் விஷ்ணுவும் அபேதமாகையால் ஸபைகளில் விஷ்ணுவின் உத்கர்ஷத்தைப் பற்றிச் சொன்னபோதிலும் அதனுல் அம்பாளுடைய உத்கர்ஷம் சொல்லப்படுகிறதே தவிர வேறல்ல.

## ஸ்ரீவித்யையின் அதிச்ரேஷ்டத்வம்

இப்பேர்ப்பட்ட விசேஷ மஹிமைபொருந்தியதான உபாஸ னையானது ஸாமான்யமான தபஸ்ஸினுல் கிடைக்கக்கூடியதில்லை யென்றும் கடைசிஜன்மத்தில்தான் அது கிடைக்குமென்றும் சொல் லப்பட்டிருக்கிறது. அதாவது, அந்த உபாஸனையேற்பட்டு ஸித்திய டைந்துவிட்டால் மறு ஜன்மம் கிடையாதென்று தாத்பர்யம்.

'யேனான்யதேவதா நாம கீர்த்திதம் ஜன்மகோடிஷு |
தஸ்யைவ பவதி ச்ரத்தா ஸ்ரீதேவீநாம கீர்த்தனே ll

சரமே ஜன்மனி யதா ஸ்ரீவித்யோபாஸகோ பவேத் |
.... .... .... .... ....
மந்த்ரராஜ ஜபச்சைவ சக்ரராஜார்ச்சனம் ததா |
ரஹஸ்யநாம பாடச்ச நால்பஸ்ய தபஸ: பலம் ll'
(ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமம்)

'யஸ்ய நோ பச்சிமம் ஜன்ம யதி வா சங்கர: ஸ்வயம் |
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ |
இதி தந்த்ரேஷு பஹுதா வித்யாயா மஹிமோச்யதே॥'
(ஸ்ரீ லலிதாத்ரிசதீ)

அம்பாளுடைய உபாஸனு மார்கமும் மோக்ஷத்திற்கு ஒரே மார்கமுமான ஸ்ரீவித்யையே இந்தக் காரணத்தினல் வித்யை என்ற பதத்திற்கு உரித்தானதென்றும் சில்பம் முதலான இதர சாஸ்த்ரங்கள் வித்யையென்று சொல்லக்கூடியவை அல்லவென்றும் ஸ்ரீ வித்யையை அறிந்தவனே வித்வான் என்று அழைக்கத் தகுந்தவனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ந சில்பாதி ஜ்ஞானயுக்தே வித்வச்சப்த: ப்ரயுஜ்யதே |
மோக்ஷைகஹேது வித்யா ஸா ஸ்ரீவித்யைவ ந ஸம்சய: |
தஸ்மாத் வித்யாவிதேவாத்ர வித்வான் வித்வான் இதீர்யதே॥'
(ஸ்ரீலலிதாத்ரிசதீ)

இந்த வித்யையின் ப்ரபாவமானது அதினுடைய குருசிஷ்ய பரம்பரையிலிருந்தே தெரிந்துகொள்ளக்கூடியதாக இருக்கிறது. ஆதியில் இந்த வித்யையானது பரமசிவனுல் தன்னுடைய ப்ரகாச, விமர்ச ரூபங்களாகிய சிவ, சக்தி ரூபங்களால் குருசிஷ்ய பாவமாக இருந்துகொண்டு வெளியிடப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'குருசிஷ்ய பதே ஸ்தித்வா ஸ்வயமேவ ஸதாசிவ: |
ப்ரச்னோத்தர பதைர் வாக்யை: தந்த்ரம் ஸமவதாரயத்॥'

இதேமாதிரியாக இந்த ஸ்தோத்ரத்தின் 31-வது ச்லோகமாகிய 'சதுஷ் ஷஷ்ட்யா தந்த்ரை:', என்பதிலும் சொல்லப்பட்டிருக்கிறது. 'சம்பு: பூஜயதே தேவீம் மந்த்ரசக்திமயீம் சுபாம் |' என்றபடி பரமசிவனே ஆதி நாதரென்றும் அம்பாளுடைய உபாஸகர்களில் முதலானவரென்றும் அம்பாளே குருமூர்த்தி: என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வளவு மஹிமை பொருந்தியிருப்பதினுலும் அதிரஹஸ்யமாயிருப்பதினுலும் தான் இந்த வித்யையானது

'கர்ணுத் கர்ணேபதேசேன ஸம்ப்ராப்தம் அவனீதலே |'

என்றபடி நாளதுவரையில் கர்ண பரம்பரையாகவே வந்திருக்கிறது.

## அம்பிகையின் ரூபபேதங்கள்.

அம்பிகையின் ரூபங்கள் அனந்தம். ஜகத்தின் பரிபாலனத்தைச் சேர்ந்த வெவ்வேறு கார்யங்களைக் செய்வதாக பாவனைசெய்யும் போது வெவ்வேறு ரூபங்களோடு இருப்பதாகச் சொல்லப்படும்.

'ஏகைவ சக்தி: பரமேச்வரஸ்ய
பின்னு சதுர்த்தா வினியோககாலே |
போகே பவானீ புருஷே ச விஷ்ணு:
கோபே ச காளீ ஸமரே ச துர்கா ||'

இதைத்தவிற அந்தந்த ஸ்தானபேதங்களையொட்டியும் ரூப பேதங்களுண்டு.

'லக்ஷ்மீம் ராஜகுலே ஜயாம் ரணபுவி க்ஷேமங்கரீமத்வனி
க்ரவ்யாத த்விப ஸர்பபாஜி சபரீம் காந்தாரதுர்கே கிரௌ |
பூதப்ரேத பிசாச ஜம்புகபேயே ஸ்ம்ருத்வா மஹாபைரவீம்
வ்யாமோஹே த்ரிபுராம் தரந்தி விபதஸ் தாராம் ச தோயப்
[லவே ||'

(லகுஸ்துதி)

மேலும் அவரவர்கள் ப்ரார்த்திக்கும்படியான பலன்களை உத்தே சித்து வெவ்வேறு வர்ணங்களோடு அம்பாளிருப்பதாக பாவனை செய்யவேண்டும்.

'முக்தௌ த்யேயா சசிஜ்யோத்ஸ்னு தவளாக்ருதிரம்பிகா |
ரக்த ஸந்த்யகரோசி: ஸ்யாத் வசீகரணகர்மணி ||
கவித்வே விசதாகாரா ஸ்படிகோபல நிர்மலா |
தனலாபே ஸுவர்ணுபா சிந்த்யதே லலிதாம்பிகா ||
ஸர்வஸம்பத்திலாபே து ச்யாமளாங்கீ விசிந்த்யதே |
நீலா ச மூகீகரணே பீதா ஸ்தம்பன கர்மணி ||'

(லலிதோபாக்யானம்)

அம்பாளுடைய நாமங்கள் எண்ணிக்கையற்றவை.

'தேவீ நாமஸஹஸ்ராணி கோடிச: ஸந்தி கும்பஜ |'

என்றபடி இருக்கும் இந்த ஸங்க்யாதீதமான நாமங்களில் சிற்சில நாமங்களுக்குக்குத்தக்கபடி ரூபபேதங்கள் உண்டு.

பரசிவாபின்னமான பராசக்தியானவள் ஸகலலோகங்களுக்கு அப்பாலும்

'கபளீக்ருத நி:சேஷ தத்வக்ராமஸ்வரூபிணீ |'

என்றபடி ஸகல தத்வாதீமாய் மஹாகைலாஸம், அபராஜிதம் முதலான பெயர்களையுடைய ஸர்வவோத்தமமான லோகத்தில் வீற்றிருக்கிருள். அவளுடைய ரூபமானது ரஜஸ், தமஸ் இவைகளின் சேர்க்கையில்லாமல் உறைந்த நெய் மாதிரி கனீபூதமான சுத்தஸத்வ ரூபமானது. இதர சிவ, சக்திகள் இம்மாதிரி சுத்த ஸத்வமூர்த்தியாக இல்லாமல் கொஞ்சமாவது ரஜஸ்தமோகுணங்களுடையவை. ஆகவே இந்த ரூபம்தான் ஸர்வோத்தமமானது. இவ்விதமான ஸ்வரூபத்தை கீழ்வருமாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது—

'அதீதம் து பரம் தேஜ: ஸ்வஸம்விதுதயாத்மகம் |
ஸ்வேச்சாவிச்வ மயோல்லேக கசிதம் விச்வரூபகம் ||
சைதன்யமாத்மனோ ரூபம் நிஸர்கானந்த ஸுந்தரம் |
மேய மாத்ரு ப்ரமாமான ப்ஸரை: ஸம்குசத் ப்ரபம் ||
ச்ருங்காடரூபமாபன்னம் இச்சா ஞான க்ரியாத்மகம் |
விச்வாகார ப்ரதாதார நிஜரூப சிவாச்ரயம் ||
காமேச்வராங்க பர்யங்க நிவிஷ்டம் அகிஸுந்தரம் |
இச்சாசக்தி மயம் பாசம் அங்குசம் ஞானரூபிணம் ||
க்ரியாசக்திமயே பாணதனுஷீ ததத் உஜ்வலம் |
ஆச்ரயாச்ரயிபேதேன அஷ்டதாபின்னதேஹமத் |
அஷ்டார சக்ரஸம்ரூடம் நவசக்ராஸனஸ்திதம் ||'

இவ்விதமான மூர்த்தியையேதான் இந்த ஸ்தோத்ரத்தில் வர்ணிக்கப்படுகிறது.

'கிராமாஹுர் தேவீம் த்ருஹிணக்ருஹிணீம் ஆகமவிதோ
ஹரே: பத்னீம் பத்மாம் ஹரஸஹசரீம் அத்ரிதனயாம் |
துரீயா காZபி த்வம் துரதிகம நிஸ்ஸீம மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி ப்ரப்ரம்ஹ மஹிஷீ ||'

## அம்பிகையின் உபாஸனையின் பலன்கள்.

அம்பிகையானவள் அவ்யாஜகருணாரூபிணியாயும் ஜகன்மாதாவாகவுமிருக்கிறபடியால் அவளுடைய குழந்தைகளாகிய நாம் அவளை எப்

படி உபாஸித்தாலும் அதை ஏற்றுக்கொண்டு நமக்கு அனுக்ரஹம் செய்வாள். உள்ளன்போடும் பக்தியோடும் உபாஸிக்கவேண்டியது முக்யமே தவிர, வேறு க்ரியாகலாபங்களையாவது அவற்லைறப்பற்றிய ஞானத்தையாவது அம்பாள் தன் குழந்தைகளிடம் எதிர்பார்ப்பதில்லை. இந்த அபிப்ராயத்தையொட்டியே ஆசார்யாளும்

'ந மந்த்ரம் நோ யந்த்ரம் ததபி ச ந ஜானே ஸ்துதிமஹோ
ந சாஹ்வானம் த்யானம் ததபி ச ந ஜானே ஸ்துதிகதா: |
ந ஜானே முத்ராஸ்தே ததபி ச ந ஜானே விலபனம்
பரம் ஜானே மாத: த்வதனுஸரணம் க்லேசஹரணம் ||'

என்று சொல்லியிருக்கிறார்கள். மேலும் அம்பாள் 'க்ஷிப்ர ப்ரஸாதினீ'—சீக்ரத்தில் ஸந்தோஷமடைந்து அனுக்ரஹம்செய்யும் ஸ்வபாவமுடையவள். இதே காரணத்தால் அம்பாளை 'ஸுகாராத்யா,' 'ஸுலபாகதி:' என்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளை உபாஸிப்பது ஸுலபமானதென்றும் உபவாஸாதி காயக்லேசங்களில்லாமலும் நியம நிர்பந்தங்களில்லாமலும் அம்பாளை ஆராதிக்கலாமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ரே மூடா: கிமயம் வ்ருதைவ தபஸா காய: பரிக்லிச்யதே
யக்ஞைர் வா பஹுதக்ஷிணை: கிமிதரே ரிக்தீக்ரியந்தே
க்ருஹா: |
பக்திச்சேத் அவிநாசினீ பகவதீ பாதத்வயீ ஸேவ்யதாம்
உன்னித்ராம்புருஹாதபத்ரஸுபகா லக்ஷ்மீ: புரோ
தாவதி ||' (கடஸ்தவம்)
'தேஹக்ஷோபகரை: வ்ரதைர்பஹுவிதை: தானைச்சஹோமைர்
ஜபை:
ஸந்தானைர் ஹயமேத முக்யஸுமகை: நானாவிதை: கர்மபி: |
யத் ஸங்கல்ப விகல்ப பாவமலினம் க்யாதம் பதம் தஸ்ய தே
தூராதேவ நிவர்ததே பரதரம் மாத: பதம் நிர்மலம் ||'
(த்ரிபுராமஹிம்நஸ்தோத்ரம்)

இது தவிர அம்பாள் ஆனந்தைகரூபிணியாயும் ச்ருங்கார ரஸ ப்ரதானையாகவும் லலிதாம்பிகையாகவுமிருக்கிறபடியால் அவளுடைய பக்தர்கள் உபாஸனையின்போது ரமணீயமான காத்ரத்தோடும் ச்ருங்கா

ரமான வேஷத்தோடும் ஸுகந்தமான வாக்கோடும் ப்ரஸன்னமான முகத்தோடும் இருக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'குங்குமாருணதேஹஸ்து ரக்தவஸ்த்ராதி ஸம்யுத: |
தாம்பூல பூரிதமுக: மதிரானந்த சேதன: ||
கர்பூரக்ஷோத நிக்தாங்கோ ரக்தாபரணமண்டித: |
ரக்த புஷ்பாவ்ருதோ யோகீ ரக்தகந்தானுலேபன: ||
ரக்தாஸ்தரோபவிஷ்டஸ்து லாக்ஷாருணக்ருஹே ஸ்தித: |
ஸர்வ ச்ருங்காரவேஷாட்ய: த்ரிபுரீக்ருதவிக்ரஹ: |
மன: ஸங்கல்ப ரக்தோ வா ஸாதக: ஸ்திரமானஸ: |'

(நித்யாஷோடசிகார்ணவம்)

இவ்விதம் அனன்யசித்தத்தோடும் அம்பாளே சரணமென்ற பாவத்தோடும் உபாஸனைசெய்தால் ஸகலவிதமான புருஷார்த்தங்களையுமடையலாம். அம்பாளுடைய உபாஸகர்களுக்கு போகம், மோக்ஷம் இவையிரண்டும் கரஸ்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

யத்ராஸ்தி போகோ நச தத்ர மோக்ஷ:
யத்ராஸ்தி மோக்ஷோ நச தத்ர போக: |
ஸ்ரீஸுந்தரீ ஸாதக புங்கவானும்
போகச்ச மோக்ஷச்ச கரஸ்த்த ஏவ ||'

அம்பாள் ஒருவளே சதுர்வர்கமெனப்படும் சதுர்வித புருஷார்த்தங்களையும் ஒருங்கே கொடுக்கக்கூடியவள்.

'அத: பரம் ச தேவானும் அர்ச்சனம் காரயேத் புத: |
கணேசம் பூஜயேத் யஸ்து விக்னஸ் தஸ்ய ந பாததேli
ஆரோக்யார்த்தேZர்ச்சயேத் ஸூர்யம் தர்மமோக்ஷாய மாதவம் |
சிவம் தர்மார்த்தமோக்ஷாய சதுர்வர்காய சண்டிகாம் Il'

அதிலும், நாம் வேண்டும் அளவுக்குமேல் கொடுக்கக்கூடிய கோமளமான ஹ்ருதயத்தோடுகூடியவள் ஜகன்மாதா.

'பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்ச்சா ஸமதிகம்
சரண்யே லோகானும் தவ ஹி சரணாவேவ நிபுணௌ |'

அம்பாளே ஸகலவிதமான ஆபத்துக்களிலிருந்தும் காப்பாற்றக் கூடியவள்.

'ஆபதி கிம் கரணீயம் ஸ்மரணீயம் சரணயுகளமம்பாயா: |
தத் ஸ்மரணம் கிம் குருதே ப்ரம்ஹாதீனபி கிங்கரீ குருதே ll'

'காந்தார மத்ய த்ருடலக்ன தயாவஸன்னு:
மக்னுச்ச வாரிதிஜலே ரிபுபிச்ச ருத்தா: |
யஸ்யா: ப்ரபத்ய சரணௌ விபதஸ்தரந்தி
ஸா மே ஸதாஸ்து ஹ்ருதி ஸர்வ ஜகத் ஸவித்ரீ ll
பந்தே வதே மஹதி ம்ருத்யுபயே ப்ரஸக்தே
வித்தக்ஷயே ச விவிதே ச மஹோபதாபே |
யத் பாதபூஜனமிஹ ப்ரதிகாரமாஹு:
ஸா மே ஸமஸ்தஜனனீ சரணம் பவானீ ll'

ஸகலவிதமான பாபங்களுக்கும் அம்பாளுடைய பாதஸ்மரணமே பரம ப்ராயச்சித்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'க்ருதஸ்யாகில பாபஸ்ய ஞானதோZக்ஞானதோபி வா |
ப்ராயச்சித்தம் பரம் ப்ரோக்தம் பராசக்தே: பதஸ்ம்ருதி:ll,

ஆகவே அம்பாளைவிட உயர்ந்ததெய்வம் யாருமில்லையென்பதும் அம்பாளை ஆராதித்தால் ஸகல தேவர்களும் த்ருப்தியடைகிறார்க ளென்பதும் சாக்தர்களுடைய ஸித்தாந்தம்.

இப்படி ஸகல தேவதாஸ்வரூபிணியாயும் ஸமானுதிகவர்ஜிதை யாயும் இருக்கப்பட்ட மஹாராக்ஞியின் க்ருபையானது ஏற்பட்டு விட்டால் நமக்கு என்ன தான் கிடைக்காது!

'கிம் கிம் து:கம் தனுஜதளினி க்ஷீயதே ந ஸ்ம்ருதாயாம்
கா கா கீர்த்தி: குலகமலினி க்யாப்யதே ந ஸ்துதாயாம் |
கா கா ஸித்தி: ஸுரவரனுதே ப்ராப்யதே நார்ச்சிதாயாம்
கம் கம் யோகம் த்வயி ந சினுதே சித்தமாலம்பிதாயாம்ll'
(கடஸ்தவம்)

அம்பாள் இம்மாதிரி நாம் விரும்பியவற்றையெல்லாம் கொடுப்பதில் நம்முடைய க்ஷேமத்தையே மனதில்கொண்ட மாதாவாகையால் அவைகளை நாம் நமக்கு ஹிதமான வழியில் உபயோகப்படுத்த வேண்டுமென்ற அக்கரையோடு நமக்கு முதலில் ஞானத்தைக்

கொடுப்பதாயும், பிறகு ஐச்வர்யத்யையும் அதை அனுபவிப்பதற்காக ஸௌந்தர்யமுள்ள சரீரத்தையும் கொடுப்பதாக ஆசார்யாளால் இதின் 99வது ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரி ஸபத்னோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா |'

அம்பாள் இப்படி இவையெல்லாம் கொடுப்பதின் காரணம் நமக்கு அவித்யையான பாசம் விலகிப்போய், உண்மையானதும் பரமானந்தமயமானதுமான நம்முடைய பரப்ரம்ஹ ஸ்வரூபத்தை நாம் அறிந்து கடைத்தேற வேண்டுமென்ற கருணைதான். இந்த (பாசத்திலிருந்து விடுதலையடைவதான) முக்தியை நமக்கு இந்த ஜன்மத்திலேயே கொடுப்பதற்கும் அம்பாள் ஸித்தமாக இருக்கிறாளென்பதையும் மேலே சொல்லிய ச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்கள்.

'சிரம் ஜீவன்னேவ க்ஷபித பசு பாச வ்யதிகர:
பரானந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத் பஜனவான் ||'

ஸகலவிதமான மங்களங்களையும் நமக்குக்கொடுப்பதற்கு அம்பாள் எப்போதும் உத்யுக்தையாக இருக்கிறபடியால் நாம் ஒன்றையும் குறிப்பிடாமலேயே உபாஸித்துவந்தால் நமக்கு எல்லாம் கிடைக்கும். லோகமாதாவுக்கு நம்முடைய தாபத்ரயங்களெல்லாம் தெரியுமாகையாலும் அவளுடைய மனதானது கருணாம்ருத கல்லோலமாயிருப்பதாலும், நம்முடைய க்ஷேமத்திற்கு எது தேவையோ அதை நாம் கேட்காமலேயே கொடுப்பதற்கு ஸித்தமாக இருக்கிறாள். நாம் செய்யவேண்டியது ஒரே கார்யம்தான்— அம்பாளே சரணமென்பதான த்ருடபாவனையோடும் அனன்ய சித்தத்தோடும் ஆராதிக்கவேண்டும். அப்போது அம்பாள் நம்முடைய ஐஹிகமான ஸகல பாரங்களையும் தான் ஏற்றுக்கொள்வதுடன் முக்தியையும் கொடுப்பாள்.

'நிஷ்காமோ தேவதாம் நித்யம் யோऽர்ச்சயேத் பக்திநிர்பர: |
தாமேவ சிந்தயன்னாஸ்தே யதாசக்தி மனும் ஜபன் ||
ஸைவ தஸ்யைஹிகம் பாரம் வஹேன்முக்திம் ச ஸாதயேத் |
ஸதா ஸந்நிஹிதா தஸ்ய ஸர்வம் ச கதயேத ஸா ||'

இவ்விதம் சரணாகதி அடைந்தவனுடைய லக்ஷணமானது பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

ய: புமான்கிலம் பாரம் ஐஹிகாமுஷ்மிகாத்மகம் |
ஸ்ரீதேவதாயாம் நிக்ஷிப்ய ஸதா தத்கதமானஸ: ||
ஸர்வானுகூல: ஸர்வத்ர ப்ராதிகூல்யவிவர்ஜித: |
அனன்யசரணோ கௌரீம் த்ருடம் ஸம்ப்ரார்த்ய ரக்ஷணே |
ரக்ஷிஷ்யதீதி விச்வாஸஸ் தத்ஸேவைக ப்ரயோஜன: |
வரிவஸ்யா தத்பர: ஸ்யாத் ஸ ஏவ சரணாகத: ||

இப்படி சரணாகதிபண்ணியவனை அம்பாளானவள் கன்றைவிட்டுப்பிரியாமல் தொடர்ந்துபோகும் பசுமாதிரி வாத்ஸல்யத்துடன் அனுஸரித்து ரக்ஷிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'வாத்ஸல்ய ஸஹிதா தேனு: யதா வத்ஸமனுவ்ரஜேத் |
ததானுகச்சேத் ஸா தேவீ ஸ்வபக்தம் சரணாகதம் ||'

இம்மாதிரி சதுர்வித புருஷார்த்தங்களேயும் இந்த ஜன்மத்திலேயே நாம் அடையும்படி அனுக்ரஹம் செய்யக்கூடிய தெய்வம் அம்பாள் ஒருவளே என்பது அவளுடைய உபாஸகர்களின் ஸித்தாந்தம். அத்தகைய பரதேவதையின் உபாஸனையை ப்ரதிபாதிக்கும் க்ரந்தங்களில் ஸ்ரீமத்ஆசார்யாளுடைய இந்த ஸ்தோத்ரமானது ஸர்வானந்தகரமென்பதிலும் பரமாஹ்லாதகரமென்பதிலும் ஸர்வோத்க்ருஷ்டமென்பதிலும் அபிப்ராயபேதமிருப்பதற்கு இடமேயில்லே. ஆகவே தேவீபக்தர்கள் யாவரும் இந்த ஸ்தோத்ர ரத்னத்தை தினந்தோறும் பாராயணம் செய்து இதில் சொல்லியிருக்கிறபடி அம்பிகையின் ரூபத்தை அனுஸந்தானம் செய்து உபாஸித்து அவளுடைய கருணைக்குப் பாத்ரர்களாகவேண்டி முயற்சிப்பது அவர்களுடைய இன்றியமையாத கடமையாகும்.

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

---



## ச்லோகங்களின் அகராதி அட்டவணை.


| ச்லோகம். | நெ. | பக்கம். | விஷயம். |
|---|---|---|---|
| அமூ தே வக்ஷோஜௌ | 73 | 175 | ஸ்தனயுகம் |
| அராளம் தே பாளீ | 58 | 151 | பாளீயுகளம் |
| அராளா கேசேஷு | 93 | 212 | சரீரம் |
| அராளை: ஸ்வாபாவ்யாத் | 45 | 127 | அளகங்கள் |
| அவித்யானாம் அந்த: | 3 | 6 | பாதரேணு |
| அவிச்ராந்தம் பத்யு: | 64 | 160 | ஜிஹ்வா |
| அஸௌ நாஸாவம்ச: | 61 | 155 | நாஸிகை |
| அஹ்ஸ்ஸூதே தாதா | 48 | 135 | த்ருஷ்டி |
| க்வணத்காஞ்சீ தாமா | 7 | 16 | பூஷணஆயுதாலங்க்ருதமான ரூபம் |
| கதாகாலே மாத: | 98 | 220 | பாதோதகம் |
| கராக்ரேண ஸ்ப்ருஷ்டம் | 67 | 165 | முகவாய்க்கட்டு |
| கரீந்த்ராணாம் சுண்டான் | 82 | 192 | ஜங்காப்ரதேசம் |
| கவீந்த்ராணாம் சேத: | 16 | 53 | கவிதாஸித்திகாரூபம் |
| கவீனாம் ஸந்தர்ப | 50 | 138 | நெற்றிக்கண் |
| களங்க: கஸ்தூரீ | 94 | 214 | ஸ்னானஸாமக்ரியை |
| களத்ரம் வைதாத்ரம் | 96 | 217 | பாதிவ்ரத்யம் |
| கிரந்தீம் அங்கேப்ய: | 20 | 61 | விஷஜ்வரஹரப்ரயோகம் |
| கிரீடம் வைரிஞ்சம் | 29 | 80 | பதியின் வரவேற்பு |
| குசௌ ஸத்யஸ் ஸ்வித்யத் | 80 | 189 | இடுப்பிலிருக்கும் வளித்ரயம் |
| கதாஸ்தே மஞ்சத்வம் | 92 | 210 | பஞ்சப்ரேதமஞ்சம் |
| கதே கர்ணாப்யர்ணம் | 52 | 141 | நேத்ரங்கள். |
| கதைர் மாணிக்யத்வம் | 42 | 122 | கிரீடம் |
| களே ரேகாஸ்திஸ்ரோ | 69 | 168 | நெற்றியிலிருக்கும் வளித்ரயம் |
| கிராமாஹுர்தேவீம் | 97 | 219 | துரீயமான மஹா-மாயாரூபம் |
| குருத்வம் விஸ்தாரம் | 81 | 191 | நிதம்ப ப்ரதேசம் |
| சதுர்பி: ஸ்ரீகண்டை: | 11 | 35 | ஸ்ரீசக்ரம் |

| | | | |
|---|---|---|---|
| சதுஷ்ஷஷ்ட்யா | 31 | 84 | (ஸ்வ) தந்த்ரம் |
| ஜகத்ஸூதே தாதா | 24 | 68 | ப்ரூசலன மஹிமை |
| ஜபோஜல்ப: சில்ப: | 27 | 75 | ஸமயமத ஸபர்யை |
| த்ரயாணும் தேவானும் | 25 | 70 | தேவீபூஜை த்ரிமூர்த்தி பூஜாத்வம் |
| த்வதன்ய: பாணிப்யாம் | 4 | 8 | சரணங்கள் |
| த்வதீயம் ஸௌந்தர்யம் | 12 | 43 | ஸௌந்தர்யம் |
| த்வயா ஹ்ருத்வா வாமம் | 23 | 67 | சரீரம் |
| தடித்வந்தம் சக்த்யா | 40 | 109 | மணிபூரத்திலிருப்பது |
| தடில்லேகா தன்வீம் | 21 | 63 | மஹாபத்மாடவியிலிருப்பது |
| தனீயாம்ஸம் பாம்ஸூம் | 2 | 4 | பாதரேணு |
| தனுச்சாயாபிஸ்தே | 18 | 57 | ஸ்த்ரீவச்யகரரூபம் |
| தனோது க்ஷேமம் ந: | 44 | 126 | ஸீமந்த ஸரணி |
| தவ ஸ்தன்யம் மன்யே | 75 | 178 | ஸ்தன்யம் |
| தவ ஸ்வாதிஷ்டானே | 39 | 108 | ஸ்வாதிஷ்டானத்திலிருப்பது |
| தவாக்ஞாசக்ரஸ்த்தம் | 36 | 101 | ஆக்ஞாசக்ரத்திலிருப்பது |
| தவாதாரே மூலே | 41 | 111 | மூலாதாரத்திலிருப்பது |
| தவாபர்ணே கர்ணே | 56 | 147 | நேத்ரங்கள் |
| த்ருசா த்ராகியஸ்யா | 57 | 149 | கடாக்ஷ ப்ரார்த்தனே |
| ததானே தீனேப்ய: | 90 | 207 | சரணங்கள் |
| தனு: பௌஷ்பம்மௌர்வீ | 6 | 14 | மன்மத விஜயம் |
| துனோது த்வாந்தம் | 43 | 124 | கேசகலாபம் |
| நகானும் உத்யோதை: | 71 | 172 | கரங்கள் |
| நகைர் நாகஸ்த்ரீணும் | 89 | 205 | சரணங்கள் |
| நமோவாகம் ப்ரூமோ | 85 | 198 | ,, |
| நரம் வர்ஷீயாம்ஸம் | 13 | 44 | அபாங்காவலோகன மஹிமை |
| நிமேஷோன்மேஷாப்யாம் | 55 | 145 | நேத்ரங்கள் |
| நிஸர்கக்ஷீணஸ்ய | 79 | 188 | மத்ய ப்ரதேசம் |

| | | | |
|---|---|---|---|
| ப்ரக்ருத்யா ரக்தாயா: | 62 | 156 | அதரம் |
| ப்ரதீபஜ்வாலாபி: | 100 | 225 | கவியின் அவையடக்கம் |
| பதன்யாஸக்ரீடா | 91 | 209 | நடையினழகு |
| பதம்தே கீர்த்தீனாம் | 88 | 203 | சரணங்கள் |
| பராஜேதும் ருத்ரம் | 83 | 193 | ஜங்காப்ரதேசம் |
| பவித்ரீ கர்த்தும் | 54 | 144 | நேத்ரங்கள் |
| புராராதேரந்த: | 95 | 215 | சஞ்சலசித்தர்களுக்கு எட்டாதிருப்பது |
| ப்ருவௌ புக்னே | 47 | 131 | புருவங்கள் |
| பவானி த்வம் தாஸே | 22 | 64 | ஸ்தோத்ரத்தின் ஸாயுஜ்ய ப்ரதத்வம் |
| புஜாச்லேஷான்னித்யம் | 68 | 167 | கண்டம் |
| ம்ருணாளீ ம்ருத்வீனாம் | 70 | 171 | புஜங்கள் |
| ம்ருஷாக்ருத்வா | 86 | 200 | சரணங்கள் |
| மனஸ்த்வம் | 35 | 98 | ஸகல தத்வமய ரூபம் |
| மஹீம் மூலாதாரே | 9 | 22 | ஷட்சக்ரபேதனம் |
| முகம்பிந்தும் க்ருத்வா | 19 | 59 | ஸ்த்ரீவச்யகர ப்ரயோகம் |
| யதேதத்காளிந்தி | 77 | 185 | ரோமாவளி |
| ரணேஜித்வா | 65 | 161 | தாம்பூல கபளம் |
| லலாடம் லாவண்ய | 46 | 129 | லலாடம் |
| வஹத்யம்ப | 74 | 176 | ஹார லதிகா |
| விபஞ்ச்யா காயந்தீ | 66 | 163 | பேச்சின் அழகு |
| விபக்தத்ரைவர்ண்ய | 53 | 142 | நேத்ரங்கள் |
| விசாலா கல்யாணீ | 49 | 136 | த்ருஷ்டி |
| விசுத்தௌ தே சுத்த | 37 | 104 | விசுத்தி சக்ரத்திலிருப்பது |
| விரிஞ்சி: பஞ்சத்வம் | 26 | 73 | கல்பாந்தத்திலுமிருப்பது |
| ச்ருதீனாம் மூர்த்தானோ | 84 | 195 | சரணங்கள் |
| சரத்ஜ்யோத்ஸ்ன | 15 | 51 | கவிதாஸித்திகாரூபம் |

| | | | |
|---|---|---|---|
| சரீரம் த்வம் சம்போ: | 34 | 94 | சிவசக்திகளுடைய ஸாம்யம் |
| சிவ: சக்த்யா யுக்தோ | 1 | 1 | சிவனுக்கு சக்தியின் ஆவச்யகதா |
| சிவ: சக்தி: காம: | 32 | 87 | தேவீமந்த்ரம் |
| சிவே ச்ருங்காராத்ரா | 51 | 139 | த்ருஷ்டி |
| ஸ்திரோ கங்காவர்த: | 78 | 186 | நாபி ப்ரதேசம் |
| ஸ்புரத் கண்டாபோக: | 59 | 152 | முகம் |
| ஸ்மரம் யோனிம் | 33 | 91 | தேவீமந்த்ரம் |
| ஸ்மித ஜ்யோத்ஸ்னா | 63 | 158 | முகம் |
| ஸ்வதேஹோத்பூதாபி: | 30 | 82 | தாதாத்ம்யானுஸந்தான மஹிமை |
| ஸமம் தேவி ஸ்கந்த | 72 | 173 | ஸ்தனயுகம் |
| ஸமுன்மீலத் ஸம்வித் | 38 | 105 | அனாஹத சக்ரத்திலிருப்பது |
| ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா | 99 | 222 | பக்தனுடைய மஹிமை |
| ஸரஸ்வத்யா: ஸூக்தீ: | 60 | 154 | பேச்சின் அழகு |
| ஸவித்ரீபிர் வாசாம் | 17 | 54 | கவிதாஸித்திகரூபம் |
| ஸுதாதாராஸாரை: | 10 | 31 | ஸஹஸ்ரார மூலாதாரங்களிலிருப்பது |
| ஸுதாமப்யாஸ்வாத்ய | 28 | 77 | தாடங்கமஹிமை |
| ஸுதாஸிந்தோர்மத்யே | 8 | 19 | பரமசிவபர்யங்கத்திலிருப்பது |
| ஹரக்ரோத ஜ்வாலா | 76 | 183 | ரோமவளி |
| ஹரிஸ்த்வாமாராத்ய | 5 | 11 | ஸௌந்தர்ய ஜனகத்வம் |
| ஹிமானீ ஹந்தவ்யம் | 87 | 202 | பாதயுகம் |
| க்ஷிதௌ ஷட்பஞ்சாசத் | 14 | 46 | ஷட்சக்ரங்களைக் கடந்திருப்பது |

உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாரவர்கள்

அருளிச்செய்த

# ஸௌந்தர்ய லஹரீ.

शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ।
अतस्त्वामाराध्यां हरिहरविरिञ्चादिभिरपि
प्रणन्तुं स्तोतुं वा कथमकृतपुण्यः प्रभवति ॥ १ ॥

சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்
ந சேதேவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திதுமபி |
அதஸ்த்வாம் ஆராத்யாம் ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி
ப்ரணந்தும் ஸ்தோதும் வா கதம் அக்ருதபுண்ய: ப்ரபவதி ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| சிவ: | ஸர்வமங்களோபேதனான ஸதா சிவனானவர் |
| சக்த்யா | (ஜகத்தை நிர்மாணம் பண்ணும்படியான) சக்தியோடு |
| யுக்தோ பவதி யதி | கூடியிருப்பாரேயாகில் |
| ப்ரபவிதும் | ப்ரபஞ்சத்தை நிர்மாணம் பண்ண |
| சக்த: | ஸமர்த்தராவார் |
| தேவ: | அந்த ஸதா சிவனானவர் |
| ஏவம் ந சேத் | அப்படி கூடியில்லாவிட்டால் |
| ஸ்பந்திதும் அபி | கொஞ்சம் அசைவதற்குக்கூட |
| குசல: ந கலு | ஸாமர்த்யமுடையவராக ஆகமாட்டாரல்லவா |
| அத: | இந்தக்காரணத்தினால் |
| ஹரிஹரவிரிஞ்சாதிபிரபி | விஷ்ணு, ருத்ரன், ப்ரம்ஹா முதலியவர்களாலும் கூட |
| ஆராத்யாம் | ஆராதிக்கத் தகுந்தவளான |
| த்வாம் | உன்னை |

| | |
|---|---|
| அக்ருதபுண்ய: | பூர்வஜன்மங்களில் புண்யம் செய்யாதவன் |
| ப்ரணந்தும் | நமஸ்காரம் செய்வதற்காவது |
| ஸ்தோதும் வா | ஸ்துதிப்பதற்காகவது |
| கதம் ப்ரபவதி | எப்படி ஸமர்த்தனுவான்? |

தாயே! ஈச்வரனுனவர் ஜகத்தை நிர்மாணம் செய்வதானுல் (அப்படி நிர்மாணம் பண்ணும்படியான) சக்தியுடன் கூடியிருந்தால்தான் அவரால் அது முடியும். இல்லாவிட்டால் அவரால் அசைவதற்குக்கூட முடியாது. ஆகையால் விஷ்ணு, சிவ, ப்ரம்ஹாதிகள் கூட ஆராதிக்கும்படியான உன்னை புண்யலேசமாவது செய்தறியாதவனுகிய என்னைப்போன்றவன் நமஸ்கரிக்கவாவது ஸ்துதிசெய்யவாவது எப்படி முடியும்!

1. இந்த ச்லோகத்தில் தேவியை உபாஸிப்பவர்களுடைய அடிப்படையான ஸித்தாந்தத்தைச் சொல்லப்பட்டிருக்கிறது. ஈச்வரன் லோகங்களை ஸ்ருஷ்டிப்பதற்கும் பரிபாலனம் பண்ணுவதற்கும் ஸம்ஹாரம் பண்ணுவதற்கும் சக்திதான் மூலகாரணம் என்றும் அந்த சக்தியில்லாவிட்டால் சிவனுல் யாதொன்றும் செய்யமுடியாது என்பதும் முதலான கொள்கை. இது அனேக வாக்யங்களால் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

'பரோபி சக்திரஹித: சக்த்யா யுக்தோ பவேத் யதி |
ஸ்ருஷ்டி ஸ்திதிலயான் கர்த்தும் அசக்த: சக்த ஏவஹி ||'
'சக்த்யா விநா சிவே ஸூக்ஷ்மே நாமதாம நவித்யதே |'
'சிவோபி சவதாம் யாதிகுண்டலின்யா விவர்ஜித: |'

2. சிவனும் சக்தியும் 'ஜகத: பிதரௌ' என்றபடி ஜாயாபதிந்யாயத்தினுல் இருவரும் சேர்ந்தால்தான் ப்ரபஞ்சமாகிற ஸந்தானத்தை உண்டுபண்ணமுடியும் என்றும் அர்த்தம்.

3. 'வசகாந்தௌ சிவஸ்ஸ்ம்ருத:' என்றபடி ஸ்வயம் ப்ரகாசமான வஸ்துவாக இருக்கிறபடியாலும், ப்ரபஞ்சமே அவரால் ப்ரகாசமாகிறதென்றபடியாலும் சிவன் என்று பெயர். ஜாட்ய ரஹிதராயிருக்கிறபடியாலும் அதாவது அவித்யையிலிருந்து நிர்முக்தராக இருக்கிறபடியாலும் சிவனென்று பெயர்.

4. 'விரிஞ்சாதிபி:' என்றதனுல் மற்றதேவர்கள் குறிக்கப் பட்டிருக்கிருர்கள். அல்லது 'ஆதி' என்றதனுல் வேதங்களைச் சொன்னதாகவும் சொல்லலாம். அம்பாளை வேதங்கள் நமஸ்கரித்துக் கொண்டிருப்பதாக 'ச்ருதீனும் மூர்தான:' என்று பின்வரும் 58வது ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீ லலிதாஸஹஸ்ர நாமத்திலும் 'ச்ருதிஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜதூளிகா' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

5. இப்படி அம்பாளாகிய பராசக்தியின் உதவி ஈச்வரனுக்கே இன்றியமையாததாக இருக்கும்போது அவர்களிடமிருந்து அதிகாரம் பெற்றவர்களான ஸ்ருஷ்டிகர்த்தாவான ப்ரம்ஹா, ஸ்திதிகர்த்தாவான விஷ்ணு, ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரன் இந்த த்ரிமூர்த்திகளென்ன, இந்த்ரன் முதலிய திக்பாலகர்களென்ன, மற்றுமுள்ள தேவர்களென்ன, இவர்களெல்லாராலும் அம்பாள் பூஜிக்கத் தகுந்தவளாக இருக்கிருள் என்பது சுலபமாக ஏற்படுகிறது.

6. 'ப்ரணந்தும்' என்பதினுல் காயிகம், வாசிகம், மானஸீகம் இந்த மூன்றுவகையான நமஸ்காரத்தைச் சொல்லப்பட்டது. இவை முடியாமலிருந்தும் கேவலம் ஸ்துதிமாத்ரமான ஆராதனையைச்செய்யக்கூட புண்யம் செய்யாதவனுல் முடியாது என்பதாக 'ஸ்தோதும்வா' என்பதனுல் சொல்லப்பட்டது.

7. நவசக்ராத்மகமான ஸ்ரீ சக்ரத்திலிருந்து ஜகத்தினுடைய உத்பத்தி, ஸ்திதி, லயங்கள் ஏற்படுகிறதென்றும் அந்த ஸ்ரீ சக்ரமானது ஊர்த்வ முகமாக இருக்கும் நான்கு சிவசக்ரங்களாகிய பாதியும் அதோ முகமாக இருக்கும் ஐந்து சக்தி சக்ரங்களாகிய பாதியும் சேர்ந்து ஏற்படுகிறதென்றும் பின்னுல் 'சதுர்பி: ஸ்ரீகண்டை:' என்ற பதினேராவது ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. இதையே ஸ்ரீ லலிதாத்ரிசதியில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

சதுர்பி: சிவசக்ரைச்ச சக்தி சக்ரைச்ச பஞ்சபி: |
சிவசக்த்யாத்மகம் ஞேயம் ஸ்ரீ சக்ரம் சிவயோர்வபு: ||

तनीयांसं पांसुं तव चरणपङ्केरुहभवं
विरिञ्चिः संचिन्वन्विरचयति लोकानविकलम् ।
वहत्येनं शौरिः कथमपि सहस्रेण शिरसां
हरः संक्षुद्यैनं भजति भसितोद्धूलनविधिम् ॥ २ ॥

தனீயாம்ஸம் பாம்ஸும் தவ சரண பங்கேருஹபவம்
விரிஞ்சிஸ் ஸஞ்சின்வன் விரசயதி லோகான் அவிகலம் |
வஹத்யேனம் சௌரி: கதமபிஸஹஸ்ரேண சிரஸாம்
ஹரஸ் ஸம்க்ஷுத்யைனம் பஜதி பஸிதோத்தூளனவிதிம் ॥

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| விரிஞ்சி: | ப்ரம்ஹாவானவர் |
| தவ சரணபங்கேருஹ பவம் | உனது பாதாரவிந்தங்களிலிருக்கும் |
| தனீயாம்ஸம் | அதிஸூக்ஷ்மமான |
| பாம்ஸும் | தூளியை |
| ஸஞ்சின்வன் | ஸம்பாதித்து (சேர்த்துவைத்து) |
| லோகான் | ஸமஸ்தலோகங்களையும் |
| அவிகலம் | ஒழுங்காக |
| விரசயதி | நிர்மாணம் செய்கிறார். |
| சௌரி: | விஷ்ணுவானவர் |
| ஏனம் | இந்த (லோகங்களாக இருக்கும்) உன்னுடைய பாதத்துளியை |
| சிரஸாம் ஸஹஸ்ரேண | தன்னுடைய ஆயிரம் தலைகளால் |
| கதமபி | எவ்வளவோ சிரமத்துடன் (ஒருமாதிரியாக) |
| வஹதி | தாங்கிக்கொண்டிருக்கிறார். |
| ஹர: | சிவனானவர் |
| ஏனம் | இதேபாததூளியை |
| ஸம்க்ஷுத்ய | நன்றாகச் சூர்ணம்செய்து (அதினால்) |
| பஸிதோத்தூளனவிதிம் | பஸ்மதாரணம் செய்வது என்பதை |
| பஜதி | செய்கிறார் (பூசிக்கொள்கிறார்). |

தாயே! ப்ரம்ஹாவானவர் உன் பாதரேணுக்களில் அதிஸூக்ஷ்மமானதொன்று கிடைக்கப்பெற்று அதைக்கொண்டு லோகங்களையெல்லாம் செம்மையாய் ஸ்ருஷ்டிக்கிறார். அந்த பாத

தூளியான ஸகலலோகங்களையும் (ஆதிசேஷரூபியான) விஷ்ணுவானவர் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு தன்னுடைய ஆயிரம் தலைகளால் தாங்கிக்கொண்டிருக்கிறார் அந்த தூளியையே பரமசிவன் தன்னுடைய மேற்பூச்சாக உபயோகிக்கிறார்.

1. இதனால் ஸகலப்ரபஞ்சங்களுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி லயம் என்கிற கார்யங்களை ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்கள் நடத்துவதானது அம்பாளுடைய பாதாரவிந்த தூளியின் மஹிமையால்தான் என்று சொல்லப்பட்டது.

விரசயதி—நானுவிதங்களாகச் செய்கிறார்.

லோகான்—ஸ்தாவர ஜங்கமாத்மகமான லோகம். அல்லது, பூலோகம் முதலிய மேல் லோகங்கள் ஏழு ,அதலம் முதலிய கீழ்லோகங்கள் ஏழு, ஆக பதினாலு லோகங்கள்.

அவிகலம்:—ஒன்றோடொன்று சேராமல், அல்லது, ப்ரளயகாலம் வரையில் நாசம் அடைவதற்கு இடமில்லாமல்.

3. சௌரி: என்றால் ஆதிசேஷன் அல்லது அவருடைய அவதாரமான பலராமர் என்று அர்த்தம். இங்கே விஷ்ணு என்று அர்த்தம். லோகங்களை க்ஷேமமாகப் பார்த்துக்கொள்வது விஷ்ணுவினுடைய அதிகாரமானதையால் அவரையேதான் இங்கே சொல்லப்பட்டது.

சிம்சுமாராத்மனு விஷ்ணு: ஸப்தலோகான் அதஸ்ஸ்திதான் |
தத்ரே சேஷதயாலோகான் பூராதீன் ஊர்த்வதஸ்ஸ்திதான் ||

4. ப்ரளயகாலத்தில் ப்ரபஞ்சங்களை ஸம்ஹாரம் செய்வதால் சிவனுக்கு ஹரன் என்று பெயர்

5. அம்பாளுடைய பாதாரவிந்தரேணுவிலிருந்து ப்ரம்ஹாவால் நிர்மாணம் செய்யப்பட்ட பதினான்கு லோகங்களையும் விஷ்ணுவானவர் தன் தலைகளால் வெகுச்ரமத்துடன் தாங்கி பாலனம் செய்து பிறகு ப்ரளயாந்த காலத்தில் அவையெல்லாவற்றையும் சிவனவர் ஸம்ஹாரம் பண்ணி அந்தப்பொடியை தன்னுடைய சரீரத்தில் பஸ்பம் பூசுவதுபோல் தரிக்கிறார் என்று சொல்லப்பட்டது. அதிஸூக்ஷ்மமான ஒருரேணுவுக்கு இவ்வளவு மஹிமையென்று வர்ணிக்கப்பட்டது.

अविद्यानामन्तस्तिमिरमिहिरद्वीपनगरी
जडानां चैतन्यस्तबकमकरन्दस्रुतिझरी ।
दरिद्राणां चिन्तामणिगुणनिका जन्मजलधौ
निमग्नानां दंष्ट्रा मुररिपुवराहस्य भवति ॥ ६ ॥

அவித்யாஞம் அந்தஸ்திமிர மிஹிரத்வீபநகரீ
ஜடாஞம் சைதன்யஸ்தபக மகரந்தஸ்ருதி ஜரீ ।
தரித்ராஞம் சிந்தாமணி குணநிகா ஜன்மஜலதௌ
நிமக்ஞாம் தம்ஷ்ட்ரா முரரிபுவராஹஸ்ய பவதி ॥

| | |
|---|---|
| ஹே பகவதி! | அம்மணி! (உன்னுடைய இந்த பாதாரவிந்த ரேணுவானது |
| அவித்யாஞம் | அக்ஞானிகளுக்கு |
| அந்தஸ்திமிர மிஹிர த்வீபநகரீ | அவர்களுக்குள்ளிருக்கும் அஞ்ஞானமாகிற இருட்டைப்போக்கும் ஸூர்யன் உதயமாகிற தீவிலிருக்கும் நகரம்போலும் |
| ஜடாஞம் | மூடர்களுக்கு (மந்த புத்தியுடையவர்களுக்கு) |
| சைதன்ய ஸ்தபக மகரந்த ஸ்ருதிஜரீ | சைதன்யமாகிற பூங்கொத்திலிருந்து பெருகும் மகரந்தப்பொடியின் ப்ரவாஹம் போலும் |
| தரித்ராஞம் | தரித்ரர்களுக்கு |
| சிந்தாமணி குணகணனிகா | சிந்தாமணி ரத்னங்களின் கோர்வைபோலும் |
| ஜன்ம ஜலதௌ | ஸம்ஸாரமாகிற ஸாகரத்தில் |
| நிமக்ஞாம் | முழுகினவர்களுக்கு |
| முராரிபுவராஹஸ்ய | விஷ்ணுவின் வராஹ ரூபத்திலிருக்கும் |
| தம்ஷ்ட்ரா | கோரைப்பல்போலும் |
| பவதி | ஆகிறது (இருக்கிறது) |

தாயே! உன் பாதாரேணுவானது அக்ஞானிகளுக்கு அவர்களுடைய அக்ஞானத்தைப் போக்குகிற (உன் பாதமாகிய) ஸூர்யன் (ஸமுத்திரத்தின் மத்தியிலிருந்து) உதயமாகும் தீவின் முக்யபட்டணம் போலும் மூடர்களுக்கு புத்தி விஸ்தாரத்தைக் கொடுக்கும் சைதன்யமாகிற கல்பவிருக்ஷ புஷ்பக்கொத்திலிருந்து வரும் மகரந்தப்பொடியின் பெருக்குப்போலும் தரித்ரர்களுக்கு (அவர்களுடைய தரித்ரத்தைப் போக்கடிக்கும்) சிந்தாமணி ரத்னம்

போலும் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் மூழ்கினவர்களுக்கு (அவர்களைக்கரையேற்றுவதில்) முராரிபுவான விஷ்ணுவின் அவதாரமான வராஹத்தின் கோரைப்புல்போலும் இருக்கிறது.

1. அம்பாளுடைய பாதரேணுவானது அக்ஞானம் சூழ்ந்த சித்தத்தையுடையவர்களுடைய அக்ஞானத்தைப் போக்கடிக்கிறதென்றும் மூடர்களுக்கு சைதன்யமாகிற சித்த விஸ்தாரத்தைக் கொடுக்கிறதென்றும் தீனர்களுக்கு அவர்கள் கோரும்படியான ஸகல ஸம்பத்தையும் கொடுக்கிறதென்றும் ஸம்ஸாரத்திலகப்பட்டவர்களை அதில் முழுகிப்போய்விடாமல் கரையேற்றுகிறதென்றும் சொல்லப்பட்டது.

2. 'அவித்யானும்' என்றது (அக்ஞானம்) அவித்யையினுல் சூழப்பட்ட சித்தத்தையுடையவர்கள் என்று அர்த்தம். அதை இருட்டுக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டது. எப்படி இருட்டானது வெளியிலிருக்கும் வஸ்துக்களைச் சூழ்ந்துகொண்டு அவைகளைத் தெரியாமல் செய்துவிடுகின்றதோ அம்மாதிரி அவித்யையானது உள்ளேயிருக்கும் ஆத்மாவைச் சூழ்ந்துகொண்டு அதினுடைய நிஜஸ்வரூபத்தை அறியமுடியாமல் செய்துவிடுகிறது. அதனுல் அதை 'அந்தஸ்திமிரம்' என்று சொல்லப்பட்டது. அந்த இருட்டைப்போக்குகிறது ஞானமாகிற ஸூர்யன். ஸூர்யன் உதயமாகும்போது ஸமுத்ரமத்தியிலிருக்கும் தீவிலிருந்து கிளம்புவது போல் தோன்றுவதால் அம்பாளுடைய பாதரேணுவை அந்த ஞானஸூர்யன் கிளம்புகிற தீவின் முக்யபட்டணமாக (அதாவது வாஸஸ்தானமாக) வர்ணிக்கப்பட்டது.

3. சைதன்யமென்பது ஆத்மாவின் நிஜஸ்ரூபத்தை அறியும்படியாக புத்தியை விகாஸம் செய்யும் சக்தி.

4. சிந்தாமணி என்னும் ரத்னமானது கோரியவஸ்துக்களையெல்லாம் கொடுக்கும் சக்திவாய்ந்தது. அம்பாளுடைய வாஸக்ருஹத்திற்கு சிந்தாமணி க்ருஹமென்று பெயர். அம்பாளுடையதான மாயாபீஜத்திற்கும் சிந்தாமணி பீஜமென்றுபெயர்.

5. முன்காலத்தில் ஹிரண்யாக்ஷனுல் பூமியானது ஸமுத்ரத்திற்குள் கொண்டுபோய் ஒளிக்கப்பட்டபோது விஷ்ணுவானவர்

வாராஹாவதாரமெடுத்து அவனை ஸம்ஹாரம் செய்து தன்னுடைய கோரைப்பல்லின்மேல் பூமியைத் திருப்பிக்கொண்டு வந்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸம்ஸாரஸாகரத்தில் மூழுகப்போகிறவனை கரையேற்றுவதில் அந்த வாராஹத்தினுடைய கோரைப்பல்லுக்கு ஸமமான சக்தியோடு அம்பாளுடைய பாதரேணுவானது இருப்பதாகச்சொல்லப்பட்டது.

6. ஸமுத்ரத்திற்கு எல்லையில்லாததுபோல் ஜன்மாவாகிய ஸம்ஸாரத்திற்கும் எல்லை (கணக்கு) இல்லையாகையால் அந்த ஸமுத்திரத்திற்கு ஒப்பிடப்பட்டது. கரையேறுவது முடியாதாகையாலும் 'நிமக்னனும்' என்று சொல்லப்பட்டது.

'நானாயோனி ஸஹஸ்ரஸம்பவ வசாத் ஜாதா ஜனன்ய: கதி
ப்ரக்யாதா ஜனகா: கியந்த இதிமே ஸேத்ஸ்யந்தி சாக்ரே கதி
ஏதேஷாம் கணனைவ நாஸ்தி மஹத: ஸம்ஸாரஸிந்தோர் விதே:
பீதம்மாம் நிதராம் அனன்ய சரணம் ரக்ஷானுகம்பாநிதே'
(த்ரிபுராமஹிம்ந ஸ்தோத்ரம்)

7. முரன் என்ற அஸுரனை மஹாவிஷ்ணுவானவர் ஸம்ஹாரம் பண்ணியதினால் அவருக்கு முராரிபு என்று பெயர் வந்தது.

8. 'அந்தஸ்திமிரமிஹிரோத்தீபனகரீ' என்ற பாடாந்தரத்தில் மனதின் இருட்டை (போக்கி) வெளிச்சமாகப் பண்ணும் ஸூர்யன் என்று அர்த்தம்.

9. 'மகரந்த ஸ்ருதிசிரா' என்ற பாடாந்தரத்தில் மகரந்தம் ப்ரவாஹம் செய்யும் கால்வாய் என்று அர்த்தம்.

त्वदन्यः पाणिभ्यामभयवरदो दैवतगणः
त्वमेका नैवासि प्रकटितवराभीत्यभिनया।
भयात्त्रातुं दातुं फलमपि च वाञ्छासमधिकं
शरण्ये लोकानां तव हि चरणावेव निपुणौ ॥ ४ ॥

த்வதன்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸி ப்ரகடிதவராபீத்யபிநயா।
பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்சாஸமதிகம்
சரண்யே லோகானாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ॥

| | |
|---|---|
| ஹே லோகானாம் சரண்யே | சதுர்தச புவனங்களுக்கும் சரண்யமாக இருப்பவளே ! |
| த்வதன்ய: | உன்னைத்தவிர மற்ற |
| தைவதகண: | தேவக்கூட்டங்கள் (இந்த்ராதிகள் ஆதித்யாதிகள் கணதேவதைகள் முதலியவர்கள்) |
| பாணிப்யாம் | தங்கள் கைகளால் |
| அபயவரத: | அபயம், வரம் இவையிரண்டையும் கொடுப்பவர்கள் (அபயவரத முத்ரைகளை தரித்துக்கொண்டிருப்பவர்கள்) |
| த்வம் ஏகா | நீ ஒருவள்தான் |
| ப்ரகடிதவராபீத்யபிநயா | (கைகளால்) காட்டப்பட்ட வர, அபீதியாகிற அபிநயத்துடன் |
| நைவாஸி | இருக்கிறதேயில்லை |
| ஹி | ஏனென்றால் |
| பயாத் த்ராதும் | பயத்திலிருந்து காப்பாற்றுவதற்கும் |
| வாஞ்சாஸமதிகம் | வேண்டப்படுவதற்கு அதிகமான |
| பலம் தாதும் அபிச | பலத்தைக் கொடுப்பதற்கும் |
| தவ சரணாவேவ | உன்னுடைய பாதங்களே |
| நிபுணௌ | ஸாமர்த்யமுள்ளவைகளாக இருக்கின்றன. |

லோகங்களுக்கெல்லாம் சரண்யமான தாயே! உன்னைத் தவிர்த்த மற்ற தேவர்களெல்லோரும் அபயப்ரதானம், வரப்ரதானம் இவைகளைத் தாங்கள் செய்வதைத் தங்கள் கைகளின் அபய, வர முத்ரைகளால் வெளியிடுகையில், நீ ஒருவள் தான் அபயவரப்ரதானம் பண்ணுவதை அம்மாதிரி அபிநயத்தின் மூலமாக வெளியிடுவதில்லை. ஏனென்றால் அபயப்ரதானம் பண்ணுவதற்கும் வேண்டிய அளவுக்கு மேல்பட்ட வரன்களைக் கொடுப்பதற்கும் உன்னுடைய பாதங்களே ஸாமர்த்யமுள்ளவையாக இருக்கின்றன.

1. அபயம் என்றால் பயமில்லாமலிருப்பது, பயத்திலிருந்து காப்பாற்றுவது. வரமென்றால் கோரிக்கை, இஷ்டப்பட்ட வஸ்து. இவைகளைக் கொடுப்பதாகக் காட்டப்படும் முத்ரைகள் முறையே அபயதமென்னும் வரதமென்றும் சொல்லப்படும்.

2. பாக்கி தேவர்கள் கைகளால் கொடுக்கும் அபயம், வரம் இவைகளை அம்பாளுடைய பாதங்களே கொடுப்பதற்கு

ஸாமர்த்யமுள்ளவையாக இருப்பதால் அம்பாளுடைய மஹிமை அளவற்றதென்பது வெளியாகிறது

3. ஸர்வதேவதா ஸாதாரணமான வழியாகிய கைகளுடைய முத்ரைகளின் மூலமாக தன்னுடைய அபயவாத சக்தியை வெளியிடாமல், அவர்களுக்கெல்லாம் முடியாத விதமாக (தன்பாதங்களால்) அந்த சக்தியை அம்பாள் வெளியிடுவதாகச் சொல்லப் பட்டது.

4. தேவர்களின் கைகளிரண்டில் வலதுகை அபயப்ரதமாகிற முத்ரையுடன் ஸகல ஆபத்துக்களிலிருந்தும் அபயம் கொடுப்பதாக வெளியிட்டுக்கொண்டும் இடதுகை வரதமாகிற முத்ரையுடன் எல்லாருக்கும் வேண்டிய வரன்களைக் கொடுப்பதாக வெளியிட்டுக் கொண்டும் காணப்படும். அம்பாளுக்கு அம்மாதிரி கைகளின் முத்ரையினால் வெளியிடவேண்டிய அவசியமில்லையென்றும், அபயம், வரம் இவைகளைக் கொடுப்பதற்கு அம்பாளுடைய பாதங்களே போருமென்றும் சொல்லப்பட்டது. அதிலும் வேண்டப்பட்டதற்கு அதிகமாகவே கொடுக்கும்படியான சக்தியிருப்பதாக 'வாஞ்சாஸமதிகம்' என்று சொல்லப்பட்டது. மேலும் அம்பாள் ஸகல லோகங்களுக்கும் அபயம் கொடுப்பவள் என்பதாக 'சரண்யே லோகானாம்' என்று சொன்னது.

5. பயம் எனப்படுவது ஸம்ஸாரபயம். ஸம்ஸாரம் என்பது எல்லாவற்றையும்விட பயங்கரமானது என்று சொல்லப்படும்.

'மஹத: ஸம்ஸாரஸிந்தோர் விதே:
பீதம் மாம் நிதராம் அனன்யசரணம் ரக்ஷானுகம்பாநிதே |'

6. அபயம் என்பதினால் ஸம்ஸாரமாகிய பயத்திலிருந்து விடுவிப்பது, அதாவது மோக்ஷம், சொல்லப்பட்டது. வரம் என்பதினால் கோரிய விருப்பங்களை அடைவது, அதாவது போகம் சொல்லப்பட்டது. இதர தேவதைகளில் சிலர் போகத்தையும், சிலர் மோக்ஷத்தையும் கொடுப்பதாகவும் அம்பாள் ஒருவளே போகம், மோக்ஷம் இவ்விரண்டையும் கொடுப்பதற்கு சக்தியுடையவளென்றும் சொல்லப்படும்.

யத்ராஸ்தி போகா நதுதத்ர மோக்ஷ:
யத்ராஸ்தி மோக்ஷோ நதுதத்ர போக: |
ஸ்ரீஸுந்தரீ ஸாதகபுங்கவானாம்
போகச்ச மோக்ஷச்ச கரஸ்த்த ஏவ ||

7. அம்பாளாகிய த்ரிபுரஸுந்தரியின் த்யான ரூபங்கள் வாமகேச்வரதந்த்ரம், தந்த்ரராஜம், பாவனோபனிஷத் முதலியவைக ளில் சொல்லியிருப்பதில் அம்பாளை அபயவாத முத்ரைகளுடன் இருப்பதாகச்சொல்லப்படவில்லை. புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ் பபாணங்களைத் தன்கைகளில் வைத்துக்கொண்டிருப்பதாகத்தான் அம்பாளை ஸாதாரணமாகத்யானிப்பது. அபயவாத சக்தியானது அம்பாளுடைய பாதங்களுக்கே இருப்பதால் முத்ராரூபமாக வெளி பிடத்தேவையில்லை யென்று அதற்கு ஸமாதானமாக இங்கு சொல் லப்பட்டது.

हरिस्त्वामाराध्य प्रणतजनसौभाग्यजननीं
पुरा नारी भूत्वा पुररिपुमपि क्षोभमनयत् ।
स्मरोऽपि त्वां नत्वा रतिनयनलेह्येन वपुषा
मुनीनामप्यन्तः प्रभवति हि मोहाय महताम् ॥ ५ ॥

ஹரிஸ்த்வாம் ஆராத்ய ப்ரணத ஜன ஸௌபாக்ய ஜனனீம்
புரா நாரீ பூத்வா புரரிபுமபி க்ஷோபமனயத் |
ஸ்மரோபி த்வாம் நத்வா ரதிநயனலேஹ்யேன வபுஷா
முனீனாமப்யந்த: ப்ரபவதி ஹி மோஹாய மஹதாம் || 5

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே ! |
| ப்ரணத ஜன ஸௌ பாக்ய ஜனனீம் | (மனோவாக்காயங்களோடு) நமஸ்கரிக்கிற பக்த ஜனங்களுடைய ஸௌபாக்யத்தை உண்டுபண்ணு கிறவளான |
| த்வாம் | உன்னை |
| ஹரி: | விஷ்ணுவானவர் |
| ஆராத்ய | பூஜித்து |
| புரா நாரீ பூத்வா | முன்னொரு காலத்தில் ஸ்த்ரீ ரூபம் தரித்து |
| புரரிபும் அபி | (ஜிதேந்த்ரியரான) பரமசிவனைக்கூட |
| க்ஷோபம் அனயத் | மனோவிகாரம் அடைந்தவராகச் செய்தார். |
| ஸ்மரோபி | மன்மதனும்கூட |

| | |
|---|---|
| த்வாம் நத்வா | உன்னை நமஸ்கரித்து |
| ரதிநயன லேஹ்யேன வபுஷா | ரதியானவள் தன் கண்களால் ஆஸ்வாதிக்கும்படி யான ஸௌந்தர்யமுடைய சரீரத்தோடுகூடியவனாய் |
| மஹதாம்முனீனும்அபி | மஹான்களான முனீச்வரர்களுக்குகூட |
| அந்த: மோஹாய | மனதில் மோஹம் ஏற்படும் படியாக |
| ப்ரபவதி ஹி | செய்யும் ஸாமர்த்ய முள்ளவனாக ஆகிறானல்லவா. |

தாயே! பக்தர்களுக்கு ஸௌபாக்யத்தைக் கொடுப்பவளான உன்னை விஷ்ணுவானவர் பூஜித்து முன்னொருக்காலம் ஸ்த்ரீ ரூபத்துடன் ஈச்வரனைக்கூட மோஹமடையும்படி செய்தார். அதே மாதிரியாக மன்மதனும் உன்னை ஸேவித்து த்ரிலோகைக ஸுந்தரனாகி மஹாயோகீச்வரர்களுடைய மனதையும் மோஹமடையச்செய்கிறான்.

1. க்ஷீராப்தியைக் கடந்து அம்ருதம் வந்தபோது அதை விஷ்ணுவானவர் மோஹினி ரூபத்துடன் வந்து அஸுரர்களுக்குக் கொடுக்காமல் தேவர்களுக்குக் கொடுத்த வ்ருத்தாந்தத்தை பரமசிவன் கேழ்விப்பட்டு அந்த ஜகன் மோஹனமான ரூபத்தை தனக்குக் காட்டவேணுமென்று விஷ்ணுவைப் ப்ரார்த்திக்க அவரும் அந்த ரூபத்துடன் வரவும் அவரைக்கண்ட பரமசிவனானவர் வ்யாமோஹமடைந்ததும் அதிலிருந்து சாஸ்தாவானவர் உண்டானதும் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர, முன்னொருக்கால் விஷ்ணுவானவர் ஸ்த்ரீ ரூபத்துடன் கனகஸ்வாமி என்பவனை ஸம்ஹரித்தபோதும் அந்த ஸ்த்ரீரூபத்தைப் பார்த்துப் பரமசிவன் மோஹமடைந்தாரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. ஜிதேந்த்ரியர்களான மஹர்ஷிகள்கூட காமவிகாரமடைந்து அதிலிருந்து தங்கள் தபஸுகளை விட்டு சப்தாதி விஷயங்களில் ஆசையுண்டாகி கஷ்டப்பட்டார்கள் என்ற கதைகள் அநேகம் புராணங்களிலிருக்கின்றன.

3. இம்மாதிரி மன்மதனையெரித்தவரும் ஜிதேந்த்ரியருமான பரமசிவனைக்கூட விஷ்ணுவானவர் மோஹமடையச்செய்ததும் பெரிய மஹான்களும் ஜிதேந்த்ரியர்களுமான முனீச்வரர்களைக்கூட மன்மதன் மனோவிகாரமடையச்செய்ததும் 'ப்ரணத ஜனஸௌபாக்ய ஜனனீ' யாகிய அம்பாளை அவர்கள் ஆராதனை செய்ததுதான் கா

ணம் என்று சொல்லப்பட்டது. அப்படி ஆராதனை செய்ததின்பேரில் அவர்களுக்கு த்ரைலோக்ய மோஹனமான அதிஸௌந்தர சரீரம் ஏற்பட்டு அதனுல் எல்லோரையும் மோஹிக்கும்படி செய்தார்கள். இதையேதான்

ஏதாமேவ புராராத்ய வித்யாம் த்ரைலோக்யமோஹினீம்—
த்ரைலோக்யம் மோஹயாமாஸ காமாரிம் பகவான் ஹரி:॥
காமதேவோபி தேவேசீம் தேவீம் த்ரிபுரஸௌந்தரீம் |
ஸமாராத்யா பவல்லோகே ஸர்வ ஸௌபாக்ய ஸௌந்தர:॥

என்று வாமகேச்வரதந்த்ரத்தில் சொல்லியிருக்கிறது.

4. விஷ்ணுவையும் மன்மதனையும் அம்பாளுடைய மந்த்ரங்களில் முக்யமான இரண்டிற்கு ரிஷிகளாகச் சொல்லப்படும். ['தர்சனுத் ரிஷி:' என்றபடி வேதங்களிலிருக்கும்படியான மந்த்ரத்தை யார் முதலில் கண்டுபிடித்து உபாஸித்து ஸித்தி பெற்ருரோ அவரை அந்த மந்த்ரத்துக்கு 'ரிஷி' என்று சொல்லப்படும்.]

5. ஆராதனையானது காயிகம், வாசிகம், மானஸம் என்று மூன்று வகை. காயிகமானது பாஹ்யபூஜை. வாசிகமானது ஜபம், ஸ்தோத்ரம். மானஸமானது த்யானம். இதேமாதிரி அர்த்தங்களுடைய பிரிவுகள் நமஸ்காரம் என்ற பதத்திற்கும் உண்டு. ஆகவே 'ஆராத்ய' 'நத்வா' என்பதனுல் ஸ்ரீசக்ரரூபிணியாயும் ஸ்ரீ வித்யா ரூபிணியாயுமிருக்கிற அம்பாளை பூஜை, ஜபம், த்யானம் இவைகளால் நன்ருக உபாஸனை செய்வதைச் சொன்னது.

6. 'ரதிநயன லேஹ்யேன வபுஷா'—ரதியை ஸ்த்ரீகளுக்குள் அதிகமான அழகு உடையவளாகச் சொல்லப்படும். அவளே பார்த்து ஆசைப்படுவது என்ருல் மன்மதனுடைய தேஹமானது அவ்வளவு ஸௌந்தர்யமாக இருக்கிறதென்று சொல்லப்பட்டது. மேலும், மன்மதன் பரமசிவனுடைய நேத்ராக்னியினுல் எரிக்கப் பட்டு பிறகு உயிர் பெற்றபோது அவனுடைய சரீரம் மற்றவர்களுடைய கண்களுக்குத் தெரியாமலும் ரதியினுடைய கண்களுக்கு மட்டும் தெரியும்படியாகவும் சரீரத்தைப் பெற்ருன் என்ற வ்ருத்தாந்தத்தை இங்கு 'ரதிநயன' என்பதனுல் ஞாபகப்படுத்தியது என்று சொல்லலாம்.

7. விஷ்ணு, மன்மதன் இவர்கள் ரூபத்தின் மூலமாக ஆவிர்பவித்த அம்பாளுடைய மோஹன சக்தியை ஜிதேந்த்ரியர்களான யோகிச்வரர்களும் யோகிச்வரேச்வரரான பரமசிவனும் ஜயிக்க முடியாமல் அதற்கு வசமானது அம்பாளுடைய சக்தியின் அபாரமான மஹிமையைக் காட்டுகிறது.

9. 'ப்ரணத ஜன ஸௌபாக்யஜனனீ,' என்ற பாடாந்தரத்தில் 'நமஸ்கரிக்கும் ஜனங்களுடைய ஸௌபாக்யத்தை உண்டுபண்ணுகிறவளே!' என்று அம்பாளை ஸம்போதனம் செய்வதாக ஏற்படும்.

धनुः पौष्पं मौर्वी मधुकरमयी पञ्च विशिखा
वसन्तः सामन्तो मलयमरुदायोधनरथः ।
तथाप्येकः सर्वं हिमगिरिसुते कामपि कृपां
अपाङ्गात्ते लब्ध्वा जगदिदमनङ्गो विजयते ॥ ६ ॥

தனு: பௌஷ்பம் மௌர்வீ மதுகரமயீ பஞ்சவிசிகா:
வஸந்தஸ் ஸாமந்தோ மலயமருத் ஆயோதனரத: |
ததாப்யேகஸ் ஸர்வம் ஹிமகிரிஸுதே காமபிக்ருபாம்
அபாங்காத்தே லப்த்வா ஜகதிதம் அனங்கோ விஜயதே॥ 6

| | |
|---|---|
| ஹே ஹிமகிரிஸுதே | ஹிமவானுடைய பெண்ணாகிய அம்மணி! |
| தனு: | வில்லு (எப்படியென்றால்) |
| பௌஷ்பம் | புஷ்பங்களாலானது |
| மௌர்வீ | நாண்கயிறானது (என்னவென்றால்) |
| மதுகரமயீ | தேனீக்களாலானது |
| விசிகா | பாணங்கள் |
| பஞ்ச | ஐந்துதான் |
| ஸாமந்த: | மந்த்ரீ (யாரென்றால்) |
| வஸந்த: | வசந்தருது |
| ஆயோதனரத: | யுத்தரதம் (என்னவென்றால்) |
| மலயமருத் | தென்றல் காற்று |
| ததாபி | இப்பேர்ப்பட்ட யுத்தஸாமக்ரியைகளையுடையவனாகயிருந்து |
| அனங்க: | (தானும் சரீரமில்லாதவனாகயிருந்தும்) மன்மதனானவன் |

| | |
|---|---|
| ஏக: | ஒருவனுகவே (அஸஹாயசூரனுய்) |
| தே அபாங்காத் | உன்னுடைய கடாக்ஷத்திலிருந்து |
| காம் அபி க்ருபாம் | அனிர்வாச்யமான ஏதோ ஒரு க்ருபையை |
| லப்த்வா | அடைந்து |
| இதம் ஜகத் ஸர்வம் | இந்த ஜகத்தையெல்லாம் |
| விஜயதே | ஜயித்துக்கொண்டு இருக்கிறுன். |

தாயே ! புஷ்பங்களாலாகிய வில்லும், வண்டுகளாகிய நாண் கயிறும், ஐந்தே பாணங்களும், வஸந்தனுகிய மந்த்ரியும், தென்றலாகிய ரதமும், இவைகளோடு கூடியவனுய் மன்மதன் தான் ஒருவனேயிருந்தும் உன்னுடைய கடாக்ஷத்தின் மூலமாக உன்னுடைய அனிர்வசனீயமான க்ருபையை அடைந்ததினுல் இந்த லோகங்களையெல்லாம் ஜயித்துக்கொண்டிருக்கிறுன்.

1. மன்மதனுனவன் யுத்தத்திற்கு எவ்வகையிலும் யோக்யமில்லாத ஸாமக்ரியைகளோடு இருந்தபோதிலும் அம்பாளுடைய கடாக்ஷ லேசத்தின் மஹிமையால் ஸகலலோகங்களையும் ஜயித்து தன்வசப்படுத்திக் கொண்டுவிளங்குகிறுன் என்று சொல்லப் பட்டது.

2. அவனுடைய தனுஸானது புஷ்பமயம். அது மிகவும் ம்ருதுவானதினுல் தொடுவதற்குக்கூடத்தாங்காததும் வில்லுமாதிரி வளைத்தல், நாணேற்றல் முதலியவை செய்யக்கூடாதுமாக இருப்பதால் ப்ரயோஜன மற்றது. நாணுனது (தனித்தனியான) வண்டுகளாக யிருப்பதால் கயிறுமாதிரி கட்டுவதற்கும் இழுப்பதற்கும் முடியாதது. பாணங்களோ ஐந்துதான். அந்த ஐந்தையும் ப்ரயோயோகம் பண்ணிவிட்டால் பிறகு கையைக்கட்டிக்கொண்டு சும்மாயிருக்க வேண்டியதுதான். அவையும் அரவிந்தம், அசோகம், சூதம், நவமல்லிகா, நீலோத்பலமாகிய புஷ்பங்களாக இருப்பதால் அம்புமாதிரி விடுவதற்குச் சற்றேனும் லாயக்கில்லாதவைகள். எதிரியின் சரீரத்தில் பட்டாலும் கஷ்டம் சிறிதேனும் உண்டு பண்ணுமல் ஸுகமாகவே யிருப்பவை. ஒத்தாசைக்கு இருப்பவனே வஸந்தன். அவன் காலாத்மகனுகவும் அதிலும் வருஷத்தில் இரண்டு மாதங்கள் தான் இருப்பதாலும் ஒத்தாசைக்கு நம்பக்கூடியவனல்ல. யுத்தம் செய்ய ஏறக்கூடிய ரதமோ தென்றல் காற்று. அது எங்கே

யோ மலயபர்வதத்திலிருப்பதால் எங்கும் இருக்கக்கூடிய ஸ்வபாவ மில்லே, அப்படியிருந்தாலும் எப்போதும் இருக்கக்கூடியதில்லே, அப்படியிருந்தாலும் (காற்ருனதினுல்) ரூபமில்லாதபடியால் ரதம் மாதிரி உட்கார்ந்துகொண்டு யுத்தம்பண்ணக்கூடியது அல்ல. யுத்தம் செய்பவனே அனங்கன், சரீரமில்லாதவன். கைகளில்லாத படியால் வில்லேவளேப்பது, பாணத்தைத்தொடுப்பது முதலான கார்யங்கள் செய்யமுடியாதவன். கால்களில்லாததினுல் ரதத்தில்நின்று கொண்டு யுத்தம் பண்ணமுடியாதவன். வாயில்லாததால் ஒத்தாசைக்கிருப்பவனுன வஸந்தனுடன் பேசமுடியாது. கண்களில்லாதலால் ஒன்றையும் பார்க்கமுடியாது.

3. இவ்வளவு கேவலமான ஸ்திதியிலிருக்கும் போதும் த்ரிலோகத்தையும் விஜயம் செய்யும் படியான சக்தி மன்மதனுக்கு ஏற்பட்டது அம்பாளுடைய கடாக்ஷத்தின்லேசம் அவனுக்குக் கிடைத்ததினுல்தான் என்று சொல்லப்பட்டது. ஆகவே அம்பாளுடையகடாக்ஷத்தின்பலம் இருந்தால் வேறுயாதொன்றும் தேவையில்லேயென்றும் ஏற்பட்டது.

இதனடுத்த ச்லோகத்தில், பின்னுல் 'ஸுதாஸிந்தோர்மத்யே' என்ற 8-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டபடி ஸமயிகளுக்கு சதுர்விதைக்யானு ஸந்தானத்தினுல் மணிபூரசக்ரத்தில் தோன்றும் அம்பாளுடைய ரூபத்தை வர்ணிக்கிருர்.

क्वणत्काञ्चीदामा करिकलभकुम्भस्तननता
परिक्षीणा मध्ये परिणतशरच्चन्द्रवदना ।
धनुर्बाणान् पाशं सृणिमपि दधाना करतलैः
पुरस्तादास्तां नः पुरमथितुराहोपुरुषिका ॥ ७॥

க்வணத் காஞ்சீதாமா கரிகலபகும்பஸ்தன நதா
பரிக்ஷீணு மத்யே பரிணத சரச்சந்த்ர வதனு |
தனுர் பாணுன் பாசம் ஸ்ருணிமபி ததானு கரதலே:
புரஸ்தாத் ஆஸ்தாம் ந: புரமதிதுராஹோபுருஷிகா || 7

க்வணத் காஞ்சீதாமா { சப்திக்கின்ற தங்கச்சலங்கைகளோடு கூடிய ஒட்டியாணத்தையுடையவளும்

| | |
|---|---|
| கரிகலப கும்பஸ்தன நதா | ஸரியான வயதுள்ள யானையின் மஸ்தகங்கள்போன்ற ஸ்தனங்களால் கொஞ்சம் வணங்கிய சரீரத்தையுடையவளும் |
| மத்யே பரிக்ஷீணா | மத்யபாகத்தில் (இடுப்பில்) மெலிந்தவளும் |
| பரிணத சரச்சந்த்ர வதனா | சரத்காலத்திய பூர்ணசந்த்ரன் மாதிரியான முகத்தையுடையவளும் |
| கரதலை: | தன்னுடைய நாலுகைகளால் |
| தனுர்பாணான் பாசம் ஸ்ருணிம் அபி | கரும்புவில்லு, புஷ்பபாணங்கள், பாசம், அங்குசம் இவைகளை |
| ததானா | தரித்துக்கொண்டிருப்பவளும் |
| புரமதிது: | த்ரிபுராந்தகனான பரமசிவனுடைய |
| ஆஹோ புருஷிகா | அஹம்கார ரூபிணியுமான தேவியானவள் |
| ந: புரஸ்தாத் | எங்களுடைய எதிரில் |
| ஆஸ்தாம் | இருக்கட்டும். (எங்களுக்கு தோன்றட்டும்) |

தாயே! சப்தம் செய்கின்ற சலங்கைகளுடைய ஒட்டியாணத்தை தரித்தவளும், யானையினுடைய கும்பங்களைப்போன்ற ஸ்தனங்களையுடையவளும், மெல்லியதான இடையை உள்ளவளும் பூர்ண சந்த்ரனையொத்த முகத்தையுடையவளும் தனுர்பாண பாசாங்குசங்களைக் கைகளில் தரித்தவளும் த்ரிபுராந்தகனுடைய அஹம்கார ரூபிணியுமான நீ எங்களுடைய முன்னால் தோன்றுவாயாகவும்.

1. இதில் சொல்லியிருப்பதைப்பற்றி பின்னால் 9-வது ச்லோகத்திலும் பார்க்கவும்.

2. 'ந: புரஸ்தாத்'—பின்னால் 9-வது ச்லோகத்தில் சொல்லியபடி அம்பாள் மணிபூர சக்ரத்தில் பூஷணாதி ஸகல அலங்காரங்களையும் பெற்று அங்கிருந்து புறப்பட்டு ஹ்ருதய கமலத்திலிருக்கும் அனாஹத சக்ரத்துக்கு வரும்போது இருக்கும் ரூபத்தை இங்கு வர்ணிக்கப்பட்டது. அப்படி வருவதைத்தான் 'எங்களுக்கு எதிரில்' என்று சொன்னது.

3. 'புரமதிது:'—புரங்கள் என்பது த்ரிபுரா பீஜங்களான மூன்று பீஜங்கள். அவைகளை சேர்த்து மத்தித்து நவனீதமாகச் செய்வதினால் சிவனுக்கு 'புரமதிதா' என்று பெயர் என்பதாக ருத்ரயாமளத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

4. 'ஆஹோ புருஷிகா'— 'அஹோ' என்பது ஆச்சர்யத்தைக்காட்டும் வார்த்தை. 'புருஷன்' என்று சொல்லப்படும் ப்ரத்யகாத்மாவினுல்தான் 'அஹம் பாவம்' (நான் என்று நினைப்பது) ஏற்படும். அந்த அஹம்பாவத்தை உண்டுபண்ணுவது அஹங்காரம். அம்பாளால் தான் சிவன் எது செய்வதற்கும் சக்தராக இருக்கிருர் என்பது ஏற்கனவே 'சிவ: சக்த்யா யுக்தோ' என்ற முதல் ச்லோகத்தில் சொல்லப்பட்டது. அந்த சக்தியில்லாவிட்டால் அவர் சவமாக ஆகிருரென்பதாக 'சிவோபி சவதாம் யாதி குண்டலின்யாவிவர்ஜித:' என்று தேவீபாகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே பரமசிவனுக்கு ஆச்சர்யப்படத்தக்க விதமாய் அஹம்பாவத்தை உண்டு பண்ணுவதால் (அவருடைய அஹம்கார ரூபிணியாக இருப்பதால்) அம்பாளே அவருடைய 'ஆஹோ புருஷிகா' என்று சொன்னது.

5. இம்மாதிரியே நீலகண்ட தீக்ஷிதரவர்களும்

'அஹம் தாம் ஆலம்பே த்ருடதாம் அஹந்தாம் பசுபதே: |'

என்று அம்பாளையும்

'க்ஷந்தாரம் ஸகலாகஸாம் ஜடதியாம் யந்தார மந்தஸ்தமோஹந்தாரம் ஜகதாம் அனுத்தரபராஹந்தாங்கிதோரஸ்த்தலம் |'

என்று மஹாவிஷ்ணுவை வர்ணிக்கையில் லக்ஷ்மீதேவியைப்பற்றியும் 'நீலகண்டவிஜய'த்தில் சொல்லியிருக்கிருர்கள்.

6. அம்பாளுடைய ஸ்வரூபமானது உபாஸனுபேதங்களை அனுஸரித்து ஸ்தூலம், ஸூக்ஷ்மம், ஸூக்ஷ்மதரம், ஸூக்ஷ்மதமம் என்று நாலுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கர சரணுதி அவயவங்களுடன் கூடியது ஸ்தூலரூபம். அது தான் இங்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்தில் இதே ரூபத்தை 'நிஜாருணப்பா பூர மஜ்ஜத் ப்ரம்ஹாண்டமண்டலா' என்ற நாமம் முதல் 'ஸர்வாபரணபூஷிதா' என்ற நாமம் முடிய இருக்கும் நாமங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸூக்ஷ்மரூபமானது மந்த்ராத்மகமானது. இது ஸஹஸ்ரநாமத்தில்

'ஸ்ரீமத் வாக்பவ கூடைக ஸ்வரூப முகபங்கஜா' என்ற நாமம் முதல் 'மூலகூடத்ரய களேபரா' என்ற நாமம் வரையிலுள்ள நாமங்.

களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸூக்ஷ்மதரமான ரூபமானது காமகலா ரூபமானது. இதைப்பற்றி ஸஹஸ்ரநாமத்தில் 'மூலமந்த்ராத்மிகா மூல கூடத்ரய களேபரா' என்ற நாமங்களிலேயே சொல்லப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸூக்ஷ்மதமமான ரூபம் குண்டலினீ ரூபம். இதைப்பற்றி ஸஹஸ்ரநாமத்தில் 'குலாம்ருதைக ரஸிகா' என்ற நாமம் முதல் 'பிஸதந்துதனீயஸீ' என்ற நாமம்வரையிலுள்ள நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த க்ரந்தத்திலும் காமகலையைப்பற்றி பின்னால்வரும் 'முகம் பிந்தும் க்ருத்வா என்ற 19-வது ச்லோகத்திலும் குண்டலினியைப்பற்றி 'மஹீம் மூலாதாரே' என்ற 9-வது ச்லோகத்திலும் 'ஸுதாதாராஸாரை:' என்ற 10-வது ச்லோகத்திலும் 'தடில்லேகா தன்வீம்' என்ற 40-வது ச்லோகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

7. இதே மாதிரி அம்பாள் தரித்திருக்கும் ஆயுதங்களுக்கும் ஸ்தூல, ஸூக்ஷ்ம, பர ரூபங்களென்ற ரூபபேதங்களுண்டு. ஸ்தூல ரூபத்தில் அம்பாளுடைய வலது கைகளிரண்டில் வஜ்ரம் போன்ற (வெளுப்பான) அங்குசமும், கமலம், ரக்தகைரவம், கல்ஹாரம், இந்திவரம், ஸஹகாரம் என்ற பஞ்சபுஷ்பாணங்களும் இருக்கின்றன. இடதுகைகளிரண்டில் பவழக்கொடிபோன்ற பாசமும் செங்கரும்பு வில்லும் இருக்கின்றன. இந்த ஆயுதங்களின் ஸூக்ஷ்மரூபமானது அவையவைகளின் பீஜாக்ஷர ஸ்வரூபமானது. பர ரூபமானது வாஸனமயமானது. அதைப்பற்றி

'ராகஸ்வரூப பாசாட்யா க்ரோதாகாராங்குசோஜ்வலா |
மனோரூபேக்ஷு கோதண்டா பஞ்சதன்மாத்ரஸாயகா ||'

என்று ஸஹஸ்ரநாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**सुधासिन्धोर्मध्ये सुरविटपिवाटीपरिवृते**
**मणिद्वीपे नीपोपवनवति चिन्तामणिगृहे ।**
**शिवाकारे मञ्चे परमशिवपर्यङ्कनिलयां**
**भजन्ति त्वां धन्याः कतिचन चिदानन्दलहरिम् ॥ ८ ॥**

ஸுதாஸிந்தோர் மத்யே ஸுரவிடபிவாடீ பரிவ்ருதே
மணித்வீபே நீபோபவனவதி சிந்தாமணிக்ருஹே l
சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்
பஜந்தி த்வாம் தன்யா: கதிசன சிதானந்தலஹரீம் ll (8)

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| ஸுதாஸிந்தோ: மத்யே | அம்ருதஸமுத்ரத்தின் நடுவில் |
| ஸுரவிடபி வாடீபரிவ்ருதே | கல்பவ்ருக்ஷங்களுடைய தோப்புகளால் சூழப்பட்ட |
| மணித்வீபே | மணிமயமானத்வீபத்தில் |
| நீபோபவனவதி | கதம்பவ்ருக்ஷங்களோடு கூடிய உத்யானவனத்தையுடையதும் |
| சிந்தாமணிக்ருஹே | சிந்தாரத்னங்களாலாகப்பட்டதுமான க்ருஹத்தில் |
| சிவாகாரே மஞ்சே | சிவாத்மகமான கட்டிலில் |
| பரமசிவபர்யங்க நிலயாம் | பரமசிவனுடைய மடியையே இருப்பிடமாக. உடையவளும் |
| சிதானந்தலஹரீம் | ஞானமாகிற ஆனந்த ஸாகரத்தின் அலைபோலிருப்பவளுமான |
| த்வாம் | உன்னை |
| கதிசன தன்யா: | உன் தயவினால் க்ருதார்த்தர்களான சிலர்மட்டும் |
| பஜந்தி | ஸேவிக்கிறார்கள். |

தாயே! அம்ருத ஸமுத்ரத்தின் நடுவிலிருப்பதும் கல்பகவ்ருக்ஷங்களடர்ந்த காடுகளால் சூழப்பட்டதுமான மணித்வீபத்தில் கதம்பவ்ருக்ஷங்களோடு கூடிய உத்யானவனத்தையுடைய சிந்தாமணிக்ருஹத்தில் சிவாத்மகமான கட்டிலில் பரமசிவனுடைய மடியையே இருப்பிடமாக உடையவளும், ஞானானந்தரூபிணியுமான உன்னை தன்யர்களான சிலர்கள்தான் ஸேவிக்கிறார்கள்.

1. இந்த ச்லோகத்தில் ஆசார்யாள் ஸமயமதத்தின் ஸித்தாந்தப்படி ஸஹஸ்ரார கமலத்திலிருக்கும் அம்பாளுடைய ரூபத்தை வர்ணிக்கிறார்கள்.

2. அம்பாளுடைய உபாஸனையானது ஸமயாசாரமென்றும் குலாசாரமென்றும் இருவகைப்படும். ஸமயாசாரமென்பது அந்தர்முகமாக அம்பாளைப் பூஜைசெய்வது. குலாசாரமென்பது பாஹ்யமான வஸ்துக்களைக்கொண்டு அம்பாளைப் பூஜைசெய்வது. இந்த இரண்டுவிதமான பூஜைகளிலும் அம்பாளை ஸ்ரீசக்ர ரூபிணியாக பாவனை செய்துதான் உபாஸிப்பது.

3. ஸ்ரீசக்ரத்திற்கு வியத்சக்ரமென்றும் பெயர் உண்டு. வியத் என்றால் ஆகாசம். அது தஹராகாசமென்றும், பாஹ்யாகாசமென்றும் இருவகைப்பட்டது. இதில் பாஹ்யாகாசம் என்பது

வெளிப்படையாக இருக்கும் ஆகாசம். இதில் ஸ்ரீசக்ரோபாஸனை யானது ஸ்ரீசக்ரத்தை பூவரசம்பட்டை, சுத்தவஸ்த்ரம், தங்கம், வெள்ளி முதலியவைகளால் செய்யப்பட்ட தகடு முதலியவை களில் எழுதி அதை ஆராதனம் செய்வது. இதைத்தான் கௌல பூஜையென்று பெரியோர்கள் சொல்வார்கள்.

4. தஹராகாசம் என்பது ஹ்ருதயாகாசம். அதில் மான ஸிகமாக ஸ்ரீசக்ரத்தை பாவனை செய்து பூஜைசெய்வது ஸமயபூஜை யென்றும் சொல்லப்படும்.

5. நவயோன்யாத்மகமான ஸ்ரீசக்ரத்தில் சிவாத்மகமான மேல்நோக்கிய நான்கு யோனிகளுக்கு மேலும் சக்த்யாத்மகமான கீழ்நோக்கிய ஐந்து யோனிகளுக்கும் கீழும் உள்ள பிந்து ஸ்தா னத்தை ஸுதாஸிந்து என்றும் ஸுதாஸாகரம் என்றும் சொல்லப் படும். கீழ் நோக்கிய ஐந்து சக்த்யாத்மகமான யோனிகளுக்கு கல்பவ்ருக்ஷங்கள் என்று பெயர்.

6. இந்த ஸுதாஸமுத்ரத்திலிருக்கும் மணித்வீபத்தில் அம்பாளுடைய சிந்தாமணிக்ருஹமிருக்கிறது. அதைச்சுற்றி மணி மண்டபமும் அதைச்சுற்றி கதம்பவனமும் அதைச்சுற்றி கல்பவ்ரு க்ஷங்களின் தோப்புக்களும் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

"பிந்துஸ்த்தானம் ஸுதாஸிந்து: பஞ்சயோன்யஸ் ஸுரத் ருமா: ।
தத்ரைவ நீபச்ரேணி ச தன்மத்யே மணிமண்டபம் ।
தத்ர சிந்தாமணிக்ருஹம் தேவ்யா மந்திரம் உத்தமம் ॥"

7. இந்த சிந்தாமணிக்ருஹத்தின் மத்தியில் ஒரு கட்டிலின் மேல் பரமசிவனுடைய மடியில் அம்பாள் உட்கார்ந்துகொண்டிருப் பதாகச் சொல்லப்படும். அந்தக் கட்டிலின் கால்கள் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் ஆகிய தேவர்கள். ஸதா சிவருடைய அங்கம் (மடி)தான் அந்தக் கட்டிலின் மேல் பலகை.

'தத்ர ஸ்ரீ லலிதாதேவ்யா: பஞ்சப்ரம்ஹமயம் மஹத் ।
ஜாகர்த்தி மஞ்சரத்னம் ச ப்ரபஞ்சத்ரய மூலகம் ।
தஸ்ய மஞ்சஸ்ய பாதாஸ்து சத்வார: பரிகீர்த்திதா: ।
ப்ரம்ஹ விஷ்ணு மஹேசானேச்வர ரூபத்வம் ஆகதா: ।
தேஷாமுபரி மஞ்சஸ்ய பலகஸ்து ஸதாசிவ: ।'

8. ப்ரம்ஹாமுதலான தேவச்ரேஷ்டர்கள் இம்மாதிரி அம்பாளுடைய கட்டில் கால்கால்களாக இருப்பதற்குக் காரணம் தாங்கள் காமரூபிகளாகையால் அப்படியாவது இருந்துகொண்டு அம்பாளுடைய அத்யந்த ஸாமீப்ய ஸேவையைச் செய்யவேணுமென்ற ஆசையால்தான்.

9. இம்மாதிரி ஸமயாசாரத்தை அவலம்பித்தவர்கள் அம்பாளை த்யானம் செய்வது கீழே கண்டபடியும் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸுதாப்தௌ நந்தனே த்யானே ரத்னமண்டப மத்யகாம் ।
பாலார்க்க மண்டலாபாஸாம் சதுர்பாஹாம் த்ரிலோசனாம் ।
பாசாங்குச சராம்ச்சாபம் தாரயந்தீம் சிவாம்ச்ரியம் ।
த்யாத்வா ச ஹ்ருத்கதம் சக்ரம் வ்ரதஸ்த்த: பரமேச்வரீம் ।
பூர்வோக்த த்யானயோகேன ஸம்சிந்த்ய ஜபம் ஆசரேத் ।'

மேலே 41-வது ச்லோகத்தில் சொல்லப்படுகிறபடி ஸமய மதத்தை அனுஸரித்தவர்களால் அம்பாளுக்குச் செய்யப்படும் பூஜையெல்லாம் அம்பாளை ஸஹஸ்ரதளகமலத்திற்கு அழைத்து வந்து அங்கேயே செய்யப்படும். அங்கேயிருக்கும்படியான அம்பாளை த்யானம் பண்ணும் ப்ரகாரம் இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டது.

10. இதில் சொல்லிய விஷயங்களைப்பற்றி மேலேவரும் ச்லோகங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**महीं मूलाधारे कमपि मणिपूरे हुतवहं**
**स्थितं स्वाधिष्ठाने हृदि मरुतमाकाशमुपरि ।**
**मनोऽपि भ्रूमध्ये सकलमपि भित्वा कुलपथं**
**सहस्रारे पद्मे सह रहसि पत्या विहरसे ॥ ९ ॥**

மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்த்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருதம் ஆகாசம் உபரி।
மனோபி ப்ருமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| (த்வம்) | நீ |

| | |
|---|---|
| மூலாதாரே ஸ்த்திதம் | மூலாதார சக்ரத்திலிருக்கும்படியான |
| மஹீம் | ப்ருதிவீதத்வத்தையும் |
| மணிபூரே | மணிபூர சக்ரத்திலிருக்கும்படியான |
| கம் அபி | ஜலதத்வத்தையும் |
| ஸ்வாதிஷ்டானே | ஸ்வாதிஷ்டான சக்ரத்திலிருக்கும்படியான |
| ஹூதவஹம் | அக்னிதத்வத்தையும் |
| ஹ்ருதி | ஹ்ருதயத்திலுள்ள அனாஹத சக்ரத்திலிருக்கும் படியான |
| மருதம் | வாயுதத்வத்தையும் |
| உபரி | இவை எல்லாவற்றிற்கும் மேலிருக்கும் விசுத்த சக்ரத்திலிருக்கும்படியான |
| ஆகாசம் | ஆகாச தத்வத்தையும் |
| ப்ரூமத்யே | புருவங்களுக்கு நடுவிலுள்ள ஆக்ஞா சக்ரத்திலிருக்கும்படியான |
| மனோபி | மனஸ் தத்வத்தையும் |
| ஸகலம் | ஆக இந்த ஆறு சக்ரங்களுமடங்கிய |
| குலபதம் அபி | ஸுஷும்னமார்கத்தையும் |
| பித்வா | பேதனம் செய்து |
| ஸஹஸ்ராரே பத்மே | ஸஹஸ்ரதளகமலத்தில் |
| பத்யா ஸஹ | உன் புருஷரான ஸதாசிவருடன் |
| ரஹஸி | ரஹஸ்யத்தில் |
| விஹரஸே | க்ரீடித்துக்கொண்டிருக்கிறாய். |

தாயே! மூலாதார, மணிபூர, ஸ்வாதிஷ்டான, அனாஹத, விசுத்தி, ஆக்ஞா சக்ரங்களாகிய குலமார்க்கத்திலிருக்கும் ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாச, மனஸ்ஸாகிய தத்வங்களையும் நீ கடந்து ஸஹஸ்ரார கமலத்தையடைந்து உனது பர்த்தாவான ஸதாசிவனோடு கூட அங்கே க்ரீடித்துக் கொண்டிருக்கிறாய்.

குள் ஆறு சக்ரங்கள் இருப்பதாகவும் சொல்லப்படும். அடியிலிருந்து சொல்லுகையில் மூலாதாரம் என்பது குதஸ்தானம், லிங்கஸ்தானம் இவைகளுக்கு நடுவிலும், ஸ்வாதிஷ்டானம் என்பது லிங்கத்தின் மூலப்ரதேசத்திலும், மணிபூரம் என்பது நாபிப்ரதேசத்திலும், அனாஹதம் என்பது ஹ்ருதயப்ரதேசத்திலும், விசுத்தி என்பது கண்டப்ரதேசத்திலும், ஆக்ஞா என்பது புருவங்களின் மத்யப்ரதேசத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும். [இவை ஆறுக்கும்

மேலும் ப்ரம்ஹரந்த்ரத்தின் கிழாகவும் ஸஹஸ்ராரபத்மம் என்பது இருக்கிறது.] இவைகளை பத்மம் என்றும் கமலம் என்றும் சொல் வது வழக்கம். பத்மத்தினுடைய தளத்திற்கு ஆரம் என்று பெயர்.

3. இந்த ஆறு சக்ரங்களோடிருக்கும் ப்ரதேசத்தை மூன்று கண்டங்களாக பாகம் செய்து அவைகளை முறையே அக்னிகண்டமென்று, ஸூர்யகண்டமென்றும் ஸோமகண்டமென் றும் சொல்லப்படும். ஓரோர் கண்டத்திற்கு முடிவிலும் ஓரோர் க்ரந்தி (முடிச்சு) இருக்கிறது. முதலாகிய (அக்னிஸ்தானமாகிய) அக்னிகண்டத்தில் மூலாதாரம் ஸ்வாதிஷ்டானம் இவையிரண்டும் அடங்கியவை. அதற்கு மேலிருக்கும் முடிச்சுக்கு ப்ரம்ஹக்ரந்தி என்று பெயர். அங்கே அக்னி இருந்துகொண்டு ப்ரகாசிக்கிறது. அதற்கடுத்த கண்டமாகிய (ஸூர்யஸ்தானமாகிய) ஸூர்யகண்டத் தில் மணிபூரம், அனுஹதம் இவையிரண்டும் அடங்கியவை. அதற்கு மேலிருக்கும் முடிச்சுக்கு விஷ்ணுக்ரந்தியென்று பெயர். அங்கே ஸூர்யன் இருந்துகொண்டுப்ரகாசிக்கிறது. மூன்ருவது கண்டமா கிய(சந்த்ரஸ்தானமாகிய) சந்த்ரகண்டத்தில் விசுத்தி, ஆக்ஞா இவை யிரண்டும் அடங்கியவை. அதற்கு மேலிருக்கும் முடிச்சுக்கு ருத் ரக்ரந்தி யென்று பெயர். அங்கே சந்த்ரன் இருந்துகொண்டு ப்ரகா சிக்கிறது.

4. இவைகளுக்கு மேல் ஸஹஸ்ராரபத்மம் இருக்குமிடத் திற்கு துரியகண்டம் என்று பெயர். இது ஸம்பூர்ணமான கலைக ளுடனும் அம்ருதமயமான கிரணங்களுடனும் இருக்கும் சந்த்ர மண்டலம் இருக்கக்கூடிய இடம்.

5. ஸமயமார்கமாக அம்பாளை உபாஸனை செய்வதை சுருக் கமாகப் பின்வருமாறு சொல்லலாம். ஸாதகனானவன் தீக்ஷை நடந்த பிறகு தன்குருவினுடைய கடாக்ஷத்தால் ஷட்விதைக்யானு ஸந்தானம், சதுர்விதைக்யானு ஸந்தானம் முதலியவைகளால் பாவ னுதார்ட்யம் ஏற்பட்டபிறகு மஹாநவமியில் குருவினிடமிருந்து 'மஹாவேதா' என்கிற ஸம்ஸ்காரம் பெற்றபின் அவர் உபதேசப்படி யும் மேலே 8-வது ச்லோகத்தில் சொல்லியபடியும் அம்பாளை த்யா னம் செய்யும்போது குண்டலினீ ரூபிணியாகிய அம்பாளானவள்

மூலாதார பத்மத்திலிருந்து கிளம்பி அதையும் ஸ்வாதிஷ்டான சக்ரத்தையும் பேதனம் செய்து மணிபூர சக்ரத்தில் சீக்கிரம் ப்ரத்யக்ஷமாவாள். அங்கே அம்பாளுக்கு அர்க்யம், பாத்யம் முதல் பூஷணம் வரையிலுள்ள உபசாரங்களைச் செய்து அனாஹத சக்ரத்திற்கு அழைத்து வந்து, அங்கே தூபம் முதல் தாம்பூலம் வரையிலுள்ள உபசாரங்களைச் செய்து விசுத்தி சக்ரத்திற்கு அழைத்துவந்து அங்கே அம்பாளை ஸிம்ஹாஸனத்திலிருக்கச் செய்து, சந்த்ரகலா ரூபமான சுத்தஸ்படிக நிறமுடைய மணிகளால் பூஜித்து, அங்கிருந்து ஆக்ஞாசக்ரத்திற்கு அழைத்து வந்து, நீராஜனம் செய்து, அங்கிருந்து ஸஹஸ்ராரகமலத்திற்கு அழைத்துவந்து, அங்கே நடுவிலிருக்கும் சித் சந்த்ர மண்டலத்தில் ஸதாசிவருடைய ஸமீபம் சேர்ப்பித்து, அவர்களைச் சுற்றிப் படுதாவைப்போட்டு தான் ஸமீபத்திலிருந்து கொண்டு அம்பாள் அங்கிருந்து திரும்பவும் மூலாதார கமலத்திற்கு வரும் ஸமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேணும்.

6. மேலே சொல்லப்பட்ட மஹாவேதா என்னும் ஸம்ஸ்காரமானது பின்வருமாறு சொல்லப்படும்—குருவினிடமிருந்தே உபதேசமாகவேண்டியதான மஹாவித்யையை அவரிடமிருந்து தெரிந்துகொண்டு உபதேசப்ரகாரம் ரிஷ்யாதிந்யாஸங்களுடன் மூலமந்த்ரத்தை ஜபம் செய்து அப்யாஸமான பிறகு அர்பிசிமாத சுக்லபக்ஷத்தில் வருவதும் மஹாநவமியென்று பெயரையுடையதுமான அஷ்டமீராத்ரியின் நடுபாகத்தில் குருவினுடைய சரணாரவிந்தங்களையடைந்து அவரால் ஹஸ்தமஸ்தக ஸம்யோகங்கள் செய்யப்பட்ட பிறகு மந்த்ரோபதேசம், ஷட்சக்ரபூஜாப்ரகார உபதேசம், ஷட்விதைக்யாநுஸந்தான உபதேசம் இவைகளைப் பெற்றுக்கொள்வதான ஸம்ஸ்காரத்திற்கு மஹாவேதா என்று பெயர்.

7. மேலே சொல்லியதில் அம்பாள் மணிபூரசக்ரத்தில் ஆவிர்பவிக்கும்போது இருக்கக்கூடிய ரூபத்தைத்தான் 'க்வணத் காஞ்சீ தாமா' என்ற 7-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. ஷட் சக்ரபேதனம் செய்து அம்பாள் ஸஹஸ்ரதளகமலத்திற்கு வந்து தன் புருஷரான பரமசிவனுடன் தனிமையில் க்ரீடித்துக் கொண்டிருப்பதை இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டது.

8. குண்டலினீ சக்தியானவள் மூன்றரைச்சுற்று (குண்டலங்) களுடைய ஸர்ப்பம்போன்ற வடிவமுடையவள். குண்டலியானவள் மூலாதாரபத்மத்திலிருக்கும் கர்ணிகையின் நடுவில் குலகுண்டம் என்று சொல்லப்பட்ட பிந்துவில் தன் முகத்தை மறைத்துக்கொண்டு எப்போதும் தூங்கிக்கொண்டிருப்பவளாய் உறங்கிக்கொண்டிருக்கும் ஸர்ப்பம்போல் ச்வாஸம் விட்டுக்கொண்டிருப்பாள். ஜீவசக்தியான குண்டலியின் இந்த ச்வாஸத்தைத்தான் ப்ராணன் என்று சொல்லப்படும். இருகாதுகளையும் அழுத்தி மூடிக்கொண்டால் இந்த ச்வாஸத்தின் சப்தமானது கேட்குமென்றும் அப்படிக் கேட்காதிருந்தால் அது மரணம் ஸமீபத்துவிட்டதற்கு அடையாளமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

மூலாதாரஸ்த்த வன்ஹ்யாத்ம தேஜோமத்யே வ்யவஸ்த்திதா।
ஜீவசக்தி: குண்டலாக்யா ப்ராணாகாரா அத தைஜஸீ॥
ப்ரஸுப்த புஜகாகாரா த்ரிராவர்தா மஹாத்யுதி:
மாயா சிர்ஷா நதந்தீ தாம் உச்சரத்யனிசம் ககே॥
ஸுஷும்ன மத்யதேசே ஸா யதி கர்ணத்வயஸ்ய து।
பிதாய ந ச்ருணோத்யேனம் த்வனிம் தஸ்ய ததா ம்ருதி:॥
(தந்த்ரராஜம்)

9. இப்படி ச்வாஸம் விட்டுக்கொண்டு தூங்கும் குண்டலினி சக்தியை யோகாப்யாஸத்தினால் எழுப்புவது உண்டு. யோகாப்யாஸம் இல்லாதவர்கள் மந்த்ரஜபம், த்யானம் இவைகளால் ஏற்படும் தங்களுடைய பாவனையின் உறுதியினால் அந்த சக்தியை எழுப்ப முடியும்.

யோகாப்யஸத்தினால் குண்டலினீ சக்தியை எழுப்புவது பின்வருமாறு சொல்லப்பட்டது.

‘பத்மாஸனகத: ஸ்வஸ்த்த: குதம் ஆகுஞ்சய ஸாதக:।
வாயும் ஊர்த்வகதிம் குர்வன் கும்பகாவிஷ்டமானஸ:॥
வாய்வாகதவசாத் அக்னி: ஸ்வாதிஷ்டானகதோ ஜ்வலன்।
ஜ்வலனாகாத பவனாகாதைர் உன்னித்ரிதோ அஹிராட்॥
ருத்ரக்ரந்திம் ததோ பித்வா விஷ்ணுக்ரந்திம் பினத்யத: |
ப்ரம்ஹக்ரந்திம் ச பித்வைவ கமலானி பினத்தி ஷட்॥

ஸஹஸ்ரகமலே சக்தி: சிவேன ஸஹமோததே।
ஸா சாவஸ்த்தா பராஜ்ஞேயா ஸைவ நிர்வ்ருத்திகாரணம்॥'
(வாமகேச்வரதந்த்ரம்)

10. இம்மாதிரி எழுப்பப்பட்டு ஸஹஸ்ரார பத்மத்திற்குக் கொண்டுவரப்பட்டு ஸதாசிவனுடன் சேர்க்கப்பட்ட குண்டலினீ சக்தியானவள் அந்த ஸங்கமத்தால் ஏற்படும் அம்ருதத்தைப் ப்ரவாஹமாக தேஹத்திலிருக்கும் ஸமஸ்தநாடிகளிலும் பெருகச் செய்து உடனே திரும்பவும் அதே வழியாகத் திரும்பிவந்து தன்னிருப்பிடமாகிய மூலாதாரத்திற்கு வந்து முன்போலத் திரும்பவும் உரங்கிவிடுவதாகச் சொல்லப்படும். ஸஹஸ்ராரத்தில் அதிக காலம் தாமதிக்கும் இயல்புகிடையாது. அப்யாஸத்தின் பேரில் அங்கேயே எப்போதும் தங்கும்படிசெய்து ஸதா அந்த அம்ருத ப்ரவாஹத்திலேயே இருக்கும்படியான சக்தி சிற்சில ஜீவன் முக்தர்களான மஹான்களுக்குத்தான் கிடைக்கும்.

11. குண்டலினீ சக்தியை குலாங்கனையென்றும் ஷட் சக்ரங்களடங்கிய ஸுஷும்ந மார்க்கத்தை குலபதமென்றும் ராஜவீதியென்றும் சொல்வது வழக்கம். இப்படியந்த குலாங்கனையானவள் ராஜவீதி வழியாய் அந்தந்த சக்ரங்களாகிய க்ருஹங்களுக்குப்போய் கொஞ்சம் கொஞ்சம் தங்கி ஸஹஸ்ராரத்தில் தான் பதியாகிய ஸதாசிவருடன் சேர்ந்து அம்ருதத்தை ப்ரவஹிப்பதை பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:—

குலாங்கனு ஏஷாப்யத ராஜவீதீ:
ப்ரவிச்ய ஸங்கேத க்ருஹாந்தரேஷு।
விச்ரம்ய விச்ரம்ய வரேண பும்ஸா
ஸங்கம்ய ஸங்கம்ய ரஸம் ப்ரஸூதே॥
(சிந்தாமணிஸ்தவம்.)

12. இந்த ஆறு சக்ரங்களிலும் ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசமாகிய பஞ்சபூதங்களும் மனஸ்தத்வமும் இருப்பதாகச்சொல்லப்படும். மூலாதாரத்தில் ப்ருத்வீதத்வம், மணிபூரத்தில் (அப்பு, உதகம்) ஜலதத்வம், ஸ்வாதிஷ்டானத்தில் (தேஜஸ்) அக்னிதத்வம், அனாஹதத்தில் வாயுதத்வம், விசுத்தியில் ஆகாசதத்வம், ஆக்ஞாசக்ரத்தில் மனஸ்தத்வம், இவைகளிருக்கின்றன.

13. ஸர்வசக்ரங்களுக்கும் குலமார்கத்திற்கும் ஆதாரமானதாலும், எல்லாவற்றிற்கும் ஆதாரமான பூமிதத்வமிருக்கிறபடியாலும் முதல் சக்ரத்திற்கு மூலாதாரமென்று பெயர். பூமியில்லாவிட்டால் தேஹமானது நிலையில்லாமல் கீழேவிழுந்துவிடும், அல்லது மேலே புறப்பட்டுப்போகுமாதலால் அதுவேதான் ஸம்ஸ்த வஸ்துக்களுக்கும் மூலாதாரம்.

'ஸர்வதாரா மஹீயஸ்மாத் மூலாதாரதயா ஸ்த்திதா।

ததபாவே து தேஹஸ்ய பாதஸ் ஸ்யாத் உத்கமோபிவா॥

மணிபூர சக்ரத்தில் அம்பாள் தன்னுடைய பூஷணங்களிலிருக்கும் மணிகளால் (ரத்னங்களால்) அதை நிறப்புகிறபடியால் அந்த சக்ரத்திற்கு மணிபூரமென்று பெயர். [இங்கே ஸமய மதத்தின்படி அம்பாளுக்கு நானுவிதமான ரத்னகசிதமான பூஷணங்களை மானஸீகமாக அர்ப்பணம் செய்து அலங்காரம் செய்யவேண்டும்.] ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் குண்டலினீ சக்தியானவள் தானிருந்துகொண்டு க்ரந்தி (முடிச்சு) மாதிரி செய்துகொண்டு அவஸ்தானமாக இருப்பதால் அதற்கு ஸ்வாதிஷ்டானமென்றுபெயர். அனுஹதமென்பது (ஆஹதம்) அடிப்பது முதலானவைகளிலிருந்து ஏற்படாத ஒருவித சப்தத்துடனிருக்குமிடமாகையால் அந்தப்பெயர் ஏற்பட்டது. விசுத்தி சக்ரத்தில் ஸ்படிகம்போல் சுத்த ஸத்வரூமாக இருப்பதால் அம்மாதிரிப் பெயர். ஆக்ஞா என்பது கொஞ்சம் ஞானம் ஏற்படும் இடம். அதுதான் குருவின் ஸ்தானம். அங்கே குண்டலினீ சக்தியானவள் மேலிருக்கும் ப்ரம்ஹக்ரந்தியை பேதனம் பண்ணும் அவஸரத்துடனிருப்பதால் க்ஷணகாலம் மின்னல் மாதிரித்தோன்றி உடனே அந்தக்ரந்தியை பேதனம் செய்து ஸ்ஹஸ்ரகமலத்திற்குப் போவதாகச் சொல்லப்படும். இப்படி க்ஷணமாத்ரம் அம்பாள் ரூபம் அங்கே தெரிவதாலும் ஆக்ஞா என்று பெயர்.

மேலே சொல்லியவைகளை ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமத்திலும் வாமகேச்வர தந்த்ரத்திலும் சொல்லியிருப்பது பின்வருமாறு:—

குலாம்ருதைகரஸிகா குலஸங்கேத பாலினீ
குலாங்கனு குலாந்தஸ்த்தா கௌலினீ குலயோகினீ।
அகுலா ஸமயாந்தஸ்த்தா ஸமயாசாரதத்பரா।

மூலாதாரைக நிலயா ப்ரம்ஹக்ரந்தி விபேதினீ।
மணிபூராந்தருதிதா விஷ்ணுக்ரந்தி விபேதினீ।
ஆக்ஞாசக்ராந்தராளஸ்த்தா ருத்ரக்ரந்தி விபேதினீ।
ஸஹஸ்ராராம்புஜாரூடா ஸுதாஸாராபி வர்ஷணீ।
தடில்லதா ஸமருசி: ஷட் சக்ரோபரி ஸம்ஸ்த்திதா।
மஹாஸக்தி: குண்டலினீ பிஸதந்து தனீயஸீ।

(ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்)

புஜங்காகார ரூபேண மூலாத்தாரம் ஸமாச்ரிதா।
சக்தி: குண்டலினீ நாம பிஸதந்துநிபா ஆசுபா।
மூலகந்தம் பணக்ரேண தஷ்ட்வா கமலகந்தவத்।
முகேன புச்சம் ஸம்க்ருஹ்ய ப்ரம்ஹரந்த்ரம் ஸமாச்ரிதா।
ருத்ரக்ரந்திம் ததோ பித்வா விஷ்ணுக்ரந்திம் பினத்யத:।
ப்ரம்ஹக்ரந்திம் ச பித்வைவ கமலானி பினத்தி ஷட்।
ஸஹஸ்ரகமலே சக்தி: சிவேன ஸஹ மோததே।
ஸாசாவஸ்த்தா பரா ஞேயா ஸைவ நிர்வ்ருத்திகாரணம்।

(வாமகேச்வரதந்த்ரம்)

15. குண்டலினீ சக்தியானவள் மூலாதாரத்திலிருந்து கிளம்பும்போது பிறந்த குழந்தைபோல சப்தம் செய்வதால் அங்கே குமாரீ என்றும் ஸூர்யகண்டத்தின் முடிவாகிய அனுஹத சக்ரத்தை விட்டுக் கிளம்பும்போது அந்த ஸூர்யனின் உஷ்ணத்தால் பக்குவமாகி தருந்த வயதுள்ளவளாய் (தருணியாய்) இருப்பதால் அங்கே தருணியென்றும் ஸஹஸ்ராரபத்மத்தில் தன்பதியாகிய பரமசிவனை அடைவதால் அங்கே பதிவ்ரதையென்றும் சொல்லப்படுவது வழக்கம்.

16. மூலாதாரத்திற்கு அடுத்தபடி ஸ்வாதிஷ்டானத்தை வழக்கமாகச் சொன்னாலும் இங்கே பஞ்சபூதங்களின் வரிசையை அனுஸரித்து மூலாதாரத்திற்கு அடுத்தபடி மணிபூரத்தைச் சொன்னது.

17. பஞ்சபூதங்களை அறியக்கூடிய குணங்களுக்கு தன்மாத்ரைகளென்று பெயர். இவைகளின் பெயர் கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ச, சப்தம். இவைகளில் ப்ருதிவியில் கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ச, சப்தங்களாகிய ஐந்தும் இருக்கின்றன. [ப்ருதிவி

யென்றால் மண்மட்டுமல்ல. ரஸம் (ருசி) உள்ள வெல்லம் முத லியவையும், மணமுள்ள புஷ்பம் முதலியவையும் ப்ருதிவிதான்.] அதுமாதிரி ஜலத்தில் ரஸ, ரூப, ஸ்பர்ச, சப்தங்கள் இருக்கின் றன. கந்தம் ஒன்றுமட்டுமில்லை. (ஜலத்தில் வாஸனையுள்ள பதா ர்த்தத்தைச் சேர்த்தால்தான் அதற்கு மணம் ஏற்படுகிறது.] தேஜஸில் (அக்னியில்) ரூபம், ஸ்பர்சம், சப்தங்களிருக்கின்றன. கந்தம், ரஸம் இவையிரண்டுமில்லை. வாயுவில் ஸ்பர்ச, சப்தங்க ளிருக்கின்றன. பாக்கி மூன்றுமில்லை. ஆகாசத்தில் சப்தம்மட்டு மிருக்கிறது. (இந்த பஞ்சபூதங்களைத் தாண்டிய சிதாகாசமாகிய மனஸில் இந்த ஐந்து தன்மாத்ரைகளுமில்லை.) ஆகவே ப்ருதிவி யிலிருப்பதும் மற்ற நான்கிலில்லாததுமான விசேஷ குணமாகிய கந்தமானது ப்ருதிவியின் தன்மாத்ரை. அதுபோலவே ஜலத்தி லிருப்பதும் மற்ற மூன்றிலில்லாததுமான விசேஷகுணமாகிய ரஸ மானது அப்புதத்வத்தின் தன்மாத்ரை. அதுபோலவே பாக்கி தத்வங்களாகிய தேஜஸ், வாயு, ஆகாசங்களுக்கு முறையே ரூப, ரஸ, ஸ்பர்சங்கள் தன்மாத்ரைகளாக இருக்கின்றன.

18. இந்த தன்மாத்ரைகளை அறியக்கூடிய இந்திரியங்க ளுக்கு ஞானேந்த்ரியங்களென்று பெயர். அவை மூக்கு, நாக்கு, கண், தோல், காது. இவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தன் மாத்ரையைத்தான் அறியக்கூடுமே தவிர, பாக்கி தன்மாத்ரைகளை அறியமுடியாது. க்ராணேந்த்ரியமான மூக்கினால் கந்தத்தைத் தெரிந்துகொள்கிறோம். ஜிஹ்வேந்த்ரியமான நாக்கினால் ரஸத்தைத் தெரிந்துகொள்கிறோம் சக்ஷுரிந்த்ரியமான கண்ணால் ரூபத்தைப் பார்க்கிறோம். த்வகிந்த்ரியமான தோலால் பதார்தங்களை ஸ்பர்சிக் கிறோம். ச்ரோத்ரேந்த்ரியமான காதினால் சப்தங்களைக்கேழ்க்கிறோம். இம்மாதிரியான பஞ்சஞானேந்த்ரியங்களைத் தவிற சரீரத்திலிருக் கும் கர்மேந்த்ரியங்கள் ஐந்து—வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம். இவை பத்துக்கும் மனஸே ஆதாரமாகையால் அவை அதில் அடங்கியிருப்பதாகச் சொல்லப்படும். ஆக மனஸுட்பட இந்த் ரியகணங்கள் பதினொன்று.

19. மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அனாஹ தம், விசுத்தி இந்த ஐந்து சக்ரங்களிலும் ப்ருதிவி, அப்பு, தேஜஸ்,

வாயு, ஆகாசம் இந்த ஐந்து தத்வங்களும் அவையவைகளின் தன்மாத்ரைகளான கந்த, ரஸ, ரூப, ஸ்பர்ச, சப்தங்களாக இருக்கின்றன. ஆக்ஞாசக்ரத்திலிருக்கும் மனஸ்தத்வமானது ஏகாதசங்களான இந்த்ரியகணங்கள் அடங்கியது. ஆகவே பஞ்சபூதங்கள், பஞ்சதன்மாத்ரைகள், ஏகாதச இந்த்ரியகணங்கள் இவைகளாகிய இருபத்தோரு தத்வங்களையும் குண்டலினீ சக்தியானவள் தாண்டி அவைகளுக்கு மேல்பட்ட மாயாதத்வம், சுத்தவித்யாதத்வம், மஹேச்வரதத்வம், ஸதாசிவதத்வம் இவை நான்கையும் தாண்டி ஸஹஸ்ராரகமலத்திலிருக்கும் சந்த்ரமண்டலத்தில் மேலேசொல்லியவைகளில் கடைசிதத்வமாகிற ஸதாசிவ தத்வத்துடன் கலந்தவளாய் அவரோடு அபின்னமாய் பரப்ரம்ஹமான இருபத்தி ஆருவது தத்வமாகவிளங்குகிருள் என்பதை இந்தச்லோகத்தில் சொல்லப்பட்டது. இந்த இருபத்திஆருவது தத்வத்தைத் தான் ஸாதாக்ய தத்வமென்று சொல்வது. இந்த ஸாதாக்ய தத்வமானது சுத்தவித்தையும் ஸதாசிவனும் மௌனமாவதிலிருந்து ஏற்பட்டபோதிலும் அதில் இருவரும் ஸாதாரணமாக கலந்திருப்பதாக மட்டுமில்லாமல் ஐக்யபாவம் (தாதாத்ம்யம்) அடைந்திருப்பதால் அதுதனியான தத்வமாக ஏற்படுகிறது.

सुधाधारासारैश्चरणयुगलान्तर्विगलितैः
प्रपञ्चं सिञ्चन्ती पुनरपि रसाम्नायमहसः ।
अवाप्य स्वां भूमिं भुजगनिभमध्युष्टवलयं
स्वमात्मानं कृत्वा स्वपिषि कुलकुण्डे कुहरिणि ॥ १० ॥

ஸுதாதாரா ஸாரை: சரணயுகளாந்தர் விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புனரபி ரஸாம்ஞய மஹஸ:]
அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்டவலயம்
ஸ்வமாத்மானம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே
குஹரிணி||

ஹே பகவதி! — தாயே!
சரணயுகளாந்தர் விகளிதை: — (உன்னுடைய) இருபாதங்களின் நடுவிலிருந்து பெருகுகிற
ஸுதாதாராஸாரை: — அம்ருததாரையாகிற வர்ஷத்தால்

| | |
|---|---|
| ப்ரபஞ்சம் | (பக்தனுடைய) சரீரத்திலுள்ள 72,000 நாடிகளாகிற ப்ரபஞ்சத்தை |
| விஞ்சந்தீ | நனைக்கிறவளாய் |
| ரஸாம்நாயமஹஸ: | (அம்ருதத்தின் அதிசயமான காந்திபோல் காந்தியுள்ள) சந்ரமண்டலத்திலிருந்து |
| ஸ்வாம் பூமிம் | நீ எப்போதும் இருக்குமிடமாகிய மூலாதார சக்ரத்தை |
| புனரபி அவாப்ய | திரும்பவும் அடைந்து |
| புஜகனிபம் | ஸர்ப்பம்போன்ற |
| அத்யுஷ்டவலயம் | மூன்றரை குண்டலாகாரமாக |
| ஸ்வம்ஆத்மானம்க்ருத்வா | ரூபத்தை எடுத்துக்கொண்டு |
| குஹரிணி | ஸூக்ஷ்மமான த்வாரத்தையுடைய |
| குலகுண்டே | மூலாதார பத்மத்தில் |
| ஸ்வபிஷி | உறங்குகிறாய். |

1. முந்திய ச்லோகத்தில் குண்டலினீ சக்தியானவள் மூலாதாரத்திலிருந்து ஷட்சக்ரங்களின் வழியாக ஸஹஸ்ராரகமலத்திற்கு வருவதைச் சொல்லப்பட்டது. இதில் குண்டலினீ சக்தியானவள் ஸஹஸ்ராரபத்மத்தில் பரமசிவனுடைன் சேர்ந்து அம்ருதப்ரவாஹத்தை உண்டுபண்ணி அதினால் சரீரத்திலிருக்கும்படியான ஸகல நாடிகளையும் நனைத்துவிட்டுத் திரும்பவும் ஸுஷும்னாமார்க்கமாக மூலாதாரத்திற்குவந்து முன்போலத் தூங்குவதைச் சொல்லப்பட்டது.

2. ஸஹஸ்ராரபத்மத்தில் அம்ருதமயமான சந்த்ரமண்டலமிருக்கிறதை இங்கு 'ரஸாம்நாயமஹஸ:' என்று சொல்லப்பட்டது. ஸமயிகளுடைய மதப்ரகாரம் ஸ்ரீசக்ரமேதான் ஸஹஸ்ரகமலத்திலிருக்கும் சந்த்ரமண்டலமாக பாவிக்கப் பட்டிருக்கிறது. இரண்டிற்கும் பதினாறு கலைகளுண்டு. பாஹ்ய ஆகாசத்தில் தோன்றும் சந்த்ரமண்டலமும் ஸ்ரீசக்ரம்தான் என்பது ஸமயமதரஹஸ்யம். ஸஹஸ்ராரகமலத்திலிருக்கும் சந்த்ரமண்டலமானது எப்போதும் ஷோடசகலைகளுடன் கூடியதாய் அந்த இடத்தைத் தன்னுடைய ஜ்யோத்ஸ்னாமயமாகச் செய்துகொண்டிருக்கிறது. (நிலாவையுண்டாக்கும் சந்த்ரனுடைய கிரணங்களைப்பற்றி கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்றிருக்கிறது. அக்னியினுடைய காந்தியானது ப்ரகாசம் குறைவாகவும் தாபம் அதிகமாவும் உடையதாக இருக்கிறது. ஸூர்யனுடைய காந்தி

யில் ப்ரகாசம், தாபம் இவையிரண்டும் அதிகமாக இருக்கிறது. இப்படி இவையிரண்டிலும்தாபம் அதிகமிருப்பதால் இவற்றை நாம் விரும்புவதில்லை. சந்த்ரனுடைய காந்தியோ தாபமேயில்லாத ப்ரகாசமாத்ர மட்டுமிராமல் நமக்கு குளிர்ச்சியையும் ஸந்தோஷத்தையும் கொடுக்கிறதினால்தான் அந்தக்காந்தியையே நாம் விரும்பி எல்லாவற்றிற்கும் உத்க்ருஷ்டமாகச் சொல்வதின் காரணம்.]

3. 'மூலாதாராதிகம் சக்ரஷட்கம் குலமிதி ஸ்ம்ருதம்' என்றபடி மூலாதாரம் முதலிய ஷட்சக்ரங்களையுடைய ஸுஷும்னைக்கு குலம் என்று பெயர். அதற்காதாரமான மூலாதாரத்திற்கும் குலம் என்று பெயர். (கு என்றால் ப்ருதிவீ தத்வம். அது மூலாதாரத்திலிருக்கிறபடியால் குலம் என்று சொன்னது.)

4. குலமார்கத்திற்கு ஆதாரமான மூலாதார பத்மத்தின் நடுவில் தாமரையிலிருப்பதுபோல் ஒரு கிழங்கு (பொட்டு) இருப்பதாகவும் அதின் நடுவில் ஒரு ஸூக்ஷ்மமான த்வாரம் இருப்பதாகவும் அதில் சிரஸைவைத்துக்கொண்டு குண்டலினீ சக்தி தூங்குவதாகவும் சொல்லப்படும்.

5. குண்டலினீ சக்தியானது ரூபத்தில் 'தடில்லதா ஸமருசி:' என்றபடி மின்னல்கொடிபோன்றதும் 'பிஸதந்து தனீயஸீ' என்றபடி தாமரையின் நூல்போல் மெல்லியதென்றும் சொல்லப்படும்.

6. இம்மாதிரி அம்பாளுடைய பாதங்களிலிருந்து பெருகும் அம்ருதப்ரவாஹமானது ஸகலப்ரபஞ்சத்தையும் நனைந்துபோகச்செய்வதை ச்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

லோகஸ்ய த்வாரம் அர்சிமத்பவித்ரம்।
ஜ்யோதிஷ்மத் ப்ராஜமானம் மஹஸ்வத்।
அம்ருதஸ்ய தாரா பஹுதா தோஹமானம்
சரணம் நோ லோகே ஸுதிதான் ததாது ॥

7. இப்படி அம்ருதஸ்ராவமாகிறதை வேறுவிதமாகவும் வர்ணிப்பதுண்டு. குண்டலினியான ஸர்பமானது ஸுஷும்னா மார்கமாக ஸஹஸ்ரகமலத்தையடைந்து அதின் நடுவிலிருக்கும்

சந்த்ரமண்டலத்தை கடிப்பதாகவும் அதிலிருந்து அம்ருதம் பெருகுவதாகவும் அதனால் சரீரத்தினுடைய ஸகலநாடிகளும் நனைவதாகவும் சொல்லப்படும். இதைத்தவிற பின் வருமாறும் சொல்லப்படும்.

ஸுஷும்னைக்கு அடியிலிருக்கும் மூலாதாரத்தைக்குலமென்று சொல்வதுபோல் அதற்கு மேலிருக்கும் ஸஹஸ்ரதளகமலத்திற்கு அகுலமென்றும் அகுலாரவிந்தமென்றும் பெயர்களுண்டு. அங்கு இருக்கும் ஸதாசிவதத்வத்தை அகுலகுண்டலினியென்றும் சொல்வதுண்டு. குண்டலினீயானவள் ஏற்கனவேசொல்லியபடி ஷட்சக்ரங்களையும் மூன்றுக்ரந்திகளையும் அக்னி ஸூர்ய ஸோமாத்மகமான மூன்று கண்டங்களையும் கடந்து ஸஹஸ்ரதளகமலத்திற்கு வந்து அங்கிருக்கும் அகுலகுண்டலினீயோடுகூடி தங்களுடைய ஸங்கமத்தினால் ஏற்பட்ட அம்ருதத்தினால் ஸாதகனுடைய சரீரத்திலிருக்கும் ஸகலநாடிகளையும் நனையும்படி செய்து தானும் அந்த அம்ருதத்தில் மூழ்கி அதைச்சாப்பிட்டு அதனால் மயங்கினவளாய்த் திரும்பவும் ஸுஷும்னுமார்கமாக மூலாதாரத்திற்குத் திரும்பிவந்து அங்கே முன்போல் ஸுகமாகத் தூங்குவதாகவும் சொல்லப்படும்.

'குலாரவிந்தாத் அகுலாரவிந்தம்
கத்வாம்ருதௌகைர் அனுஷிஞ்ச்யமானம் |
ரஸாரவிந்தானி நிஜாரவிந்தே
புன: ப்ரயாந்தீம் ப்ரபஜே பரேசிம் ||'

'பிஸதன்வீ தடிதாபா மூலாதாரஸ்த்த பத்மச்ருங்காடாத் |
பித்வா மூலஹ்ருதாக்ஞாகத வன்ஹிரவிந்து மண்டலத்ரிதயம் ||
வ்யோமனி சித்சசி மண்டலமத்பே த்வகுலேனஸங்கம்ய |
உபயாங்க ஸங்கஜன்யம் ப்ரவாஹயந்தீ ஸுதாபூரம் ||
ஸ்வயமபி தத்பானவசாத் மத்தாபூத்வா புன:ச தேனைவ |
மார்கேண பராவ்ருத்ய ஸ்வஸ்மின் ஸ்த்தானே ஸுகம்
ஸ்வபிதி ||'

(வரிவஸ்யா ரஹஸ்யம்)

8. இப்படியேற்படும் அம்ருதத்திற்கு குலாம்ருதம் என்று பெயர். இதில் அம்பாளுக்கு மிகவும் ப்ரீதியுண்டென்பதாக ஸ்ரீ

லலிதாஸஹஸ்ரநாமத்தில் 'குலாம்ருதைகரஸிகா' என்று ஒரு நாமம் உண்டு.

9. 'சரணயுகளாந்தர் விகளிதை:' என்பதினுல் அம்பாளுடைய பாதோதகம் (கால்களைக்கழுவின ஜலம், நிர்ணேஜன ஜலம்) சொல்லப்பட்டதாகவும் சொல்லலாம்.

பத்தாவது ச்லோகத்தின் பொழிப்புரை.

'தாயே! ஸஹஸ்ராரத்திலிருக்கும் சந்த்ர மண்டலத்தில் நீ இருக்கும்போது உன்னுடைய பாதங்களிலிருந்து பெருக்கும் அம்ருதவர்ஷங்களினுல் ப்ரபஞ்சமாகிற சரீரத்தின் நாடிகளையெல்லாம் நனையும்படி செய்து பிறகு உன்னிருப்பிடமாகிய மூலாதாரத்தை திரும்பவும் அடைந்து குண்டலாகாரமான ஸர்ப்பம் போன்ற ரூபத்துடன் அந்த மூலாதாரபத்மத்திலிருக்கும் த்வாரத்தில் தலையை வைத்துக்கொண்டு அதில் தூங்குகிருய்.

चतुर्भिः श्रीकण्ठैः शिवयुवतिभिः पञ्चभिरपि
प्रभिन्नाभिः शंभोर्नवभिरपि मूलप्रकृतिभिः ।
चतुश्चत्वारिंशद्वसुदलकलाश्रत्रिवलय-
त्रिरेखाभिः सार्धं तव शरणकोणाः परिणताः ॥ ११ ॥

சதுர்பி: ஸ்ரீகண்டை: சிவயுவதிபி: பஞ்சபிரபி
ப்ரபின்னுபி: சம்போர் நவபிரபி மூலப்ரக்ருதிபி: |
சதுச்சத்வாரிம்சத்வஸுதள கலாச்ரத்ரிவலய
த்ரிரேகாபிஸ் ஸார்த்தம் தவ சரணகோணு: பரிணதா: ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| சதுர்பி: ஸ்ரீகண்டை: | நான்கு சிவாத்மகமான சக்ரங்களென்ன |
| சம்போ: ப்ரபின்னுபி: | அவைகளிலிருந்து வேறுன |
| பஞ்சபி: சிவயுவதிபி: அபி | ஐந்து சக்த்யாத்மகமான சக்ரங்களென்ன |
| நவபி: மூலப்ரக்ருதிபி: | ஆக இந்த ஒன்பது மூலப்ரக்ருதிகளோடுகூடிய |
| தவ | உன்னுடைய |
| சரணகோணு: | இருப்பிடமாகிய ஸ்ரீசக்ரத்தின் கோணங்கள் |

| | |
|---|---|
| வஸுதள கலாச்ர த்ரி வலய த்ரிரேகாபி: ஸார்த்தம் | அஷ்டதளங்களென்ன, ஷோடசதளங்களென்ன, மூன்று மேகலைகள் (ஒட்டியாணங்கள்) என்ன, மூன்று பூபுரமாகிய ரேகைகள் என்ன, இவைகளோடு சேர்ந்த |
| பரிணதா: | உருவத்தோடுகூடியவைகளாய் |
| சதுச் சத்வாரிம் சத் | நாற்பத்திநாலாக இருக்கின்றன. |

தாயே! சிவாத்மகமான நான்கு, சக்த்யாத்மகமான ஐந்து, இந்த மூலப்ரக்ருதிகளான ஒன்பது சக்ரங்களோடும் அஷ்டதள, ஷோடசதள, த்ரிவலய, த்ரிரேகைகளோடும் கூடிய உன்னிருப்பிடமாகிய ஸ்ரீசக்ரமானது நாற்பத்திநாலு கோணங்களுடையதாக ஆகிறது.

1. இதில் ஸ்ரீசக்ரத்தினுடைய பாகங்களைச் சொல்லுகிறார். பரமசிவன் கழுத்தில் (ஸ்ரீ) விஷத்தை தரித்திருப்பதால் ஸ்ரீகண்டன் என்று பெயர். சிவயுவதியென்றால் அம்பாள்.

2. ஸ்ரீசக்ரத்திலிருக்கும் ஒன்பது சக்ரங்களையும் ப்ரபஞ்சத்திற்கு மூலகாரணங்களாகவும் அதினால் அவைகளை யோனிகளென்றும் சொல்லப்படும். இந்த ஒன்பது யோனிகளும் ஒன்பது தாதுக்களாக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் மஜ்ஜா, சுக்லம், ப்ராணன், ஜீவன் இவைகள் நாலும் சிவாத்மகமான தாதுக்களென்றும், த்வக், அஸ்ருக், மாம்ஸம், மேதஸ், அஸ்தி இவைகள் ஐந்தும் சக்த்யாத்மகமான தாதுக்களென்றும் சொல்லப்படும். ஆகவே இந்த சரீரமானது நவயோனிகளிலிருந்து உண்டானதும் நவதாதுக்களாலானதுமென்று சொல்லப்பட்டது. பத்தாவது யோனியாகிய பைந்தவஸ்தானமானது அந்த சரீரத்திற்கு ஈச்வரியென்று சொல்லப்படும்.

த்வகஸ்ருங்மாம்ஸமேதோஸ்த்தி தாதவ: சக்திமூலகா: |
மஜ்ஜாசுக்ல ப்ராணஜீவ தாதவ: சிவமூலகா: ||
நவதாதுரயம் தேஹோ நவயோனிஸமுத்பவ: |
தசமீ யோனிரேகைவ பராசக்திஸ்ததீச்வரீ ||

இம்மாதிரி பிண்டாண்டமாகிய சரீரம் ஏற்பட்டதுபோல் ப்ரம்ஹாண்டமும் ஏற்பட்டதாகச் சொல்லப்படும். பஞ்சபூதங்கள் (பஞ்சதன்மாத்ரைகள், பஞ்ச ஞானேந்த்ரியங்கள், பஞ்சகர்மேந்த்ரி

யங்கள், பஞ்சப்ராணன்கள் இவையுள்பட) சாக்ததத்வங்களென்றும் 22முதல் 25முடிய உள்ள தத்வங்களாகிய மாயா, சுத்தவித்யா, மஹேச்வர, ஸதாசிவதத்வங்கள் சைவதத்வங்களென்றும் ஏகாதசேந்த்ரியங்களும் சப்தம் முதலிய பஞ்சதன்மாத்ரைகளும் இவைகளிலடங்கியவையென்றும் ஆக இருபத்திஐந்து தத்வங்களால் ப்ரம்ஹாண்டம் ஏற்பட்டது என்றும் இம்மாதிரி சரமாகிய பிண்டாண்டமும் அசரமாகிய ப்ரம்ஹாண்டமும் சிவசக்த்யாத்மகமென்று சொல்லப்பட்டது.

ஏவம் பிண்டாண்டமுத்பன்னம் தத்வத் ப்ரம்ஹாண்ட
முத்பபௌ |
பஞ்சபூதானி சாக்தானி மாயாதீனி சிவஸ்யது ||
மாயா ச சுத்தவித்யா ச மஹேச்வர ஸதாசிவௌ |
பஞ்சவிம்சதி தத்வானி தத்ரைவாந்தர் பவந்திதே ||
.... .... .... ....
சிவசக்த்யாத்மகம் வித்தி ஜகதேதத் சராசரம் |

3. சிலர்கள் தத்வங்களை 36 என்றும், 51 என்றும் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆயினும் அவைகளைப் பரிசீலனை செய்துபார்த்தால் மேலே சொல்லிய 25 தத்வங்களாகிய பஞ்சபூதங்கள், பஞ்சதன்மாத்ரைகள், ஞானேந்த்ரியங்கள் ஐந்து, கர்மேந்த்ரியங்கள் ஐந்து, மனஸ்தத்வம், மாயா, சுத்தவித்யா, மஹேச்வரன், ஸதாசிவன் இந்த இருபத்தைந்து தத்வங்களிலடங்கியதாகத்தான் ஏற்படும். இப்படிப்பட்ட பஞ்சவிம்சதி தத்வங்களையும் கடந்தது சிவசக்திஸம்புடிதமான ஸாதாக்யமென்கிற இருபத்தாராவது தத்வம். இந்த தத்வத்தால்தான் ஜகத்தினுடைய உத்பத்தி.

4. அஷ்டவஸுக்களானபடியால் வஸுதளம் என்பது எட்டு தளம். ஷோடச கலைகளானபடியால் களாச்ரம் என்பது பதினாறு தளம். த்ரிவலயம் என்பது மூன்று ரேகைகளாகிற (மேகலைகள்) ஒட்டியாணங்கள். த்ரிரேகை என்பது ப்ராகாரவலயாகாரமாகிற பூபுரத்ரயத்தைச் சொன்னது. இந்த மூன்று பூபுரங்களும் நாலு திக்குகளிலும் த்வாரம் (வாசற்படி) உள்ளவைகள்.

5. ஸ்ரீசக்ரத்தைப் பின்வருமாறும் சொல்லப்பட்டிருக்கிறது—

பிந்து த்ரிகோண வஸுகோண தசாரயுக்ம
மன்வச்ர நாகதள ஸம்யுதஷோடசாரம் |
வ்ருத்தத்ரி பூபுரயுதம் பரிதச்சதுர்த்வா :
ஸ்ரீசக்ரமேததுதிதம் பரதேவதாயா : ||

ஸ்ரீசக்ரமானது த்ரிகோண, அஷ்டகோண, தசகோணத்வய, சதுர்தச கோணங்களாகிய ஐந்து சக்தி சக்ரங்களும், அஷ்டதளம், ஷோடசதளம், மேகலாத்ரயம், பூபுரத்ரயங்களாகிய நாலு சிவ சக்ரங்களும் சேர்வதினால் நவசக்ராத்மகமானதும் சிவன், சக்தி இவர்களுடைய சேர்ந்த ரூபமானதுமாக ஆகிறது.

6. இவைகளில் த்ரிகோணத்தில் அஷ்டதளமும், அஷ்டகோணத்தில் ஷோடசதளமும், தசகோணத்வயத்தில் மேகலாத்ரயமும், சதுர்தசகோணத்தில் பூபுரத்ரயமும் அந்தர்பூதமாக இருக்கிறபடியால் 'பரிணதா :' என்று சொல்லப்பட்டது.

7. ஸ்ரீலலிதா த்ரிசதியில் பலச்ருதி பாகத்தில் இந்த விஷயத்தைப்பற்றிச் சொல்லுகையில்

சதுர்பி: சிவ சக்ரைச் ச சக்தி சக்ரைச் ச பஞ்சபி: |
நவ சக்ரைச் ச ஸம்ஸித்தம் ஸ்ரீசக்ரம் சிவயோர்வபு: ||
த்ரிகோணம் அஷ்டகோணம் ச தசகோணத்வயம் ததா |
சதுர்தசாரம் சைதானி சக்திசக்ராணி பஞ்ச ச ||
பிந்துச் சாஷ்டதளம் பத்மம் பத்மம் ஷோடச பத்ரகம் |
சதுரச்ரம் ச சத்வாரி சிவசக்ரான் யனுக்ரமாத் ||
த்ரிகோணே பைந்தவம் ச்லிஷ்டம் அஷ்டாரே அஷ்டதளாம்புஜம் |
தசாரயோ: ஷோடசாரம் பூபுரம் புவனச்ரகே ||
சைவானமபி சாக்தானும் சக்ராணுஞ்ச பாஸ்பரம் |
அவினுபாவஸம்பந்தம் யோஜானுதி ஸ சக்ரவித் ||
த்ரிகோண ரூபிணீ சக்தி: பிந்து ரூப: சிவஸ் ஸ்ம்ருத: |
அவினுபாவ ஸம்பந்தம் தஸ்மாத் பிந்துத்ரிகோணயோ: ||

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதின்படி பிந்துவும் த்ரிகோணமும், அஷ்டகோணமும், அஷ்டதளமும், தசாரத்வயமும், ஷோடசதளமும், சதுர்தசாரமும், பூபுரத்ரயமும், ஐக்யமாக இருப்பதாகச்

சொல்லப்பட்டது. இருவகையிலும் சிவ சக்ரங்களும், சக்தி சக்ரங்களும் பரஸ்பரம் அவினாபாவஸம்பந்தமாக (ஐக்யமாக) இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

8. ஸ்ரீசக்ரலேகனக்ரமத்தைப்பற்றி ஸ்ருஷ்டிக்ரமமென்றும், ஸம்ஹாரக்ரமமென்றும் இரண்டு விதம் சொல்லப்படும். ஸ்ருஷ்டிக்ரமமென்பது ஸமயமார்க்கத்தை அனுஸரித்தது. ஸம்ஹாரக்ரமமென்பது கௌலமார்க்கத்தை அனுஸரித்தது. ஸ்தூலமாகச் சொல்லுகையில் முதலாக பிந்துவிலிருந்து மேலுக்குமேல் வெளிப்புறமாக லேகனம்செய்வது ஸ்ருஷ்டிக்ரமமென்றும், வெளியிலிருந்து ஆரம்பித்து பிந்துவரையில் உள்புறமாக லேகனம் செய்வது ஸம்ஹாரக்ரமமென்றும் சொல்லப்படும். இவைகளின் விபரங்களை லக்ஷ்மீதரர் வ்யாக்யானத்தின் மூலத்தில் பார்த்துக்கொள்ளவும்.

9. ஸ்ரீசக்ரத்தை மேருப்ரஸ்தாரமென்றும் கைலாஸப்ரஸ்தாரமென்றும் பூப்ரஸ்தாரமென்றும் மூன்றுவிதமாக பாவனை செய்வது வழக்கம். மேருப்ரஸ்தாரம் என்பது ஷோடசநித்யைகளின் தாதாத்ம்யத்தால் பாவனைசெய்வது. கைலாஸப்ரஸ்தாரம் என்பது மாத்ருகா தாதாத்மயத்தால் பாவனை செய்வது. பூப்ரஸ்தாரம் என்பது வசின்யாதி தாதாத்ம்யத்தால் பாவனைசெய்வது.

10. ஸ்ரீசக்ரத்தை (லேகனம் பண்ணியிருக்கும்போது தோன்றுவதுமாதிரி) தட்டையாக இருப்பதாய் பாவனை செய்யக்கூடாதென்றும் அகலம், நீளம், உயரம் இம்மூன்றும் உடையதாகத்தான் பாவனைசெய்யவேண்டுமென்றும் சொல்லப்படும். இந்தவிதமாக பூபுரத்ரயம், மேகலாத்ரயம், ஷோடசதளம், அஷ்டதளம், சதுர்தசகோணம், த்சகோணத்வித்யம், அஷ்டகோணம், த்ரிகோணம் இவைகளை மேலுக்குமேலாக இருப்பதாய் பாவனைசெய்து எல்லாவற்றிற்கும் மேல்பட்ட இடமாகிய த்ரிகோணத்தில் பிந்து இருப்பதாக பாவனைசெய்யவேண்டும்.

11. இப்படி சிவசக்ரங்கள் நாலும் சக்திசக்ரங்களுக்கு வெளியிலிருந்தபோதிலும், ஏற்கனவே முதல்ச்லோகத்தில் சொல்லியபடி சக்திக்கு வேறானவாக சிவன் இருக்கமுடியாதாகையால் இந்த நாலு சிவசக்ரங்களை பிந்துரூபமாக ஆகர்ஷணம் செய்து சக்திசக்ரங்

களுக்கு நடுவில்வைத்திருக்கிறதென்றும் ஆகவே சிவசக்ரசதுஷ்டயாத்மகமான பிந்துவானது ஐந்து சக்ரங்களிலும் பாவியிருப்பதாகவும் இவ்விதமாக சிவசக்திகளுடைய ஐக்யமானது ஏற்படுகிறது என்றும் சொல்லப்படும். இதைத்தான்

'சதுர்பி: சிவசக்ரைச்ச சக்திசக்ரைச்ச பஞ்சபி: |
சிவசக்திமயம் ஜ்ஞேயம் ஸ்ரீசக்ரம் சிவயோர் வபு: ||'

என்று சொன்னது. இந்த ஐக்யத்தையே வேறு விதமாகவும் சொல்வதுண்டு.

12. சதுர்தசகோணம் 14, தசகோணத்விதயம் 20, அஷ்டகோணம் 8, த்ரிகோணம் 1, சிவசக்ரசதுஷ்கோணாத்மகமான பிந்து 1 ஆக நாற்பத்திநாலுகோணங்களுடன் ஸ்ரீசக்ரமிருப்பதாக இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டது.

13. ஸ்ரீசக்ரத்திலிருக்கும் கோணங்கள் நாற்பத்திநாலா அல்லது நாற்பத்திமூன்று என்பதைப்பற்றி விவாதம் உண்டு. இங்கிருக்கும் பாடத்தில் நாற்பத்திநாலு (சது: சத்வாரிம்சத்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாற்பத்திமூன்று (த்ரய: சத்வாரிம்சத்) என்ற பாடாந்தரமும் உண்டு. (14+10+10+8+1 = 43 த்ரிகோணங்கள்).

14. 'ஸாதாக்ய'மென்ற பதமானது 'ஸாதா என்று சொல்லப்படும்' என்று சிலர் அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள். ஆயினும் அந்த (சிவசக்தி ஸாமரஸ்யமான) இருபத்தாறாவது தத்வத்திற்கே 'ஸாதாக்ய'மென்றுபெயர். ஸத் ஆக்யா யத: என்பதால் 'ஸாதாக்ய'மென்று ஏற்படுகிறது. ஏற்கனவே 'க்வணத்காஞ்சிதாமா' என்ற ச்லோகத்தில் சொல்லியபடி அம்பாள் பரமசிவனுடைய ஆஹோபுருஷிகாவாக இருக்கிறகாரணத்தினாலும் அம்பாள் இருபத்தாறாவது தத்வத்தில் பரமசிவனுடன் ஒன்றாக் கலந்திருப்பதாலும் ஸத் என்ற பாவமானது அங்கிருந்து ஏற்படுவதால் அந்த தத்வத்திற்கு ஸாதாக்ய' மென்றுபெயர்.

15. ஸ்ரீசக்ரத்தைப்பற்றி இன்னம் சில விபரங்களும் தெரிந்துகொள்ளவேண்டியவையிருக்கின்றன. அதின் மத்தியில் அம்பாளும் பாக்கிஇடங்களில் (அம்பாளைச்சுற்றியிருக்கும்) ஆவரண

தேவதைகளும் இருப்பதாகச்சொல்லப்படும். பிந்துவை முதலாவது ஆவரணமாகவும் அதற்கு வெளியிலிருக்கும் நான்கு சிவசக்ரங்கள், ஐந்து சக்திசக்ரங்களாகிய த்ரிகோணம், வஸுகோணம், இரண்டு தசாரங்கள், சதுர்தசாரம் இவைகளை முறையே 2, 3, 4, 5, 6; வது ஆவரணங்களாகவும் அஷ்டதளம், ஷோடசதளம், சதுரச்ரம் இவைகளை முறையே 7, 8, 9வது ஆவரணங்களாகவும் சொல்லப்படும். சதுராச்ரத்தை முதலாவது ஆவரணமாகக் கணக்கிட்டால் பிந்துவானது ஒன்பதாவது ஆவரணமாக ஆகும். இம்மாதிரி வெளியிலிருந்து ஆரம்பித்து பிந்துவில் முடியும்விதமாய் ஆவரணங்களைப்பற்றிப் பின்வருமாறு சொல்லப்படும்.

முதலாவது ஆவரணம்— இதை ச்லோகத்தில் த்ரிரேகா: (மூன்று கோடுகள்) என்று சொல்லப்பட்டது. இதையே பூபுரமென்றும், பூபுரத்ரயமென்றும் சொல்லப்படும். பூபுரங்கள் ஒவ்வொன்றும் நாலு மூலைகளுள்ள (சதுரச்ரமான) சதுஷ்கோணமாகவும் ஒவ்வொரு பக்கத்திலும் வாசற்படியுள்ளவைகளாகவும் (சதுர்த்வா:) இருக்கும். இந்த பூபுரத்ரயத்திற்கு த்ரைலோக்ய மோஹன சக்ரம் என்று பெயர். இந்த மூன்று பூபுரங்களில் கடைசியாக வெளியிலிருக்கும் பூபுரத்தில் அணிமா முதலான அஷ்டஸித்திகளுமிருக்கிறார்கள். ஆகையால்தான் இவர்களுடைய உத்திரவில்லாமல் ஒருவரும் (ஸ்ரீசக்கரத்தின் நடுநாயகமாக இருக்கும்) அம்பாளை தர்சனம்பண்ண முடியாதென்று பின்வரும் 'புராராதே: அந்த:புரமஸி' என்ற 95-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. இரண்டாவது பூபுரத்தில் ப்ராம்ஹீ முதலான அஷ்டமாத்ருகாசக்திகள் இருக்கிறார்கள். மூன்றாவது பூபுரத்தில் ஸர்வஸம்க்ஷோபிணி முதலிய தச முத்ராதேவதைகளிருக்கிறார்கள். பூபுரத்ரயத்திலிருக்கும் சக்திகள் எல்லாரையும் ப்ரகடயோகினிகள் என்று சொல்லப்படும்.

இரண்டாவது ஆவரணம்— இதை ச்லோகத்தில் கலாச்ரம் (பதினாறு தளங்களுடையது) என்று சொல்லப்பட்டது. இதற்கு ஸர்வாசா பரிபூரக சக்ரம் என்று பெயர். இதில் காமாகர்ஷிணி முதலான பதினாறு குப்தயோகினிகள் இருக்கிறார்கள்.

மூன்றாவது ஆவரணம்— இதை ச்லோகத்தில் வஸுதளம் (எட்டு தளம்) என்று சொல்லப்பட்டது. இதற்கு ஸர்வஸம்க்ஷா

பண சக்ரம் என்று பெயர். இந்த வஸுதளத்தை (அஷ்டதிக்கு களையொட்டி) திக்பத்ரம் என்றும் (அஷ்டதிக்கஜங்களையொட்டி) நாகதளம் என்று சொல்லப்படும். இதில் அனங்ககுஸுமா முதலான எட்டு குப்ததரயோகினிகள் இருக்கிறார்கள்.

நாலாவது ஆவரணம்—சதுர்தசாரம் என்றும் (சதுர்தச புவனங்களையொட்டி) புவனாரம் என்றும் சொல்லப்படும். இது முதல் 8-வதுஆவரணம்முடிய சிவசக்தி த்ரிகோணங்களாலாகிய த்ரிகோணங்கள் ரூபமாக இந்த சக்ரங்களிருக்கும். இந்த பதினாலு த்ரிகோணங்களடங்கிய சதுர்தசாரத்திற்கு ஸர்வஸௌபாக்யதாயக சக்ரம் என்று பெயர். இதில் ஸர்வஸம்க்ஷோபிணி முதலான பதினாலு ஸம்ப்ரதாய யோகினிகள் இருக்கிறார்கள்.

ஐந்தாவது ஆவரணம்—பஹிர்தசாரம். (10 த்ரிகோணங்களடங்கிய) தசாரங்கள் இரண்டில் வெளியிலிருப்பது இது. இதற்கு ஸர்வார்த்த ஸாதக சக்ரம் என்று பெயர். இதில் ஸர்வஸித்திப்ரதா முதலான பத்து குலோத்தீர்ண யோகினிகள் இருக்கிறார்கள்.

ஆறாவது ஆவரணம்— அந்தர் தசாரம் (உள்ளேயிருக்கும் தசாரம்). இதற்கு ஸர்வரக்ஷாகர சக்ரம் என்று பெயர். இதில் ஸர்வக்ஞா சக்தி முதலிய பத்து நிகர்பயோகினிகள் இருக்கிறார்கள்.

ஏழாவது ஆவரணம்— அஷ்டாரம் (எட்டு த்ரிகோணங்களையுடையது). இதற்கு ஸர்வரோகஹர சக்ரம் என்று பெயர். இதில் வசினீ முதலான எட்டு வாக்தேவதைகள் இருக்கிறார்கள். இவர்களிருப்பதை 'ஸவித்ரீபிர்வாசாம்' என்ற பதினேழாவது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. இவர்களுக்கு ரஹஸ்ய யோகினிகள் என்று பெயர்.

எட்டாவது ஆவரணம்— த்ரிகோணம். இதற்கு ஸர்வ ஸித்திப்ரத சக்ரம் என்று பெயர். இதில் காமேச்வரீ, வஜ்ரேச்வரீ, பகமாலினீயென்ற மூவர் மூன்று கோணங்களிலும், (மத்தியிலிருக்கும் பிந்துவில் மஹாத்ரிபுரஸுந்தரியும்) இருக்கிறார்கள், இவர்களுக்கு அதிரஹஸ்யயோகினிகள் என்று பெயர். இவர்கள் மூவரும் முறையே அம்பாளுடைய வாக் காம சக்திகளாகிய கூடத்ரயமாகவும் வாமா ஜ்யேஷ்டா ரௌத்ரீ ரூபமாகவும், ரஜஸ் ஸத்வ தமோ

குணப்ரதானைகளாகவும், இச்சா ஞான க்ரியா சக்திகளாகவும் அம்பாளோடு அபின்னமாகவும் இருக்கிறார்கள்.

ஒன்பதாவது ஆவரணமாகச் சொல்லப்படும் பிந்துவை ஸர்வானந்தமய சக்ரம் என்று சொல்லப்படும். இந்த இடத்தில்தான் ஜகன்மாதாவான ஸ்ரீலலிதா மஹாத்ரிபுரஸுந்தரீ ஸதாசிவருடைய மடியில் வீற்றிருந்து இருவரும் இரண்டறக்கலந்து இருபத்தாராவது தத்வமாகிய ஸாதாக்ய தத்வமாக இருந்துகொண்டு ஸகல ஜகத்துக்களுக்கும் ஸகலதேவர்களுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோதான அனுக்ரஹங்களுக்கு காரணபூதர்களாகவும் ஸகலதத்வாதீதர்களாகவும் இருக்கிறார்கள்.

त्वदीयं सौन्दर्यं तुहिनगिरिकन्ये तुलयितुं
कवीन्द्राः कल्पन्ते कथमपि विरिञ्चिप्रभृतयः ।
यदालोकौत्सुक्यादमरललना यान्ति मनसा
तपोभिर्दुष्प्रापामपि गिरिशसायुज्यपदवीम् ॥ १२ ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் துஹினகிரிகன்யே துலயிதும்
கவீந்த்ரா: கல்பந்தே கதமபி விரிஞ்சிப்ரப்ருதய: |
யதாலோகௌத்ஸுக்யாத் அமரலலனா யாந்தி மனஸா
தபோபிர் துஷ்ப்ராபாமபி கிரிச ஸாயுஜ்ய பதவீம் || 12

| | |
|---|---|
| ஹே துஹினகிரிகன்யே! | ஹிமவானுடைய பெண்ணான தாயே! |
| விரிஞ்சி ப்ரப்ருதய: | ப்ரம்ஹாமுதலான |
| கவீந்த்ரா; | கவிச்ரேஷ்டர்கள் |
| த்வதீயம் ஸௌந்தர்யம் துலயிதும் | உன்னுடைய அழகுக்கு ஸமானமான வஸ்துவைக்கண்டுபிடிக்கவேண்டி |
| கதமபி கல்பந்தே | எப்படியெப்படியோ ச்ரமப்படுகிறார்கள் (ஆனால் அவர்களால் முடியவில்லை) |
| யத் | எந்தகாரணத்தால் (அதனால்தான்) |
| அமரலலனா: | தேவஸ்த்ரீகள் |
| ஆலோகௌத்ஸுக்யாத் | அந்த உன்னுடைய ஸௌந்தர்யத்தைப்பார்த்து ஏற்பட்ட ஆசையினாலே |
| தபோபி: | தபஸ்ஸுகளால் |
| துஷ்ப்ராபாம் அபி | அடையக்கூடாததாக இருந்தாலும் |
| கிரிச ஸாயுஜ்யபதவீம் | உன் புருஷனான சிவனுடைய சரீரத்துடன் ஐக்யமாக இருப்பதை |
| மனஸா யாந்தி | மனதினால் அடைகிறார்கள். |

தாயே! அப்ஸரஸ்த்ரீகள்கூட உன்னுடைய ஸௌந்தர்யத்தைப்பார்த்து ஆசைப்பட்டு அதை அனுபவிப்பது பரமசிவனுக்கு மட்டுமே கிடைக்கப்பெறுமாகையால் மஹத்தான தபஸ்ஸுகளால் கிடைப்பதற்கரிய அந்த சிவஸாயுஜ்யபதவியை மனதினால் அடைய விரும்புகிறார்கள். மேலும் அந்த அழகுக்கு ஸமமான அழகுள்ள வஸ்துவைக்கண்டுபிடிக்க ப்ரம்ஹா முதலான கவிச்ரேஷ்டர்களும் எவ்வளவோ முயற்சி செய்கிறார்கள். (ஆயினும் அது வீணாகத்தானிருக்கிறது.)

1. அம்பாளுடைய ஸௌந்தர்யத்தை வர்ணிக்க எப்பேர்ப்பட்ட ச்ரேஷ்டர்களான கவிகளாலும் முடியாதென்றும் அதற்கு ஸமானமான ஸௌந்தர்யமுள்ள வஸ்து யாதொன்றுமில்லையென்றும் சொல்லப்பட்டது.

2. எப்பேர்ப்பட்ட அழகுள்ள ரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலிய அப்ஸரஸ்த்ரீகளும்கூட தங்களுக்கு அம்பாளுடைய ஸௌந்தர்யத்தின் லேசம்கூட இல்லையென்று கண்டவர்களாய், தங்களுடைய லோகப்ரஸித்தமான அழகில் வெறுப்படைந்து அம்பாளுடைய அதிசயிக்கத்தகுந்த ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டு அதை அனுபவிக்க ஆசைப்படுகிறார்களென்றும் அப்படி அதை அனுபவிப்பது பரமசிவனுக்குமட்டுமே உரியதாகையால் அவரோடு (ஸாயுஜ்யம்) ஒன்றாயிருக்கும் தன்மையை அடைய விரும்புகிறார்களென்றும் சொல்லப்பட்டது. அந்த ஸாயுஜ்யமானது மிகுந்த தபஸ்ஸுகள் பண்ணினாலும் கிடைப்பதற்கு அரிதாகையால் அதைத் தங்களுடைய மனதினாலாவது அடைவதற்காக முயற்சிக்கிறார்களென்றும் சொல்லப்பட்டது.

नरं वर्षीयांसं नयनविरसं नर्मसु जडं
तवापाङ्गालोके पतितमनुधावन्ति शतशः ।
गलद्वेणीबन्धाः कुचकलशविस्रस्तसिचया
हठात्त्रुट्यत्काञ्च्यो विगलितदुकूला युवतयः ॥ १३ ॥

நரம் வர்ஷீயாம்ஸம் நயனவிரஸம் நர்மஸு ஜடம்
தவாபாங்காலோகே பதிதம் அனுதாவந்தி சதச: |
களத்வேணீபந்தா: குசகலச விஸ்ரஸ்த ஸிசயா: 13
ஹடாத் த்ருட்யத் காஞ்ச்யோ விகளிததுகூலா யுவதய: ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| வர்ஷீயாம்ஸம் | மிகவும் வ்ருத்தனும் |
| நயனவிரஸம் | பார்க்கப்பிடிக்காதவனும் |
| நர்மஸு ஜடம் | ச்ருங்கார லீலைகளில் ஸாமர்த்யமில்லாதவனும் ஆயினும் |
| தவ அபாங்காலோகே பதிதம் | உன்னுடைய கடாக்ஷத்திற்குள் வந்தவனுமான |
| நரம் | மனிதனை (மன்மதனுக நினைத்து) |
| யுவதய: | யௌவனமுடைய பெண்கள் |
| ச்ரத்வேணிபந்தா: | அவிழ்ந்துபோகும் தலைமுடிச்சை யுடையவர்களாகவும் |
| குசகலச விஸ்ரஸ்த ஸிசயா: | கலசங்கள்போன்ற ஸ்தனங்களிலிருந்து நழுவிய மேலாக்கையுடைவர்களாகவும் |
| ஹடாத் த்ருட்யத் காஞ்ச்ய: | சடாலென்று தெரித்துப்போகும் ஒட்டியாணங்களை யுடையவர்களாகவும் |
| விகளித துகூலா: | நழுவிய வஸ்த்ரங்களையுடையவர்களாகவும் |
| அனுதாவந்தி | பின்தொடர்ந்து ஓடிவருகிறார்கள். |

தாயே! ஒருவன் எவ்வளவு வயதானவனுக இருந்தபோதிலும் பார்ப்பதற்கு விரூபமானவனுகயிருந்தபோதிலும் ரதிகேளிகள் தெரியாதவனுக இருந்தபோதிலும் அவனுக்கு உன்னுடைய கடாக்ஷவிலாஸமானது ஏற்பட்டால் அவனைப்பார்த்த யுவதிகளெல்லாரும் அவனை மன்மதனென்றே நினைத்து மோகமடைந்தவர்களாய் தங்கள் கூந்தல்கள் அவிழவும் மேல்வஸ்த்ரங்கள் நழுவவும் இடுப்பு வஸ்த்ரங்களின் முடிச்சுக்கள் தெறிக்கவும் நூற்றுக்கணக்காக அவனைத்தொடர்ந்து ஓடுகின்றார்கள்.

1. ஒருவன் எவ்வளவு வயதானவனுக இருந்தாலும், குரூபியாக இருந்தாலும், காமலீலைகள் செய்வதே தெரியாதவனுக இருந்தாலும் அவன்மீது அம்பாளுடைய கடாக்ஷமானது பட்டுவிட்டால் அவன் இந்த மூன்று லோகத்திலுள்ள ஸ்த்ரீகள் கண்களிலும் மன்மதன் போன்றவனுகக் காணப்பட்டு அவர்களைத் தன்மீது மோஹம் அடையும்படிச் செய்து அவர்களைக் காமாவஸ்தையினால் கஷ்டப்படும்படியாகச் செய்துவிடுகிறான் என்பதைச் சொல்லப்பட்டது.

2. ஸ்த்ரீகளுக்கு யௌவனமுள்ளவனும், கண்ணுக்கு அழகானவனும், காமலீலைகளில் பாண்டித்யமுமுள்ளவன்பேரில் ஆசை ஏற்படுவது ஸஹஜம். அந்த குணங்களெல்லாம் கொஞ்சம்கூட இல்லாதவனிடத்தில் யுவதிகளாயிருக்கும் பெண்களுக்கு காமாவஸ்த்தை ஏற்படுவதானது அம்பாளுடைய கடாக்ஷலேசத்தின் மஹிமையைக் காட்டுவதாக ஆகிறது.

3. 'களத்வேணீபந்தா:' முதலிய பதங்கள் மன்மதாவஸ்த்தையிலிருக்கும் ஸ்த்ரீகளுடைய நிலைமையை வர்ணிக்கின்றன. இப்படித் தலைமயிர் அவிழ, மேலாக்கு நழுவ, ஒட்யாணம் தெறிக்க, புடவை கீழே விழும்படியாக இருந்தபோதிலும் அவர்கள் அதை கவனிக்காமல் இவனையே பின் தொடர்ந்து ஓடிவருவதாகச் சொல்லப்பட்டது.

4. இந்த ச்லோகமும் பின்னால் வரும் 18, 19, ச்லோகங்களும் மூன்றுவது புருஷார்த்தமான காமம் ஸித்திப்பதற்கு வேண்டிய ப்ரயோகங்களைச் சொல்லுகின்றனவென்று சொல்லப்படும்.

क्षितौ षट्पञ्चाशद्द्विसमधिकपञ्चाशदुदके
हुताशे द्वाषष्टिश्चतुरधिकपञ्चाशदानिले ।
दिवि द्विःषट्त्रिंशन्मनसि च चतुःषष्टिरिति ये
मयूखास्तेषामप्युपरि तव पदाम्बुजयुगम् ॥ १४ ॥

க்ஷிதௌ ஷட்பஞ்சாசத் த்விஸமதிக பஞ்சாசத் உதகே
ஹுதாசே த்வாஷஷ்டி: சதுரதிக பஞ்சாசத் அனிலே |
திவி த்விஷ்ஷட்த்ரிம்சன் மனஸி ச சதுஷ்ஷஷ்டிரிதியே
மயூகாஸ்தேஷாமப்யுபரி தவ பாதாம்புஜயுகம் || 14

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| க்ஷிதௌ | ப்ருதிவீ தத்வத்தையுடைய மூலாதாரத்தில் |
| ஷட்பஞ்சாசத் | ஐம்பத்தாறு கிரணங்களும் |
| உதகே | ஜலதத்வத்தையுடைய மணிபூரத்தில் |
| த்விஸமதிக பஞ்சாசத் | ஐம்பத்திரெண்டு கிரணங்களும் |
| ஹுதாசே | அக்னிதத்வத்தையுடைய ஸ்வாதிஷ்டானத்தில் |
| த்வாஷஷ்டி: | அறுபத்திரெண்டு கிரணங்களும் |
| அனிலே | வாயுதத்வத்தையுடைய அனாஹதத்தில் |

| | |
|---|---|
| சதுராதிக பஞ்சாசத் | ஐம்பத்திஞலு கிரணங்களும் |
| திவி | ஆகாசதத்வத்தையுடைய விசுத்தியில் |
| த்விஷ்ஷட்த்ரிம்சத் | எழுபத்திரெண்டு கிரணங்களும் |
| மனஸி ச | மனஸ்தத்வத்தையுடைய ஆக்ஞாசக்ரத்திலும் |
| சதுஷ்ஷஷ்டி: | அறுபத்திநாலு கிரணங்களும் |
| இதி | இந்தப்ரகாரமாக |
| யே மயூகா: | (உன் பாதங்களிலிருந்து ப்ரகாசிக்கும்) எந்த கிரணங்கள் (இருக்கின்றனவோ) |
| தோஷாம், அபி உபரி | அவைகளுக்கும் மேலாக |
| தவ பாதம்புஜயுகம் | உன்னுடைய பாதபத்மங்களிரண்டும் (இருக்கின்றன.) |

தாயே! உன்னுடைய பதாம்புஜயுகமானது பூமி, தேஜஸ், வாயு, ஆகாச, மனஸ் தத்வாத்மகங்களான மூலாதாரம் முதலிய ஷட்சக்ரங்களிலிருக்கும் கிரணங்களை அதிசயித்த காந்தியை உடையதாய் அந்த ஷட்சக்ரங்களுக்குப் மேல்பட்ட இடமாகிய ஸ்ஹஸ்ரார கமலத்தில் அம்ருத ஸமுத்ரமென்று சொல்லப்படுவதும் சந்த்ரமண்டலம் போன்றதுமான பிந்துஸ்தானத்திலிருந்து கொண்டு விளங்குகிறது,

1. 'உபரி' என்றது ஸஹஸ்ரதளகமலத்தின் மத்தியிலிருக்கும்படியானதும் சந்த்ரபிம்பாத்மகமானதும் பிந்து என்று சொல்லப்படுவதுமான ஸுதாஸாகரத்தைக் குறித்தது.

2. இதில் ச்ருதிவாக்யமான 'தமேவ பாந்தம் அனுபாதி ஸர்வம், தஸ்யபாஸா ஸர்வமிதம் விபாதி' என்பதற்கு விரிவாக வ்யாக்கானம் செய்தாற் போலிருக்கிறது.

3. ஷட் சக்ரங்களும் அடியிலிருந்து அக்னி, ஸூர்ய, ஸோமகண்டங்களாகப் பிரித்திருப்பதையும் அந்தந்த கண்டத்திற்கு முடிவில் ப்ரம்ஹ, விஷ்ணு, ஸோமக்ரந்திகளிருப்பதையும் எற்கனவே சொல்லப்பட்டது. முதலாக மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் இவைகளாகிற அக்னிகண்டத்தை அதின்மேலாக ப்ரம்ஹக்ரந்தியிலிருக்கும் அக்னியானது தன்னுடைய ஜ்வாலைகளால் ப்ரகாசிக்கும்படி செய்கிறது. இரண்டாவதாக மணிபூரம், அனுஹதம் இவைகளாகிய ஸூர்யகண்டத்தை அதின்மேலாக விஷ்ணுக்ரந்தியிலிருக்கும் ஸூர்யனுனது தன்னுடைய கிரணங்களால் ப்ராகாசிக்கும்படி

செய்கிறது. மூன்றாவதாகிய விசுத்தி, அக்ஞா சக்ரங்களாகிய சந்த்ர கண்டத்தை அதின்மேலாக ருத்ரக்ரந்தியிலிருக்கும் சந்த்ரனானது தன்னுடைய கிரணங்களால் ப்ரகாசிக்கும்படி செய்கிறது. இந்த கிரணங்களானவை இம் மூன்றுகண்டங்களிலும் கலந்து ப்ரகாசிக்கின்றவென்றும் ஆயினும் அவைகள் ஸோமகண்டத்திற்கு அப்பாலுள்ள ஸஹஸ்ரகமலத்திற்குப் போகும்படியான சக்தியுள்ளவையல்லவென்றும் அந்த ஸஹஸ்ரகமலத்திலிருக்கும் நித்யபூர்ணமான சந்த்ரமண்டலத்திலிருந்து பெருகும் கிரணங்களால்தான் சந்த்ர, ஸூர்ய, அக்னி கண்டங்களுக்கு ப்ரகாசம் ஏற்படுகிறதென்றும் சொல்லப்படும்.

4. இந்த கிரணங்களெல்லாம் அம்பாளுடைய பதாரவிந்தத்திலிருந்து ப்ரகாசிக்கும் கிரணங்களுடைய அம்சங்களென்றும் இவைகளுக்கு மேலாக அம்பாளுடைய பாதகாந்தியின் கிரணங்கள் ப்ரகாசிக்கிறதாகவும் இந்தச்லோகத்தில் சொல்லப்பட்டது.

5. இவற்றில் அக்னியின் கிரணங்கள் நூற்றெட்டில் ஆதார சக்ரத்தில் ஐம்பத்தாறும் மணிபூரத்தில் ஐம்பத்திரெண்டும் ப்ரகாசிக்கின்றன. ஸூர்யனுடைய கிரணங்கள் நூற்றுப்பதினாறில் ஸ்வாதிஷ்டானத்தில் அறுபத்திரெண்டு கிரணங்களும் அனாஹதத்தில் ஐம்பத்திநாலு கிரணங்களும் ப்ரகாசிக்கின்றன. சந்த்ரனுடைய கிரணங்கள் நூற்றுமுப்பத்தாறில் விசுத்தியில் எழுபத்திரெண்டும் ஆக்ஞாசக்ரத்தில் அறுபத்துநாலும் ப்ரகாசிக்கின்றன. ஸூர்யனுக்கும் அக்னிக்கும் பேதமில்லையாதலால் அக்னிகண்டத்திலடங்கிய ஸ்வாதிஷ்டானத்தில் ஸூர்யனுடைய கிரணங்களும் அதற்கடுத்தாற்போல் இருப்பதும் ஸூர்யகண்டத்திலடங்கியதுமான மணிபூரத்தில் அக்னியினுடைய கிரணங்களும் ப்ரகாசிப்பது சொல்லப்பட்டது. இப்படி அக்னிக்கு நூற்றியெட்டும் ஸூர்யனுக்கு நூற்றுப்பதினாறும் சந்த்ரனுக்கு நூற்றுமுப்பத்தாறும் கிரணங்களிருப்பது பைரவயாமளத்தில் சொல்லப்பட்டிருக்கிறது—

அஷ்டோத்தர சதம் வன்ஹே: ஷோடசோத்தரகம் ரவே: |
ஷட்த்ரிம்சதுத்தரசதம் சந்த்ரஸ்ய ச விநிர்ணய: ||

ஆகமொத்தம் முன்னூற்றறுபது கலைகளாகின்றன.

6. இம்மாதிரி அக்னி, ஸூர்ய, சந்த்ரர்கள் பிண்டாண்டத்திலிருப்பது போலவே ப்ரம்ஹாண்டத்தையும் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

7. இப்படி ஸோம ஸூர்ய அனலர்களால் சூழப்பட்ட பிண்டாண்டத்திற்கு உச்சியில் ஸஹஸ்ரகமலம் இருக்கிறது. அது ஜ்யோத்ஸ்ந (நிலா) மயமான உலகம். அங்கிருக்கும் சந்த்ரமண்டலமானது நித்யம் பூர்ணமான கலைகளையுடையது. அதிலிருக்கும் சந்த்ரமண்டலத்திற்கும் பதினாறு கலைகளிருந்தபோதிலும் அவைகள் ஷோடசநித்யாத்மகமாக இருப்பதாலும் அப்படிப்பட்ட நித்யாரூபங்களான சந்த்ரகலைகள் எப்போதுமே இருந்துகொண்டு தங்களுடைய மறைவதாலும் புலப்படுவதாலும் சுக்லபக்ஷத்து ப்ரதமை முதல் பௌர்ணமிவரையிலும் அதேமாதிரி க்ருஷ்ணபக்ஷத்து ப்ரதமைமுதல் அமாவாஸ்யை வரையிலும் உள்ள திதிகளை உண்டுபண்ணுவதாலும் அந்த சந்த்ரமண்டலத்தின் கலைகளுக்கு வ்ருத்தி, க்ஷயம் இவையிரண்டும் கிடையாதென்று சொல்லப்பட்டது.

8. மேலே சொல்லியபடி ப்ரம்ஹாண்டத்தில் அக்னி ஸூர்ய, சந்த்ரர்கள் ப்ரகாசிப்பதில் பகலில் ஸூர்யனும், இரவில் சந்த்ரனும், இரண்டு ஸந்த்யாகாலங்களில் அக்னியும் ப்ரகாசிக்கிறார்கள். ஆகையால்தான் இவர்கள் மூவரும் காலாத்மகமாக இருக்கிறார்கள்.

9. சந்த்ரகலாவித்யை என்ற பெயருடைய ஸ்ரீ வித்யையானது பஞ்சதசீதிதிகள் ரூபமாக இருப்பதால் மேலே சொல்லியபடி அக்னி, ஸூர்ய, சந்த்ர கிரணங்கள் மொத்தம் முன்னூற்றறுபதும், அவ்வளவு நாள்களாக ஆகின்றன. அது ஒரு வருஷம். இம்மாதிரி காலசக்த்யாத்மகமாகிய ஸம்வத்ஸரமானது ஜகத் ஸ்ருஷ்டிகர்தாவாகிய ப்ரஜாபதியின் ரூபமாக இருக்கிறது. கிரணங்களும் ஜகத்தினுடைய உத்பத்தி, ஸ்திதி, லயங்களைச் செய்கிறவையாக ஆகின்றன. இந்த கிரணங்கள் இந்த பிண்டாண்டத்திலும் ப்ரம்ஹாண்டத்திலும் 360 இருக்கின்றன. இம்மாதிரி கோடிக்கணக்காக இருக்கும் இதர பிண்டாண்டங்களிலும், ப்ரம்ஹாண்டங்களிலும், ஒவ்வொன்றிலும் 360 கிரணங்களிருக்கின்றன. ஆகவே கிரணங்களின் கணக்கானது எண்ணமுடியாததாகின்றது. இந்த கிரணங்

களெல்லாம் அக்னி, ஸூர்ய, சந்த்ரர்களோடு கூடினவைகளாய் அம்பாளுடைய பாதாரவிந்தங்களிலிருந்து உத்பத்தியாகி அந்தந்த லோகங்களை ப்ரகாசிக்கும்படி செய்கின்றன.

10. இதனால் ஏற்படுவது என்னவென்றால் அக்னி, ஸூர்ய, சந்த்ரர்கள் அம்பாளுடைய பாதாரவிந்தத்திலிருந்து உண்டாகும் அநந்தகோடி கிரணங்களில் சிலவற்றைத் தாங்கள் கிடைக்கப் பெற்று அம்பாளுடைய க்ருபாகடாக்ஷத்தினால் ஜகத்தைப்ரகாசிக்க செய்யும் ஸாமர்த்யத்தையடைந்தவர்களாய் லோகங்களில் ப்ரகாசிக்கிறார்கள். இவர்களுடைய கிரணங்களின் மூலஸ்தானமாகிய அம்பாளுடைய சரணாம்புஜமானது ஸகலலோகங்களுக்கும் அப்பாலிருக்கும்படியான சந்த்ரகளாசக்ரமென்கிற பிந்துஸ்தானத்திலிருக்கிறதென்று சொல்லப்பட்டது. இதைத்தான் 'தேஷாமப்யுபரி' என்று இங்கே சொன்னது.

11. மேலே சொல்லியவைகளைப்பற்றி பைரவயாமளத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது:—

'களாவித்யா பராசக்தி: ஸ்ரீ சக்ராகார ரூபிணீ |
தன்மத்யே பைந்தவஸ்தானம் தத்ராஸ்தே பரமேச்வரீ ||
ஸதாசிவேன ஸம்ப்ருக்தா ஸர்வ தத்வாதிகா ஸதீ |
சக்ரம் த்ரிபுர ஸுந்தர்யா: ப்ரம்ஹாண்டாகாரம் ஈச்வரீ ||
பஞ்சபூதாத்மகம் சைவ தன்மாத்ராத்மகமேவ ச |
இந்த்ரியாத்மகமேவம் ச மனஸ்தத்வாத்மகம் ததா ||
மாயாதி தத்வரூபம் ச தத்வாதீதம் ச பைந்தவம் |
பைந்தவே ஜகதுத்பத்திஸ்திதி ஸம்ஹாரகாரிணீ ||
ஸதாசிவேன ஸம்ப்ருக்தா தத்வாதீதா மஹேச்வரீ |
ஜ்யோதி ரூபா பராகாரா யஸ்யா தேஹோத்பவா: சிவே ||
கிரணாச்ச ஸஹஸ்ரம் ச த்விஸஹஸ்ரம் ச லக்ஷகம் |
கோடிரர்புதமேதேஷாம் பராஸம்க்யா ந வித்யதே ||
தாமேவ அனுப்ரவிச்யைவ பாதி லோகம் சராசரம் |
யஸ்யா தேவ்யா மஹேசானி பாஸா ஸர்வம் விபாஸதே ||
தத்பாஸா ரஹிதம் கிஞ்சித் ந ச யத் ச ப்ரகாசதே—
.... .... .... ....
தேஷாம் அநந்தகோடீனாம் மயூகானாம் மஹேச்வரி ||

மத்யே ஷஷ்ட்யுத்தரம் தேஜோ த்ரிசதம் கிரணா: சிவே |
ப்ரம்ஹாண்டம் வ்யச்னுவானஸ்தே ஸோமஸூர்யான
லாத்மனா ||
அக்னே: அஷ்டோத்தர சதம் ஷோடசோத்தரகம் ரவே: |
ஷட்த்ரிம்சதுத்தரசதம் சந்த்ரஸ்ய கிரணா: சிவே ||
ப்ரம்ஹாண்டம் பாஸயந்தஸ்தே பிண்டாண்டமபி சாங்கரி ||
திவா ஸூர்யஸ்ததா ராத்ரௌ ஸோமோ வன்ஹிச்ச
ஸந்த்யயோ: ||
ப்ரகாசயந்த: காலாம்ஸ்தே தஸ்மாத் காலாத்மகாஸ் த்ரய: |
ஷஷ்ட்யுத்தரம் ச த்ரிசதம் தினான்யேவ ச ஹாயனம் ||
ஹாயனாத்மா மஹாதேவ: ப்ராஜாபதிரிதி ச்ருதி: |
ப்ராஜாபதிர்லோக கர்த்தா மரீசிப்ரமுகான் முனீன் ||
ஸ்ருஜத்யேதே லோக பாலான் தே ஸர்வே லோகரக்ஷகா: |
ஸம்ஹாரச்ச ஹராயத்த: உத்பத்திர் பவநிர்மிதா ||
ரக்ஷா து ம்ருடஸம்லக்னா ஸ்ருஷ்டிஸ்திதிலயே சிவ: |
நியுக்த: பரமேசான்யா ஜகதேவம் ப்ரவர்த்ததே ||

12. இன்னொருவிதமாகச் சொல்வது எப்படியென்றால், மயூகமென்பது இரவு பகலாகிய ஒரு நாள். மேலே ச்லோகத்தில் சொல்லியபடி ஷட்சக்ரங்களிலிருக்கும் மயூகங்களெல்லாம் சேர்த்தால் வரும் 360 மயூகங்களும் ஷட்ருதுக்களிலடங்கிய 360 நாட்கள். அம்பாளுடைய பாதாம்புஜயுகமானது அவைகளுக்கெல்லாம் மேற்பட்டு (காலத்திற்கு அகோசரமாக) இருக்கிறது. அவையிரண்டும் நாதபிந்துக்களாகவும் ப்ரம்ஹமும் பரப்ரம்ஹமுமாக இருக்கின்றன. ஒவ்வொரு சக்ரமும் ஒவ்வோர் ருதுவாக இருக்கிறது. வஸந்தருது 56 நாள். க்ரீஷ்மருது 52 நாள். இம்மாதிரியே பாக்கி ருதுக்கள்.

शरज्ज्योत्स्नाशुद्धां शशियुतजटाजूटमकुटां
वरत्रासत्राणस्फटिकघुटिका पुस्तककराम् ।
सकृन्न त्वा नत्वा कथमिव सतां संनिदधते
मधुक्षीरद्राक्षामधुरिमधुरीणाः फणितयः ॥ १५ ॥

சரஜ் ஜ்யோத்ஸ்னு சுத்தாம் சசியுதஜடாஜூடமகுடாம்
வரத்ராஸ த்ராண ஸ்படிககுடிகா புஸ்தககராம் |
ஸக்ருன்னத்வா நத்வா கதமிவ ஸதாம் ஸம்னிததே
மதுக்ஷீர த்ராக்ஷா மதுரிமதுரீணு: பணிதய: || 15

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| சரத் ஜ்யோத்ஸ்னு சுத்தாம் | சரத்காலத்து சந்த்ரனுடைய நிலாவைப்போல் நிர்மலமான ரூபமுடையவளும் |
| சசியுத ஜடாஜூட மகுடாம் | சந்த்ரனை தரித்த கேசகலாபம், மகுடம் இவைகளையுடையவளும் |
| வர த்ராஸத்ராண ஸ்படிக குடிகா புஸ்தக கராம் | வரதமுத்ரை, அபயமுத்ரை, ஸ்படிகமாலை, புஸ்தகம் இவைகளைக்கொண்ட கைகளுடையவளுமான |
| த்வா | உன்னை |
| ஸக்ருத் நத்வா | (ஒருவன்) ஒரு தடவையாவது நமஸ்கரித்தானேயானல் (அவனுக்கு) |
| ஸதாம் | கவீச்வரர்களுடைய |
| மதுக்ஷீரத்ராக்ஷா மதுரிம துரீணு: | தேன், பால், த்ராக்ஷை இவைகளுக்கு ஸமானமான மாதுர்யத்தையுடைய |
| பணிதய: | வாக்குக்கள் |
| கதமிவ | எப்படித்தான் |
| ந ஸன்னிததே | தோன்ருமலிருக்கும் |

தாயே! சரத்காலத்திய நிலவைப்போல் வெண்மையான ரூபமுடையவளும் சந்த்ரனை தரித்த கேசகலாப மகுடங்களையுடையவளும் வராபய முத்ரைகள், ஸ்படிகமாலை, புஸ்தகம் இவைகளைக் கைகளில் தரித்தவளுமாக உன்னை த்யானித்து ஒரு தடவையாவது ஒருவன் நமஸ்காரம் பண்ணுவானேயாகில் அவனுக்கு தேன், பால் த்ராக்ஷை இவைகளைவிட மதுரமான வாக்கானது தங்குதடையில்லாமல் பெருகும் என்பது நிச்சயம்.

1. இதில் அம்பாளை வணங்கியவர்களுக்கு ஸரஸ்வதீ விலாஸம் ஏற்படுவதைச் சொல்லப்பட்டது.

2. 'ஸ்படிக கடிகா' என்ற பாடாந்தரத்தில் ஸ்படிகத்தாலான பானபாத்ரம் என்று அர்த்தம். 'ஸ்படிக குணிகா' என்ற பாடாந்தரத்தில் ஸ்படிகமாலையென்று அர்த்தம். 'புஸ்தகம்' என்பது வித்யாமுத்ரையையும் குறிக்கும்.

कवीन्द्राणां चेतः कमलवनबालातपरुचिं
भजन्ते ये सन्तः कतिचिदरुणामेव भवतीम् ।
विरिञ्चिप्रेयस्यास्तरुणतरशृङ्गारलहरी-
गभीराभिर्वाग्भिर्विदधति सतां रञ्जनममी ॥ १६ ॥

கவீந்த்ராணும் சேத: கமலவன பாலாதபருசிம்
பஜந்தே யே ஸந்த: கதிசித் அருணுமேவ பவதீம் |
விரிஞ்சி ப்ரேயஸ்யா: தருணதர ச்ருங்கார லஹரீ
கபீராபிர்வாக்பி: விதததி ஸதாம் ரஞ்ஜனம் அமீ || 16

| | |
|---|---|
| ஹே ப்கவதி! | தாயே! |
| கவீந்த்ராணும் | கவீச்வரர்களுடைய |
| சேத: கமலவன பாலாதபருசிம் | மனதுகளாகிய தாமரஸ புஷ்பங்களின் கூட்டத்திற்கு பாலஸூர்யனைப் போல ப்ரகாசிக்கின்றவளும் (அவைகளை மலரச்செய்கின்றவளும்) |
| அருணும் ஏவ | சிகப்பு நிறமுள்ளவளுமாக |
| பவதீம் | உன்னை |
| யே கதிசித் ஸந்த: | எந்த சில ஸாதுக்கள் |
| பஜந்தே | ஸேவிக்கிறார்களோ |
| அமீ | இந்த ஸாதுக்கள் |
| விரிஞ்சி ப்ரேயஸ்யா: | ப்ரம்ஹ பத்னியான ஸரஸ்வதியினுடையதும் |
| தருணதர ச்ருங்கார லஹரீ கபீராபி: | அதிகமான பலத்தை (பெருக்கை) யுடைய ச்ருங்கார ரஸத்தின் ப்ரவாஹம்போல் கம்பீரமானதுமான |
| வாக்பி: | வாக்குகளால் |
| ஸதாம் ரஞ்ஜனம் | கேட்பவர்களான ஸத்துக்களுக்கு ஸந்தோஷத்தை (ஆஹ்லாதத்தை) |
| விதததி | செய்கிறார்கள். |

தாயே! தாமரைப்புஷ்பங்களை மலரச்செய்யும் இளஞ்சூர்யனைப்போல் கவிகளுடைய மனதாகிற தாமரைப்புஷ்பங்களை மலரச்செய்வதும், இளஞ்சூர்யனைப்போல் சிகப்பு நிறமுடையதுமான உன்னுடைய ரூபத்தை த்யானிக்கும் புண்யவான்கள் ஸரஸ்வதி விலாஸத்தினல் ஏற்பட்டதும், ச்ருங்காரரஸ பூரிதமுமான தங்களுடைய வாக்குகளினல் ஸாதுக்களுடைய மனதிற்கு ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறார்கள்.

1. இதுவும் ஸாரஸ்வதப்ரயோகத்தைச் சொல்லுகிறது. 'அருணும்' என்பதினல் அருண என்று பெயரையுடைய அம்பாளுடைய ரூபவிசேஷத்தைச் சொன்னதாகவும் சொல்லலாம்.

2. பாலஸூர்யன் அருணவர்ணமாக இருக்குமாகையால் அதை இங்கு சொல்லப்பட்டது.

3. ஹ்ருதயகமலத்தில் அம்பாளை சிகப்பு நிறமாகவும் ஏற்கனவே இருக்கும் பாசாங்குச தனுர்பாணங்களுடன் வரதாபய புஸ்தகாக்ஷ மாலைகளோடுகூடிய நான்கு கரங்களுடன் (ஆக எட்டு கரங்களுடன்) த்யானம் செய்பவர்கள் புருஷரூபத்தையடைந்த ஸாரஸ்வதீபோல் ச்ருங்காரத்தை ப்ரதானமாக உடைய வாக்விலாஸத்தினுல் எந்த ஸபையிலும் விளங்குவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாள் ப்ராம்ஹீ முதலான மாத்ருகாரூபிணியாக இருப்பதால் ஸரஸ்வதீரூபத்துடனேயே வாக்சக்தியைக் கொடுக்கிருள் என்றும் ஏற்படுகிறது. சிகப்பு வர்ணத்தோடு கூடியவளாக த்யானம் செய்யப்படுவதால் வாக்குகளில் ச்ருங்காரரஸமே ப்ரதானமாக இருப்பதாகச் சொல்லப்பட்டது. (ச்ருங்காரரஸம் சிகப்பு நிறமாக இருப்பதாகச் சொல்வது ஸம்ப்ரதாயம்) இதைப்பற்றி வாமகேச்வர தந்த்ரத்தில் சொல்லியிருப்பது:—

'அருணுக்யாம் பகவதீம் அருணபாம் விசிந்தயேத் |
பாசாங்குசதராம் தேவீம் தனுர்பாணதராம் சிவாம் ||
வரதாபயஹஸ்தாம் ச புஸ்தகாக்ஷஸ்ரகன்விதாம் |
அஷ்டபாஹும் த்ரிநயனும் கேலந்தீம் அம்ருதாம்புதௌ ||
ஸ கரோத்யேவ ச்ருங்கார ரஸாஸ்வாதன லம்படான் |
ஸபாஸதஸ்ஸதா ஸர்வான் ஸாதகேந்த்ரஸ்ஸபாஸ்தலே ||

4 'ஸபாரஞ்ஜனமமீ' என்ற பாடாந்தரத்தில் ஸபைகளை ரஞ்ஜனம் செய்கின்றவையென்று அர்த்தம்.

सवित्रीभिर्वाचां शशिमणिशिलाभङ्गरुचिभि-
र्वशिन्याद्याभिस्त्वां सह जननि संचिन्तयति यः ।
स कर्ता काव्यानां भवति महतां भङ्गिरुचिभि-
र्वचोभिर्वाग्देवीवदनकमलामोदमधुरैः ॥ १७ ॥

ஸவித்ரீபிர்வாசாம் சசிமணி சிலா பங்கருசிபி:
வசின்யாத்யாபிஸ்த்வாம் ஸஹ ஜனனி ஸஞ்சிதயதி ய: |
ஸ கர்தா காவ்யாநாம் பவதி மஹதாம் பங்கிருசிபி:
வசோபிர் வாக்தேவீ வதன கமலாமோத மதுரை: ‖ 17

| | |
|---|---|
| ஹே ஜனனி! | தாயே! |
| வாசாம் ஸவித்ரீபி: | வாக்குக்களை உண்டுபண்ணுகின்றவர்களும் |
| சசிமணிசிலா பங்கருசிபி: | சந்த்ரகாந்தக் கல்லுகளின் துண்டுகள் போல் காந்தியுள்ளவர்களுமான |
| வசின்யாபி: ஸஹ | வசினீ முதலான வாக்தேவதைகளுடன் கூடியிருப்பவளாக |
| த்வாம் | உன்னை |
| ய: | எவன் |
| ஸஞ்சிந்தயதி | நன்றாக த்யானம்பண்ணுகிறானோ |
| ஸ: | அவன் |
| மஹதாம் பங்கிருசிபி: | (வால்மீகி முதலிய) மஹாகவிகளுடைய கவனங்களைப் போன்ற அழகுடையவையும் |
| வாக்தேவீ வதன கமலாமோத மதுரை: | ஸரஸ்வதீதேவியினுடைய முககமலத்தின் பரிமளம் போன்ற வாசனையுடையதுகளுமான |
| வசோபி; | ஸுபாஷிதங்களால் (செய்யப்பட்ட) |
| காவ்யாநாம் | ப்ரபந்தங்களுக்கு |
| கர்த்தா பவதி | கர்த்தாவாக ஆகிறான். |

தாயே! சந்த்ரகாந்தக் கல்கள்போல் வெண்மை நிறமுடைய வாக்தேவதைகளான வசின்யாதி தேவதைகளால் சூழப்பட்டவளாக உன்னை த்யானிப்பவன் மஹாகவிகளின் வாக்குகளைப்போல் மதுரமானதும் ஸரஸ்வதீதேவியின் முககமலம்போன்ற பரிமளமுள்ளதுமான வாக்விலாஸத்தையுடையவனாய் மஹாகாவ்யங்கள் இயற்றும் சக்தியுள்ளவனாக ஆகிறான்.

1. இதிலும் ஸாரஸ்வத ப்ரயோகத்தைச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. சந்த்ரகாந்தக் கல்லானது மிகவும் வெளுப்பென்பது ப்ரஸித்தம்.

3. 'வசின்யாத்யா:' என்பதினால் வசினீ, காமேச்வரீ, மோதினீ, விமலா, அருணா, ஜயினீ, ஸர்வேச்வரீ, கௌலினீ, என்ற

வசின்யஷ்டகத்தையும் வித்யாயோகினீ, ரேசிகாயோகினீ, மோசிகா யோகினீ, அம்ருதயோகினீ, தீபிகாயோகினீ, ஞானயோகினீ, ஆப்யாயனீ யோகினீ, வ்யாபினீயோகினீ, மேதாயோகினீ, வ்யோமரூபாயோகினீ, ஸித்தரூபாயோகினீ, லக்ஷ்மீயோகினீ, ஆகிய யோகினீத்வாதசகத்தையும், கந்தாகர்ஷிணீ, ரஸாகர்ஷிணீ, ரூபாகர்ஷிணீ, ஸ்பர்சாகர்ஷிணீ, இன்னல்வரையும் சேர்த்துச்சொல்லப் பட்டது.

4. 'த்வாம்' என்பதினல் அம்பாளுடைய பஞ்சாசத் (50) வர்ணத்மகமான மாத்ருகாரூபத்தைச் சொல்லப்பட்டது. இந்த பஞ்சாசத் வர்ணங்களும் அஷ்டவர்காத்மகமாக இருக்கின்றன. அவைகள் அ, க, ச, ட, த, ப, ய, ச என்ற எழுத்துக்களை முதலாக உடைய பிரிவுகள். அ முதலான ஷோடச ஸ்வரங்கள் (உயிரெழுத்துக்கள்) ப்ரதமவர்க்கம். க முதலிய ஐந்து இரண்டாவது. ச முதலிய ஐந்து மூன்ருவது. ட முதலிய ஐந்து நான்காவது. த முதலிய ஐந்து ஐந்தாவது. ப முதலிய ஐந்து ஆருவது. ய முதலிய நான்கு ஏழாவது. ச முதலிய ஐந்து எட்டாவது. இம்மாதிரி அஷ்டவர்காத்மக மாத்ருகாரூபமான த்ரிபுரஸுந்தரியை அந்தஅ,க, ச, ட, த, ப, ய, ச, வர்க்கங்களில் க்ரமப்படி வசின்யாதி அஷ்ட சக்திகளைச் சேர்த்து அவைகளை ஸ்ரீ சக்ரத்திலிருக்கும் பிந்து த்ரிகோணத்மகமான சிவசக்ரங்கள் நாலு, வஸுகோணம், தசாரத்வயம், சதுர்தசாரம் ஆக இவை எட்டு சக்ரங்களிலும் சேர்த்து அம்பாளை த்யானம் செய்தால் மஹாகாவ்யங்களைக்கூடச் செய்யும் ஸாமர்த்யம் ஏற்பட்டுவிடுமென்று சொல்லப்பட்டது. இதைத்தான் பின்வருமாறு சொல்லப்பட்டது.

'மாத்ருகாம் வசினீயுக்தாம் யோகினீபிஸ்ஸமன்விதாம் |
கந்தாத்யாகர்ஷிணீ யுக்தாம் ஸம்ஸ்மரேத் த்ரிபுராம்பிகாம் ||

5. வசின்யஷ்டகம், யோகினீத்வாதசம் இவைசேர்ந்தால் இருபது கலைகள் ஏற்படுகின்றன. இவ்விருபது கலைகளையும் சுத்தஸ்படிகஸமான வர்ணமுடையவைகளாய் தசாரத்யவத்தின் கோணங்களிலிருப்பதாக சிந்தனை செய்யவேண்டும். கந்தாகர்ஷிணீ முதலிய நாலையும் நான்கு த்வாரங்களிலுமிருப்பதாக பாவனை செய்ய வேண்டும்.

'மாத்ருகாம் வசினீயுக்தாம் யோகினீபிஸ்ஸமன்விதாம் |
கந்தாத்யாகர்ஷிணீயுக்தாம் ஸம்ஸ்மரேத் த்ரிபுராம்பிகாம் || '

இதைத்தான் பூப்ரஸ்தாரம் என்றுசொல்லப்படும். இம்மாதிரி பாவனை செய்வதைத்தான்

'கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம் |
ஈச்வரீம் ஸர்வபூதானாம் தாமிஹோபஹ்வயே ச்ரியம் || '

என்று ச்ருதியில் சொல்லப்பட்டது.

6. பஞ்சாசத் வர்ணங்களில் ஒவ்வொன்றினுடைய சக்தியின் ரூபம், வர்ணம் முதலிய விபரங்கள் ஸனத்குமார ஸம்ஹிதையில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

तनुच्छायाभिस्ते तरुणतरणिश्रीसरणिभि-
र्दिवं सर्वामुर्वीमरुणिमनि मग्नां स्मरति यः ।
भवन्त्यस्य त्रस्यद्वनहरिणशालीननयनाः
सहोर्वश्यावश्याः कतिकति न गीर्वाणगणिकाः ॥ १८ ॥

தனுச்சாயாபிஸ்தே தருணதரணி ஸ்ரீ ஸரணிபி:
திவம் ஸர்வாம் உர்வீம் அருணிமனி மக்னாம் ஸ்மரதி ய: |
பவந்த்யஸ்ய த்ரஸ்யத் வனஹரிண சாலீன நயனா:
ஸஹோர்வச்யா வச்யா: கதிகதி ந கீர்வாணகணிகா: || 18

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| தருண தரணி ஸ்ரீ ஸரணிபி: | பாலஸூர்யனுடைய சோபையைப்போன்ற சோபையையுடைய |
| தே | உன்னுடைய |
| தனுச்சாயாபி: | தேஹ காந்திகளால் |
| ஸர்வாம் திவம் உர்வீம்ச | ஆகாசம், பூமி இவைமுழுவதையும் |
| அருணிமனி | சிகப்புவர்ணத்தில் |
| மக்னாம் | முழுகினதாக |
| ய: ஸ்மரதி | எவன் த்யானிக்கிறானோ |
| அஸ்ய | அவனுக்கு |
| த்ரஸ்யத் வனஹரிண சாலீன நயனா: | பயந்த காட்டுமானின் கண்களைப்போல் அழகான கண்களையுடைய |
| கீர்வாணகணிகா: | அப்ஸரஸ்த்ரீகள் |

ஸார்வ்ச்யாஸஹ ஸார்வசியும் உள்பட
கதிகதி எத்தினையெத்தினை பேர்தான்
வ்ச்யா: கபவந்தி வசப்பட்டவர்களாக ஆகமாட்டார்கள்.

தாயே! பாலஸூர்யனுடைய கிரணங்கள் போன்ற உன் சரீரகாந்தியினால் பூமி, ஆகாசம் முழுவதும் சிகப்பு நிறத்தில் மூழ்கியிருப்பதாக எவன் த்யானிக்கிறானோ (அதாவது பூமி, ஆகாசம் முழுவதையும் ஒரே சிகப்பாகச் செய்வதும் பாலஸூர்யனைப்போன்றதுமான அருணரூபத்தோடு கூடியவளாக உன்னை எவன் த்யானிக்கிறானோ) அவனிடத்தில் வசப்பட்டவர்களாக, பயந்த மான்போன்ற கண்களையுடையவர்களும் ஸார்வசீ முதலானவர்களுமான அப்ஸர ஸ்திரீகள் எத்தினை யெத்தினை பேர்தான் இல்லை ?

1. அழகுக்கு இருப்பிடமாகிய அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடைய நிலைமையே இப்படி இருக்கும்போது பூமியிலுள்ள ஸ்த்ரீகளைப் பற்றி அதிகமாகச் சொல்லவேண்டியதில்லையென்று இதினால் ஏற்படுகிறது.

2. உத்தம ஸ்த்ரீகளுடைய நயனங்களை பெண்மானுடைய கண்களுக்கு ஸமானமாக வர்ணிப்பது வழக்கம். காட்டிலிருக்கும் மானனது ஸ்வச்சந்தமாகவும் பயஹேதுவில்லாமலும் திரியுமாதலால் அது மிகவும் பயமடையக்கூடிய ஸ்வபாவமுள்ளது. அது பயமடைந்தால் கண்களை மிகவும் மிரண்டு விழிக்கும் தன்மையுடையது. அப்போது அந்தக் கண்களிலிருக்கும் அழகுபோன்ற அழகுடைய கண்களோடு அப்ஸரஸ்த்ரீகள் இருப்பதாக வர்ணிக்கப்பட்டது. மேலும் அவர்கள் தேவஸ்த்ரீகளானபடியால் தங்கள் கண்களைக் கொட்டாமல் அம்பாளையே ஆசையோடு பார்த்துக்கொண்டிருப்பதையும் சொல்லப்பட்டது.

3. இதையே பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:—

யாவகாப்தௌ நிமக்னும் யோ திவம் பூமிம் விசிந்தயேத் |
தஸ்ய ஸர்வா வசம் யாதா: த்ரைலோக்ய வனிதா த்ருதம் || '

'யாவகாப்தி:' என்பது கோதுமை, காராமணி இவைபோல சிகப்பு நிறமாகிய ஸமுத்ரம். செம்பஞ்சுக்குழம்பையும் யாவகாஸமென்று சொல்லப்படும். அதாவது ஒரே சிகப்பாகிய ஸமுத்ரம் என்று அர்த்தம்.

मुखं विन्दुं कृत्वा कुचयुगमधस्तस्य तदधो
हरार्धं ध्यायेद्यो हरमहिषि ते मन्मथकलाम् ।
स सद्यः संक्षोभं नयति वनिता इत्यतिलघु
त्रिलोकीमप्याशु भ्रमयति रवीन्दुस्तनयुगाम् ॥ १९ ॥

முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ்த்ஸ்ய தததோ
ஹரார்தம் த்யாயேத்யோ ஹரமஹிஷி தே மன்மதகலாம் ।
ஸ் ஸத்யஸ் ஸம்க்ஷோபம் நயதி வனிதா இத்யதிலகு
த்ரிலோகீமப்யாசு ப்ரமயதி ரவீந்துஸ்தனயுகாம் ॥ 19

| | |
|---|---|
| ஹே ஹரமஹிஷி | சிவனுடைய பட்டமஹிஷியாகிய தாயே! |
| முகம் | முகத்தை |
| பிந்தும் | பிந்துவாகவும் |
| தஸ்ய அத: | அதற்குக் கீழாக |
| குசயுகம் | இருஸ்தனங்களையும், |
| தததோ ஹரார்தம் | அதற்குக்கீழாக (யோனியில்) சக்திரூபமான த்ரிகோணத்தையும் |
| க்ருத்வா | செய்து (த்யானித்து) |
| | அங்கே |
| தே மன்மதகலாம் | உன்னுடைய காம ராஜபீஜத்தை |
| ய: த்யாயேத் | எவன் த்யானிக்கிறானோ |
| ஸ: | அந்த ஸாதகனனவன் |
| ஸத்ய: | உடனேயே (வெகுசீக்ரமாக) |
| வனிதா: | ஸகல ஸ்த்ரீகளையும் |
| ஸம்க்ஷோபம் நயதி | மனோவிகாரம் அடையும்படி செய்கிறான் |
| இதி அதி லகு | என்பது (அவனுக்கு) அல்பமான காரியம் |
| ரவீந்துஸ்தனயுகாம் | ஸூர்ய சந்த்ரர்களையே ஸ்தனங்களாக உடைய |
| த்ரிலோகீம் அபி | மூன்று லோகங்களையும் கூட |
| ஆசு ப்ரமயதி | வெகு சீக்கிரமாக மோஹமடையச் செய்கிறான். |

தாயே! முகத்தை பிந்துஸ்தானமாக பாவித்து அதின்கீழாக இருஸ்தனங்களையும் அதற்குக்கீழாக த்ரிகோணத்தையும் த்யானித்து அதில் உன்னுடைய காம ராஜபீஜத்தை எவன் த்யானம் செய்கிறானோ அந்த உபாஸகன் எல்லா ஸ்த்ரீகளுடைய மனதிலும் காம விகாரத்தை உண்டுபண்ணுகிறான் என்பது மிகவும் அல்பமான

கார்யம். ஸூர்யசந்த்ரர்களை ஸ்தனங்களாக உடைய மூன்று லோகத்தையுமே அவன் ப்ரமம் அடையும்படி செய்கையில் அது என்ன ஆச்சர்யம்.

1. மேலே சொன்னபடி த்யானம் செய்யும் உபாஸகன் ஸூர்யசந்த்ரர்களை ஸ்தனங்களாக உடைய த்ரிலோகத்தையுமே வசப்படுத்தும் சக்தியுடையவனாக இருக்கும்போது ஸ்த்ரீகளை வசப் படுத்துவது அவனுக்கு மிகவும் லகுவான கார்யமல்லவா என்று சொல்லப்பட்டது.

2. 'ஹரார்தம்' என்பதனால் ஹரனுடைய பாதியாகிய சக் தியைச் சொல்லப்பட்டது. த்ரிகோணரூபமான யோனியென்று அர்த்தம். (ஹரதீதிஹர:) லோகங்களையெல்லாம் ஸம்ஹாரம் பண் ணுவதால் பரமசிவனுக்கு ஹரன் என்று பெயர்.

3. த்ரிலோகத்தை ஸூர்ய சந்த்ரர்களை ஸ்தனங்களாக உடைய ஸ்த்ரீயாகச் சொல்லப்பட்டது.

4. இந்த ச்லோகத்தில் மாதனப்ரயோகத்தைச் சொல்லப் பட்டது. ஸாதகனானவன் ஏதாவது ஸ்த்ரீயை வசப்படுத்த எண் ணம் கொண்டால் த்ரிகோணத்திலிருக்கும் பிந்துஸ்தானத்தில் அவ ளுடைய முகத்தை த்யானித்து அதற்குக் கீழாக அவளுடைய குசங்களையும் அவைகளுக்குக்கீழாக அவளுடைய குஹ்ய ப்ரதேசத் தையும் த்யானம்செய்து முக, குசத்வய, யோனிகளில் காமராஜபீஜ த்தை அனுஸந்தானம் செய்து தனக்கும் தன் காந்தைக்கும் தாதாத் ம்யத்தை உண்டுபண்ணிக் கொள்ளவேண்டும். இம்மாதிரியான மாதன ப்ரயோகங்கள் அனேகம் ஸனத்குமார ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

5. இந்த ச்லோகத்தில் காமகலாத்யானத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்பாளுடைய ஸூக்ஷ்ம ரூபமானது ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர, ஸூக்ஷ்மதமமென்று மூன்றுவகையுள்ள தென்றும் அவை முறையே பஞ்சதசீவித்யா மந்த்ரம், காமகலா க்ஷரம், குண்டலினீ என்றும் சொல்லப்படும். காமகலாக்ஷரரூப மான அம்பாளுடைய (ஸூக்ஷ்மதர) ரூபத்தை த்யானம் செய்யும் ப்ரகாரமானது

"பிந்துனு முகம், பிந்துத்வயேன குசௌ, ஸபரார்த்தேன [யோனிம்
க்ருத்வா காமகலாமிதி த்யாத்வா"

என்று பரசுராம கல்பஸூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை அனுஸரித்த மாதன ப்ரயோகத்தை இங்கு சொல்லப்பட்டது.

6. காமகலாத்யானத்தைப்பற்றிய விபரங்களுக்கு காமகலாவிலாஸம், ஸேதுபந்தம், வரிவஸ்யாரஹஸ்யம் முதலிய க்ரந்தங்களைப்பார்த்துத்தெரிந்துகொள்வதுடன் குருமுகமாக அறிந்துகொள்ளவேண்டியது.

**किरन्तीमङ्गेभ्यः किरणनिकुरुम्बामृतरसं**
**हृदि त्वामाधत्ते हिमकरशिलामूर्तिमिव यः**
**स सर्पाणां दर्पं शमयति शकुन्ताधिप इव**
**ज्वरप्लुष्टान् दृष्ट्या सुखयति सुधाधारसिरया ॥ २० ॥**

கிரந்தீம் அங்கேப்ய: கிரண நிகுரும்பாம்ருதரஸம்
ஹ்ருதி த்வாம் ஆதத்தே ஹிமகரசிலாமூர்த்திமிவ ய:।
ஸ ஸர்பாணும் தர்பம் சமயதி சகுந்தாதிப இவ
ஜ்வரப்லுஷ்டான் த்ருஷ்ட்யா ஸுகயதி ஸுதாதார [ஸிரயா ॥ 20

| | |
|---|---|
| ஹே தேவி! | தேவியே! |
| அங்கேப்ய: | ஸகல அவயவங்களிலிருந்தும் |
| கிரண நிகுரும்பாம்ருத ரஸம் கிரந்தீம் | அவைகளுடைய காந்தியின் கிரணங்களுடைய ஸமூஹத்திலிருந்து உண்டான அம்ருத ரஸத்தை வர்ஷிக்கிற |
| ஹிமகரசிலாமூர்த்தி மிவ | சந்த்ரகாந்தக்கல்லில் செய்யப்பட்ட ப்ரதிமை போன்ற |
| | உருவத்தோடு கூடியவளாக |
| த்வாம் | உன்னை |
| ய: ஹ்ருதி ஆதத்தே | எவன் மனதில் த்யானிக்கிறுனே |
| ஸ: | அவன் |
| சகுந்தாதிப இவ | கருடனைபோல் |
| ஸர்பாணும் தர்பம் | ஸர்பங்களுடைய கர்வத்தை |

| | |
|---|---|
| சமயதி | அடக்குகிருன் (மேலும்)) |
| ஸுதாதாரவிரயா | அம்ருதநாடியோடு கூடியதாக இருக்கும் |
| த்ருஷ்ட்யா | தன்னுடைய பார்வையினுலே |
| ஜ்வரப்லுஷ்டான் | ஜ்வரத்தால் பீடிக்கப்பட்டவர்களே |
| ஸுகயதி | ஸுகமடையச் செய்கிருன். |

தாயே! ஸகல அவயவங்களுடைய ப்ரகாசத்திலி ருந்து பெருகும் அம்ருதத்தை வர்ஷிக்கிறவளும் சந்த்ரகாந்தக்கல் லில் செய்யப்பட்டதுபோன்ற ரூபத்தையுடையவளுமாக உன்னே எவன் மனதிமுல் த்யானிக்கிருனே அவன் ஸர்ப்பங்களுக்கு கருடன் போலாகிருன். மேலும் அவன் அம்ருதநாடியோடு கூடிய தன் கண்களின் பார்வையினுலேயே எவ்விதமான ஜ்வரத்தாலும் ஏற் படும் கஷ்டத்தைப் போக்கடித்துவிடுகிருன்.

1. இதில் காருட ப்ரயோகத்தைச் சொல்லப்பட்டிருக் கிறது.

2. மேலே சொல்லியபடி த்யானம் செய்யும் ஸாதகன் கருடன் மாதிரி ஸகல விஷயங்களேயும் போக்கடிக்கிருன். மேலும் அவனுடைய பார்வையினுலேயே ஸகல விதமான ஜ்வரங்களும் தீர்ந்துவிடுகின்றன என்று சொல்லப்பட்டது.

3. இந்த விஷயங்களைப்பற்றி சதுச்சதியில் சொல்லியி ருப்பது—

‘ஷண்மாஸத்யானயோகேன ஜாயதே கருடோபம: |
த்ருஷ்ட்யா கர்ஷயதே லோகம் த்ருஷ்ட்யைவ் குருதே வசம் ||
த்ருஷ்ட்யா ஸம்க்ஷோபயேன்னூரீம் த்ருஷ்ட்யைவ ஹரதே விஷம் |
த்ருஷ்ட்யா சாதுர்திகாதீம்ச்ச ஜ்வரான் நாசயதே க்ஷணத் ||
சந்த்ரகாந்த சிலாமூர்திம் சிந்தயித்வா விநாசயேத் |
தாபஜ்வரான் அசேஷாம்ச்ச சீக்ரம் தார்க்ஷ்ய இவாபர: ||
கருடத்யானயோகேன ஸ்மரணுன்னுசயேத் விஷம் || ’

4. இந்த ச்லோகத்தில் சொல்லியிருப்பது அம்பாளு டைய அம்ருதேச்வரீ ரூபமென்றும் சொல்லப்படும். அம்ருதேச் வரீ தேவியானவள் அம்பாளுடைய சிந்தாமணி க்ருஹத்தைச் சுற் றியிருக்கும் வாபிகளில் ஒன்ருன அம்ருதவாபியில் மணிமயமான படகில் வீற்றிருந்துகொண்டு அம்பாளுடைய பக்தர்களைக் கரை

சேர்ப்பதாகச் சொல்லப்படும். அந்தக் காரணத்தால் அம்ருதேச்வரிக்கு தாரா என்றும் பெயர் உண்டு. விஷங்களுக்கெல்லாம் மிகக் கொடியதான ஹாலாஹாலமானது மூன்று லோகங்களையும் தஹிக்கும்போது விஷ்ணுவானவர் அது தன்னை பாதிக்காமலிருப்பதற்காக அம்ருதேச்வரியை த்யானம் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸிஞ்சந்தீம் பரமாம்ருதானி ஜிசிதிச்யப்ராக்ருதைரம்சுபி:
கேலந்தீம் அம்ருதார்ணவே மணிமயீம் ஆருஹ்ய நௌகாம் நவாம் |
ஸ்னிக்தாபாங்கதரங்க ஸிக்ஷிதபவக்ஷ்வேளாம் முகுந்தச்ஸிராத்
அஸ்மார்ஷீத் அம்ருதேச்வரீம் பகவதீம் அம்பாம் அஹம்பாவத: ||
(நீலகண்ட விஜயம்)

तटिल्लेखातन्वीं तपनशशिवैश्वानरमयीं
निषण्णां षण्णामप्युपरि कमलानां तव कलाम् ।
महापद्माटव्यां मृदितमलमायेन मनसा
महान्तः पश्यन्तो दधति परमाह्लादलहरीम् ॥ २१ ॥

தடில்லேகாதன்வீம் தபனசசி வைச்வானர மயீம்
நிஷண்ணம் ஷண்ணமப்யுபரி கமலானும் தவ கலாம் |
மஹாபத்மாடவ்யாம் ம்ருதித மலமாயேன மனஸா
மஹாந்த: பச்யந்தோ தததி பரமாஹ்லாதலஹரீம் || 21

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| தடில்லேகாதன்வீம் | மின்னல் கொடிபோல் மெல்லியதும் (நீண்டதும், ஜ்வலிப்பதும், க்ஷணமாத்ரம் ப்ரகாசிப்பதும்) |
| தபனசசிவைச்வானர மயீம் | ஸூர்ய, சந்த்ர, அக்னிகளுடைய ரூபத்தை உடையதும் |
| ஷண்ணம் கமலானும் அபி உபரி | ஷட் சக்ரங்களுக்கும் மேல்பட்ட இடமாகிய |
| மஹாபாத்மாடவ்யாம் | மஹாபத்மாடவீயாகிற ஸஹஸ்ரதளகமலத்தில் |
| நிஷண்ணம் | இருப்பதுமான |
| தவ கலாம் | உன்னுடைய ஸாதாக்யகலையை |
| ம்ருதித மல மாயேன மனஸா | காமாதி மலங்களென்ன, அவித்யை முதலான மாயாரூபங்களென்ன இவைகள் நீங்கியமனதினால் |
| பச்யந்த: | பார்க்கிற |

| | |
|---|---|
| மஹாந்த: | புண்ய புருஷர்கள் |
| பரமாஹ்லாத லஹரீம் | உத்தமமான ஆனந்த ப்ரவாஹத்தை |
| தததி | (எப்போதும்) அடைகிருர்கள். |

தாயே! ஷட்சக்ரங்களுக்கும் மேல்பட்ட மஹாபத்மாடவீ என்ற ஸஹஸ்ரதள கமத்திலிருப்பதும் மின்னல்கொடிபோன்றதும் ஸூர்யசந்த்ர அக்னிகளுடைய ரூபத்தையுடையதுமான உன்னுடைய ஸாதாக்ய கலையை காமாதி மலங்கள், மாயை இவைகள் நீங்கிய மனதையுடைய மஹான்கள் பார்க்கப்பார்க்கப் பரமானந்தத்தை அடைகின்ருர்கள்.

1. ஏற்கனவே சொல்லியபடி அம்பாளான குண்டலினீ சக்தியை ஆக்ஞா சக்ரத்திற்கு அழைத்துவந்து நீராஜனங்கள்செய்தவுடன் அம்பாள் அங்கே அதிக நேரம் தாமதிக்காமல் சடேலென்று மின்னல் கொடிபோல் தோன்றி ஸஹஸ்ரதள கமலத்தில் ப்ரவேசிப்பாள். அங்கிருக்கும் சந்த்ரமண்டலமாகிற ஸுதாஸிந்துவின் நடுவிலிருக்கும் மணித்வீபத்தில் சிந்தாமணி க்ருஹத்தில் ப்ரவேசம் செய்து ஸதாசிவனேடு சேர்வதை ஏற்கனவே சொல்லப்பட்டது. இங்கே இருக்கும்போது அம்பாள் (ஸ்திர ஸௌதாமினீ ரூபமாக) எப்போதும் மின்னல் கொடிபேரல் ஜ்வலித்துக்கொண்டிருப்பாள். ஆக்ஞா சக்ரத்திலிருக்கும்போது அம்பாள் க்ஷணஸௌதாமினீ ரூபமாக இருப்பாள்.

2. இம்மாதிரியான அம்பாளுடைய ஸூக்ஷ்ம ரூபத்தை த்யானம் செய்வதற்கு சில மஹான்களான யோகீச்வார்களுக்குத் தான் முடியுமென்று சொல்லப்பட்டது.

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणां
इति स्तोतुं वाञ्छन् कथयति भवानि त्वमिति यः ।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्यपदवीं
मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमकुटनीराजितपदाम् ॥ ॥२२॥

பவானி த்வம் தாஸே மயி விதர த்ருஷ்டிம் ஸகருணும்
இதி ஸ்தோதும் வாஞ்சன் கதயதி பவானி த்வம் இதி ய:।
ததைவ த்வம் தஸ்மை திசஸி நிஜஸாயுஜ்ய பதவீம்
முகுந்த ப்ரம்ஹேந்த்ர ஸ்புட மகுட நீராஜித பதாம் ॥ 22

| | |
|---|---|
| ஹே பவானி! | பவருடைய பத்னியாகிய தாயே! |
| த்வம் | நீ |
| தாஸே மயி | தாஸனான என்னிடத்தில் |
| ஸகருணும் த்ருஷ்டிம் | (உன்னுடைய) கருணையோடு கூடின பார்வையை |
| விதர் | கொடு (கருணையோடு பார்ப்பாயாக) |
| இதி | என்று |
| ய: | எவனாவது |
| ஸ்தோதும் வாஞ்சன் | ஸ்தோத்ரம் செய்யவிரும்பி |
| பவானி த்வம் | பவானி த்வம் என்ற இருவார்த்தைகளை |
| கதயதி | சொல்லும்போது |
| தஸ்மை | அவனுக்கு |
| த்வம் | நீ |
| ததைவ | அந்த இரண்டுவார்த்தைகள் சொன்ன உடனேயே |
| முகுந்த் ப்ரம்ஹேந்ர ஸ்புட மகுட நீராஜித பதாம் | விஷ்ணு, ப்ரம்ஹா, இந்த்ரன் இவர்களுடைய ப்ரகாசமான மகுடங்களால் ஹாரத்திசெய்யப்பட்ட பாதங்களையுடைய |
| நிஜஸாயுஜ்ய பதவீம் | உன்னுடைய ஸாயுஜ்ய பதவியை |
| திசஸி | (அவனுக்குக்) கொடுத்துவிடுகிறாய். |

தாயே! எந்த பக்தனாவது உன்னைப்பார்த்து 'பவானி! நீ உன்னுடைய தாஸனாகிய என்மீது கருணையோடு கூடிய உன் பார்வையானது படும்படிசெய்வாயாக' என்றுசொல்ல ஆரம்பித்து 'பவானி! நீ' என்று அவன் சொன்னவுடனேயே அவன்மீது உனக்குக் கருணையேற்பட்டு ஹரிப்ரும்ஹேந்த்ரர்களால் ப்ரார்த்திக்கப்பட்ட உன்னுடைய ஸாயுஜ்யபதவியை அவனுக்கு உடனே கொடுத்துவிடுகிறாய்.

1. ஸாதகனானவன் அம்பாளைப் பார்த்து 'பவானி! த்வம் தாஸேமயி விதர த்ருஷ்டிம் ஸகருணும்' என்று சொல்ல ஆரம்பித்து 'பவானி த்வம்' என்ற இரண்டு வார்த்தைகளைச் சொன்ன உடனேயே அவைகள் 'தத் த்வம் அஸி' என்றமஹாவாக்யத்தின் அர்த்தத்தோடு கூடியிருப்பதைப்பார்த்த அம்பாள் அவனிடம் கருணைகூர்ந்து அவனுக்கு மஹாவாக்யத்தின் பலமாகிய தாதாத்ம்யத்தை (தன்னோடு ஒன்றாகஇருக்கும் தன்மையை) கொடுத்து விடுவதாகச் சொல்லப்பட்டது. பவானித்வம் என்றால் பவானியாக இருக்கும் தன்மை என்றும் த்வம் பவானி என்றால் நீயாக ஆவேனாகவும் என்றும் அர்த்தமுண்டு. அதாவது ஸாயுஜ்யபதவி என்று அர்த்தம்.

2, சொல்லுகிறவன் அப்பேர்ப்பட்ட மஹாவாக்யத்தின் அர்த்தத்தை மனதில் வைத்துச் சொல்லாதபோனாலும் அதை உச்சரிப்பதாலேயே அதின் பலனை அடைவதாகச் சொல்லப்பட்டது. 'அனிச்சயாபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக:' என்றபடி எப்படி சுடும் என்ற நினைவு இல்லாமல் தொட்டாலும் நெருப்புக்கு சுடுகிற ஸ்வபாவமிருப்பதால் அது தொடுகிறவனைச்சுட்டுவிடுகிற மாதிரி மஹாவாக்யத்தின் அர்த்தம் தெரியாதிருந்தாலும் அந்த அர்த்தமிருக்கக்கூடிய வார்த்தைகளை வேறு அர்த்தத்துடன் சொன்னாலும் மஹாவாக்யத்தின் பலன் சொல்லுகிறவனுக்குக் கிடைத்து விடுவதாகச் சொல்லப்படும்.

அஸ்பஷ்டமபி யன்னும ப்ரஸங்கேனபி பாஷிதம் |
ததாதி வாஞ்சிதான் அர்த்தான் துர்லபானபி ஸர்வதா ||
(தேவீபாகவதம்)

மதாத் ப்ரமாதாத் உன்மாதாத் து:ஸ்வப்னாத் ஸ்கலனாதபி |
கதிதம் நாம தே கௌரி ந்ருணாம் பாபாபனுத்தயே ||
(சக்தி ரஹஸ்யம்)

3. விஷ்ணு, ப்ரம்ஹா, இந்திரன் முதலியவர்கள் எப்போதும் அம்பாளை வணங்கிக்கொண்டிருப்பதால் அவர்களுடைய கிரீடங்களிலிருக்கும் ரத்னங்களின் காந்தியானது அம்பாளுடைய சரணங்களில் பட்டு அந்த சரணங்களுக்கு நீராஜனம் செய்வது போலிருப்பதாக வர்ணிக்கப்பட்டது. அவர்கள் அப்படி வணங்கியும் அவர்களுக்குக் கிடைக்காத ஸாயுஜ்ய பதவியை இந்த ஸாதகனுக்கு அம்பாள் உடனேயே கொடுத்து விடுவதாகச் சொல்லப்பட்டது.

4. இது வரையில் பஹிர்யாகம், அந்தர்யாகம் இவைகளைச் சொல்லிவிட்டு இந்தச்லோகத்தில் பக்தியினால் அடையக்கூடிய விசேஷபலனான முக்தியைச் சொல்லப்பட்டதென்றும் சொல்லலாம். முக்தியென்பது நாலுவகைப்பட்டது—ஸாலோக்யம் (அம்பாளிருக்கும் லோகத்தில் தானும் இருப்பது), ஸாமீப்யம் (அந்த லோகத்தில் அம்பாளுடைய ஸமீபத்திலேயே இருந்துகொண்டிருப்பது), ஸாரூப்யம் (அப்படி ஸமீபத்திலிருக்கையில் அம்பாளுடைய ரூபம் போன்ற ரூபத்துடன் இருப்பது), ஸாயுஜ்யம் (அம்பாளுடைய ஸ்வ

ரூபத்தில் இரண்டறக் கலந்திருப்பது). இவற்றில் எல்லாவற்றிற்கும் மேல்பட்டதான ஸாயுஜ்ய முக்தியை இங்கே சொல்லியிருக்கிறது.

5. ஜபம், ஹோமம், இவைகள் பண்ணுவதைவிட தாதாத்ம்யமாக பாவனைசெய்து உபாஸிப்பது சீக்ரம் பலத்தைக் கொடுக்குமென்று சொல்லப்படுவதை அநுஸரித்து இந்த ச்லோகம் இருக்கிறதென்று சொல்லலாம்.

त्वया हृत्वा वामं वपुरपरितृप्तेन मनसा
शरीरार्धं शंभोरपरमपि शङ्के हृतमभूत् ।
यदेतत्त्वद्रूपं सकलमरुणाभं त्रिनयनं
कुचाभ्यामानम्रं कुटिलशशिचूडालमकुटम् ॥ ॥२३॥

த்வயா ஹ்ருத்வா வாமம் வபுரபரித்ருப்தேன மனஸா
சரீரார்தம் சம்போ: அபரமபி சங்கே ஹ்ருதமபூத் |
யதேதத் த்வத்ரூபம் ஸகலமருணாபம் த்ரிநயனம்
குசாப்யாம் ஆனம்ரம் குடிலசசி சூடால மகுடம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| சம்போ: | பரமசிவனுடைய |
| வாமம் வபு: | சரீரத்தினுடைய இடதுபாகமானது |
| த்வயா ஹ்ருத்வா | உன்னால் எடுத்துக்கொள்ளப்பட்டு(ம்) |
| அபரித்ருப்தேன மனஸா | மனது திருப்தியடையாததினல் |
| அபரம் சரீரார்த்தம் அபி | மற்றொருபாதியாகிய வலதுபாகமும் |
| ஹ்ருதம் அபூத் (இதி) | (உன்னால்) எடுத்துக்கொள்ளப்பட்டதென்று |
| சங்கே | நினைக்கிறேன். |
| யத் | எந்த காரணத்தினல் (என்றால்) |
| ஏதத் த்வத் ரூபம் | இந்த (ஹ்ருதயகமலத்தில் ப்ரகாசிக்கும்) உன்னுடைய ரூபமானது |
| ஸகலம் அருணாபம் | இருபாகங்களிலும் சிகப்பு வர்ணத்தோடும் |
| த்ரிநயனம் | மூன்று கண்களோடும் |
| குசாப்யாம் ஆனம்ரம் | ஸ்தனங்களின் பாரத்தினல் கொஞ்சம் வளைந்தும் |
| குடில சசி சூடால மகுடம் | வளைந்த சந்த்ரகலையை சிரோபூஷணமாக உடைய மகுடத்தோடுகூடியும் (இருக்கிறதோ) |

தாயே! உன்னுடைய சரீரமானது முழுவதும் சிகப்பாக இருப்பதையும் மூன்று கண்களோடிருப்பதையும் இரு ஸ்தனங்களோடு கொஞ்சம் வணங்கினதாக இருப்பதையும் பார்த்தால் ஆதியில் பரமசிவனுடைய வாம பாகத்தை அபஹரித்துக்கொண்ட நீ அதினல் ஆசை தணியாமல் அவருடைய முழு சரீரத்தையும் அபஹரித்துக்கொண்டுவிட்டதுபோல் தோன்றுகிறது.

1. சிவனுடைய அர்த்தநாரீச்வரூபமானது வலதுபாகம் சிவனுடைய சுத்தஸ்படிகம்போன்ற ரூபத்தின் அங்க அடையாளங்களுடனும் இடது பாகம் அம்பாளுடைய அங்க அடையாளங்களுடனும் இருப்பதாகக் காணப்படும். இங்கே அம்பாள் சிவனுடைய பாதி சரீரத்தையும் எடுத்துக்கொண்டதோடு திருப்தி அடையாமல் முழு சரீரத்தையும் எடுத்துக்கொண்டுவிட்டதாகச் சொல்லப்பட்டது. இல்லாவிட்டால் சரீரம் முழுவதும் அம்பாள் நிறமான அருணமாக இருக்கக் காரணமில்லை. இரண்டு ஸ்தனங்களிருப்பதற்கும் காரணமில்லை. நெற்றிக்கண்ணும் சந்த்ரகலையும் கேவலம் சிவ ஸ்வரூபத்திலிருப்பதுபோல் வலது பக்கத்தில் காண்பதற்கும் காரணமில்லை. அம்பாள் தன் ரூபத்தால் சிவனுடைய முழு சரீரத்திலும் வ்யாபித்துவிட்டதாகச் சொல்லப்பட்டது.

2. இதில் உத்தர கௌல மதத்தின் ஸித்தாந்தத்தைச் சொல்லப்பட்டது. அதின்படி சக்தி தத்வத்திலிருந்து வேருனதான சிவ தத்வமில்லையென்றும் சிவதத்வமானது சக்தி தத்வத்தில் அந்தர்பூதம் (உள்ளடங்கியது) என்றும் சொல்லப்படும். இந்த மதத்தைப் பற்றிப்பின்னல் விரிவாகச் சொல்லப்படும்.

जगत्सूते धाता हरिरवति रुद्रः क्षपयते
तिरस्कुर्वन्नेतत्स्वमपि वपुरीशस्तिरयति ।
सदापूर्वः सर्वं तदिदमनुगृह्णाति च शिवः
तवाज्ञामालम्ब्य क्षणचलितयोर्भ्रूलतिकयोः ।। ।। २४ ।।

ஜகத் ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதே
திரஸ்குர்வன்னேதத் ஸ்வமபி வபுரீசஸ்திரயதி |
ஸதாபூர்வஸ் ஸர்வம் ததிதம் அனுக்ருண்ஹாதி ச சிவ:
தவாக்ஞாம் ஆலம்ப்ய க்ஷணசலிதயோர் ப்ரூலதிகயோ: ||

| | |
|---|---|
| ஹே பகவதி ! | தாயே ! |
| த்ஈதா | ப்ரம்ஹாவானவர் |
| ஜகத் ஸூதே | லோகத்தை ஸ்ருஷ்டிக்கிறார் |
| ஹரி: அவதி | (அதை) விஷ்ணுவானவர் ரக்ஷிக்கிறார் |
| ருத்ர: க்ஷபயதே | (அதை) ருத்ரனனவர் ஸம்ஹாரம் செய்கிறார் |
| ஈச: | ஈச்வரனனவர் |
| ஏதத் | இந்த ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களை |
| திரஸ்குர்வன் | தன்னிடம் லயிக்கும்படிசெய்து |
| ஸ்வம் வபு: அபி | தன்னுடைய தேஹத்தையும் |
| திரயதி | மறையும்படி செய்கிறார் |
| ஸதாபூர்வ: சிவ: | ஸதா என்ற வார்த்தையை முன்னாக உடைய சிவனனவர் (அதாவது ஸதாசிவன்) |
| ஸர்வம் தத் இதம் | முன்சொன்ன ப்ரம்ஹா, ஹரி, ருத்ர, ஈசானத்மகமான இந்த நாலு தத்வங்களையும் |
| தவ | உன்னுடைய |
| க்ஷண சலிதயோ: | ஒரு க்ஷணகாலம் அசைக்கப்பட்ட |
| ப்ரூலதிகயோ: | புருவங்களுடைய |
| ஆக்ஞாம் ஆலம்ப்ய | ஆக்ஞையை அனுஸரித்து |
| அனுக்ருண்ஹாதி | அனுக்ரஹம் செய்கிறார். |

தாயே ! ப்ரம்ஹாவானவர் லோகங்களை ஸ்ருஷ்டி பண்ணுகிறார், விஷ்ணுவானவர் ரக்ஷிக்கிறார், ருத்ரனனவர் ஸம்ஹாரம் செய்கிறார். ஈச்வரனனவர் இம் மூவரையும் தன்னிடம் மறையும்படி செய்து தானும் (தனக்கு மேல்பட்ட தத்வமாகிய) ஸதாசிவனிடத்தில் திரோதானமாகிறார். பிறகு ஸதாசிவனனவர் உன்னுடைய புருவங்களின் அமைப்பினால் ஏற்படும் உத்திரவை அனுஸரித்து (திரும்பவும் லோகங்களை ஸ்ருஷ்டிசெய்வதற்காக) இவர்கள் நால்வரையும் அனுக்ரஹம் செய்து ஆவிர்பவிக்கச் செய்கிறார்.

1. ஸ்தாவர ஜங்கமாத்மகமான ஜகத்தைப்பற்றிய ஸ்ருஷ்டி ஸ்திதி, ஸம்ஹாரம் இம் மூன்றும் முறையே ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களால் செய்யப்படுகிறது என்பது ஸாதாரணமாய்த் தெரிந்த விஷயம். ருத்ரனல் லோகஸம்ஹாரமானபிறகு இம் மூவர்களும் மஹேச்வரரிடம் திரோதானமடைந்து மஹேச்வரரும் ஸதாசிவரிடம் லயமடைந்து எஞ்சியிருப்பவர்கள் ஸதாசிவரும் அம்பாளும்தான்.

அந்த ஸமயம் ப்ரம்ஹாண்டம் ப்ரளயத்தை அடைந்துவிடுகிறது. அதற்குப்பிறகு ப்ரம்ஹாண்டத்தைத் திரும்பவும் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்கிற அனுக்ரஹ ரூபமான எண்ணம் ஸதாசிவருடைய மனதில் உண்டாகிறது. அப்போது அவர் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ர, ஈசானர்களாகிய நால்வரையும் திரும்பவும் ஸ்ருஷ்டிக்கிறார். இப்படி இந்த நால்வரை ஸம்ஹாரம் பண்ணுவதற்கும் ஸ்ருஷ்டிப்பதற்கும் அம்பாளுடைய உத்திரவைப்பெற்றுக்கொண்டு ஸதாசிவர் செய்கிறார் என்றும் அந்த உத்திரவை அம்பாள் தன் புருவங்களின் அசைத்தல் மூலமாக அளிக்கிறாள் என்றும் சொல்லப்பட்டது.

2. ஆகவே இந்த அனந்தகோடி ப்ரம்ஹாண்டங்களின் உற்பத்தியும் ஸம்ஹாரமும் அம்பாளுடைய புருவத்தின் அசைத்தலாலேயே நடைபெறுகின்றனவென்றும் அதின் பலத்தைக்கொண்டுதான் ஸதாசிவரானவர் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ர, ஈசானதத்வங்களை தன்னுள் லயம் செய்தும் பிறகு வெளிப்படுத்தவும் செய்கிறார் என்று தாத்பர்யம்.

3. மேலேசொல்லப்பட்ட ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ர, ஈசான. ஸதாசிவர்களால் செய்யப்படும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார, திரோதான, அனுக்ரஹ ரூபங்களான கார்யங்களை 'பஞ்சக்ருத்யங்கள்' என்றும் அம்பாளை 'பஞ்சக்ருத்யபராயணா' என்றும் இந்த பஞ்சக்ருத்யங்களையும் அம்பாளே ப்ரும்ஹாதி ரூபங்களோடு செய்கிறாளென்றும் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருப்பது கவனிக்கத்தகுந்தது.

'ஸ்ருஷ்டி கர்த்ரீ ப்ரம்ஹரூபா கோப்த்ரீ கோவிந்த ரூபிணீ |
ஸம்ஹாரிணீ ருத்ரரூபா திரோதானகரீ ஈச்வரீ |
ஸதாசிவா அனுக்ரஹதா பஞ்சக்ருத்ய பராயணா ||'

त्रयाणां देवानां त्रिगुणजनितानां तव शिवे
भवेत्पूजा पूजा तव चरणयोर्या विरचिता ।
तथा हि त्वत्पादोद्वहनमणिपीठस्य निकटे
स्थिता ह्येते शश्वन्मुकुलितकरोत्तंसमकुटाः ॥ ॥ २५ ॥

த்ரயாணும் தேவாஞம் த்ரிகுணஜனிதாஞம் தவ சிவே
பவேத் பூஜா பூஜா தவ சரணயோர் யா விரசிதா |
ததாஹி த்வத்பாதோத்வஹன மணிபீடஸ்ய நிகடே
ஸ்திதா ஹ்யேதே சச்வன் முகுளித கரோத்தம்ஸ மகுடா:||'

| | |
|---|---|
| ஹே சிவே | பரமசிவன் பத்னியாகிய தாயே! |
| தவ த்ரிகுணஜனிதாஞம் | உன்னுடையதான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களிலிருந்து உண்டானவர்களான |
| த்ரயாணும் தேவாஞம் | ப்ரம்ஹா, விஷ்ணு ருத்ரர்களுக்கு |
| தவ சரணயோ: | உன்னுடைய பாதங்களில் |
| யா பூஜா விரசிதா | எந்தப் பூஜையானது செய்யப்படுகிறதோ (அதுவே) |
| பூஜா பவேத் | (அவர்களுடைய) பூஜையாக ஆகிறது. |
| ஹி | ஏனென்ருல் |
| ஏதே | இவர்கள் |
| த்வத் பாதோத்வஹன மணிபீடஸ்ய | உன்னுடைய பாதங்களைத் தாங்கும் ரத்னமயமான பலகையின் |
| நிகடே | ஸமீபத்தில் |
| சச்வத் | ஸதாகாலமும் |
| முகுளித கரோத்தம்ஸ மகுடா: | கூப்பிய கைகளையே பூஷணமாக உடைய மகுடங்களோடு கூடியவர்களாய் |
| ஸ்திதா: | நின்றுகொண்டு இருக்கிருர்கள் (ஆகையினுல்) |
| ததாஹி | அதுவும் யுக்தமாகத்தானிருக்கிறது. |

தாயே! ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களிலிருந்து உண்டானவர்களான ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்ளுடைய பூஜையானது உன் சரணங்களுக்குப் பூஜை செய்வதாலேயே ஏற்படுகிறது. ஏனென்ருல் இவர்கள் சிரஸில் கூப்பிய கைகளுடன் எப்போதும் உன் பாத பீடத்திற்கு அருகிலேயே நின்றுகொண்டிருக்கிருர்களல்லவா.

1. அதிகார புருஷர்களான த்ரிமூர்த்திகளும் தாங்கள் செய்த அம்பாளுடைய பாதங்களின் பூஜையினுல் ஜகத்தைப்பற்றிய அதிகாரத்தைப்பெற்றவர்கள்ானபடியால் அந்த பாதஸேவைக்காக அவைகளிருக்கும்படியான மணிபீடத்தின் ஸமீபத்திலேயே சிரஸின்மேல்

கூப்பிய கைகளுடன் எக்காலமும் நின்றுகொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. ஆகவே அந்தப் பாதங்களுக்குச் செய்யும் பூஜையானது ஸமீபத்திலிருக்கும்படியான இவர்களுக்கும் செய்ததாக ஆகிறது. (மணிபீடத்தின் மேலிருக்கும் பாதங்களுக்குச் செய்யும் அபிஷேகமும் அர்ச்சனை புஷ்பங்களும் அதற்கு ஸமீபத்தில் நின்றுகொண்டிருப்பவர்களான இவர்கள் மேலும் விழும். பாக்கி உபசாரங்களான தூப, தீபம் முதலியவை அம்பாளுடைய பாதங்களுக்குச் செய்யப்படும்போது இவர்களுக்கும் செய்ததாக ஆகும்.)

2. அம்பாள் ஸகலதேவதாஸ்வரூபிணியாக இருப்பதாலும் அம்பாளிடமிருந்தே அவர்கள் தங்களுடைய ஸகல அதிகாரங்களையும் பெற்றிருப்பதினாலும் அம்பாளிடம் மற்ற தேவர்களெல்லாரும் லீனமாக இருக்கிறபடியாலும் அம்பாளுக்குச் செய்யப்பட்ட பூஜையானது அவர்களுக்கெல்லாம் செய்ததாகவும் ஆகிறது. இதர தேவதைகளோவென்றால் யார்யாரை உபாஸனை செய்கிறார்களோ அதினால் அவர் அவருடைய ப்ரீதிதான் ஏற்படும். அம்பாளைப் பூஜை செய்தாலோ ஸகல தேவர்களும் த்ருப்தியடைவதாகவும் வேறு பூஜை அவர்களுக்குத் தேவையில்லையென்றும் தாத்பர்யம்.

3. த்ரிமூர்த்திகளுடைய மகுடங்களுக்கு மேலே ஒருமொக்கு (மொட்டு) பூஷணமாக இருப்பதுபோல் தங்கள் கைகளைக்கூப்பி மகுடத்திற்குமேல் வைத்துக்கொண்டிருப்பது சொல்லப்பட்டது. இம்மாதிரி, மகுடத்தின்மேல் மொட்டு பூஷணமாகஇருப்பது 52வது ச்லோகத்தில் 'கோத்ராதரபதி குலோத்தம்ஸ கலிகே' என்றதிலும் சொல்லப்பட்டது.*

4. இதேமாதிரியாக அப்பய்ய தீக்ஷிதரவர்கள் 'துர்காசந்த்ரகளா ஸ்துதி'யில் அம்பாளை வர்ணித்திருக்கிறார்கள்.

'யத் பூஜன ஸ்துதி நமஸ்க்ருதிபிர் பவந்தி
ப்ரீதா: பிதாமஹரமேச ஹராஸ்த்ரயோऽபி |
தேஷாமபி ஸ்வககுணைர் ததீம் வபூம்ஷி
தாமீச்வரஸ்ய தருணீம் சரணம் ப்ரபத்யே ||'

---

* கைகளைக் கூப்பினால் மொட்டு மாதிரியான உருவம் ஏற்படுவதை ஒட்டி இங்கு வர்ணிக்கப்பட்டது.

विरिञ्चिः पञ्चत्वं व्रजति हरिराप्नोति विरतिं
विनाशं कीनाशो भजति धनदो याति निधनम् ।
वितन्द्री माहेन्द्री विततिरपि संमीलितदृशा
महासंहारेऽस्मिन् विहरति सति त्वत्पतिरसौ ॥ २६ ॥

விரிஞ்சி: பஞ்சத்வம் வ்ரஜதி ஹரிராப்னோதி விரதிம்
விநாசம் கீநாசோ பஜதி தனதோ யாதி நிதனம் |
வித்ந்த்ரீ மாஹேந்த்ரீ விததிரபி ஸம்மீலித த்ருசா
மஹாஸம்ஹாரேஸ்மின் விஹரதி ஸதி த்வத்பதிரஸௌ ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| விரிஞ்சி: | ப்ரம்ஹாவானவர் |
| பஞ்சத்வம் | மரணத்தை |
| வ்ரஜதி | அடைகிறார் |
| ஹரி: | விஷ்ணுவானவர் |
| விரதிம் | முடிவை (மரணத்தை) |
| ஆப்னோதி | அடைகிறார் |
| கீநச: | யமனானவன் |
| விநசம் | நாசத்தை |
| பஜதி | அடைகிறான் |
| தனத: | குபேரனும் |
| நிதனம் | மரணத்தை |
| யாதி | அடைகிறான் |
| மாஹேந்த்ரீவிததி: அபி | இந்த்ரனுடைய ஸமூஹமும் கூட |
| ஸம்மீலித த்ருசா | மூடிக்கொள்ளப்பட்ட கண்களுடன் |
| விதந்த்ரீ | விசேஷமான ஜாட்யதோடுகூடியதாய் நித்ரை செய்கிறது |
| அஸ்மின் மஹாஸம் ஹாரே | இப்பேர்ப்பட்ட மஹா ப்ரளயகாலத்தில் கூட |
| ஹே ஸதி! | மஹா பதிவ்ரதையான தாயே! |
| அஸௌ த்வத் பதி: | இந்த உன்னுடைய பதியான பரமசிவன் |
| விஹரதி | க்ரீடித்துக்கொண்டிருக்கிறார். |




தாயே! மஹா ப்ரளயகாலத்தில் ப்ரம்ஹா முதலான ஸமஸ்த தேவர்களும் நாசம் அடையும்போது உன்னுடைய பதியான ஸதா

சிவர்மட்டும் (உன்னுடன் கூட மஹா ஸம்ஹார நடனம் செய்து கொண்டு) க்ரீடித்துக்கொண்டிருக்கிறார்.

1. எல்லாருக்கும் மேல்பட்ட அதிகார புருஷர்களான ப்ரம்ஹாதிகள் கூட நாசமடையும்படியான மஹா ப்ரளயகாலத்திலும் ஸதாசிவனானவர் ஒருவித கெடுதலையுமடையாமல் எப்போதும் போல் க்ரீடித்துக் கொண்டிருக்கிறாரென்றும் அப்படியிருப்பது அம்பாளுடைய பதிவ்ரதாமஹிமையினாலென்றும் வர்ணிக்கப்பட்டது.

2. பஞ்சத்வம் என்பது பஞ்சபூதங்களோடு கலந்துவிடுவதாகிய மரணத்தைச் சொல்வது. மாஹேந்த்ரீ விததி: என்பதினால் சதுர்தச மனுக்கள், இந்த்ரர்கள் இவர்களைக்குறித்தது.

3. மஹா ப்ரளயகாலத்தில் ப்ரிதிவீ முதலான ஸகல தத்வங்களும் ஒன்றொன்றும் அதற்குமேல்பட்ட தத்வத்தில் லயமாகிக் கடைசியாக சக்தி, சிவ தத்வங்கள் இரண்டுமட்டுமே இருப்பதாகச் சொல்லப்படும். சிவன் முதல் ப்ருதிவீ முதலான தத்வங்களைச் சொல்லுகையில் சிவன் யாவற்றுக்கும் மேல்ப்பட்டதும் அதிஸூக்ஷ்மமான தத்வமென்றும் மற்றைய தத்வங்கள் மேலுக்குமேல் ஸ்தூலமாகிக்கொண்டு கடைசியாகிய ப்ருத்வீ தத்வமானது எல்லாவற்றையும் விட ஸ்தூலமானதென்று சொல்லப்படும். இது ஸ்ருஷ்டிக்ரமம். ஸம்ஹாரக்ரமத்தில் ஸ்தூல தத்வங்கள் அதற்குமேல்பட்ட (ஸூக்ஷ்மமான) தத்வங்களில் லயித்துக் கடைசியில் சிவதத்வமே (யாவற்றையும் தன்னிடம் லயப்படுத்திக்கொண்டு) எஞ்சிநிற்கும்.

4. மஹா ப்ரளயகாலத்தில் பரமசிவன் (ஸம்ஹாரரூபமான) தாண்டவம் செய்துகொண்டிருப்பதாகவும் அதற்கு அம்பாள் ஒருவரே ஸாக்ஷிணியாகப் பார்த்துக் கொண்டிருப்பதாகவும்

'மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணி'

என்று ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதே மாதிரியாக ஆசார்யாளும் 'கல்யாணவ்ருஷ்டி ஸ்தவம்' என்ற 'பஞ்சதசிஸ்தவ' த்தில்

'கல்போப ஸம்ஹரண கல்பித தாண்டவஸ்ய
தேவஸ்ய கண்டபரசோ: பரபைரவஸ்ய |

பாசாங்குசைக்ஷவ சராஸன புஷ்பபாணு

ஸா ஸாக்ஷிணீ விஜயதே தவ மூர்த்திரேகா ||'

என்று வர்ணித்திருக்கிறார்கள்.

जपो जल्पः शिल्पं सकलमपि मुद्राविरचना

गतिः प्रादक्षिण्यक्रमणमशनाद्याहुतिविधिः ।

प्रणामः संवेशः सुखमखिलमात्मार्पणदृशा

सपर्यापर्यायस्तव भवतु यन्मे विलसितम् ॥ ॥ २७ ॥

ஜபோ ஜல்ப: சில்பம் ஸகலமபி முத்ராவிரசனு

கதி: ப்ராதக்ஷிண்யக்ரமணம் அசனுத்யாஹுதிவிதி: |

ப்ரணும: ஸம்வேச: ஸுகமகிலமாத்மார்பணத்ருசா

ஸபர்யா பர்யாயஸ்தவ பவது யன்மே விலஸிதம் || 27

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| ஆத்மார்பணத்ருசா | ப்ரஹ்மத்திற்கு அர்பணம் செய்கிறதென்ற நினைவுடன் (சொல்லப்பட்ட என்னுடைய) |
| ஜல்ப: | ஸாதாரணமான பேச்சுக்கள் (கூட) |
| ஜப: | உன் மந்த்ர ஜபமாகவும் |
| ஸகலம் சில்பம் அபி | கைகளால் செய்யும் சில்பம் முதலிய ஸகல கார்யங்களும் |
| முத்ராவிரசனு | முத்ரைகளைச் செய்வதாகவும் |
| கதி: | நடப்பதெல்லாம் |
| ப்ராதக்ஷிண்யக்ரமணம் | ப்ரதக்ஷிணம் செப்வதாகவும் |
| அசனுதி | அன்னபானுதிகளைச் சாப்பிடுவதானது |
| ஆஹுதிவிதி: | ஆஹுதி செய்வதாகவும் |
| ஸம்வேச: | படுப்பதானது |
| ப்ரணும: | நமஸ்காரமாகவும் |
| ஸுகம் யன்மே விலஸிதம் | இவைகளைத் தவிர நான் செய்யும் இதர ஸுக கார்யங்கள் |
| அகிலம் | எல்லாம் |
| தவ | உன்னுடைய |
| ஸபர்யா பர்யாய: | பூஜோபசாரங்களாகவும் |
| பவது | ஆகட்டும். |

தாயே! நான் பேசுவதெல்லாம் உன்னுடைய மந்த்ரத்தை ஜபிப்பதாயும், கையால் செய்யும் ஸகல கார்யங்களும் என்னுடைய

பூஜாரூபமான மூத்ரா விசேஷங்களாகவும் நடப்பதானது உன்னை ப்ரதக்ஷிணம் செய்வதாகவும், சாப்பிடுவது உன்னைக்குறித்த ஹோமத்தின் ஆஹுதியாகவும் படுப்பது உன்னை நமஸ்கரிப்பதாகவும் இம் மாதிரி நான் ப்ரம்ஹார்ப்பண புத்தியோடு மனோ வாக்கு காயங்களால் செய்யும் ஸகல கார்யங்களும் உன்னுடைய ஆராதனை ரூபமாகவே இருக்கட்டும்.

1. அதாவது, ப்ரம்ஹார்ப்பண புத்தியுடன் கூட தான் தன்னுடைய மனோ வாக்காயங்களால் ஸ்வபாவமாகச் செய்யும் ஸகல கார்யங்களும் அம்பாளுக்குச் செய்யும் பூஜையாக இருக்கட்டுமென்று ப்ரார்த்திக்கிறார்.

2. முத்ரைகள் என்பது கைவிரல்களால் காட்டப்படும் ஸம்க்ஷோபண த்ராவண, ஆகர்ஷணாதி முத்ரைகள். ஆஹுதியென்பது ஒரு தேவதையை உத்தேசித்து அக்னியில் ஹவிஸ்ஸைப்போடுவது. மற்ற ஸுக கார்யங்கள் என்றது கண்களை மூடுவது, திறப்பது, அங்க்பங்கம் (சோம்பல் முறித்தல்)முதலியவை, சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த ரூபமாக ஸுகத்தைக் கொடுப்பவை.

3. செய்வதெல்லாம் தனக்காக அல்லவென்றும் அம்பாளுக்கே அர்பணம் என்றும் இம்மாதிரி மனோ நிலையுடன் செய்யப்படும் ஸாதாரணமான ஸாம்ஸாரிக கார்யங்களும் அம்பாளுடைய பூஜை செய்ததாக ஆகும் என்பது தாத்பர்யம். இதையே சுருக்கமாக

'ப்ராத: ப்ரப்ருதி ஸாயாந்தம் ஸாயாதி ப்ராதரந்தத: |
யத் கரோமி ஜகத்யானே தத் ஸர்வம் தவ பூஜனம் ||'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

4. ஸமயிகளுடைய மதத்தின்படி ஸர்வோத்க்ருஷ்டமானதும் சிவ சக்த்யாத்மகமுமான ஸாதாக்ய தத்வத்தின் பூஜையானது ஆந்தரமாக ஸஹஸ்ராரபத்மத்தில் தான் செய்வது, வெளியிலிருக்கும் பீடங்கள், சக்ரங்கள் முதலியவைகளில் அல்லவென்று ஏற்கனவே சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட ஸமயிகளில் சிலர் ஜனங்களில்லாத குஹை முதலியவைகளிலிருந்துகொண்டு பத்மாஸனம் முதலிய ஆஸனங்களைப்போட்டு இந்த்ரியங்களை அடக்கி

ஸாதாக்யதத்வத்தையே த்யானம் செய்துகொண்டிருப்பார்கள். அவர்கள் செய்யும் பூஜையானது பின்னால் சொல்லப்போகும் சதுர்வித,ஷட்வித ஐக்யானுஸந்தானங்களே. ஸமயாசாரமுடைய மற்றும் சில யோகீச்வரர்கள் ஜீவன்முக்தர்களாக இருந்தும் ஸம்ஸாரயாத்ரையை அனுஷ்டித்தவர்களாகவும் ஆயினும் ஸாதாக்ய தத்வத்தை எப்போது த்யானம் செய்துகொண்டு ஆத்மாராமர்களாக இருப்பவர்களின் பூஜையை இந்த ச்லோகத்தில் வர்ணிக்கப்பட்டது.

இப்படி இரண்டு விதமாக அம்பாளை உபாஸனைசெய்யும் ஸமயிகளுக்கு பாஹ்யபூஜையாவது அதின் க்ரியைகளாவது அவைகளைச் செய்யத் தேவையான த்ரவ்யங்களை ஸம்பாதிக்கும் ச்ரமமாவது கிடையாது என்பது ஸமயமதத்தின் ரஹஸ்யம்.

6. ‘ஆத்மார்பணத்ருசா’—இங்கு ஆத்மா எனப்படுவது பரதேவதையாகிய அம்பாள். ஸம்வேச: என்பதினால் சரீரத்தை பூமியின்மேல் போடுவது. அதாவது, எந்தவிதமாகப் படுத்துக்கொண்டு புரண்டாலும் அது ஸாஷ்டாங்க நமஸ்காரமாக இருக்கட்டும் என்று சொல்லுகிறார்.

7. இதில் ஞானயோகப்ரகாரமாக முற்றும்துறந்த ஞானிகள் அம்பாளை உபாஸனை செய்வதைச் சொல்லியிருப்பதாகவும் சொல்லப்படும்.

8. இதே மாதிரி ஆசார்யாள் பரமசிவனைக் குறித்து ‘சிவானந்த லஹரி’யில் சொல்லியிருக்கிறார்கள்.

‘ஆத்மா த்வம் கிரிஜா மதி: ஸஹசரா: ப்ராண: சரீரம் க்ருஹம்
பூஜா தே விஷயோபபோகரசனா நித்ரா ஸமாதிஸ்திதி: |
ஸஞ்சார: பதயோ: ப்ரதக்ஷிணவிதி: ஸ்தோத்ராணி ஸர்வா
[கிரோ
யத் யத் கர்ம கரோமி தத் ததகிலம் சம்போ தவாராதனம் ||’

**सुधामप्यास्वाद्य प्रतिभयजरामृत्युहारिणीं**
**विपद्यन्ते विश्वे विधिशतमखाद्या दिविषदः ।**
**करालं यत्क्ष्वेलं कबलितवतः कालकलना**
**न शंभोस्तन्मूलं तव जननि ताटङ्कमहिमा ॥ ॥ २८ ॥**

ஸுதாமப்யாஸ்வாத்ய ப்ரதிபய ஜராம்ருத்யுஹரிணீம்
விபத்யந்தே விச்வே விதிசதமகாத்யா திவிஷத: |
கராளம் யத்க்ஷ்வேளம் கபளிதவத: காலகலனா
ந சம்போஸ்தன்மூலம் தவ ஜனனி தாடங்கமஹிமா ||

| | |
|---|---|
| ஹே ஜனனி! | தாயே! |
| விச்வே | ஸமஸ்தமான |
| விதி சதமகாத்யா: | ப்ரம்ஹா, இந்த்ரன் முதலிய |
| திவிஷத: | தேவர்கள் |
| ப்ரதிபய ஜராம்ருத்யு, ஹரிணீம்; | பயங்கரமான ஜரை, ம்ருத்யு இவைகளைப் போக்கடிக்கும் தன்மையுள்ள |
| ஸுதாம் | அம்ருதத்தை |
| ஆஸ்வாத்ய அபி | சாப்பிட்டபோதிலும் |
| விபத்யந்தே | (மஹா ப்ரளயகாலததில்) நாசமடைகிறார்கள் |
| கராளம் | அத்யுக்ரமான (மிகக்கொடிய) |
| க்ஷ்வேளம் | காலகூடவிஷத்தை |
| கபளிதவத: , | சாப்பிட்ட |
| சம்போ: | பரமசிவனுக்கு |
| காலகலனா | காலத்தினால் முடிவு (மரணம்) என்பது |
| ந (அஸ்திஇதி) யத் | இல்லை யென்றால் |
| தன்மூலம் | அதற்குக் காரணம் |
| தவ | உன்னுடைய |
| தாடங்கமஹிமா | தாடங்கயுகளத்தின் மஹிமைதான். |

தாயே! ஜராமரணங்களைப் போக்கடிக்கும் சக்தியுள்ள அம்ருதத்தைப் பானம் செய்தும் ப்ரும்ஹா, இந்த்ரன் முதலான ஸமஸ்த தேவர்களுக்கும் நாசம் ஏற்படுகிறது. உன் பதியோவென்றால் மிகக் கொடியதான ஹாலாஹால விஷத்தைப் பானம்செய்தும் காலனுக்கு வசப்பட்டவராக ஆகவில்லை. இது உன்னுடைய (காலாத்மகமான) தாடங்கங்களின் மஹிமையினால் தான்.

1. ஏற்கனவே 'விரிஞ்சி: பஞ்சத்வம்' என்ற 26-வது சுலோகத்தில் சொல்லிய விஷயத்தையே இதில் வேறுவிதமாக வர்ணிக்கிறார்.

2. ப்ரம்ஹா முதலிய தேவர்கள் அம்ருதத்தை சாப்பிட்டும் கூட இறந்துவிடும்போது மிகக்கொடிய காலகூட விஷத்தைச் சாப்

பிட்ட பரமசிவன் காலனுக்கும் காலனாக,இறக்காமலேயே இருப்பது அம்பாளுடைய பாதிவ்ரத்யத்தின் மஹிமையால் தான் என்று சொல்லப்பட்டது.

3. ஜரை யென்பது கிழத்தன்மைக்கு அடையாளம். கிழத்தன்மை, மரணம் இவையிரண்டும் தான் ப்ராணிகளுக்கு மிகுந்த பயத்தைக் கொடுப்பவை. அம்ருதத்தைச் சாப்பிடுகிறவர்களுக்கு அந்த பயமேகிடையாது என்று சொல்வது வழக்கம். ப்ரம்ஹாதிகள் அம்ருதத்தைச் சாப்பிட்டபோதிலும் மஹாஸம்ஹாரகாலத்தில் அவர்கள் பரமசிவனிடத்தில் லயத்தையடைந்து முடிவையடைகிறபடியால் பரமசிவன் ஒருவரே காலத்தினுடைய வருதிக்கு உட்பட்டவரல்ல என்றும் அது அம்பாள் அவருக்கு பத்னியாக இருப்பதால் தான் என்றும் சொல்லப்பட்டது.

4. காதுகளில் அணியும் தாடங்கங்கள் (ஓலைகள்) ஸுமங்கலீஸ்த்ரீகளின் அடையாளங்களில் ஒன்று என்று சொல்லப்படும். (மங்கள ஸூத்ரமென்ற திருமங்கல்யம் தரிப்பது பிற்காலத்தில் ஏற்பட்டதாகவும் ஆதியில் தாடங்கம் தரிப்பதுதான் ஸுமங்கலியின் அடையாளம் என்றும் சிலர் சொல்லுவார்கள்.)

5. 'தாடங்க யுகளீபூத தபனோடுபமண்டலா' என்று ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியபடி சந்த்ர ஸூர்யர்களையே அம்பாள் தாடங்கங்களாக அணிந்திருக்கிறபடியாலும் அவர்கள் காலத்தின் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்கு மூலமாக இருப்பதாலும் அம்பாள் காலாதீத ஸ்வரூபிணியாக இருக்கிறாள். (ஸுமங்கலீலக்ஷணமான) அவைகளை எப்போதும் காதுகளில் தரித்துக்கொண்டிருப்பதால் அம்பாளுடைய பதிக்கு யாதொரு நாசமும் கிடையாது.

6. இதையேதான் ச்ருதியில்

'யாதே ருத்ர சிவா தனூ:, சிவா விச்வா ஹ பேஷஜீ, சிவா ருத்ரஸ்ய பேஷஜீ, தயா நோ ம்ருட ஜீவஸே'

என்று சொன்னது. சிவனுடைய இரண்டு சரீரங்களில் கோர ரூபமான சரீரமுடைய ருத்ரனை பரம மங்களகரமான ரூபத்தையுடைய சரீரமாகிய சிவா (அம்பாள்) தான் பிழைத்திருக்கும்படி செய்கிறாள் என்று அதில் சொல்லப்பட்டது.

7. ஸ்த்ரீகளுடைய மாங்கல்ய பலத்தினுல்தான் அவர்கள் புருஷர்கள் ஜீவித்திருப்பார்கள் என்று சொல்வது வழக்கம். தாடங்கமானது பதியோடு இருப்பவர்களுடைய அடையாளமானதால் அம்பாளுடைய தாடங்க பலத்தினுல்தான் பரமசிவன் ஹாலாஹால விஷத்தைச் சாப்பிட்டும் இறக்காமலேயிருக்கிருர் என்று சொல்லப் பட்டது.

8. காலத்தை அதீனமாக உடைய ஸூர்ய சந்த்ரர்கள் அம்பாளுடையஸ்தனங்களாகவும் நேத்ரங்களாகவும் தாடங்கங்களா கவுமிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸூர்ய சந்த்ரௌ ஸ்தனௌ தேவ்யா: தாவேவ நயனே ஸ்ம் [ருதௌ |
உபௌ தாடங்கயுகளம் இத்யேஷா வைதிகி ச்ருதி:॥'
(ஸௌபாக்ய பாஸ்கரம்)

**किरीटं वैरिञ्चं परिहर पुरः कैटभभिदः**
**कटोरे कोटीरे स्खलसि जहि जम्भारिमकुटम् ।**
**प्रणम्रेष्वेतेषु प्रसभमुपयातस्य भवनं**
**भवस्याभ्युत्थाने तव परिजनोक्तिर्विजयते ॥ ॥ २९ ॥**

கிரீடம் வைரிஞ்சம் பரிஹர புர: கைடப பித:
கடோரே கோடீரே ஸ்கலஸி ஜஹி ஜம்பாரி மகுடம் |
ப்ரணம்ரேஷ்வேதேஷு ப்ரஸபமுபயாதஸ்ய பவனம்
பவஸ்யாப்யுத்தானே தவ பரிஜனோக்திர் விஜயதே ॥

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| புர: | எதிரே (இருக்கும்) |
| வைரிஞ்சம் கிரீடம் | ப்ரம்ஹாவினுடைய கிரீடத்தை |
| பரிஹர | (காலில்படாதபடி) ஒதுக்கிவிடுங்கள், |
| கைடப பித: | விஷ்ணுவினுடைய |
| கடோரே | (ரத்ன கசிதமாகயிருக்கிறபடியால்) கடினமான |
| கோடீரே | கிரீடத்தில் |
| ஸ்கலஸி | இடறிக்கொள்ளப் போகிறீர்கள், |
| ஜம்பாரி மகுடம் | இந்த்ரனுடைய கிரீடத்தை |
| ஜஹி | தாண்டிவாருங்கள் |

| | |
|---|---|
| | என்று இம்மாதிரி |
| எதேஷு | இந்த ப்ரம்ஹா முதலானவர்கள் |
| ப்ரணம்ரேஷு | (உன்னை) நமஸ்காரம் செய்தவர்களாயிருக்கையில் |
| பவனம் | உன்னுடைய க்ருஹத்திற்கு |
| உபயாதஸ்ய | வந்திருக்கும் |
| பவஸ்ய | பரமசிவனை |
| ப்ரஸபம் | பரபரப்புடன் |
| தவ அப்யுத்தானே | நீ எதிர்கொண்டழைக்கும்போது |
| பரிஜனோக்தி: | உன்னுடைய சேடிகள் சொல்லும் வார்த்தைகள் |
| விஜயதே | ஸர்வோத்கர்ஷமாக விளங்குகின்றன. |

தாயே! உன் பதியான பரமசிவன் உன் வீட்டிற்கு வரும். போது அவரை எதிர்கொண்டழைக்க நீ மிகவும் பரபரப்புடன் எழுந்துபோகையில் வழியில் நமஸ்கரித்திருக்கும் ப்ரம்ஹாதி தேவர்களின் மகுடங்கள் உன் காலில் இடரப்போகின்றனவேயென்று அவைகளிருப்பதை உனக்குச் சொல்லும் ஸ்ஜனங்களின் வார்த்தைகளானவை ஸர்வோத்கர்ஷமாக விளங்குகின்றன.

1. அம்பாளுடைய க்ருஹத்திற்கு பரமசிவன் வந்ததாகவும் அவரை எதிர்கொண்டழைக்க மிகுந்த பரபரப்புடன் அம்பாள் நடந்து வருவதாகவும் அப்போது அம்பாளுடைய ஸன்னிதியில் கிரீடங்களைக் கழற்றிவைத்து தண்டாகாரமாக நமஸ்காரம் செய்து கொண்டிருக்கும் ப்ரம்ஹா முதலானவர்களின் கிரீடங்கள் அம்பாளுடைய கால்களில் பட்டுவிடுமோ என்ற பயத்தால் அவைகளிருக்குமிடத்தை அம்பாளுடைய பரிஜனங்கள் சொல்லி வழிகாண்பிப்பதாகவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. இதனால் அம்பாளுக்கு தன் பதியிடத்திலிருக்கும் மரியாதையும் அனுராகமும் வெளியிடப்படுவதுடன் ப்ரம்ஹா முதலிய அதிகார புருஷர்களும் அம்பாளுடைய ஸன்னிதியில் எப்போதும் நமஸ்காரம் பண்ணியவர்களாக அம்பாளுடைய தயவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லப்பட்டது.

3. விஷ்ணுவானவர் மது, கைடபன் என்ற இரு அஸுரர்களை அம்பாளுடைய அனுக்ரஹத்தினால் ஸம்ஹாரம் செய்ததைப் பற்றி தேவீபாகவதம், தேவீ மாஹாத்ம்யம் முதலிய க்ரந்தங்களில்

சொல்லப்பட்டிருக்கிறது. இதை அனுஸரித்து அவரை இங்கு கைடப பித் என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

4. மேலே சொல்லியபடி அம்பாளுடைய அனுக்ரஹத்தின் காரணமாக மதுகைடபர்களுடைய ஸம்ஹாரமானது (விஷ்ணுவின் மூலமாய்) நடந்ததினால் அம்பாளையே 'மதுகைடப பஞ்ஜனீ' 'மதுகைடப ப்ரசமனீ' என்று சொல்வது வழக்கம்.

स्वदेहोद्भूताभिर्घृणिभिरणिमाद्याभिरभितो
निषेव्ये नित्ये त्वामहमिति सदा भावयति यः ।
किमाश्चर्यं तस्य त्रिनयनसमृद्धिं तृणयतो
महासंवर्ताग्निर्विरचयति नीराजनविधिम् ॥ ॥ ३० ॥

ஸ்வதேஹோத்பூதாபிர் க்ருணிபிரணிமாத்யாபிரபித:
நிஷேவ்யே நித்யே த்வாம் அஹமிதி ஸதா பாவயதிய: |
கிமாச்சர்யம் தஸ்ய த்ரிநயனஸம்ருத்திம் த்ருணயத:
மஹாஸம்வர்தாக்னிர் விரசயதி நீராஜனவிதிம் ॥ 30

| | |
|---|---|
| ஹே நித்யே! | ஆத்யந்தமில்லாத தாயே! |
| ஹே நிஷேவ்யே! | ஸேவிக்கத்தகுந்தவளே! |
| ஸ்வதேஹோத்பூதாபி: | { உன்னுடைய தேஹத்தின் அவயவமான சரணத்திலிருந்து உண்டான |
| க்ருணிபி: | கிரணங்களாகிய |
| அணிமாத்யாபி: | அணிமா முதலிய அஷ்டஸித்திகளால் |
| அபித: (பரிவ்ருதாம்) | சூழப்பட்டவளாய் |
| த்வாம் | உன்னை |
| அஹம் இதி | நான் என்று தாதாத்ம்ய புத்தியுடன் |
| ய: | எவனொருவன் |
| ஸதா பாவயதி | எப்போதும் த்யானம் செய்கிறானோ, |
| த்ரிநயன ஸம்ருத்திம் | பரமசிவனுடைய ஐச்வர்யத்தை (யே) |
| த்ருணயத: | த்ருணமாக நினைக்கும் |
| தஸ்ய | அவனுக்கு |
| மஹாஸம்வர்தாக்னி: | ப்ரளயகால அக்னியானது |
| நீராஜனவிதிம் | ஆரத்தியெடுப்பதை |
| விரசயதி | செய்கிறது |
| (அத்ர) கிம் ஆச்சர்யம்: | அதில் என்ன ஆச்சர்யம்! |

ஆத்யந்தமில்லாத தாயே! உன்னுடைய சரணங்களிலிருந்து வெளிவரும் கிரணங்களாகிய அணிமாதி ஸித்திகளால் சூழப்பட்டவளாக உன்னை எவனொருவன் நிரந்தரமாக த்யானம் செய்கிறானோ அவனுக்கு சிவனுடைய ஐச்வர்யமே த்ருணப்ராயமாக இருக்கையில் ப்ரளய காலாக்னியானது அவனுக்குச் செய்யும் ஆரத்திபோலாகிறது என்பதில் என்ன ஆச்சர்யம்.

1. அம்பாளைத் தன்னோடு அபேதமாக பாவனைசெய்து அதினால் தாதாத்ம்ய ஸித்தியை அடைந்தவனுக்கு ஏற்படும் ஐச்வர்யத்திற்கும் மஹிமைக்கும் ஸமானம் யாதொன்று மில்லையென்று இதில் சொல்லப்பட்டது.

2. 'அணிமாத்யாபி:' என்பது அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி: ப்ராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என்ற அஷ்ட ஸித்திகளைக் குறித்தது. இவைகள் அம்பாளுடைய சரணங்களிலிருந்து உண்டான கிரணங்களென்றும் இவைகள் அம்பாளைச் சூழ்ந்திருக்கின்றனவென்றும் சொல்லப்பட்டது.

3. எவனொருவன் அம்பாளே தான் என்ற அபேதபாவனையுடன் ஸதா த்யானம் செய்கிறானோ அவனுக்கு 'ப்ரம்ஹவித் ப்ரம்ஹைவ பவதி' என்றபடி அம்பாளுடன் தாதாத்ம்யம் ஏற்பட்டுவிடுவதால் அவன் ப்ரளயகாலத்திலும் அழிவில்லாதவனாய், பரமசிவனுடைய ஐச்வர்யத்தைக்கூட த்ருணமாக நினைக்கிறவனாய் ஆகிறபடியால் அவனுக்கு ப்ரளயகாலாக்னியானது நீராஜனம் செய்கிறதென்று சொல்லப்பட்டது.

4. இதில் சொல்லப்பட்ட த்யானப்ராகாரமானது பின்வரும் த்யான ச்லோகத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கவும்.

அருணாம் கருணாதரங்கிதாக்ஷீம்
த்ருத பாசாங்குச புஷ்பபாண சாபாம் |
அணிமாதிபிர் ஆவ்ருதாம் மயூகை:
அஹம் இத்யேவ விபாவயே பவானீம் ||

5. அணிமாதி தேவிகளைப்பற்றி பின்வரும் 'புராராதேரந்த: புரமஸி' என்ற 95வது ச்லோகத்திலும் முன்வந்த 'சதுர்பி: ஸ்ரீ

கண்டை:' என்ற 11வது ச்லோகத்தின் குறிப்புகளிலும் சொல்லி யிருப்பதைப் பார்க்கவும்.

चतुः षष्ट्या तन्त्रैः सकलमतिसन्धाय भुवनं
स्थितस्तत्तत्सिद्धिप्रसवपरतन्त्रैः पशुपतिः ।
पुनस्त्वन्निर्बन्धादखिलपुरुषार्थैकघटना-
स्वतन्त्रं ते तन्त्रं क्षितितलमवातीतरदिदम् ॥ ॥ ३१ ॥

சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை: ஸகலமதிஸந்தாய புவனம்
ஸ்திதஸ் தத் தத் ஸித்தி ப்ரஸவபரதந்த்ரை: பசுபதி: |
புனஸ் த்வன் நிர்பந்தாத் அகில புருஷார்த்தைக கடனு
ஸ்வதந்த்ரம் தே தந்த்ரம் க்ஷிதிதலம் அவாதீதரத் இதம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| பசுபதி: | பரமசிவனுனவர் |
| ஸகலம் புவனம் | எல்லாலோகங்களேயும் |
| தத் தத் ஸித்தி ப்ரஸவ பரதந்த்ரை: | அந்தந்த ஸித்தியை (மாத்திரம்) கொடுப்பதில் ஈடுபட்ட (ஸமர்த்தங்களான) |
| சதுஷ் ஷஷ்ட்யா தந்த்ரை: | அறுபத்திநாலு தந்த்ரங்களால் |
| அதிஸந்தாய | வ்யாபிக்கச் செய்து (மூடச்செய்து) |
| ஸ்தித: | (க்ருதக்ருத்யராக) இருக்கையில் |
| புன: | திரும்பவும் |
| த்வன் நிர்பந்தாத் | உன்னுடைய கட்டாயத்தின் பேரில் |
| அகில புருஷார்த்தைக கடனு ஸ்வதந்த்ரம் | ஸகல புருஷார்த்தங்களேயும் ஒருங்கே கொடுக்கக்கூடிய |
| தே இதம் தந்த்ரம் | உன்னுடைய இந்த தந்த்ரத்தை |
| க்ஷிதிதலம் | பூதலத்தில் |
| அவாதீதரத் | அவதரிக்கும்படிச் செய்தார். |

தாயே! பரமசிவனுனவர் அந்தந்த ஸித்திகளுக்குத் தக்கபடி அறுபத்திநாலு தந்த்ரங்களே வெளியிட்டு க்ருதக்ருத்யராக இருக்கையில் (அவைகளினுல் ஜனங்கள் வ்யாமோஹம் அடைந்து துராசாரங்களில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்த) உன்னுடைய கட்டாயத்தினுல் திரும்பவும் ஸகல புருஷார்த்தங்களேயும் ஒருங்கக்கொடுக்கக்கூடிய உன்னுடைய இந்த தந்த்ரத்தை பூலோகத்திற்கு வெளியிட்டார்

1. 'குருசிஷ்ய பதே ஸ்தித்வா ஸ்வயமேவ ஸதாசிவ: |
ப்ரச்னோத்தர பதைர் வாக்யை: தந்த்ரம் ஸமவதார
[யத் ||'

என்றபடி ஆதியில் பரமசிவனானவர் பார்வதிக்கு அறுபத்திநாலு தந்த்ரங்களை சொன்னார். (அவைகளின் விபரங்களும், லக்ஷணங்களும் லக்ஷ்மீதரரால் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் சிலவற்றின் பெயர்கள் பின்வருமாறு:— மஹாமாயசம்பரம், யோகினீஜால சம்பரம், தத்வசம்பரம், பைரவாஷ்டகம் (ஸித்தபைரவ, வடுகபைரவ, கங்காளபைரவ, காலபைரவ, காலாக்னிபைரவ, யோகினீபைரவ, மஹாபைரவ, சக்திபைரவ,) பஹுரூபாஷ்டகம் (ப்ராம்ஹீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, சிவதூதி) முதலியவை.

2. இவைகள் ஒவ்வொன்றும் ஓரோர் பலத்தைக் கொடுக்கக்கூடியவைகள். (வேறு பலத்தைக் கொடுக்கும் விஷயத்தில் இதர தந்த்ரங்களின் ஒத்தாசையை அபேக்ஷிக்கின்றவை.) அல்லது அவைகளின்படி ஸாதகம் செய்பவர்களின் மனதிலிருக்கும்படியான ஓரோர் ஸித்திகளைக் கொடுக்கக்கூடியயது. பரம காருண்ய மூர்த்தியான பரமசிவன் அவைகளை அந்தந்த ஜாதிகளுக்குத் தகுந்தவாறு ஏற்படுத்தியிருந்தபோதிலும் அம்மாதிரி அதிகாரிபேதம் தெரியாத பாமர ஜனங்கள் அவைகள் கொடுக்கக்கூடிய ஐஹிகபலத்தில் மோஹமடைந்தவர்களாய் எல்லோரும் வித்யாஸமின்றி அனுஷ்டிக்கத் தொடங்கிவிட்டார்கள். ஆகவே துராசாரங்களும் துஷ்ப்ரயோகங்களும் மேலிடத்தொடங்கிவிட்டன.

3. மேலே சொல்லிய அறுபத்திநாலு தந்த்ரகளும் அர்த்தகாமங்களாகிய ஐஹிகமான பலன்களைக் கொடுக்கிறபடியால் அவைகள் வைதிகமான மார்க்கத்திற்கு ஒத்துவாரதவை.

4. இம்மாதிரி உபாஸகர்கள் வ்யாமோஹமடைந்து க்ஷுத்ரமான பலன்களுக்கு ஆசைப்பட்டுக் கெட்டுப்போவதைப் பார்த்த அம்பாளானவள் அவர்கள்மீது பரிதாபப்பட்டு அவர்களைக் கடைத்தேற்ற எண்ணம்கொண்டு சுத்தஸத்வமான ஸ்ரீ வித்யையை ப்ரதிபாதிக்கிற சாஸ்த்ரத்தை வெளியிடவேண்டுமென்று பரமசிவனை ப்ரா

ர்த்தித்ததாகவும் அவர் அம்பாளுடைய வேண்டுகோளுக்கு இண ங்கி அம்மாதிரியான சாஸ்த்ரத்தை வெளியிட்டாரென்றும் இங்கே சொல்லப்பட்டது.

5. ஸ்ரீ வித்யையைப் பற்றிச்சொல்லும் தந்த்ரங்கள் சந்த்ர களாவித்யாஷ்டகங்களென்றும் சுபாகமதந்த்ர பஞ்சகங்களென்றும் இருவகைப்பட்டன. இவைகளைத்தான் 'அகில புருஷார்த்தைக கடனு ஸ்வதந்த்ரம்' என்றபடி உபாஸகர்களுக்கு ஐஹிக ஆமுஷ்மிகங் களான ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடியவைகளென்று சொல்லப்பட்டது.

6. சந்த்ரகளாவித்யாஷ்டகமென்பது சந்த்ரகளா, ஜ்யோத் ஸ்னுவதி, கலாநிதி, குலார்ணவம், குலேச்வரீ, புவனேச்வரீ, பார் ஹஸ்பத்யம், துர்வாஸமதம் என்பன. இவைகளின்படி அனுஷ் டிப்பதற்கு த்ரைவர்ணிகர்களான ப்ராம்ஹண, க்ஷத்ரிய, வைச்யர் களுக்கும் சூத்ரர்களுக்கும் அதிகாரம் உண்டு. இவைகளில் ப்ரத க்ஷிணக்ரமமான ஸவ்யமார்க அனுஷ்டானமானது ப்ராம்ஹணர் களுக்கு ஏற்பட்டது. மற்றவர்களை உத்தேசித்து ஏற்பட்டது அபஸவ்ய மார்கமாகிய வாமாசார அனுஷ்டானம்.

7. சுபாகம பஞ்சகங்களான வஸிஷ்ட, ஸனக, சுக, ஸன ந்தன, ஸனத்குமார ஸம்ஹிதைகளில் வைதிகமான மார்க்கத்தை யொட்டிய அனுஷ்டானங்களைச் சொல்லப்பட்டிருக்கிறது. அவை கள் அந்தந்த முனீச்வரரால் வெளியிடப்பட்டவை. இவைகளில் சொ ல்லப்பட்டது தான் ஸமயாசாரமென்பது. இதுவேதான் ஆசார்யா ளுடைய மதம். இவைகளை ஒட்டித்தான் லக்ஷ்மீதரர் இந்த க்ரந்தத் திற்கு வ்யாக்யானம் செய்திருப்பது.

8. சதுஷ்ஷஷ்டி தந்த்ரங்களில் சொல்லியிருப்பதைக் குல மார்க்கமென்றும், சந்த்ரகளாவித்யாஷ்டங்களில் சொல்லியிருப்ப தை மிச்ரமார்கமென்றும் பெரியோர்கள் சொல்லுவார்கள்.

'மிச்ரகம் கௌலமார்கம் ச பரித்யாஜ்யம் ஹி சாங்கரி'

என்று சொன்னபடி (வேதத்தையே ப்ரமாணமாகவுடைய) வைதி கர்களால் இவையிரண்டும் அனுஷ்டிக்கக் கூடாதவை. வைதிகமான

அனுஷ்டானத்தையுடையவையும் கேவலம் ஸமயமதத்தையே சொல்லுகிறவையுமான சுபாகம பஞ்சகமே வைதிகர்களால் ஆதரிக்கப்படவேண்டியவை. 'ஸஹ மயா' என்றபடி அம்பாளோடு தாதாம்யமாக இருப்பதையே முக்யமான உத்தேசமாக உடையதாகையால் இந்த மதத்திற்கு ஸமயமதம் என்று பெயர்.

9. 'இதம் தே தந்த்ரம்' என்று சொல்லப்பட்டது ஸ்ரீமத் ஷோடசாக்ஷரீயாகிய ஸ்ரீ வித்யையென்றும், அதை ப்ரதிபாதிக்கும் சாஸ்திரங்களென்றும், அவைகளிலும் முக்யமாக ஸமயமதத்தைச் சொல்லும் சுபாகம பஞ்சகமென்றும் வெவ்வேறு மாதிரி வ்யாக்யானங்கள் செய்திருக்கிறார்கள். சிலர் இது ஞானார்ணவ தந்த்ரத்தைச் சொல்லுகிறது என்றும் இன்னம் சிலர் 'ஸ்வதந்த்ரம்' என்று பெயருள்ள தந்த்ரமானது இங்கு சொல்லப்படுகிறதென்றும் வெவ்வேறு அபிப்ராயப் படுகிறார்கள். இதைப்பற்றிய பரிசிலனையானது வாமகேச்வதந்த்ரத்தின் பாகமாகிய நித்யாஷோடசிகார்ணவமென்பதற்கு பாஸ்கரராயர் இயற்றியிருக்கும் ஸேதுபந்தம் என்ற வ்யாக்யானத்தில் காணப்படும்.

10. 'அகில புருஷார்த்தைக கடனாத் ஸ்வதந்த்ரம்' என்ற பாடாந்தரத்தில் ஸகல புருஷார்த்தங்களையும் சேர்ந்து ஒருமிக்கக் கொடுப்பதினால் (இதர தந்த்ரங்களை ஆச்ரயிக்காமல்) தனியாக இருக்கும் தந்த்ரம் என்று அர்த்தம்.

शिवः शक्तिः कामः क्षितिरथ रविः शीतकिरणः
सरो हंसः शक्रस्तदनु च परामारहरयः ।
अमी हृल्लेखाभिस्तिसृभिरवसानेषु घटिताः
भजन्ते वर्णास्ते तव जननि नामावयवताम् ॥ ॥ ३२ ॥

சிவ: சக்தி: காம: க்ஷிதிரத ரவிச்சீதகிரண:
ஸ்மரோ ஹம்ஸ: சக்ரஸ்ததனு ச பராமாரஹரய: |
அமீ ஹ்ருல்லேகாபிஸ் த்ரிஸ்ருபிரவஸானேஷு கடிதா:
பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜனனி நாமாவயவதாம் || 32

| | |
|---|---|
| ஹே ஜனனி! | தாயே! |
| சிவ: | க காரமும் |
| சக்தி: | ஏ காரமும் |
| காம: | ஈ காரமும் |
| க்ஷிதி: | ல காரமும் |
| அத | அதன்பிறகு |
| ரவி: | ஹ காரமும் |
| சீதகிரண: | ஸ காரமும் |
| ஸ்மர: | க காரமும் |
| ஹம்ஸ: | ஹ காரமும் |
| சக்ர: | ல காரமும் |
| ததனுச | அதன் பிறகு |
| பரா மார ஹரய: | ஸ காரமும், க காரமும், ல காரமும் |
| அமீ வர்ண: | இந்த அக்ஷரங்கள் |
| திஸ்ருபி: ஹ்ருல்லேகாபி: | மூன்று ஹ்ரீங்காரங்களால் |
| அவஸானேஷு | முடியும் இடங்களில் |
| கடிதா: | சேர்க்கப்பட்டவைகளாய் |
| தவ | உன்னுடைய |
| நாமாவயவதாம் | மந்த்ரத்தின் அங்கங்களாக |
| பஜந்தே | ஆகின்றன. |

சிவ, சக்தி, காம, ப்ருதிவி பீஜங்கள் ஒரு பிரிவும் ரவி, சந்த்ர, ஸ்மர, ஹம்ஸ சக்ர பீஜங்கள் அடுத்த பிரிவும் பரா, மார, ஹரி பீஜங்கள் கடைசிபிரிவுமாகவும் அந்தந்தப் பிரிவுகளின் கடைசியில் சேர்த்த ஹ்ரீம்காரங்களும் உன்னுடைய மந்த்ரத்தின் அக்ஷரங்களாக ஆகின்றன.

1. இதில் அம்பாளுடைய பஞ்சதசீமந்த்ரத்தின் 'காதி' என்கிற ரூபமானது சொல்லப்பட்டது. ஒவ்வொரு எழுத்தும் அந்தந்த தேவதையின் பீஜாக்ஷரம். உதாரணமாக, க என்பது சிவ பீஜம், ஏ என்பது சக்தி பீஜம், ஈ என்பது காம பீஜம். இம்மாதிரியே மற்றவையும். ஹ்ருல்லேகா என்பது ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரம். இதற்கு மாயா பீஜமென்றும் புவனேச்வரீ பீஜமென்றும் சிந்தாமணி பீஜமென்றும் பெயர். ஹ்ரீ என்ற பதத்திற்கு லஜ்ஜை என்று அர்த்தமாகையால் ஹ்ரீம் என்ற பீஜத்திற்கு லஜ்ஜா பீஜம் என்று

பெயர். (ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்தில் 740 வது நாமமான 'லஜ்ஜா' என்பதிலும் ஸ்ரீ லலிதா த்ரிசதியில் 'லஜ்ஜாபத ஸாமாராத்யா' என்பதிலும் இதைத்தான் சொல்லப்பட்டது.) இந்த மாயாபீஜமானது மிகவும் விசேஷமான மஹிமையுள்ளதாகையாலும் தன்னை ஜபிப்பார்க்கு விரும்பியவற்றையெல்லாம் கொடுக்கும் ப்ரபாவமுள்ளதாகையாலும் அதற்கு சிந்தாமணி பீஜமென்று பெயர். அம்பாளுடைய முக்யமான பீஜாக்ஷரம்.

2. இவைகளில் க, ஹ இந்த பீஜாக்ஷரங்கள் சிவாக்ஷரங்களென்றும் பாக்கி ஏ, ஈ, ல, ஸ என்ற பீஜாக்ஷரங்கள் சக்த்யக்ஷரங்களென்றும் ஹ்ரீங்காரமானது சிவன், சக்தி இருவர்களுடைய ஸம்மேளனமான அக்ஷரமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

'க த்ரயம் ஹ த்வயம் சைவ சைவோபாக: ப்ரகீர்த்தித: |
சக்தயக்ஷராணி சேஷாணி ஹ்ரீங்கார உபயாத்மக: ||'
(ஸ்ரீ லலிதாத்ரிசதி—பலச்ருதி பாகம்).

3. இந்த பஞ்சதசாக்ஷரீ மந்த்ரமானது அம்பாளுடைய முக்யமான மந்த்ரமாகையால் அளவில்லாத மஹிமை பொருந்தியது. ஸாமான்யமாகக் கிடைக்கக்கூடியதல்ல. அனேக ஜன்மங்களில் செய்த புண்யங்களின் பலனாக இதை உபதேசம் பெறும் பாக்யம் கிடைக்குமாகையால் இதின் மஹிமை ஸாமான்யமன்று. எவனுக்கு மேலே ஜன்மம் கிடையாதோ, எவன் ஸாக்ஷாத் சங்கர ஸ்வரூபமாக இருக்கிறானோ அவன்தான் இந்த மந்த்ர ராஜத்தைக் கிடைக்கப் பெறுவானென்று சொல்லப்பட்டது.

'யஸ்யநோ பச்சிமம் ஜன்ம யதிவா சங்கர: ஸ்வயம் |
தேனைவ லப்யதே வித்யா ஸ்ரீமத் பஞ்ச தசாக்ஷரீ||'

4. இப்பேர்ப்பட்ட மஹாமந்த்ரமானது மூன்று பிரிவுடையது. இந்த ச்லோகத்தில் சொல்லியிருக்கும் 12 அக்ஷரங்களில் முதல் நான்கையும் ஹ்ரீம்காரத்தையும் சேர்த்தால் ஏற்படுவது முதல் கூடம், வாக்பவ கூடம் என்று பெயர். 5 முதல் 9 முடிய அக்ஷரங்களையும் ஹ்ரீம்காரத்தையும் சேர்த்தால் ஏற்படுவது இரண்டாவது கூடம், காமராஜ கூடம் என்று பெயர். 10 முதல் 12 முடிய அக்ஷரங்களையும் ஹ்ரீம்காரத்தையும் சேர்த்தால் ஏற்படுவது மூன்றாவது கூடம், சக்தி கூடம் என்று பெயர். இந்த மூன்று

கூடங்களும் சேர்ந்தது (கூடத்ரயம்) பஞ்சதசி என்ற பஞ்சதசா க்ஷரி மஹாமந்த்ரம்.

5. 'மூலகூடத்ரயகளேபரா' என்று ஸ்ரீலலிதாஸஹஸ்ர நாமத்தில் சொல்லியபடி அம்பாளுடைய முக்ய மந்த்ரமாகிய பஞ்ச தசியை அம்பாளுடைய ஸ்தூல ரூபத்திற்கு ஸமானமாகவும் அதின் மூன்று கூடங்களையும் அந்த ஸ்தூலரூபத்தின் பிரிவுகளுக்கு ஸமா னமாகவும் சொல்லப்படும். வாக்பவ கூடத்தை முகத்திற்கும் காம ராஜ கூடத்தை கழுத்து முதல் இடுப்பு வரையில் உள்ள பாகத்திற் கும் சக்தி கூடத்தை இடுப்பிலிருந்து பாதம் முடிய உள்ள பாகத் திற்கும் ஸமானமாகச் சொல்லப்பட்டது.

வாக்காமசக்தி• கூடை: அவயவசோ விக்ரஹோ மாது: |
ப்ரதிபாத்யோ அத்ர ஆகண்டாத் ஆமத்யாத் ஆச பாதாக்ராத் ||
(வரிவஸ்யாரஹஸ்யம்)

இதைத்தான் ஸ்ரீலலிதாநாமஸாஹஸ்ரத்தில் சொல்லியிருக்கிறது—

ஸ்ரீமத் வாக்பவ கூடைக ஸ்வரூப முக பங்கஜா |
கண்டாத: கடிபர்யந்த மத்யகூடஸ்வரூபிணீ |
சக்தி கூடைகதாபன்ன கட்யதோ பாகதாரிணீ'

6. ஷட்சக்ரங்களடங்கிய குலப்ரதேசத்தை அக்னி, ஸூர்ய ஸோம கண்டங்களாகப்பிரித்து அவைகளில் ப்ரம்ஹக்ரந்தி விஷ்ணு க்ரந்தி, ருத்ரக்ரந்தி என்ற மூன்று க்ரந்திகளிருப்பதாக ஏற்கனவே சொல்லப்பட்டது. அதேமாதிரி பஞ்சதசீ மந்த்ரத்தின் மூன்று பாகங்களையும் சொல்லலாம். வாக்பவ கூடத்தின் முதல் நாலு அக்ஷரங்கள் அடங்கியதை அக்னி கண்டமென்றும் அதிலுள்ள ஹ்ரீம்காரத்தை ப்ரம்ஹக்ரந்தியென்றும் காமராஜ கூடத்தின் முதல் ஐந்து அக்ஷரங்கள் அடங்கியதை ஸூர்யகண்டமென்றும் அதி லுள்ள ஹ்ரீம்காரத்தை விஷ்ணு க்ரந்தியென்றும் சக்தி கூடத்தின் முதல் மூன்று அக்ஷரங்கள் அடங்கியதை ஸோமகண்டமென்றும் அதிலுள்ள ஹ்ரீம்காரத்தை ருத்ர க்ரந்தியென்றும் சொல்லப்படும்.

'த்ரிகண்டோ மாத்ருநாமந்த்ர: ஸோமஸூர்யானலாத்மக:|'

3. இதேமாதிரி இந்த கூடத்ரயத்தை "இச்சா, ஞான, க்ரியா சக்திகளாகவும் ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தியென்ற அவ

ஸ்த்நா த்ரயமாகவும் விச்வ, தைஜஸ, ப்ராக்ஞனென்ற வ்ருத்தி த்ர யமாகவும் ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களாகவும் இன்னம் வேறு பிரிவுகளாகவும் சொல்லப்படும்.

8. அம்பாளுடைய பஞ்சதாக்ஷர மந்த்ரங்கள் இரு வகை. ஒன்று க என்ற அக்ஷரத்தை முதலாக உடையது (காதி) இங்கு சொல்லப்பட்டது. மற்றொன்று ஹ என்ற அக்ஷரத்தை முதலாக உடையது (ஹாதி) அடுத்த ச்லோகத்தில் சொல்லப்படுவது.

9. ஸ்ரீமத் த்ரிபுரஸுந்தரியின் மந்த்ரமானது (16) ஷோட சாக்ஷரங்களையுடையது என்பதும் அது பஞ்சதசாக்ஷரியோடு மிக வும் ரஹஸ்யமானதும் குருவின் உபதேசத்தின் மூலமாகத்தெரிந்து கொள்ள வேண்டியதுமான ஒரு அக்ஷரம் சேர்ந்து ஏற்பட்டது என்பதும் ஸ்ரீவித்யையின் அதிரஹஸ்யமான விஷயம். அந்த அக்ஷ ரம்தான் அக்னி ஸூர்யஸோம கண்டங்களுக்கும் மேல்பட்ட சந்த்ரகலா கண்டமாகும்.

10. இந்த ச்லோகத்தில் மேலே சொல்லிய ஷோட சாக்ஷரீ மந்த்ரத்தைத்தான் சொல்லப்பட்டிருப்பதாக லக்ஷ்மீதாரு டைய அபிப்பிராயம். ஹாதிவித்யையாயினும் ஸரி, காதிவித்யை யாயினும் ஸரி, இரண்டும் ஷோடசாக்ஷரியில் அடங்கியவையென் றும் ஷோடசியிலிருந்து வேறானதாக பஞ்சதசியில்லையென்றும் சொல்லப்படும்.

स्मरं योनिं लक्ष्मीं त्रितयमिदमादौ तव मनोः
निधायैके नित्ये निरवधिमहाभोगरसिकाः ।
भजन्ति त्वां चिन्तामणिगुणनिबद्धाक्षवलयाः
शिवाग्नौ जुह्वन्तः सुरभिघृतधाराहुतिशतैः ॥ ॥ ३२ ॥

ஸ்மரம் யோனிம் லக்ஷ்மீம் த்ரிதயமிதமாதௌ தவ மனோ:
நிதாயைகே நித்யே நிரவதிமஹாபோக ரஸிகா: |
பஜந்தி த்வாம் சிந்தாமணிகுண நிபத்தாக்ஷவலயா:
சிவாக்னௌ ஜுஹ்வந்தஸ் ஸுரபிக்ருத தாராஹுதி
[சதை: ||

| | |
|---|---|
| ஹே நித்யே! | ஆத்யந்தமில்லாத தாயே! |
| தவ மனோ: | உன்னுடைய மந்த்ரத்தின் |
| ஆதௌ | முதலில் |
| ஸ்மரம் | காமராஜ பீஜத்தையும் |
| யோனிம் | புவனேச்வரீ பீஜத்தையும் |
| லக்ஷ்மீம் | ஸ்ரீ பீஜத்தையும் |
| இதம் த்ரிதயம் | இந்த பீஜத்ரயத்தையும் |
| நிதாய | சேர்த்து |
| நிரவதி மஹாபோகரஸிகா: | இடைவிடாத நித்யானுபவத்தை அறிந்தவர்களான யோகீச்வரர்கள் |
| ஏகே | சிலர் |
| சிந்தாமணி குணநிபத்தாக்ஷவலயா: | சிந்தாமணிகளின்கூட்டங்கள்சேர்க்கப்பட்ட அக்ஷமாலைகளையுடையவர்களாய் |
| சிவாக்னௌ | த்ரிகோணத்திலிருக்கப்பட்ட சிவாக்னியில் |
| ஸுரபிக்ருத தாராஹுதிசதை: | காமதேனுவினுடைய நெய்யின்தாரைகளால் செய்யப்பட்ட கணக்கில்லாத ஆஹுதிகளால் |
| ஜுஹ்வந்த: | ஹோமம் செய்கிறவர்களாய் |
| த்வாம் பஜந்தி | உன்னை ஸேவிக்கிறார்கள் |

தாயே! ஸமயாசார பரர்களும் நித்யானுபவ முடையவர்களுமான சிலயோகிச்வரர்கள் உன்னுடைய மந்த்ரத்தின் முன்னுக ஸ்மர,யோனி, லக்ஷ்மீ பீஜங்களை சேர்த்து, சிந்தாமணிகளாலான அக்ஷமாலைகளுடையவராய், காமதேனுவினுடைய நெய்யின் தாரைகளால் (த்ரிகோணமாகிய பிந்து ஸ்தானத்திலிருக்கும்) சிவாக்னியில் உன்னைக்குறித்து ஹோமம் செய்துகொண்டு உன்னை ஸேவிக்கிறார்கள்.

1. 'ஏகே' என்பதினுல் ஸமயாசாரத்தை அறிந்த சிலரைக் குறித்தது. இவர்களுடைய மதத்தின்படி மந்த்ரத்திற்கு புரச்சரணம் (முன்னுல் செய்யவேண்டிய க்ரியைகள்) யாதொன்றும் கிடையாது. ஜபம் கிடையாது. பாஹ்யமான ஹோமம் கிடையாது. பாஹ்யமான பூஜாவிதிகள் யாதொன்றும் கிடையாது அவர்கள் செய்யும் ஸகல உபாஸனையும் அவர்களுடைய ஹ்ருதய கமலத்திலேயே அனுஷ்டிக்கப்படும்.

2. அந்த மதத்தின்படி ஸஹஸ்ரதளகமலத்திலிருக்கும்படியான அம்பாளை அங்கிருந்து தங்களுடைய ஹ்ருதய கமலத்தில் ஸ்தாபித்து அம்பாளைக் குறித்து சிவாக்னியில் (மானஸீகமாக) ஆஹுதி செய்வதை இங்கு சொல்லப்பட்டது,

3. சிவா என்றால் சக்தி, த்ரிகோணம் என்று அர்த்தம். ஸ்வாதிஷ்டானத்திலிருக்கும் அக்னியை (ஜாதகர்மம் முதலிய ஷோடச கர்மாக்களால்) ஸம்ஸ்கரித்து, பிந்துஸ்தானமாகிய த்ரிகோணத்தில் அந்த அக்னி இருப்பதாக பாவித்து அதில் அம்பாளைக் குறித்து ஹோமம் பண்ணுவதாகச் சொல்லப்பட்டது.

4. 'ஸ்மரம் யோனிம் லக்ஷ்மீம்' என்பதினால் க்லீம்காரத்தையும் ஹ்ரீம்காரத்தையும் ஸ்ரீம்காரத்தையும் சொன்னதாகவும் அந்த பீஜத்ரயத்தையும் பஞ்சதசியின் முன்னால் சேர்த்துச் சொல்வதாக சிலர் அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள். வேறு சிலர் இந்த ச்லோகம் ஹாதி என்கிற பஞ்சதசாக்ஷரியின் இரண்டாவது பேதமான மந்த்ரத்தைச் சொல்வதாக அபிப்ராயப்படுகிறார்கள். இவர்கள் சொல்வது—'தவமனோ: ஆதௌ' என்பதினால் முன் ச்லோகத்தில் சொல்லிய காதியான பஞ்சதசாக்ஷரியிலிருக்கும் முதல் மூன்று அக்ஷரங்களுக்கு பதிலாக ஸ்மரம்—ஹகாரம், யோனிம்—ஸகாரம், லக்ஷ்மீம்—ககாரம் என்பவைகளை வைத்து ஏற்படும் ஹாதி (ஹ என்ற அக்ஷரத்தை ஆதியாக உடையது) என்ற மந்த்ரமென்றும் சொல்லுகிறார்கள். வேறு சிலர் தகுந்த நியாயங்களை எடுத்துக் காட்டி முந்திய ச்லோகமானது ஹாதி வித்யையையும் இந்த ச்லோகம் காதி வித்யையையும் சொல்லுகிறதாக அபிப்ராயப்படுகிறார்கள். இவர்கள் மதப்படி முந்திய ச்லோகத்தில் வரும் 'சிவ: சக்தி: காம:' என்றவை முறையே ஹகார, ஸகார, ககாரங்களும் இந்த ச்லோகத்தில் வரும் 'ஸ்மரம் யோனிம் லக்ஷ்மீம்' என்றவை முறையே ககாரமும் ஏகாரமும் ஈகாரமும் என்று சொல்லப்படும்.

5. ஹாதி வித்யையானது அகஸ்த்ய மஹர்ஷியினுடைய பத்னியாகிய லோபாமுத்ரையினால் கண்டுபிடிக்கப்பட்ட மந்த்ரமாகையினால் அதற்கு லோபாமுத்ராவித்யா என்றும் பெயருண்டு. லோபாமுத்ரையானவள் அம்பாளுடைய முக்யமான பக்தர்களில் ஒரு

வள் என்பது 'லோபாமுத்ரார்ச்சிதா' என்று ஸ்ரீலலிதாஸஹஸ்ர நாமத்தில் வரும் நாமத்திலிருந்தும் 'பத்ன்யஸ்ய லோபாமுத்ராக்யா மாமுபாஸ்தே அதி பக்திதः' என்று ஸ்ரீலலிதாத்ரிசதியில் வரும் அம்பாளுடைய வாக்யத்திலிருந்தும் தெளிவாக ஏற்படும்.

மனுச் சந்த்ர: குபேரச்ச லோபாமுத்ரா ச மன்மத: |
அகஸ்திரக்னி: ஸூர்யச்ச இந்த்ர: ஸ்கந்த: சிவஸ்ததா |
க்ரோத பட்டாரகோ தேவ்யா: த்வாதசாமீ உபாஸகா:।।'

என்றபடி மனு முதலான பன்னிரண்டு உபாஸகர்கள் வெவ்வேறு விதமாக ஸ்ரீவித்யா ரூபிணியான அம்பாளை உபாஸனை செய்ததால் ஸ்ரீவித்யையின் ப்ரஸ்தாரங்கள் அவர்கள் பெயருடையதாகப் பன்னிரண்டு உண்டு. அவைகளின் விபரங்கள் ஞானார்ணவதந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. [லோபாமுத்ரையின் பதியான அகஸ்த்யரை இங்கு அகஸ்தி: என்று சொல்லப்பட்டிருக்கிறது. க்ரோதபட்டாரகர் என்பவர் தூர்வாஸ மஹர்ஷி. இவர் அத்ரிமஹர்ஷி, அனஸூயை இவர்களின் பிள்ளை, தத்தாத்ரேயருடைய ஸஹோதரர். இவரால் செய்யப்பட்ட லலிதாஸ்தவரத்னமென்ற ஆர்யாத்விசதியும் த்ரிபுராமஹிம்ந ஸ்தோத்ரமும் அம்பாளுடைய பக்தர்களால் அவச்யம் வாசிக்கப்படவேண்டியவை.]

**शरीरं त्वं शंभोः शशिमिहिरवक्षोरुहयुगं**
**तवात्मानं मन्ये भगवति नवात्मानमनघम् ।**
**अतः शेषः शेषीत्ययमुभयसाधारणतया**
**स्थितः संबन्धो वां समरसपरानन्दपरयोः ॥ ॥ ३४ ॥**

சரீரம் த்வம் சம்போ: சசிமிஹிர வக்ஷோருஹயுகம்
தவாத்மானம் மன்யே பகவதி நவாத்மானம் அனகம் |
அத: சேஷ: சேஷீத்யயம் உபயஸாதாரணதயா
ஸ்திதஸ்ஸம்பந்தோ வாம் ஸமரஸ பரானந்தபரயோ: ।।

| | |
|---|---|
| ஹே பகவதி ! | தாயே ! |
| சம்போ: | ஆனந்தபைரவராகிய பரமசிவனுக்கு |
| த்வம் | மஹா பைரவியாகிய நீ |
| சசி மிஹிர வக்ஷோருஹயுகம் | சந்த்ர ஸூர்யர்களை இருஸ்தனங்களாக உடைய |

| | |
|---|---|
| சரீரம் | சரீரமாக (இருக்கிறாய்) |
| தவ ஆத்மானம் | உன்னுடைய ஸ்வரூபத்தை |
| அனகம் | தோஷமில்லாததும் |
| நவாத்மானம் | நவவ்யூஹாத்மகமான ஆனந்த பைரவருடைய ரூபமாக |
| மன்யே | நினைக்கிறேன் |
| அத: | ஆகையினாலே |
| சேஷ: | அப்ரதானமாயிருப்பவர் |
| சேஷீ | ப்ரதானமாயிருப்பவர் |
| இதி அயம் ஸம்பந்த: | என்ற இந்த சேஷசேஷீ பாவரூபமான ஸம்பந்தமானது |
| ஸமரஸபரானந்தபரயோ: | ஸமானமான குணங்களோடு இருப்பதில் ஏற்படும் ஆனந்தத்தில்ஈடுபட்டிருக்கும் |
| வாம் | உங்களிருவருக்கும் |
| உபயஸாதாரணதயா | பொதுவாக |
| ஸ்தித: | இருக்கிறது |

1. மேலே 'தவாக்ஞா சக்ரஸ்த்தம்' என்ற ச்லோகம் முதல் ஆறு ச்லோகங்களில் ஸமயமதத்தைச் சொல்லப்போவதால் அதற்கு முன்னதாகவும் அதைத் தெரிந்துகொள்வதற்கு உபயோகமாகவும் இதிலும் இதற்கடுத்த ச்லோகத்திலும் கௌலமதத்தைப் பற்றிச் சொல்லுகிறார். பூர்வகௌலம், உத்தரகௌலம் என்ற கௌலமதத்தின் இரு பிரிவுகளில் பூர்வகௌலத்தை இந்த ச்லோகத்திலும் உத்தர கௌலத்தை இதனடுத்ததிலும் சொல்லப்பட்டது.

2. ஸுர்ய சந்த்ரௌ ஸ்தனௌ தேவ்யா: தாவேவ நயனே ஸ்ம்ருதௌ |

உபௌ தாடங்கயுகளம் இத்யேஷா வைதிகீ ச்ருதி: ||'

என்றபடி ஸுர்ய சந்த்ரங்களை அம்பாளுடைய நேத்ரங்களாகவும், தாடங்கங்களாகவும் (இங்கே) ஸ்தனங்களாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

3. 'ஸமரஸ பரானந்த பரயோ:'—ஸாமரஸ்ய பாவம் (சேர்ந்திருக்கும் தன்மை) அடைந்த, பரானந்த:—ஆனந்த பைரவர், பரா—ஆனந்தபைரவீ ரூபமான சித்சக்தி, ஆகிய, என்றும் அர்த்தம் பண்ணலாம்.

4. சிவன், சக்தி இருவர்களும் ஸாம்யமாய்—ஸமானமாய் இருப்பதால் சிவனுக்கு ஸமய: என்றும் சக்திக்கு ஸமயா என்றும் பெயர். இந்த ஸாம்யமானது ஐந்து விதம் (ஸாம்ய பஞ்சகம்). சக்ரம் முதலியவைகளில் பூஜையில் ஸமமாயிருப்பது அதிஷ்டான ஸாம்யம். ஸ்ருஷ்டி முதலிய க்ரியைகளில் ஸமமாயிருப்பது அனுஷ்டான ஸாம்யம். ந்ருத்யம் முதலிய க்ரியைகளில் ஸமமாயிருப்பது அவஸ்த்தான ஸாம்யம் சிவ, சிவா, பைரவர், பைரவீ முதலிய நாமங்களால் நாமஸாம்யம். சிகப்பு நிறம், த்ரிநயனம் முதலியவை களால் ரூபஸாம்யம்.

5. இம்மாதிரி ஸாம்யத்தோடு இருப்பதுடன் ஒருவரில் ஒருவர் இரண்டறக் கலந்திருப்பதால் யார் ப்ரதானம், யார் ப்ரதான மில்லாதவர் என்பது கிடையாது என்பதாக இங்கே சொல்லப்பட் டிருக்கிறது. அதையே வேறு விதமாக, சேஷ சேஷீ பாவம் இரு வருக்கும் ஸமானமாக இருக்கிறதென்று சொல்லப்பட்டது.

6. சேஷன் என்றால் மிகுதியாக இருப்பவன், இரண்டாவ தாக (அப்ரதானமாக) இருப்பவன் என்றும் சேஷீ என்றால் ப்ரதா னமாக இருப்பவன் என்றும் அர்த்தம். அம்பாள் ஆனந்தபைரவ ருடைய (ஸ்தனங்களோடு கூடிய) சரீரமாக இருப்பதால் அவருக்கு சேஷபூதையாகயிருக்கிறாள். அம்பாளுடைய பரப்ரம்ஹஸ்வரூபமே ஆனந்த பைரவருடைய நவவ்யூஹாத்மகமான ஸ்வரூபமாக இருக் கிறபடியால் அவர் அம்பாளுக்கு சேஷபூதனாக இருக்கிறார். ஆகவே இருவருக்கும் சேஷசேஷீபாவமானது ஸமானமாக இருக்கிற தென்று ஏற்படுகிறது.

7. பிறப்பு, இறப்பு, ஆதி, அந்தம், வித்யை, அவித்யை இவைகளை அறிந்தவர் பகவான், பகவதி.

'உத்பத்திம் ச விநாசம் ச பூதானாம் ஆகதிம் கதிம் |
வேத்தி வித்யாம் அவித்யாம் ச ஸ வாச்யோ பகவான் இதி ||

8. நவாத்மா என்று மஹாபைரவர் நவவ்யூஹாத்மகமாக இருப்பதைச் சொன்னது. அவையாவன—

'காலவ்யூஹ: குலவ்யூஹோ நாமவ்யூஹஸ் ததைவ ச |
ஞானவ்யூஹஸ்ததா சித்தவ்யூஹஸ் ஸ்யாத் ததனந்தரம் ||
நாதவ்யூஹஸ்ததா பிந்துவ்யூஹஸ்ஸ்யாத் ததனந்தரம் |
கலாவ்யூஹஸ்ததா ஜீவவ்யூஹஸ்ஸ்யாத் இதி தே நவ ||'

நிமிஷம் முதல் கல்பாந்தமான காலத்தின் சேர்க்கையானது காலவ்யூஹம். (அம்பாளுடைய நேத்ர, தாடங்க, ஸ்தனரூபமான ஸூர்யசந்த்ரர்கள் காலத்திற்கு ஆதாரமாக இருப்பதால் அவர்களும் காலவ்யூஹத்தில் அந்தர்பாவம் அடைந்திருக்கிறார்கள்.) நீலம்முதலிய ரூபங்களானது குலவ்யூஹம். ஸம்ஞா முதலியவை நாமவ்யூஹம். விக்ஞானம் முதலியவை ஞானவ்யூஹம். அஹங்காரம், சித்தம், புத்தி, மஹத்,மனஸ் இவை சித்தவ்யூஹம். ராகம், இச்சை முதலியவை நாதவ்யூஹம் (சப்தத்தின் நாலு ரூபங்களான பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ ரூபங்கள் இதில் அடங்கியவை) ஷட் சக்கரங்கள் முதலியவை பிந்துவ்யூஹம். பஞ்சாசத் (50) கலைகளுடையவும் வர்ணங்களுடையவும் கூட்டமானது கலாவ்யூஹம். போக்தா முதலியவை ஜீவவ்யூஹம். இந்த ஒன்பது வ்யூஹங்களிலும் பைரவர், பைரவீ இவர்கள் ஐக்யமாக இருக்கிறார்களென்பது கௌல மதத்தின் ரஹஸ்யம். ஆகையினால்தான் கௌலர்கள் பரமசிவனை 'நவாத்மா' என்று சொல்லுகிறார்கள்.

'நவவ்யூஹாத்மகோ தேவ: பரானந்தபராத்மக: |
நவாத்மா பைரவோ தேவ: புக்தி முக்தி ப்ரதாயக: ||
பரானந்த பராசக்தி: சித்ரூபா ஆனந்த பைரவீ |
தயோர் யதா ஸாமரஸ்யம் ஜகத் உத்பத்யதே ததா ||'

பரானந்தர், பரா, என்கிற ஆனந்தபைரவர், மஹாபைரவி இருவர்களுக்கும் தாதாத்ம்யம் ஏற்பட்டுவிட்டால் இந்த நவாத்மா இருவருக்கும் ஸமானமாக இருக்கிறது. அதினால் சேஷசேஷீ பாவம் ஏற்படுவதற்கு ந்யாயமில்லை. இருவரும் ஸாமரஸ்யம் அடைந்தால் ஜகத் உத்பத்தியாகிறது. ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களின்போது இருவருடைய ப்ரயத்னமும் இருந்தபோதிலும் அதில் பைரவீ ப்ரதானமாக இருப்பதால் சேஷீபூதையாகவும் ஆனந்தபைரவர் சேஷபூதனாகவும் இருக்கிறார்கள். மஹாஸம்ஹார காலத்தில் பைரவி ஆனந்தபைரவரிடம் அந்தர்பாவமாகிறபடியால்

அவர் சேஷீபூதனுகவும் பைரவி சேஷபூதையாகவும் ஆகிருர்கள். ஆகவே ஒருவர் தான் எப்போதும் சேஷன் என்றும் மற்ருெருவர் சேஷீயென்றும் முடிவு இல்லாமல் இருவருக்கும் சேஷசேஷீபாவம் ஸாதாரணமாக இருப்பதை இங்கே சொல்லப்பட்டது.

9. 'பவாத்மானம்' என்ற பாடாந்தரத்தில் பவமென்கிற எங்கும் நிறைந்த ப்ரபஞ்சத்திற்கு ஆத்மாவாக இருப்பவள் அல்லது பவ: என்று பெயரையுடைய பரமசிவனுக்கு ஆத்மரூபிணியாக இருப்பவள் என்று அர்த்தம்.

10. 'ஸமரஸ பரானந்தம்' என்ருல் இருவரும் சேர்வதினுல் அவர்களுக்கு உண்டாகும் ஆனந்தம் என்று அர்த்தம். 'ஸமரஸ பரானந்த பதயோ:' என்ற பாடாந்தரத்தில் ஸமரஸம், பரானந்தம் இவைகளுக்கு இருப்பிடமானவர்கள் என்று அர்த்தம். இங்கே ஸமரஸம் என்ருல் ஐச்வர்யம். இருவருக்கும் லோகங்களுடைய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரரூபமான ஈச்வரத்வமிருப்பதால் ஸமரஸ ஸம்பந்தமிருக்கிறது. பரானந்தம் என்ருல் உத்க்ருஷ்டமான ஆனந்தம். இருவரும் சேர்ந்து ஸத் சித் ஆனந்தரூபமாக இருப்பதால் பரானந்தஸம்பந்தமிருக்கிறது.

**मनस्त्वं व्योम त्वं मरुदसि मरुत्सारथिरसि**
**त्वमापस्त्वं भूमिस्त्वयि परिणतायां न हि परम् ।**
**त्वमेव स्वात्मानं परिणमयितुं विश्ववपुषा**
**चिदानन्दाकारं शिवयुवति भावेन बिभृषे ॥ ॥ ३५ ॥**

மனஸ்த்வம் வ்யோம த்வம் மருதஸி மருத்ஸாரதிரஸி
த்வமாபஸ் த்வம் பூமிஸ்த்வயி பரிணதாயாம் ந ஹி பரம் |
த்வமேவ ஸ்வாத்மானம் பரிணமயிதும் விச்வவபுஷா
சிதானந்தாகாரம் சிவயுவதி பாவேன பிப்ருஷே ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| த்வம் | நீ |
| மன: | ஆக்ஞா சக்ரத்திலிருக்கும்படியான மனஸ்தத்வமாக இருக்கிருய் |
| த்வம் | நீ |

| | |
|---|---|
| வ்யோம | விசுத்தி சக்ரத்திலிருக்கும் ஆகாசதத்வமாயிருக்கிறாய் |
| மருத் அஸி | அனாஹதத்திலிருக்கும் வாயுதத்வமாக இருக்கிறாய் |
| மருத்ஸாரதி: அஸி | ஸ்வாதிஷ்டானத்திலிருக்கும் அக்னிதத்வமும் நீதான் |
| த்வம் ஆப: | மணிபூரத்திலிருக்கும் ஜலதத்வமும் நீயே |
| த்வம் பூமி: | மூலாதாரத்திலிருக்கும் ப்ருதிவீ தத்வமும் நீயே |
| த்வயி பரிணதாயாம் | மேலே சொல்லிய தத்வங்களோடு நீ தாதாத்ம்யம் அடையும்போது |
| பரம் ந ஹி | வேறான வஸ்து யாதொன்றுமேயில்லை |
| ஹே சிவயுவதி ! | சிவனுடைய பத்னியாகிய தாயே ! |
| த்வம் ஏவ | நீயே |
| ஸ்வாத்மானம் | உன்னுடைய ஸ்வரூபத்தை |
| விச்வ வபுஷா | ப்ரபஞ்சத்தினுடைய ரூபத்தோடு |
| பரிணமயிதும் | தாதாத்ம்யம் அடையச்செய்யும் |
| பாவேன | உத்தேசத்துடன் |
| சிதானந்தாகாரம் | சித்சக்தி, ஆனந்தபைரவர்களுடைய ரூபத்தை |
| பிப்ருஷே | வஹிக்கிறாய் |

தாயே! ஷட்சக்ரங்களிலிருந்து ப்ருதிவீ முதலான தத்வங்களும் நீயே. இந்த தத்வங்கள் உன்னிடம் தாதாத்ம்யமடையும்போது உன்னைத்தவிர வேறு வஸ்து யாதொன்றுமில்லை. இம்மாதிரி தாதாத்ம்யம் அடையும் உத்தேசத்துடன் நீயேதான் சித்சக்தியாகவும் ஆனந்தபைரவராகவும் இருக்கிறாய்.

1. சிவயுவதி பாவேன—சிவபத்னியாக இருக்கும் பாவத்தினால், சிதானந்தாகாரம்—பரப்ரம்ஹஸ்வரூபமான சிவதத்வ ரூபத்தை, பிப்ருஷே—வஹிக்கிறாய் என்றும் அர்த்தம் சொல்லலாம்.

2. ஷட்சக்ரங்களில் உள்ள ப்ருதிவீ முதலிய தத்வங்களும் நீயே, நீ ப்ரபஞ்சம் முழுவதிலும் வ்யாபித்திருக்கையில் உன்னைத் தவிர வேறு வஸ்து யாதொன்றும் கிடையாது. உன்னுடைய ரூபத்தை ப்ரபஞ்சத்தோடு சேர்த்து ஒன்றாக இருப்பதற்காக சித்சக்தியாகவும் ஆனந்த பைரவராகவும் ரூபங்களோடு இருக்க உன் மனதில் எண்ணங்கொண்டு இருக்கிறாய் என்று அர்த்தம்.

3. ப்ருதிவீ முதலிய பஞ்சபூதங்களானது கார்யரூபமான விகாரங்கள். 'த்வயி பரிணதாயாம்' என்பதினால் நிர்விகாரமானதும்

காரணரூபமாக வ்யாபகத்தை அடைந்திருக்கும் ப்ரக்ருதியின் விகாரத்தை (ரூபாந்தரத்தை) சொன்னது. 'நஹிபரம்' என்பதினால் சுத்தமான சித்சக்திக்கு ரூபவிகாரம் வாஸ்தவத்தில் யாதொன்றும் கிடையாது என்று சொல்லப்பட்டது. இதையே தான் சதுச்சதியில்—

'ச்ருணு தேவி மஹாஜ்ஞானம் ஸர்வஜ்ஞானோத்தமம் ப்ரியே |
யேன விக்ஞான மாத்ரேண பவாப்தௌ ந நிமஜ்ஜதி ||
த்ரிபுரா பரமா சக்தி: ஆத்யா ஜாதா மஹேச்வரி |
ஸ்தூல ஸூக்ஷ்ம விபாகேன த்ரைலோக்யோத்பத்தி மாத்ரு [கா ||
கபளீக்ருத நிச்சேஷ தத்வக்ராம ஸ்வரூபிணீ |
யஸ்யாம் பரிணதாயாம் து ந கிஞ்சித் பரம் இஷ்யதே ||'

என்று சொன்னது.

4. களிமண்ணில் கடமானது அந்தர்கதமாக இருந்து பிறகு உருவம் எடுப்பதுபோல் பஞ்சவிம்சதி தத்வங்களும் அம்பாளாகிய ஆதிகாரணவஸ்துவில் அந்தர்கதமாக இருப்பதால் அம்பாளை 'கபளீக்ருத நிச்சேஷ தத்வக்ராம ஸ்வரூபிணீ' — பாக்கியில்லாமல் ஸகல தத்வங்களுடைய ஸமூஹத்தையும் கபளீகரணம் பண்ணிய ஸ்வரூபத்தை உடையவள் என்று சொல்லப்பட்டது. கார்யரூபங்களான தத்வங்கள் காரணரூபிணியாகிய சித்சக்தியில் உபஸம்ஹாரமடைந்து கேவலம் சித்சக்தியே காரணாத்மாவாக இருப்பதைச் சொன்னது. உத்தரகௌலமதத்தின்படி சிவதத்வமும் சக்திதத்வத்தில் அடங்கினதாகையால் ஜகத்கர்த்தாவாகிய சக்தியே ப்ரதானம். ப்ரதானமாகையால் சக்திக்கு சேஷபாவம் கிடையாது. அந்த சக்தியின் பரிணாமங்கள் (விகாரங்கள், ரூபாந்தரங்கள்) ரூபமான பஞ்சபூதங்கள் முதலியவைகளாலானது இந்த ப்ரபஞ்சம். இப்படி கார்யரூபமான ப்ரபஞ்சத்தை சக்தியானவள் தன்னிடத்தில் ஏற்றுக்கொண்டு காரணரூபியாக இருக்கிறாள் என்று சொல்லப்பட்டது.

5 ப்ருதிவீ முதலான தத்வங்கள் ஒன்றைவிட அதற்கு மேல்பட்டது ஸூக்ஷ்மமாகவும், கீழிருப்பது அதற்குமேலானதான தத்வத்தில் அந்தர்பூதமாகவுமிருப்பதாகச் சொல்லப்படும். எல்லாவற்றிற்கும் மேல்பட்டதான இருபத்தாறாவது தத்வமாகிய ஸாதா

க்ய தத்வத்தில் பாக்கி தத்வங்களெல்லாம் ஸம்ஹாரக்ரமத்தில் லய மடைந்திருப்பதையும் ஸ்ருஷ்டிக்ரமத்தில் உண்டாவதையும் இங்கு சொல்லப்பட்டது.

இதற்கு மேல் வரும் 'தவாக்ஞாசக்ரஸ்த்தம்' முதலான ஆறு ச்லோகங்களில் சிவதம்பதிகள் ஆக்ஞா, விசுத்தி, அனாஹத, ஸ்வாதிஷ்டான, மணிபூர, மூலாதாரங்களான ஷட்சக்ரங்களிலிருக்கும் ஸ்வரூபத்தைப் பற்றிச் சொல்லப்படுகிறது. சில புஸ்தகங்களில் இந்த வரிசையைத் திருப்பி மூலாதாரத்திலிருந்து ஆரம்பித்து ஆக்ஞாசக்ரத்தில் முடிப்பதாக ச்லோகங்களின் வரிசையானது அமைக்கப் பட்டிருக்கிறது. மேலும் இவ்வாறு ச்லோகங்களில் சிவதம்பதிகளைப் பற்றிச் சொல்வதாக லக்ஷ்மீதரர் முதலானவர்கள் வ்யாக்யானம் செய்திருக்கையில் வேறு சிலர் பின்வருமாறு சொல்லுகிறார்கள். மூலாதாரத்தில் ப்ரம்ஹாவையும் அவருடைய சக்தியையும் மணிபூரத்தில் விஷ்ணுவையும் அவர் சக்தியையும், ஸ்வாதிஷ்டானத்தில் ருத்ரனையும் அவருடைய சக்தியையும், அனாஹதத்தில் ஈச்வரனையும் அவர் சக்தியையும், விசுத்தியில் அர்தநாரீச்வர ரூபமான ஸதா சிவனையும் ஆக்ஞா சக்ரத்தில் பரமசிவனையும் சித் சக்தியையும் சொல்வதாக அபிப்ராயப்படுகிறார்கள். ஆயினும் ப்ரம்ஹா, விஷ்ணு ருத்ரர்களென்று சொல்லுகிறவர்கள் அவர்களை பரமசிவனுடைய அம்சமாகவும் அவர்களுடைய சக்திகளை அம்பாளுடைய அம்சமாகவும் தான் சொல்லுகிறார்கள். இப்படி ஷட்சக்ரங்களிலுமிருக்கும் ஸ்வரூபத்தைச் சொல்லுவதானது அந்தந்த சக்ரத்திலிருக்கும் ஸ்வரூபத்தில் மனதை அனுஸந்தானம் பண்ணி மேலுக்கு மேலுள்ள சக்ரங்களைக்கடந்து ஸஹஸ்ரதள கமலத்திலிருக்கும் சிவ சக்த்யாத்மகமான ஸாதாக்ய தத்வத்தை மனதில் அனுஸந்தானம் பண்ணுவதற்கு வழியாகச் சொல்லப்பட்டது.

तवाज्ञाचक्रस्थं तपनशशिकोटिद्युतिधरं
परं शंभुं वन्दे परिमिलितपार्श्वं परचिता ।
यमाराध्यन् भक्त्या रविशशिशुचीनामविषये
निरालोकेऽलोके निवसति हि भालोकभुवने ॥ ॥ ३६ ॥

தவாக்ஞா சக்ரஸ்த்தம் தபனசசிகோடித்யுதிதரம்
பரம் சம்பும் வந்தே பரிமிளிதபார்ச்வம் பரசிதா |
யமாராத்யன் பக்த்யா ரவிசசிசுசீனும் அவிஷயே
நிராலோகேZலோகே நிவஸதி ஹி பாலோக புவனே ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| தவ ஆக்ஞாசக்ரஸ்தம் | உன்னுடைய ஆக்ஞாசக்ரத்திலிருப்பவரும் |
| தபன சசி கோடித்யுதி தரம் | கோடிக்கணக்கான ஸூர்ய சந்த்ரர்களின் காந்தியையுடையவரும் |
| பரசிதா | பராகாரமான சித்சக்தியினுல் |
| பரிமிளித பார்ச்வம் | இருபக்கத்திலும் சேர்ந்திருக்கப்பட்ட வருமான |
| பரம் சம்பும் | பராகாரமான சிவனை |
| வந்தே | ஸேவிக்கிறேன் |
| யம் | எவரை (அம்மாதிரியாக இருப்பவரை) |
| பக்த்யா ஆராத்யன் | பக்தியோடு ஆராதிக்கிற (ஒருவன்) |
| ரவி சசிசுசினும் | ஸூர்யன், சந்த்ரன் அக்னி இவர்களுக்கு |
| அவிஷயே | அடையமுடியாததும் |
| நிராலோகே | கண்ணுக்கெட்டாததும் |
| அலோகே | (ஜனங்களில்லாமல்) ஏகாந்தமானதுமான |
| பாலோக புவனே | நிலவோடுகூடிய லோகத்தில் (ஸஹஸ்ராரகமலத்தில்) |
| நிவஸதி ஹி | இருக்கிருனே. |

தாயே! கோடி சந்த்ரஸூர்யர்களின் காந்தியுடையவரும் பரசித்ரூபிணியான உன்னை இருபக்கங்களிலும் உடையவருமான பரசம்புவையும் (உன்னையும்) ஆக்ஞாசக்ரத்திலிருப்பவர்களாக த்யானம் செய்து நமஸ்கரிக்கிறேன். அப்படி எவனொருவன் ஆராதிக்கிருனே அவன் ஸூர்ய சந்த்ர அக்னிகளுக்கு கோசரமில்லாததும் கண்ணுக்கு எட்டாததும் ஏகாந்தஸ்தானமானதும் ஜ்யோத்ஸ்னமயமுமான (ஸஹஸ்ரகமலமாகிய) லோகத்தில் இருப்பான்.

1. 'தவ ஆக்ஞாசக்ரஸ்தம்' என்பதனுல் ஸாதகனுடைய புருவங்களுக்கிடையிலிருக்கும் அக்ஞாசக்ரத்தைச் சொல்லப் பட்டது. இதேமாதிரியாகவே மேலேவரும் ச்லோகங்களிலும் 'தவ' என்ற பதத்திற்கு அர்த்தம் பண்ணவேண்டும்.

2. கோடி என்பதினல் கணக்கில்லாத கோடிகள் என்று பொருள்.

3. பர: என்றால் சிவனுக்கும் பரா என்றால் சித்ரூபிணியான அம்பாளுக்கும் பெயர்.

4. எந்த ஸாதகனுவது மேலே வர்ணித்திருக்கிறபடி பரசம்புவைத் தன்னுடைய ஆக்ஞாசக்ரஸ்தானத்தில் பக்தியோடு த்யானம் பண்ணுவானேயாகில் அவன் ஸூர்ய சந்த்ர அக்னிகளுக்கும் எட்டாததும் கண்ணுக்கு கோசரமில்லாததும் ஏகாந்தமானதும் ஜ்யோத்ஸ்னமயமுமான (ஸஹஸ்ராரகமல்) லோகத்தில் வஸிப்பானென்று சொல்லப்பட்டது.

5. ஏற்கனவே சொல்லப்பட்ட ஷட்சக்ரங்களின் கண்டங்களாகிய அக்னி கண்டத்திலிருந்தும் ஸூர்யகண்டத்திலிருந்தும் சந்த்ரகண்டத்திலிருந்தும் அம்மூவர்களுடைய கிரணங்கள் முன்னூற்றறுபதும் ஆதார சக்ரத்திலிருந்து ஆக்ஞாசக்ரம் முடிய ஸஞ்சாரம் செய்துகொண்டிருக்கின்றன. அவைகளுக்கு ஆக்ஞாசக்ரத்திற்கு மேலே போகும்படியான சக்தி கிடையாது. ஆக்ஞாசக்ரத்திற்கு மேல் ஸஹஸ்ரதளகமலத்தில் மற்ருெரு சந்த்ரன் ஸ்ரீ சக்ராகாரமாகவும் எப்போதும் பூர்ணமான கலைகளுடனும் ப்ரகாசித்துக்கொண்டிருப்பது ஏற்கனவேயே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இடத்தைப்பற்றி

‘ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்
நேமாவித்யுதோ பாந்தி குதோயம் அக்னி: |
தமேவ பாந்தம் அனுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||

என்று ச்ருதியிலும்

‘ந தத்ர பாஸதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: |
யத் ஞாத்வா ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம ||’

என்று கீதையிலும் சொல்லியிருப்பதை அனுஸரித்து இங்கு ‘ரவிசசிசுசீனும் அவிஷயே’ என்று சொன்னது. (ஸகல வஸ்துக்களையும் பரிசுத்தப்படுத்துவதால் அக்னிக்கு சுசி என்று பெயர்).

विशुद्धौ ते शुद्धस्फटिकविशदं व्योमजनकं
शिवं सेवे देवीमपि शिवसमानव्यवसिताम् ।
ययोः कान्त्या यान्त्याः शशिकिरणसारूप्यसरणेः
विधूतान्तर्ध्वान्ता विलसति चकोरीव जगती॥ ॥ ३७ ॥

விசுத்தெள தே சுத்தஸ்படிக விசதம் வ்யோமஜனகம்
சிவம் ஸேவே தேவீமபி சிவஸமானவ்யவஸிதாம் |
யயோ: காந்த்யா யாந்த்யா: சசிகிரண ஸாரூப்யஸரணே:
விதூதாந்தர்த்வாந்தா விலஸதி சகோரீவ ஜகதீ ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| தே விசுத்தெள | உன்னுடைய விசுத்தி சக்ரத்தில் |
| சுத்தஸ்படிக விசதம் | சுத்தமான ஸ்படிகம் போல் அதி நிர்மலமான ரூபத்தையுடையவரும் |
| வ்யோமஜனகம் | ஆகாச தத்வத்தை உண்டுபண்ணுகிறவருமான |
| சிவம் | பரமசிவனையும் |
| சிவஸமான வ்யவஸிதாம் | சிவனுக்கு ஸமானமான ப்ரயத்னத்தோடு கூடிய |
| தேவீம் அபி | தேவியையும் |
| ஸேவே | நமஸ்கரிக்கிறேன் |
| யயோ: | எவர்களிடமிருந்து |
| சசிகிரணஸாரூப்ய ஸரணே: | சந்த்ர கிரணங்களுக்கு ஸமானமான மார்க்கத்தோடு |
| யாந்த்யா: காந்த்யா | வெளிவரும் காந்தியிலிருந்து |
| ஜகதி | ஜகத்து முழுவதும் |
| விதூதாந்தர்த்வாந்தா | போக்கடிக்கப்பட்ட அக்ஞானமாகிற உள்ளிருட்டுடன் |
| சகோரீ இவ | சகோரபக்ஷிபோல் |
| விலஸதி | விளங்குகிறதோ. |

தாயே! சுத்தஸ்படிகமணிபோல் நிர்மலமானவரும் ஆகாச தத்வத்தை உண்டுபண்ணுகிறவருமான பரமசிவனையும் அதேமாதிரியான ரூபம், ப்ரயத்னம் இவைகளையுடைய உன்னையும் என்னுடைய விசுத்தி சக்ரத்திலிருப்பவர்களாக த்யானித்து நமஸ்காரம் செய்கி

றேன். உங்களிருவர்களிடமிருந்து வெளிவரும் வெண்ணிலாவைப் போன்ற காந்தியினுல் (லோகங்களில் வ்யாபித்திருக்கும்) அக்ஞான மாகிய இருட்டானது நாசமடைந்து லோகங்களெல்லாம் சகோர பக்ஷியைப்போல் ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கிறது.

1. சகோரபக்ஷியானது(சந்த்ரனுடைய)நிலாவைப் பானம் பண்ணி அதினுல் சந்தோஷமடைந்து ஆனந்தமாகயிருக்குமென்று சொல்வது வழக்கம். அம்மாதிரி ஸாதகனுனவன் சிவதம்பதிகளிடமிருந்து ப்ரகாசிக்கும் நிலவுபோன்ற காந்தியினுல் அக்ஞானமகற்றப்பட்டவனுய் ஆனந்தம் அடைவதாகச் சொல்லப்பட்டது.

2. 'தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மன ஆகாசஸ்ஸம்பூத:' என்ற ச்ருதி வாக்யத்தின்படி ஆக்ஞாசக்ரத்திலிருக்கும் ஆத்ம (மனஸ்) தத்வத்திலிருந்து விசுத்தியிலிருக்கும் ஆகாச தத்வம் உண்டாகிறது.

3. சிவா என்று அம்பாளுக்குப் பெயர். விசுத்தி சக்ரத்தில் மேலே சொல்லியபடி சிவ தத்வத்தையும் தேவீ தத்வத்தையும் உபாஸகன் ஸேவிக்கிறதாக சொல்லப்பட்டது.

4. மேலே சொல்லியபடி ஸாதகன் விசுத்திசக்ரத்தில் சிவ தம்பதிகளை பூஜைசெய்யும்போது ஸூர்ய சந்த்ரர்கள் நிரோதம் அடைவதால் ஷோடசாரத்திலிருக்கும் த்ரிபுரஸுந்தரீ முதலிய பதினுறு நித்யாரூபிணிகளான கலைகளுடைய நிலாவானது வற்றிப்போவதால் அந்த விசுத்தி சக்ரத்திலிருக்கும்படியான சிவதம்பதிகளின் ப்ரபையினுலே நிலாவானது ஏற்படுகிறது என்பது தாத்பர்யம்.

समुन्मीलत्संवित्कमलमकरन्दैकरसिकं
भजे हंसद्वन्द्वं किमपि महतां मानसचरम् ।
यदालापादष्टादशगुणितविद्यापरिणतिः
यदादत्ते दोषाद्गुणमखिलमद्भ्यः पय इव ॥ ३८ ॥

ஸமுன்மீலத் ஸம்வித்கமலமகரந்தைகரஸிகம்
பஜே ஹம்ஸத்வந்த்வம் கிமபி மஹதாம் மானஸசரம் |
யதாலாபாத் அஷ்டாதசகுணித வித்யாபரிணதி:
யதாதத்தே தோஷாத் குணமகிலம் அத்ப்ய: பய இவ ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| ஸமுன்மீலத் ஸம்வித் கமலமகரந்தைக ரஸிகம் | மலர்ந்திருக்கிற (அநாஹத சக்ரமாகிய) ஸம்வித் கமலத்திலிருக்கும் மகரந்தத்தில் முக்யமான ப்ரியத்தையுடையதும் |
| மஹதாம் மானஸசரம் | மஹான்களுடைய மனதாகிற மானஸ ஸரஸில் ஸஞ்சரிப்பதும் |
| கிமபி | இன்னதென்று வர்ணிக்கமுடியாத மஹிமையுடையதுமான |
| ஹம்ஸத்வந்த்வம் | ஹம்ஸமிதுனத்தை |
| பஜே | நமஸ்கரிக்கிறேன். |
| யதாலாபாத் | எந்த ஹம்ஸ மிதுனத்தின் ஆலாபத்திலிருந்து |
| அஷ்டாதசகுணித வித்யாபரிணதி: | பதினெட்டு என்று கணக்குள்ள வித்யைகள் ஏற்படுகின்றனவோ |
| யத் | எந்த ஹம்ஸதம்பதியானது |
| தோஷாத் | தோஷத்திலிருந்து |
| அகிலம் குணம் | ஸமஸ்தமான குணத்தையும் |
| அத்ப்ய: பய இவ | ஜலத்திலிருந்து பாலைப்போல் |
| ஆதத்தே | க்ரஹிக்கின்றதோ. |

தாயே! எந்த ஹம்ஸமிதுனத்தினுடைய பேச்சானது அஷ்டாதச வித்யைகளுக்கு மூலமாக இருக்கிறதோ, எந்த மிதுனமானது ஸாதாரண ஹம்ஸங்கள் தண்ணீரைத் தள்ளிப் பாலை க்ரஹிப்பதுபோல் தோஷங்களைத் தள்ளி குணங்களை ஏற்றுகொள்கின்றனவோ, எந்த மிதுனமானது மலர்ந்திருக்கும் (அநாஹத சக்ரமாகிய) கமலத்தின் மகரந்தத்தில் அதிக ப்ரியமுள்ளவையோ, எந்த மிதுனமானது மஹான்களுடைய மனதாகிய மானஸஸரஸில் ஸஞ்சரிக்கின்றனவோ, அப்பேர்ப்பட்டதும் வர்ணிக்கமுடியாத மஹிமையோடு கூடியதுமான ஹம்ஸ தம்பதியாக உங்களிருவர்களையும் என்னுடைய ஸம்வித்கமலத்தில் (அநாஹத சக்ரத்தில்)த்யானம் செய்து நமஸ்கரிக்கின்றேன்.

1. இங்கே சிவ தம்பதிகளை ஹம்ஸ தம்பதிகளுக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மானஸ ஸரஸ் என்பதில் ஹம்ஸபக்ஷிகள் எப்போதும் வஸிப்பது ப்ரஸித்தம். அதே மாதிரி இவர்கள் யோகீச்வரர்களாகிய மஹான்களுடைய மனதில் எப்போதும்

வாஸமாக இருப்பவர்கள். ஹம்ஸத்திற்கு தாமரஸபுஷ்பத்திலிருக்கும் மகரந்தத்தில் மிகவும் ப்ரியம். அம்மாதிரி இவர்களுக்கும் ஸம்வித் கமலத்திலிருக்கும் ப்ராணரூபமான மகரந்தத்தில் முக்யமான ஆசையுண்டென்று சொல்லப்பட்டது. ஹம்ஸபக்ஷிகளுடைய ஆலாபம் (கூவுதல்) மாதிரி இவர்களுக்கும் (அஷ்டாதசவித்யைகளை உண்ணுபண்ணுகிற) ஆலாபம் இருப்பதாகச் சொல்லப்பட்டது. கடைசியாக, எப்படி ஹம்ஸபக்ஷியானது பாலும் ஜலமும் கலந்திருந்தால் ஜலத்தைத் தள்ளிவிட்டு பாலைமட்டும் க்ரஹித்துக் கொள்ளுமோ அம்மாதிரி இவர்கள் குணம், தோஷம் இவை கலந்திருந்தால் தோஷத்தைத் தள்ளிவிட்டு குணத்தைமட்டும் க்ரஹித்துக்கொள்வதாகச் சொல்லப்பட்டது.

2. ஷட் சக்ரங்களையும் கமலங்கள் (தாமரஸ புஷ்பங்கள்), என்று சொல்வது வழக்கமென்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது. அனுஹத சக்ரத்திற்கு ஸம்வித் (ஞானரூபமான) கமலமென்றும் பெயர்.

3. அஷ்டாதச வித்யைகள் என்பது—ருக், யஜுஸ், ஸாம, அதர்வ வேதங்கள் நாலு, சிக்ஷா, கல்ப, வ்யாகரண, நிருக்த, ஜ்யோதிஷ, சந்தஸ் சாஸ்த்ரங்கள் (வேதாங்கங்கள்) ஆறு, மீமாம்ஸா, ந்யாய, தர்ம சாஸ்த்ர, புராண, ஆயுர்வேத, தனுர்வேத, காந்தர்வவேத, அர்த்த சாஸ்த்ரங்கள், ஆகப் பதினெட்டு. இவைகளெல்லாம் பரமஹம்ஸ மிதுனமாகிய சிவ தம்பதிகளின் ஆலாபத்திலிருந்து உண்டானதாகச் சொல்லப்பட்டது.

4. 'திமபி' என்பதினால் இன்னதுதானென்று சொல்ல முடியாத (அனிர்வாச்யமான) மஹிமையுடையதும் சிவசக்தி ஸம்புடிதமுமான இருபத்தி ஆறுவது தத்வத்தைச் சொன்னது.

5. 'ஹம்ஸ:' என்ற பதத்தில் ஹம் என்பது புருஷனாகிய சிவனையும் ஸ: என்பது ப்ரக்ருதியாகிய அம்பாளையும் குறிப்பதால் சிவசக்த்யாத்மகமான ஸாதாக்ய தத்வமானது ஹம்ஸ: என்று பெயருடையதாக ஆகிறது. ['ஹம்ஸத்வந்த்வம்' என்றாலும் ஹம்ஸங்களுடைய ஜோடி அல்லது இரண்டு அம்சங்களுடைய ஹம்ஸம் என்றும் அர்த்தம்.] இவர்களால் தான் ஜகத்தானது ஏற்படுகிறது.

'பும் ப்ரக்ருத்யாத்மகோ ஹம்ஸ: ததாத்மகமிதம் ஜகத் |'

तव स्वाधिष्ठाने हुतवहमधिष्ठाय निरतं
तमीडे संवर्तं जननि महतीं तां च समयाम् ।
यदालोके लोकान्दहति महति क्रोधकलिते
दयार्द्रा या दृष्टिः शिशिरमुपचारं रचयति॥ ॥ ६९ ॥

தவ ஸ்வாதிஷ்டானே ஹுதவஹமதிஷ்டாய நிரதம்
தமீடே ஸம்வர்தம் ஜனனி மஹதீம் தாம் ச ஸமயாம் |
யதாலோகே லோகான் தஹதி மஹதி க்ரோதகலிதே
தயார்த்ரா யா த்ருஷ்டி: சிசிரமுபசாரம் ரசயதி ||

| | |
|---|---|
| ஹே ஜனனி! | தாயே! |
| தவ ஸ்வாதிஷ்டானே | உன்னுடைய ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் |
| ஹுதவஹம் | அக்னி தத்வத்தை |
| தம் ஸம்வர்தம் | ப்ரஸித்தமான ப்ரளய காலாக்னியாக |
| அதிஷ்டாய | ஆச்ரயித்து (பாவித்து) |
| நிரதம் | இடைவிடாமல் |
| ஈடே | ஸ்துதிக்கிறேன் |
| ஸமயாம் | ஸமயா எனப்படும் சந்த்ரகலா சக்தியை |
| தாம் மஹதீம் ச | ப்ரஸித்தமானதும் மஹதீயென்று சொல்லப்படுவதுமான ஸம்வர்தாக்னி ஜ்வாலா ரூபிணியாக |
| (ஈடே) | நமஸ்கரிக்கிறேன் |
| மஹதி க்ரோத கலிதே | மிகவும் கோபத்தோடு கூடியதான |
| யத் ஆலோகே | எவருடைய பார்வையானது |
| லோகான் | ஸமஸ்த லோகங்களையும் |
| தஹதி | கொளுத்துகிறதோ (அப்போது) |
| தயார்த்ரா | கருணையினால் நனைந்த |
| யா த்ருஷ்டி: | எவருடைய பார்வையானது |
| சிசிரம் உபசாரம் | சைத்யோபசாரத்தை |
| ரசயதி | செய்கிறது. |

தாயே! உங்களிருவர்களையும் என்னுடைய (அக்னி தத்வ ஸ்தானமாகிய) ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் காலாக்னிருத்ராகவும் அந்த காலாக்னியின் ஜ்வாலாரூபிணியாகவும் த்யானம் செய்து நம

ஸ்கரிக்கிறேன். உங்களுடைய பார்வைகளில் மிகவும் கோபத்தோடு கூடிய ருத்ராக்னியான பார்வையானது ஸமஸ்தலோகங்களையும் தஹிக்கும்போது கருணையால் நனைந்த சந்த்ரகலாத்மகமான உன்னுடைய பார்வையானது அவைகளைத் திரும்பவும் சீதளமடையும்படிச் செய்கிறது.

1. ஸ்வாதிஷ்டான சக்ரமானது அக்னிதத்வ ஸ்தானம். அங்கிருக்கும் அக்னியை ப்ரளயகால அக்னியாகப்பாவித்து அங்கே சிவதம்பதிகளை ப்ரளயகால ருத்ரனாகவும் ருத்ராணியான ஸமயையாகவும் உபாஸனைசெய்வதை இங்கு சொல்லப்பட்டது. ருத்ராணியை ஸம்வர்த்தாக்னியின் ஜ்வாலையாக வர்ணிக்கப்பட்டது. அந்த ஸம்வர்தாக்னியினால் ஜகத்தானது எரிக்கப்படும்போது சந்த்ரகலாத்மகமான அம்பாளுடைய ப்ரஸன்னமானதும் கருணையோடு கூடினதுமான பார்வையானது அப்படி எரியும் ஜகத்துக்கு சிசிரோபசாரம் செய்வதாகச் சொல்லப்பட்டது.

तटित्त्वन्तं शक्त्या तिमिरपरिपन्थिस्फुरणया
स्फुरन्नानारत्नाभरणपरिणद्धेन्द्रधनुषम् ।
तव श्यामं मेघं कमपि मणिपूरैकशरणं
निषेवे वर्षन्तं हरमिहिरतप्तं त्रिभुवनम् ॥ ॥ ४० ॥

தடித்வந்தம் சக்த்யா திமிரபரிபந்தி ஸ்புரணயா
ஸ்புரன் நானாரத்னாபரண பரிணத்தேந்த்ர தனுஷம் |
தவ ச்யாமம் மேகம் கமபி மணிபூரைக சரணம்
நிஷேவே வர்ஷந்தம் ஹரமிஹிரதப்தம் த்ரிபுவனம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| தவ | உன்னுடைய |
| மணிபூரைக சரணம் | மணிபூர சக்ரத்தையே முக்யமான நிலயமாக உடையதும் |
| திமிரபரிபந்தி ஸ்புரணயா | அங்கேயிருக்கும் இருட்டுக்கு சத்ருவாக விளங்கும் |
| சக்த்யா | சக்தியினால் |
| தடித்வந்தம் | மின்னலோடு கூடியிருப்பது போன்றதும் |

| | |
|---|---|
| ஸ்புரன் நானாரத்னாபரண பரிணத்தேந்த்ர தனுஷம் | ப்ரகாசிக்கின்ற நானாவிதமான ரத்னாபரணங்களாலாகிய இந்த்ர தனுசுடன் கூடியதும் |
| ச்யாமம் | கருப்புவர்ணமுடைய |
| ஹரமிஹிர தப்தம் | ருத்ரனாகிற ப்ரளயகால ஸூர்யனால் தஹிக்கப் பட்ட |
| த்ரிபுவனம் | த்ரிலோகங்களையும் |
| வர்ஷந்தம் | (ஜலத்தினால்) வர்ஷிக்கிறதுமான |
| கமபி | அனிர்வசனீயமான ஒரு |
| மேகம் | மேகத்தை |
| நிஷேவே | நமஸ்கரிக்கிறேன் |

தாயே! என்னுடைய (ஜலதத்வாத்மகமான) மணிபூர சக்ரத்தில் சிவனை வர்ஷாகாலத்து (நீருண்டதும் கருத்ததுமான) மேகமாகவும் உன்னை அதிலிருக்கும் மின்னல் கொடியாகவும் த்யானித்து நமஸ்கரிக்கிறேன். அங்கிருக்கும் தமஸாகிற இருட்டைப் போக்கும் மின்னல்போல் நீ இருக்கிறாய். நீ அணிந்திருக்கும் ஆபரணங்களுடைய நானாவிதமான காந்தியினால் அந்த மேகமானது இந்த்ரதனுஸுடன் கூடியதுபோல் விளங்குகிறது. ப்ரளயகால ருத்ரனால் தகிக்கப்பட்ட லோகங்களை அந்த அனிர்வாச்யமான மஹிமையுடைய மேகமானது தன் வர்ஷங்களால் குளிரச்செய்கிறது.

1. இதில் ஸதாசிவனை ஒரு மேகமாகவும் அம்பாள் அதில் விளங்கும் மின்னல்கொடியாகவும் வர்ணிக்கிறார்.

2. மணிபூர சக்ரமானது இருள்சூழ்ந்த இடம், தாமிஸ்ர லோகம். அங்கிருக்கும் இருட்டைப் போக்கடிக்கும்படியான சக்தியோடு கூடியது அம்பாள் ரூபமான மின்னல்கொடி. ஆனால் ஸாதாரண மின்னல்கொடிபோல் க்ஷணமாத்ரம் ப்ரகாசிக்காமல் ஸ்திர ஸௌதாமினீ ரூபமாக இருக்கிறாள். அதனால்தான் மணிபூரத்திலிருக்கும் இருட்டுக்கு சத்ரு என்று சொன்னது. பின்னால் ஸதாசிவனை வர்ஷாகால மேகமாகச் சொல்வதாலும் அம்மாதிரியான மேகத்தின் மின்னலானது நெடுநேரமிருக்குமாகையாலும் உபமானம் மிகவும் பொருத்தமாக இருக்கிறது.

3. மணிபூர சக்ரத்தில் அம்பாளுக்கு ஸமஸ்தமான ஆபரணங்களால் அலங்காரம் செய்வது என்பதை ஏற்கனவேயே சொல்லப்பட்டது. அப்படி நானுவிதமான ரத்னங்களாலாக்கப்பட்ட பூஷணங்களின் சேர்க்கையோடுகூடியதினுல் இந்த்ர தனுஸ்மாதிரி இருப்பதாகச் சொல்லப்பட்டது.

4. இப்பேர்ப்பட்ட இந்த்ர தனுஸ்ஸுடனும் மின்னலுடனும் கூடிய காளமேகமானது ப்ரளய காலாக்னியால் தஹிக்கப்பட்ட மூன்று லோகங்களையும் தன்னுடைய வர்ஷங்களினுல் குளிரச்செய்கிறது என்று வர்ணிக்கப்பட்டது. இதையேதான் கீழே சொல்லப்பட்டது:—

‘மணிபூரைகவஸதி: ப்ராவ்ருஷேண்யஸ் ஸதாசிவ: |
அம்புதாத்மதயா பாதி ஸ்திரஸௌதாமினீ சிவா ||’

5. மணிபூரமானது ஜலதத்வமிருக்குமிடமென்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது.

6. ‘ஸ்மரமிஹிரதப்தம்’ என்ற பாடாந்தரத்தில் ‘காமம் (ஆசை) ஆகிற அக்னியினுல் தஹிக்கப்பட்ட’ என்று அர்த்தம். ‘தம: ச்யாமம்’ என்ற பாடாந்தரத்தில் ‘இருட்டுப்போல் கருத்த’ என்று அர்த்தம்.

तवाधारे मूले सह समयया लास्यपरया
नवात्मानं मन्ये नवरसमहाताण्डवनटम् ।
उभाभ्यामेताभ्यामुदयविधिमुद्दिश्य दयया
सनाथाभ्यां जज्ञे जनकजननीमज्जगदिदम् ॥ ॥ ४१ ॥

தவாதாரே மூலே ஸஹ ஸமயயா லாஸ்யபரயா
நவாத்மானம் மன்யே நவரஸமஹாதாண்டவநடம் |
உபாப்யாம் ஏதாப்யாம் உதயவிதிமுத்திச்ய தயயா
ஸனாதாப்யாம் ஜக்ஞே ஜனகஜனனீமத் ஜகதிதம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| தவ மூலே ஆதாரே | உன்னுடைய மூலாதார சக்ரத்தில் |
| லாஸ்ய பரயா | லாஸ்யத்தில் ப்ரியமுள்ள |
| ஸமயயா ஸஹ | ஸமயா என்ற மஹாபைரவியுடன் கூட |

| | |
|---|---|
| நவரஸ மஹா தாண்டவ நடம் | ச்ருங்காராதி நவரஸங்களோடு கூடிய மஹாதாண்டவம் செய்கிற நடனுகிய |
| நவாத்மானம் | நவாத்மாவான ஆனந்தபைரவரை |
| மன்யே | நினைக்கிறேன் (த்யானிக்கிறேன்) |
| உதயவிதிம் | (ப்ரளயகாலத்தில் நாசமடைந்த லோகங்களை திரும்பவும்)ஸ்ருஷ்டிப்பதை |
| உத்திச்ய | உத்தேசம் செய்து |
| தயயா ஸஹுதாப்யாம் | (நசித்துப்போன உலகங்களை உஜ்ஜீவிக்கவேண்டுமென்ற) கருணையோடு கூடுகின்றவர்களான |
| ஏதாப்யாம் உபாப்யாம் | இவர்கள் இருவர்களால் |
| இதம் ஜகத் | இந்த ஜகத்தானது |
| ஜனக ஜனனிமத் | தகப்பனுர், தாயார்களோடு கூடியதாய் |
| ஜஜ்ஞே | உண்டாயிற்று. |

தாயே! லாஸ்யத்தில் ப்ரியமுடைய (ஸமயா என்னும்) மஹாபைரவியாகிய உன்னுடன்கூட நவரஸங்களுடன்கூடிய மஹா தாண்டவத்தைச் செய்பவரும் நவாத்மகனும் ஆனந்தபைரவருமாகிய ஸதாசிவனை என்னுடைய மூலாதார சக்ரத்தில் த்யானம்செய்து நமஸ்கரிக்கிறேன். ப்ரளயகாலத்தில் நாசமடைந்த லோகங்களை உஜ்ஜீவிக்க வேண்டுமென்ற கருணையுடன் நீங்களிருவரும் (ஸ்ருஷ்டி) தாண்டவம் செய்வதால் இந்த ஜகத்தானது உங்களிருவர்களையும் தகப்பனுர் தாயாராக அடைந்தது.

1. ப்ரளயகாலத்தில் நசித்துப்போன லோகங்களைத் திரும்பவும் உண்டுபண்ணவேண்டுமென்ற எண்ணத்துடன் ஆனந்த பைரவர், ஆனந்த பைரவி இவர்களிருவரும் கூடி லோகங்களை உண்டு பண்ணுவதாகவும் அதனல் அவர்களிருவரும் அந்த லோகங்களுக்கு தகப்பனுர் தாயாராக இருப்பதாகவும் சொல்லப்பட்டது.

2. புருஷர்கள் செய்யும் நர்தனத்தை தாண்டவம் என்றும் ஸ்த்ரீகள் செய்யும் நர்தனத்தை லாஸ்யம் என்றும் சொல்லப்படும்.

3. மஹாஸம்ஹார காலத்தில் அம்பாள் ஒருவளே ஸாக்ஷிணியாக இருக்க பரமசிவன் ஸம்ஹாரதாண்டவம் செய்கிறதாக எற்கனவே சொல்லப்பட்டது. இங்கு ப்ரக்ருதி ரூபமான அம்பாள்

லாஸ்ய நர்தனம் செய்வதும் புருஷ ரூபமான ஸதாசிவன் தாண்டவ நர்தனம் செய்வதும் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்து நர்தனம் செய்வதனுல் ஜகத்து உத்பத்தியாவதும் வர்ணிக்கப்பட்டது. இதையேதான் அம்பாஸ்தவத்தில் சொல்லுவது—

'கல்போபஸம்ஹரணகேளிஷு பண்டிதானி
சண்டானி கண்டபரசோரபி தாண்டவானி |
ஆலோகனேன தவ கோமளிதானி மாத:
லாஸ்யாத்மனு பரிணமந்தி ஜகத் விபூத்யை ||'

4. இம்மாதிரி சிவதம்பதிகளுடைய லாஸ்யதாண்டவ நர்தனத்தினுல் ஜகத்தானது உத்பத்தியாகிறதென்றும் அந்த நர்தனம் முடிவடைந்தால் ஜகத்தானது ஸம்ஹாரமாகிறதென்றும் கௌலமதத்தின் ஸித்தாந்தம்.

5. 'நவரஸ மஹாதாண்டவம்' என்பது ச்ருங்காரம் முதலான நவரஸங்களோடு கூடிய மஹா அத்புதமான நர்தனத்தைக் குறித்தது.

6. இந்த ச்லோகத்தின் வ்யாக்யானத்தில் லக்ஷ்மீதரர் ஸமயாசாரத்தின் முக்ய அம்சங்களையும் அவற்றிற்கும் குலாசாரத்திற்கும் இருக்கும் வித்யாஸங்களையும் பற்றி விரிவாக எழுதியிருக்கிருர். அதில் சில பாகம் ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது தவிர சிலவற்றை இங்கே சுருக்கமாகச் சொல்லப்படுகிறது.

7. மூலாதார சக்ரமானது த்ரிகோண ரூபமுடையது. மூலாதாரத்தில் பிந்து இருக்கிறதென்று சொல்லப்படும். இதில் கௌலமதத்தின்படி த்ரிகோணமே பிந்துஸ்தானமென்று சொல்லப்படும். அதுதான் பிந்து, அதுவேதான் ஆராதிக்கப்படவேண்டியது. ஆகவே கௌலர்கள் த்ரிகோணத்தில் பிந்து இருப்பதாக அதையே பூஜைசெய்கிருர்கள். அம்மாதிரி பூஜையானது பாஹ்யமான த்ரிகோணத்தில் செய்யப்படும். அதாவது நவயோன்யாத்மகமான ஸ்ரீ சக்ரத்தின்நடுவிலிருக்கும்யோனியிலும் அல்லதுஅப்பேருடைய ப்ரத்யக்ஷமான (ஸ்த்ரீ)ப்ரதேசத்திலும்செய்யப்படும். முதலில் சொன்னவிதமானது பூர்வகௌலர்களால் பூர்ஜபத்ரம் (பூவா

சம்பட்டை), ஹேமபட்டம் (தங்கத்தகடு) வஸ்த்ரம் முதலியவைக ளில் சக்ரத்தை எழுதி அதில் அனுஷ்டிக்கப்படும். இரண்டாவது விதம் உத்தரகௌலர்களுடைய அனுஷ்டானம்.

8. இருவகையிலும் கௌலர்கள் பூஜைசெய்வது மாஹ்ய மான த்ரிகோணத்தைத்தான். அதுவும் மூலாதாரத்திலிருக்கும் த்ரிகோணஸ்தானம் தான். அங்கிருக்கும் குண்டலினீ சக்திக்கு கௌலினீ என்றும் அதை இவர்கள் உபாஸிப்பதினால் இவர்களுக்கு கௌலர்களென்றும் பெயர்.

9. அங்கிருக்கும் பிந்து ரூபிணீயான குண்டலினீ சக்தி யானவள் 'ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி' என்று சொன்ன படி அந்த குலகுண்டத்தில் ஸதா தூங்கிக்கொண்டிருப்பதால் அப் படியிருக்கும்படியான அவஸ்த்தையிலேயே அவர்களால் பூஜை செய்யப்படுவாள். [ஷட்சக்ரங்களினுடைய அக்னி, ஸூர்ய, சந் த்ர கண்டங்கள் முறையே தமோ ரஜஸ் ஸத்வ குணங்களுடைய வையென்று சொல்லப்படும். ஆகவே மூலாதார ஸ்வாதிஷ்டான சக்ரங்கள் தாமிஸ்ரலோகங்கள், அதாவது இருள்சூழ்ந்த லோகங் கள் என்று சொல்லப்படும்.] ஆகவே அந்த பூஜையும் தாமிஸ்ர மானது. குண்டலினியானவள் விழித்துக்கொண்டுவிட்டாலேயே கௌலர்களுக்கு முக்தியென்று சொல்லப்படும்.

10. இம்மாதிரி கௌலர்களுடைய பூஜையில் பஞ்சமகா ரங்களோடு பூஜைசெய்வது வழக்கம். இவர்களுடைய இப்படிப் பட்ட ஆசாரமானது வைதிகமார்க்கத்திற்கு ஒவ்வாததால் அதைப் பற்றி மனதினால்கூட நினைக்கக்கூடாது என்று லக்ஷ்மீதாருடைய அபிப்ராயம்.

11. ஸமயமதத்தின்படி பிந்துஸ்தானமானது ஸஹஸ்ர கம லத்திலிருக்கும் சந்த்ரமண்டலம் என்பது ஏற்கனவேயே சொல்லப் பட்டது. (பிந்துஸ்தானம் ஸுதாஸிந்து:) ஆகவே ஸமயிகள் பூஜைசெய்வது ஷட்சக்ரங்களுக்கு மேல்பட்ட இடமாகிய ஸஹஸ்ரா ரகமலத்திலிருக்கும் பிந்துஸ்தானமாகையால் பாஹ்ய பூஜையை விலக்கப்பட்டது. 'ஸ: மயா' என்று தாதத்ம்யம் அடையப்படுவ

தால் சிவனுக்கு ஸமய: என்று பெயர். அம்பாள் சிவனோடு ஐந்து விதமான ஸாம்யத்தோடு இருப்பதும் அதனால் ஸமயா என்று பெயர் என்பதும் ஏற்கனவேயே சொல்லப்பட்டது. இங்கே ஷட் சக்ரங்களிலும் அவர்கள் இருப்பதை வர்ணிக்கையில் அவை வெளி யிடப்பட்டிருக்கின்றன. 'தவாதாரே' என்று இருவரும் ஆதார சக்ரத்திலிருப்பதாகச் சொல்லப்படுவதால் அதிஷ்டான ஸாம்யம். 'ஜனகஜனனீ மத்' என்பதினால் அனுஷ்டான ஸாம்யம். லாஸ்ய தாண்டவங்களால் அவஸ்த்தா ஸாம்யம். பைரவர், பைரவீ என்ற பெயர்களால் நாமஸாம்யம்.

'ஜபாகுஸுமஸங்காசௌ மதகூர்ணிதலோசனௌ |
ஜகத: பிதரௌவந்தே பைரவீ பைரவாத்மகௌ ||'

என்று சொன்னபடி இருவரும் சிகப்பு நிறமாக இருக்கிறபடியால் ரூபஸாம்யம். இதேமாதிரி 'நவாத்மானம்' என்றதனால் ரூபஸாம் யம், நாமஸாம்யம். இம்மாதிரி ஷட்சக்ரங்களில் சிவதம்பதிகள் இருப்பதை மேலே வர்ணித்திருப்பதில் இந்த ஸாம்ய பஞ்சகமும் இருப்பதைக்காணலாம்.

12. இம்மாதிரியான ஸாம்யத்தோடு கூடிய சிவதம்பதி களை பூஜைசெய்கிறவர்கள் ஸமயிகள். அவர்கள் அனுஷ்டிப்பது ஸமயாசாரம். அவர்களுக்கு ஷட்சக்ர பூஜையானது அவசியமில்லை. ஸஹஸ்ராரகமலத்தில் தான் அவர்களுடைய பூஜை, ஸஹஸ்ரகமலத் தின் மத்தியிலிருக்கும் சந்த்ரமண்டலமே பைந்தவஸ்த்தானம். அதின் மத்தியிலிருக்கும்படியான பிந்துவில் பஞ்சவிம்சதி தத்வங் களைக் கடந்ததும் சிவசக்திதத்வங்களின் ஸம்மேளனமான இருபத் தாறுவது தத்வமுமான ஸாதாக்ய தத்வத்தை அனுஸந்தானம் பண் ணுவது ஸமயாசாரத்திய ஸஹஸ்ரகமல பூஜை. ஆகையினால் ஸமய மதத்தில் பாஹ்யாராதனமும் அதைச்சேர்ந்த ஷோடசோபசார பூஜைகள் முதலியவையும் கிடையாது.

13. இவர்கள் செய்வதான அனுஸந்தானமானது நாலு விதமான ஐக்யபாவனையோடு கூடியது. அதாவது மூலாதாரம் முதலிய ஷட்சக்ரங்களும் ஸ்ரீ சக்ரத்திலிருக்கும் த்ரிகோணம் முத லிய ஷட்சக்ரங்களும் ஐக்யமாக பாவனை செய்வது ஒன்று. பிந்து

ஸ்தானமானசதுரச்ரத்தையும் ஸஹஸ்ரகமலத்தையும் தாதாத்ம்யமாக பாவனைசெய்வது ஒன்று. பிந்து சிவன் இவர்களுடைய தாதாத்ம்யம் ஒன்று. ஆக தாதாத்ம்யத்ரயம். ஸ்ரீ சக்ரமும் அம்பாளுடைய மந்த்ரமும் ஏற்கனவே சொல்லப்பட்டபடி தாதாத்ம்யம் ஒன்று. இவை நாலும் சேர்ந்த நாலுவிதமான தாதாத்ம்யத்தோடு அனுஸந்தானம் பண்ணுவதைத்தான் சதுர்விதைக்யானுஸந்தானம் என்று சொல்லப்படும்.

14. இம்மாதிரி சதுர்விதமான ஐக்யானுஸந்தானத்தின் மூலமாகச் செய்யும் அம்பாளுடைய ஆராதனையைத் தான் ஸமயிகள் எல்லோரும் ஒப்புக்கொள்வது. ஆனால் சிலர் ஐக்யானுஸந்தானமானது ஷட்விதம் (ஆறுவிதமானது) என்று சொல்லுவார்கள். அதாவது—நாதத்தோடு பிந்துவும், நாதத்தோடு கலையும், பிந்துவோடு கலையும், பிந்துவோடு நாதமும், கலையோடு நாதமும், கலையோடு பிந்துவும் ஐக்யமாவதை சொல்லுவார்கள்.

15. பாகவத (பகவான், பகவதியுடைய) ஸ்வரூபமானது நாத, பிந்து, கலை இவைகளுக்கும் அதீதமாக (அப்பால்) இருக்கிறதென்பது எல்லா ஆகமங்களும் ஒப்புக்கொள்ளும் ரஹஸ்யம். இவைகளில் நாதம் என்பது பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்று நான்கு வகைப்படும். சப்தமானது மூலாதாரத்திலிருந்து வாயு ரூபமாகக் கிளம்புகையில் அதற்கு பரா என்றும் அதுவே ஸ்வாதிஷ்டானத்திலிருக்கும்போது பச்யந்தீ என்றும் அனாஹதத்தில் புத்தியோடு சேரும்போது மத்யமா என்றும் விசுத்தியிலிருக்கும்போது வைகரீ என்றும் பெயர். [அந்த வைகரீ ரூபமான சப்தத்தையே பொதுவாக சப்தம் என்று சொல்வது வழக்கம்.] இவைகளில் பரா த்ரிகோணாத்மிகா என்றும் பச்யந்தீ அஷ்டகோண சக்ரரூபிணீ யென்றும், மத்யமா தசார யுக்மமென்றும் வைகரீ சதுர்தசாரமென்றும் சிவ சக்ரங்கள் நாலும் அவைகளில் அந்தர்பாவமடைந்திருக்கின்றன வென்றும் ஆகவே சிவ சக்ரங்கள் நான்குமடங்கிய ஸ்ரீ சக்ரமானது நாத ரூபமென்றும் சொல்லப்படும். பிந்து என்பது மூலாதாரம் முதலிய ஷட் சக்ரங்களைக் குறிக்கும். கலா என்பது ஐம்பது வர்ணங்களையும் முன்னூற்றறுபது கிரணங்களையும் குறிக்கும்.

16. அம்பாளிருக்கும்படியான ஸஹஸ்ரகமலமானது ஷட்சக்ராகாரமான பிந்துவுக்கு அப்பால் இருப்பதால் அம்பாள் பிந்துவுக்கு அதீதமாக இருக்கிறுள். பஞ்சாசத் வர்ணுத்மகமான நாதமானது அம்பாளுடைய மந்த்ரத்திலடங்கியிருப்பதால் அம்பாள் நாதத்திற்கும் அதீதம். காலாத்மகமான ஸூர்ய, சந்த்ர, அனலர்களுடைய முன்னூற்றருபது கலைகளும் அம்பாளுடைய பஞ்சதச நித்யாதேவதைகளுக்குள் அடங்கியிருப்பதாலும் இந்த நித்யாதேவதைகளாகின பஞ்சதச கலைகளுக்கும் அப்பாலாக பதினுருவது கலையாகிய ஸ்ரீவித்யை, சித்கலை, சந்த்ரகலை, ப்ரம்ஹவித்யா என்ற பெயர்களுடன் ஸாதாக்ய தத்வரூபிணியாக விளங்கும் அம்பாள் நாதபிந்துகலாதீதமான ஸ்வரூபமுள்ளவள் என்று ஏற்படுகிறது.

17. இம்மாதிரி அனுஸந்தானம் பண்ணிப் பூஜைசெய்யும் ஸமயிகளுக்கு அம்பாள் தன்னுடைய நிஜமான ரூபத்தோடு ப்ரத்யக்ஷமாகிறுள் என்பதற்கு ஸந்தேகமேயில்லை. அவர்கள் ஷட்சக்ர பேதனம் செய்து குண்டலினியை ஸஹஸ்ராரத்திற்கு அழைத்துக் கொண்டு வரும்போது அம்பாளுக்கு அந்த ஷட்சக்ரங்களிலும் செய்யவேண்டியதான பூஜைமுற்றிலும் ஆந்தரமாகவே செய்யப்படவேண்டும். ஸஹஸ்ரகமலத்தில் அம்பாளை ஸதாசிவனேடு சேர்ப்பித்து அவர்களைச் சுற்றிப் படுதாவைப்போடும் வரையில் அம்பாளை தர்சனம் செய்வதே அவர்களுடைய பூஜையாகும்.

18. மேலேசொல்லியபடி ஸமயிகள் ஸஹஸ்ரகமலத்தில் தன்னுடைய சரணங்களிலிருந்து பெருகும் அம்ருதப்ரவாஹத்தினுல் ஸமஸ்தமான ப்ரபஞ்சத்தையும் நனையும்படி செய்யும் அம்பாளைப் பூஜை செய்வதையும், கௌலர்கள் புஜங்கரூபமான குண்டலினீ சக்தியை மூலாதாரத்தில் உபாஸனை செய்வதையும் சேர்த்து 10-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது—

ஸுதாதாராஸாரை: சரணயுகளாந்தர் விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ—

என்பதினுல் ஸமயமதத்தின்படி அம்பாள் ஸஹஸ்ரகமலத்திலிருப்பதைச் சொல்லப்பட்டது.

—புனரபி ரஸாம்னுயமஹஸ: |

அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்டவலயம்
ஸ்வம் ஆத்மானம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹ
[ரிணி ||

என்பதினால் கௌலமதத்தின்படி உபாஸிக்கப்படும் குண்டலினீ சக்தியை வர்ணிக்கப்பட்டது.

19. லக்ஷ்மீதரர் இம்மாதிரி ஸமயமதத்திற்கும் கௌலமதத்திற்கும் இருக்கும் வித்யாஸத்தைக் காட்டியிருப்பதற்கு ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்தில் ஆதாரம் இருப்பதாகத் தோன்றுகிறது. 'மூலகூடத்ரயகளேபரா' என்று அம்பாளுடைய சரீரத்திற்கும் மூலமந்த்ரத்திற்கும் இருக்கும் தாதாத்ம்யத்தைச் சொல்லிவிட்டு பிறகு முதலாக ஆதாரசக்ரத்தில் உபாஸனை பண்ணும் கௌலமதத்தைச் சொல்லப்படுகிறது.

குலாம்ருதைகரஸிகா குலஸங்கேத பாலினீ |
குலாங்கனா குலாந்தஸ்த்தா கௌலினீ குலயோகினீ |

அதற்குப்பிறகு கௌலமார்கத்திற்கு பேதமாக (அகுலமாக) இருக்கும் ஸமய மதத்தைச் சொல்லப்பட்டது—

அகுலா ஸமயாந்தஸ்த்தா ஸமயாசாரதத்பரா |

பிறகு ஸமயமதப்ரகாரம் குண்டலினீ சக்தியானவள் மூலாதாரத்திலிருந்து கிளம்பி ஷட்சக்ரங்களையும் பேதனம் செய்து ஸஹஸ்ராரத்திற்கு வருவதைச் சொல்லப்பட்டது—

மூலாதாரைக நிலயா ப்ரம்ஹக்ரந்திவிபேதினீ |
மணிபூராந்தருதிதா விஷ்ணுக்ரந்தி விபேதினீ |
ஆக்ஞாசக்ராந்தராளஸ்த்தா ருத்ரக்ரந்தி விபேதினீ |
ஸஹஸ்ராராம்புஜாரூடா—

அதற்குமேல் அம்பாள் ஸஹஸ்ராரத்திலிருப்பதை வர்ணிக்கப்பட்டது.

ஸுதாஸாராபிவர்ஷிணீ |
தடில்லதாஸமருசி: ஷட்சக்ரோபரி ஸமஸ்த்திதா |
மஹாஸக்தி: குண்டலினீ பிஸதந்துதனீயஸீ |

20. ஸமயிகளுக்கு பாஹ்யமான பூஜை கூடாது என்பதிலிருந்து அவர்கள் ப்ரம்ஹாண்டத்திலிருக்கும்(பாஹ்யத்திலிருக்கும்)

ஸூர்ய, சந்த்ர மண்டலங்களில் அம்பாளை த்யானித்து உபாஸனை செய்யக்கூடாது என்று சிலர் ஆக்ஷேபிக்க முடியும். அப்படியல்ல. பிண்டாண்டத்தில் (சரீரத்திற்குள்) இருக்கும் சந்த்ர ஸூர்யர்களும் ப்ரம்ஹாண்டத்திலிருக்கும் சந்த்ர ஸூர்யர்களும் ஐக்யமானதினுலும் அம்பாளிருக்கும்படியான ஸஹஸ்ரார சந்த்ரமண்டலத்திலிருந்து பெருகும் அம்ருதத்தினுல் இந்த இரண்டுவிதமான சந்த்ர ஸூர்யர்களும் உஜ்ஜீவனம் (உயிர்) அடைவதாலும் அவர்களை ஸஹஸ்ரார சந்த்ர மண்டலத்தின் அம்சங்களாகவே எண்ணவேண்டும். ஆகவே மேலேசொல்லிய ஆக்ஷேபணைக்கு இடமில்லாமல் போகிறது.

21. ஷட்சக்ரங்கள் மூலாதாரத்திலிருந்து ஆக்ஞாவரையிலிருப்பதைச் சொல்வது க்ரமமாக இருக்க ஆசார்யாள் இந்த ஆறு ச்லோகங்களில் அவற்றைச் சொல்லுகையில் ஆக்ஞாசக்ரத்தில் ஆரம்பித்து மூலாதாரத்தில் முடித்ததற்கு காரணம் கவனிக்கவேண்டும். அந்த சக்ரங்களின் தத்வங்கள் ஆக்ஞாவிலிருந்து ஆரம்பித்துச் சொல்லுகையில் மனஸ், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், ப்ருதிவீ என்ற வரிசைவரும். ஆத்மாவைத்தான் மனஸ் என்று இங்கே சொன்னது. 'ஆத்மன ஆகாசஸ்ஸம்பூத:, ஆகாசாத்வாயு:, வாயோரக்னி:, அக்னேராப:, அத்ப்ய: ப்ருதிவீ' என்ற ச்ருதிவாக்யத்திலிருக்கும் வரிசைப்படி ஆசார்யாள் சொன்னது. [ப்ருதிவீ தத்வமானது ஜல தத்வத்திலிருந்தும்,ஜல தத்வமானது அக்னி தத்வத்திலிருந்தும், அக்னி தத்வமானது வாயு தத்வத்திலிருந்தும், வாயு தத்வமானது ஆகாச தத்வத்திலிருந்தும், ஆகாச தத்வமானது ஆத்ம தத்வத்திலிருந்தும் உண்டானதாகச்சொல்லப்பட்டது. அதாவது, பஞ்சவிம்சதி தத்வங்கள் ப்ருதிவியிலிருந்து மேலே போகையில் ஸ்தூலமாக இருப்பவை ஸூக்ஷ்மத்தில் மாறிக்கொண்டு போவதாகச் சொல்லப்படும்.]

22. இதே காரணத்தினுல் தான் இந்த ஆறு ச்லோகங்களின் வரிசையிலும் 'மஹீம் மூலாதாரே' என்ற 9வது ச்லோகத்திலும் (மூலாதார ஸ்வாதிஷ்டானங்களுக்கு மேலேயிருக்கும்) மணிபூரசக்ரத்தை மூலாதாரத்திற்கு அடுத்தபடியாகவும் ஸ்வாதிஷ்டானத்திற்கு முந்தியதாகவும் சொல்லப்பட்டது.

23. 'ஊர்த்வ மூலம் அவாக்சாகம், வ்ருக்ஷம் யோ வேத ஸம்ப்ஃதி' என்ற ச்ருதிவாக்யத்தில் சரீரத்தை ஒரு வ்ருக்ஷமாகச் சொல்லி சிரஸை அதற்கு மூலமாகவும் காசரணாத்யவயங்களை அதற்கு கிளைகளாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் யோக சாஸ்த்ரப்படிக்கும் ஸமய மதத்தின்படிக்கும் மூலாதார சக்ரத்தையேதான் ஷட் சக்ரங்களுக்கும் ஆதாரமென்று சொல்லப்படும்.

'மூலாதாரஸ்திதாமேவ தேவீம் ஸுப்தாம் ப்ரபூஜயேத்'

என்று சொன்னபடி குண்டலினீ தேவியானவள் மூலாதாரத்தில் தூங்குபவளை எழுப்பி ஷட்சக்ரபேதனம் பண்ணி ஸஹஸ்ரகமலத்திற்கு அழைத்துப்போகவேண்டியிருப்பதாலும் கீழ்நோக்கி வாழைப்பூ மாதிரி மூடியவண்ணம் தொங்கிக்கொண்டிருக்கும் ஷட் (சக்ர) கமலங்களும் குண்டலினீ சக்தியானவள் பேதனம்பண்ணிப் போகும்போதுதான் உயரத்திரும்பி கமலங்களாக மலர்கின்றபடியாலும் மூலாதார க்ரமமாகத்தான் பூஜை செய்யவேண்டுமென்பது கௌலர்களுக்கும் ஸமயிகளுக்கும் பொதுவான ஸித்தாந்தம்.

24. தாதாத்ம்யத்யானம் இல்லாமல் பூஜைகிடையாது. கரணேந்த்ரியங்களோடு கூடிய சரீரமாகிற சக்ரத்தில் ஸம்வித் ஸ்வரூபிணியாகிய அம்பாளை தன்னுடைய ராகத்வேஷங்களை பாசாங்குசங்களாகவும் சப்தஸ்பர்சாதி பஞ்ச தன்மாத்ரைகளை பாணங்களாகவும் மனஸ்ஸை தனுஸ்ஸாகவும் தரித்துக்கொண்டிருப்பவளாக த்யானம் செய்து ஆத்ம பூஜை பண்ணுவதானது அத்யந்த பலத்தோடுகூடிய தென்பதை வாமகேச்வரதந்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது—

'பாசாங்குசௌ ததியௌ து ராகத்வேஷாத்மகௌ ஸ்ம்ருதௌ |
சப்தஸ்பர்சாதயோ பாணா: மனஸ்தஸ்யாபவத் தனு: ||
கரணேந்த்ரிய சக்ரஸ்த்தாம் தேவீம் ஸம்வித் ஸ்வரூபிணீம் |
விச்வாஹங்கார புஷ்பேண பூஜயேத் ஸர்வஸித்திபாக் ||'

மேலேசொல்லிய த்யான ப்ரகாரமானது—

'ராகஸ்வரூப பாசாட்யா க்ரோதாகாராங்குசோஜ்வலா |
மனோ ரூபேக்ஷுகோதண்டா பஞ்சதன்மாத்ர ஸாயகா ||'

என்று ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லியிருப்பதை யொட்டி இருப்பது கவனிக்கத்தக்கது.

25. இப்படி ஹ்ருதய கமலத்திலேயே அம்பாளை த்யானித்து ஆராதனம் செய்தால் அம்பாள் மிகவும் ப்ரீதியடைந்து ஐஹிகம், ஆமுஷ்மிகம் என்ற இருவிதமான பலன்களையும் கொடுப்பாள். வசின்யாதி வாக்தேவதைகளால்சூழப்பட்டவளாக அம்பாளை த்யானம் பண்ணினால் ஸாஸ்வதீவிலாஸம் ஏற்படும். யாவகாஸம் போன்ற வர்ணமுடையவளாக த்யானம் செய்தால் வசீகரண சக்தி உண்டாகும். 'முகம் பிந்தும் க்ருத்வா' என்ற ச்லோகத்தின்படி த்யானம் செய்தால் அதில் சொல்லியபடி பலன் கிடைக்கும். அம்பாளை ஆந்தரமாகப் பூஜைசெய்வதுதான் ஐஹிக ஆமுஷ்மிகங்களான ஸகல பலன்களையும் அடைவதற்கு உபாயம் என்பது ஸமயத்தினுடைய தத்வம்.

26. இம்மாதிரி ஆறு சக்ரங்களில் சிவதம்பதிகள் இருப்பதைச் சொல்லியிருக்கிறதை அவரவர்களுடைய சக்திக்குத்தக்கப்படி உபாஸனை செய்யலாம். குண்டலினீ சக்தியை எழுப்பி ஷட்சக்ர பேதனம் பண்ணி ஸஹஸ்ராரத்திற்கு அழைத்துப்போவதில் அப்யாஸத்தினால்தான் ஒரோர் சக்ரத்தையும் கடந்து செல்லவேண்டும். அந்தந்த சக்ரத்திற்கு வரும்போது அங்கே அவ்விருவர்களையும் இதில் சொல்லியபடி த்யானம் செய்து பிறகு அப்யாஸாதிசயத்தினால் க்ரமமாக (தன்னுடைய) ஸஹஸ்ரகமலத்திற்கு அழைத்துவந்து அங்கே அவர்களிருவரும் எப்போதும் இருக்கும்படியாக ஸித்தியடைவதற்கு முயலவேண்டும்.

27. இந்த உத்க்ருஷ்டமான ஸித்தியானது ப்ராண நிரோதம் முதலியவை செய்து யோகமார்கமாகவும் அடையலாம். அல்லது த்ருடமான பாவனையினால் அநுஸந்தானம் செய்து அதின் மூலமாகவுமடையலாம்.

இதுவரையில் சொல்லப்பட்ட 41 ச்லோகங்களடங்கிய பாகத்திற்கு ஆனந்தலஹரி யென்றும் இனிவரும் 59ச்லோகங்களடங்கிய பாகத்திற்கு ஸௌந்தர்யலஹரீயென்றுப் பெயர் இருப்பதாக முகவுரையில் சொல்லப்பட்டது. முதல் பாகமானது மந்த்ர

சாஸ்திரம், உபாஸனக்ரமம் இவைகளை முக்யமாகச்சொல்லுகையில் இரண்டாவது பாகமானது அம்பாளுடைய விசேஷமான ஸௌந்தர்யத்தைப்பற்றி மிகவும் அழகாக வர்ணிப்பதால் அதற்கும் இந்த க்ரந்தத்திற்குமே ஸௌந்தர்யலஹரீயென்று பெயர் ஏற்பட்டது. இந்த இரண்டாவது பாகம்தான் ஆசார்யாளால் செய்யப்பட்டது. இதின் பெருமையைப்பற்றி தற்காலம் ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடத்தில் விளங்கிவரும் ஸ்ரீஜகத்குருவானவர் சொல்லுவது-'100ச்லோகங்களும் கைலாஸத்திலிருந்து வந்திருந்தால் நமக்குக் கஷ்டம்தான். அப்பொழுது ஸ்ரீ ஆசார்யாளுடைய வாக்கின் மஹிமையை நாம் அனுபவிக்கமுடியாது. ஆசார்யாள் செய்தவைகளைவிட கைலாஸத்திலிருந்து வந்தவைகள் உயர்வாகத்தோன்றவில்லை. அவையெல்லாம் மந்த்ரங்கள்தான். பின் 59 ச்லோகங்களும் ஆனந்தத்தைத் தரும் ஸ்தோத்ரங்கள்" (ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் அருளிய நன்மொழிகள்- முதல்பாகம் 107 வது பக்கம்)

இனிமேல் வரும் ச்லோகங்களில் ஆசார்யாள் அம்பாளுடைய கிரீடம் முதல் பாதம் முடிய வர்ணித்துவிட்டு பிறகு அம்பாளைப் பொதுவாக ஸ்தோத்ரம் செய்து தன்னுடைய அவையடக்கத்துடன் க்ரந்தத்தை முடிவு செய்கிறார்கள்.

गतैर्माणिक्यत्वं गगनमणिभिः सान्द्रघटितं
किरीटं ते हैमं हिमगिरिसुते कीर्तयति यः ।
स नीडेयच्छायाच्छुरणशबलं चन्द्रशकलं
धनुः शौनासीरं किमिति न निबध्नाति धिषणाम् ॥ ४२॥

கதைர் மாணிக்யத்வம் ககனமணிபி: ஸாந்த்ரகடிதம்
கிரீடம் தே ஹைமம் ஹிமகிரிஸுதே கீர்தயதி ய: |
ஸ நீடேயச்சாயாச் சுரணசபளம் சந்த்ரசகளம்
தனு: சௌநாஸீரம் கிமிதி ந நிபத்னாதி திஷணாம் ||

| | |
|---|---|
| ஹே ஹிமகிரிஸுதே | ஹே! பார்வதி! |
| மாணிக்யத்வம் | மாணிக்யங்களாக (ரத்னங்களாக) |
| கதை: | இருக்கும் |
| ககனமணிபி: | (த்வாதச) ஆதித்யர்களால் |

| | |
|---|---|
| ஸாந்த்ர கடிதம் | நெருக்கமாக இழைக்கப்பட்ட |
| தே | உன்னுடைய |
| ஹைமம் கிரீடம் | தங்கக் கிரீடத்தை |
| ய: | எந்த பக்தனனவன் (கவியானவன்) |
| கீர்தயதி | வர்ணிக்கிருனே |
| ஸ: | அவன் |
| நீடேய- | அந்த கிரீடத்தின் குவளேயிலிருக்கும் ரத்னங்களின் |
| ச்சாயா- | சாயயையானது |
| ச்சுரண- | வ்யாபிக்கிறதினல் |
| சபளம் | பல நிறமுள்ளதாகத் தோன்றும் |
| சந்த்ர சகளம் | (கிரீடத்திலிருக்கும்) சந்த்ர ரேகையை |
| சௌநாஸீரம் தனு: இதி | இந்தரனுடைய வில்லோ என்ற |
| திஷணும் | ஊஹத்தை |
| ந நிபத்னுதி கிம் | கொள்ளமாட்டானு! |

தாயே! த்வாதச ஆதித்யர்களே மாணிக்யங்களாக இழைக்கப்பட்ட உன்னுடைய தங்கக் கிரீடத்தை எந்த பக்தனுவது வர்ணிக்கத் தொடங்கினல் அவன் அந்தக் கிரீடத்தில் பதித்திருக்கும் ரத்னங்களின் காந்தி அடிப்பதால் பல நிறமுள்ளதாகத் தோன்றும் (அந்த கிரீடத்திலிருக்கும்) சந்த்ர ரேகையை இந்த்ர தனுஸோ என்று சந்தேகமடைந்து அப்படியே வர்ணிப்பான்.

1. அம்பாளுடைய கிரீடத்தில் பன்னிரெண்டு ஆதித்யர்களே ரத்னங்களாக இழைக்கப்பட்டிருக்கிருர்கள். அந்தக் காரணத்தால் அந்தக் கிரீடத்தில் தரிக்கப்பட்டிருக்கும் சந்த்ரகலேயானது ஸ்வபாவத்தில் வெளுப்பாக இருந்தபோதிலும் கிரீடத்திலிழைக்கப்பட்டிருக்கும் ரத்னங்களின் காந்தியினல் இந்திரனுடைய தனுஸைப் போல் பல நிறமுள்ளதாகத் தோன்றுகிறது. ஆகவே அந்த சந்த்ரனவன் இந்த்ரனுடைய தனுஸ்தானே என்ற ஸந்தேகம் அந்த கிரீடத்தை வர்ணிக்க விரும்புகிறவனுடைய மனதில் அவச்யம் ஏற்படும் என்று சொல்லப்பட்டது.

2. த்வாதச ஆதித்யர்கள் அம்பாளுடைய அருகில் இருந்துகொண்டு ஸாமீப்ய ஸேவைசெய்ய வேண்டுமென்கிற எண்ணங்

கொண்டு அம்பாளுடைய கிரீடத்தில் இருக்கும் ரத்னங்களாக இருக்கிறார்கள் என்பது தாத்பர்யம்.

3. அம்பாளுடைய சிரஸிலிருக்கும் சந்த்ரரேகையானது இந்த்ரதனுஸ் மாதிரியிருப்பதை 'ஐந்த்ரஸ்யேவ சாஸனஸ்ய தததீ மத்யே லலாடம் ப்ரபாம்' என்று லகுஸ்துதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

धुनोतु ध्वान्तं नस्तुलितदलितेन्दीवरवनं
घनस्निग्धश्लक्ष्णं चिकुरनिकुरुम्बं तव शिवे ।
यदीयं सौरभ्यं सहजमुपलब्धुं सुमनसो
वसन्त्यस्मिन्मन्ये वलमथनवाटी विटपिनाम् ॥ ॥४३॥

துனோது த்வாந்தம் ந: துலித தளிதேந்தீவர வனம்
கன ஸ்னிக்த ச்லக்ஷ்ணம் சிகுர நிகுரும்பம் தவ சிவே |
யதீயம் ஸௌரப்யம் ஸஹஜம் உபலப்தும் ஸுமனஸோ
வஸந்த்யஸ்மின் மன்யே வலமதனவாடீவிடபினாம் ||

| | |
|---|---|
| ஹே! சிவே! | ஹே! பார்வதீ! |
| துலித தளிதேந்தீவர வனம் | மலர்ந்த நீலோத்பல புஷ்பங்களின் வனத்திற்கு ஸமானமானதும் |
| கன ஸ்னிக்த ச்லக்ஷ்ணம் | அடர்த்தியானதும், வழவழப்பானதும், ம்ருதுவானதுமான |
| தவ | உன்னுடைய |
| சிகுர நிகுரும்பம் | கேச கலாபமானது |
| ந: | எங்களுடைய |
| த்வாந்தம் | மூல அக்ஞானமாகிற இருட்டை |
| துனோது | போக்கடிக்கட்டும். |
| | எப்பேர்ப்பட்டகேசமென்றால் |
| யதீயம் | எவைகளினுடைய |
| ஸஹஜம் | இயற்கையான |
| ஸௌரப்யம் | வாஸனையை |
| உபலப்தும் | அடைவதற்காக |
| வலமதன- | (வலன் என்ற அஸுரனை ஸம்ஹாரம் செய்தவனான) இந்த்ரனுடைய |
| வாடீவிடபினாம் | உத்யானவனத்தின் மரங்களுடைய |

| | |
|---|---|
| ஸுமனஸ: | புஷ்பங்கள் |
| அஸ்மின் | இந்த கேசகலாபத்தில் |
| வஸந்தி (இதி) | இருந்துகொண்டிருக்கின்றனவென்று |
| மன்யே | நினைக்கிறேன். |

தாயே! மலர்ந்த நீலோத்பல புஷ்பங்களின் வனம்போன்றதும், அடர்த்தியானதும், வழவழப்பானதும், ம்ருதுவானதுமான உன் கேசகலாபமானது எங்களுடைய (மனதிலிருக்கும் மூல அக்ஞானமாகிற) இருட்டைப் போக்கடிக்கட்டும். அங்கே அணியப்பட்டிருக்கும் நந்தனவனத்திய புஷ்பங்கள் உன் கேசத்திலிருக்கும் இயற்கையான பரிமளத்தைத் தாங்களும் அடைவதற்காக அங்கே வந்திருக்கின்றனவோ என்று நினைக்கிறேன்.

1. அம்பாளுடைய கேசமானது கருப்பாக இருந்தபோதிலும் அதினுடைய மஹிமையினால் பக்தர்களுடைய மனதில் இருக்கும் மூல அக்ஞானமாகிற இருட்டானது போய்விடுகிறது.

2. ஸாதாரணமாக கேசத்திற்கு வாஸனை உண்டுபண்ணுவதற்காக புஷ்பங்கள் தரிக்கப்படுவது வழக்கம். ஆனால் அம்பாளுடைய கேசத்திற்கு இயற்கையாகவே இணையில்லாத வாஸனை இருப்பதால் இந்த்ரனுடைய உத்யானத்திலிருக்கும் பாரிஜாதம் முதலிய புஷ்பங்கள்கூட அந்த வாஸனையை அடைவதற்காக அம்பாளுடைய கேசபாசத்தில் இருக்கின்றனவென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி மதுரைத் திருவிளையாடற் புராணத்தில் ஒரு அழகான கதையும் உண்டு. நக்கீரர் அம்பாளுடைய கேசத்திற்கு சேர்க்கை வாஸனைதான் என்று சொன்னதும் அதை அங்கே பண்டிதரூபமாக வந்த பரமசிவன் ஆக்ஷேபித்தும் அதை ஒப்புக்கொள்ளாமல் நக்கீரர் பிடிவாதமாகக் கக்ஷி சொன்னதின்பேரில் அவர் பரமசிவனுடைய நேத்ராக்னியினால் தகிக்கப்பட்டு பிறகு பரமசிவனை ஸ்தோத்ரம் செய்து தனக்கு ஏற்பட்ட ஆபத்திலிருந்து விடுவிக்கப்பட்டாரென்றும் அங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 'சம்பகாசோகபுன்னாக ஸௌகந்திக லஸத்கசா' என்ற நாமத்திற்கு அர்த்தம் பண்ணுகையில் அந்த புஷ்பங்களின் வாஸனையைவிட அம்பாளுடைய கூந்த

னுக்கு இயற்கையாகவே வாஸனை இருப்பதால் அவைகள் வெறும் அலங்காரத்திற்காகமட்டும் தரிக்கப்பட்டிருப்பதாக பாஸ்கரராயரால் அவருடைய பாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

तनोतु क्षेमं नस्तव वदनसौन्दर्यलहरी-
परीवाहस्रोतः सरणिरिव सीमन्तसरणिः ।
वहन्ती सिन्दूरं प्रबलकबरीभारतिमिर-
द्विषां वृन्दैर्बन्दीकृतमिव नवीनार्ककिरणम् ॥ ४४ ॥

தனோது க்ஷேமம் நஸ்தவ வதன ஸௌந்தர்ய லஹரீ-
பரீவாஹ ஸ்ரோத: ஸரணிரிவ ஸீமந்த ஸரணி: |
வஹந்தீ ஸிந்தூரம் ப்ரபல கபரீ பாரதிமிர-
த்விஷாம் ப்ருந்தை: பந்தீ க்ருதமிவ நவீனார்க்க கிரணம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | அம்மணி! |
| தவ | உன்னுடைய |
| வதன ஸௌந்தர்ய லஹரீ பரீவாஹ | முகத்தின் அழகாகிற வெள்ளத்தின் ப்ரவாஹமானது |
| ஸ்ரோத: ஸரணிரிவ | வழிந்தோடும் கால்வாய் மாதிரி இருக்கும் |
| ஸீமந்த ஸரணி: | வகுட்டின் ரேகையானது |
| ப்ரபல | பலசாலிகளான |
| கபரீபார | கேச பாரத்தின் |
| திமிர | கறுப்பாகிற (இருட்டுப்போன்ற) |
| த்விஷாம் ப்ருந்தை: | எதிரிகளின் கூட்டத்தினால் |
| பந்தீக்ருதம் | சிறை செய்யப்பட்ட |
| நவீனார்க்க கிரணமிவ | இளஞ்சூர்யனுடைய கிரணத்தைப்போன்ற |
| ஸிந்தூரம் | ஸிந்தூரத்தை |
| வஹந்தி | தரித்துக்கொண்டு |
| ந: | எங்களுக்கு |
| க்ஷேமம் | க்ஷேமத்தை (யோகக்ஷேமமாகிற நன்மையை) |
| தனோது | கொடுக்கட்டும் (அதிகரிக்கும்படி செய்யட்டும்). |

தாயே! அடர்ந்தஇருட்டில் சிறைசெய்யப்பட்ட பாலஸூர்ய கிரணம்போன்ற ஸிந்தூரத்தை தரித்துக்கொண்டிருப்பதும் உன்னுடைய முகத்தின் அழகாகிய வெள்ளத்திற்குக் கால்வாய்போன்றது

மான உனது கேசத்தின் வகுடானது எங்களுக்கு ஸகலவிதமான க்ஷேமங்களையும் கொடுக்கட்டும்.

1. அம்பாளுடைய தலைமயிரின் நடுவிலிருக்கும் வகுடானது அம்பாளுடைய வதன ஸௌந்தர்யமாகிற ப்ரவாஹத்தின் கால்வாய்மாதிரி இருக்கிறதென்றும் அந்த வகுட்டில் தரிக்கப்பட்டிருக்கும் ஸிந்தூரமானது (வெளிச்சத்திற்கு எதிரியான) இருட்டுப் போன்ற அம்பாளுடைய கேசத்தின் கருப்பில் அகப்பட்டுக் கொண்ட இளஞ்சூர்ய கிரணம் போல இருப்பதாகவும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

2. ஸ்த்ரீகள் தங்கள் தலைமயிரை இரண்டாய் வகிர்ந்து வாரிக் கட்டிக்கொள்ளும்போது அதின் நடுவில்காணும் கோட்டை (வகுட்டை) ஸீமந்தம் என்று சொல்லப்படும். உத்தம ஸ்த்ரீகள் அந்த ஸீமந்த ரேகையில் ஸிந்தூரம் அணிந்துகொள்ளுவது வழக்கம். பதிவ்ரதைகளின் ஸீமந்த ப்ரதேசமானது லக்ஷ்மீ நிவாஸம் பண்ணுமிடமென்று சொல்லப்படும்.

3. பாலஸூர்யனுடைய கிரணமானது சிகப்பாக இருக்குமாகையால் இங்கு ஸிந்தூரத்திற்கு ஒப்பிடப்பட்டது.

4. அம்பாள் தரித்திருக்கும் ஸீமந்த ஸிந்தூரத்தை ஆசார்யாள் பின்வருமாறு வர்ணித்திருக்கிறார்கள்.

ஸீமந்தே தே பகவதி மயா ஸாதரம் ந்யஸ்தமேதத்
ஸிந்தூரம் மே ஹ்ருதயகமலே ஹர்ஷவர்ஷம் தனோது |
பாலாதித்ய த்யுதிரிவ ஸதா லோஹிதா யஸ்ய காந்தி:
அந்தர் த்வாந்தம் ஹரது ஜகதச்சேதஸா சிந்தயாமி ||

(சதுஷ்ஷஷ்ட்யுபசாரஸ்தோத்ரம்).

अरालैः स्वाभाव्यादलिकलभसश्रीभिरलकैः
परीतं ते वक्त्रं परिहसति पङ्केरुहरुचिम् ।
दरस्मेरे यस्मिन् दशनरुचिकिञ्जल्करुचिरे
सुगन्धौ माद्यन्ति स्मरदहनचक्षुर्मधुलिहः ॥ ४५ ॥

அராளை: ஸ்வாபாவ்யாத் அளிகளப ஸஸ்ரீபிரளகை:
பரீதம் தே வக்த்ரம் பரிஹஸதி பங்கேருஹருசிம் |
தரஸ்மேரே யஸ்மின் தசனருசி கிஞ்ஜல்க ருசிரே
ஸுகந்தௌ மாத்யந்தி ஸ்மரதஹன சக்ஷுர் மதுலிஹ:11

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணி! |
| ஸ்வாபாவ்யாத் | இயற்கையாகவே |
| அராளை: | சுருட்டையானதும் |
| அளிகளப ஸஸ்ரீபி: | சிறிய வண்டுக்களைப்போன்ற காந்தியுடையது மான |
| அளகை: | முன்னெத்தி (மின்னுச்சி) மயிர்களால் |
| பரீதம் | சூழப்பட்ட |
| தே வக்த்ரம் | உன்னுடைய முகமானது |
| பங்கேருஹருசிம் | தாமரஸ புஷ்பத்தின் அழகை |
| பரிஹஸதி | அவமானப் படுத்துகிறது. |
| | (இன்னமும் முகத்தை வர்ணிக்கிறார்) |
| தரஸ்மேரே | புன்சிரிப்போடு கூடியதும் |
| தசனருசி | பல்வரிசைகளுடைய காந்தியாகிற |
| கிஞ்ஜல்க ருசிரே | இதள்களால் அழகானதும் |
| ஸுகந்தௌ | நல்ல மணமுள்ளதுமான |
| யஸ்மின் | எந்த முகத்தில் |
| ஸ்மரதஹன- | மன்மதனை எரித்தவரான பரமசிவனுடைய |
| சக்ஷுர் மதுலிஹ: | கண்களாகிற தேனீக்கள் |
| மாத்யந்தி | மயங்குகின்றனவோ |

தாயே! இயற்கையாகவே சுருண்டதும் வண்டுகளைப்போல் காந்தியுடையதுமான அளகங்களால் சூழப்பட்ட உன்னுடைய முகமானது தாமரைப் புஷ்பத்தின் அழகையும் தோற்கடிக்கிறது. அப்பேர்ப்பட்ட அழகுடையதும், புன்சிரிப்போடு கூடியதும், பல் வரிசைகளின் காந்தியையே இதள்களாவுடையதும், பரிமளமுள்ள தமான அந்த முகாரவிந்தத்தில் காமனையும் ஜெயித்தவரான பரம சிவனுடைய கண்களாகிய தேனீக்கள் மயங்கியிருக்கின்றன.

1. அம்பாளுடைய முகாரவிந்தமானது தாமரஸ புஷ்பத் தைவிட அழகானதென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது. தாமரைப் பூவை எப்படி தேனீக்கள் சூழ்ந்திருக்குமோ அதேமாதிரி அம்பா

ளுடைய முகாரவிந்தத்தைச் சுற்றி வண்டுகள்போல் கறுத்த மின்னுச்சி மயிர்கள் சூழ்ந்திருக்கின்றன. மேலும் புன்சிரிப்பினுல் வெளிப்படும் பல்வரிசையின் காந்தியினுல் அழகாக இருக்கும் அந்த முகத்தை பரமசிவன் பார்க்கும்போது அவர் மன்மதனை ஜெயித்தவராக் இருந்தபோதிலும் அம்பாளுடைய முகத்தின் அழகினுல் அவர் மயங்கி விடுகிருர் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

2. அம்பாளுடைய முகத்தை தாமரைப்பூவுக்கும், முன்னெத்தி மயிர்களை சிறிய வண்டுகளின் கூட்டத்திற்கும், புன்சிரிப்பை தாமரைப் பூவானது கொஞ்சமாக மலர்ந்திருப்பதற்கும், பற்களின் காந்தியை பூவின் இதள்களுக்கும், முகத்தின் பரிமளத்தை பூவின் மணத்திற்கும், பரமசிவனுடைய நேத்ரங்களை வண்டுகளுக்கும் உபமானமாக வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

3. பரமசிவனுடைய எந்த நேத்ரங்கள் மன்மதனுக்குக் கட்டுப்படாது அவனை எரித்தனவோ அவைகளே இப்போது அம்பாளுடைய முகத்தைப் பார்ப்பதிலேயே மயங்கி காமவிகாரத்தை யடைவதென்ருல் அம்பாளுடைய லாவண்யாதிசயமானது அபாரமென்பதைக் காட்டுகிறது.

ललाटं लावण्यद्युतिविमलमाभाति तव यत्
द्वितीयं तन्मन्ये मकुटघटितं चन्द्रशकलम् ।
विपर्यासन्यासादुभयमपि संभूय च मिथः
सुधालेपस्यूतिः परिणमति राकाहिमकरः ॥ ४६ ॥

லலாடம் லாவண்யத்யுதிவிமலம் ஆபாதி தவ யத்
த்விதீயம் தன்மன்யே மகுடகடிதம் சந்த்ர சகளம் |
விபர்யாஸ ந்யாஸாத் உபயமபி ஸம்பூய ச மித:
ஸுதாலேப ஸ்யூதி: பரிணமதி ராகா ஹிமகர: ||

| | |
|---|---|
| ஹே! பகவதி! | தாயே! |
| தவ யத் லலாடம் | உன்னுடைய எந்த நெற்றியானது |
| லாவண்யத்யுதிவிமலம் | லாவண்யமாகிய வெண்ணிலாவோடு நிர்மலமாக |
| ஆபாதி | ப்ரகாசிக்கிறதோ |
| தத் | அதானது |
| மகுடகடிதம் | கிரீடத்திலிருக்கும் சந்த்ரனுக்கு |

| | |
|---|---|
| த்விதீயம் | இரண்டாவதான (வேறானதான) |
| சந்த்ர சகலம் | அர்த்த சந்த்ர பிம்பமோவென்று |
| மன்யே | நினைக்கிறேன் |
| | ஆகவே |
| உபயமபி | உன்னுடைய சிரஸில் த்ரிக்கப்பட்டிருக்கும் அர்த்த சந்த்ரனும், அர்த்த சந்த்ரன் போன்ற நெற்றியும் ஆகிய இவையிரண்டும் |
| விபர்யாஸ்ய்யாஸாத் | மேலும் கீழுமாக வித்யாஸமாக வளைந்திருப்பதிலிருந்து |
| மித: ஸம்பூய ச | அன்யோன்யமாகப் பொருத்துவதினால் |
| ஸுதாலேபஸ்யூதி: | அம்ருதத்தால் பூசப்பட்ட (அம்ருத ரஸம் நிறைந்த) |
| ராகா ஹிமகர: | பூர்ணிமா சந்த்ரனாக |
| பரிணமதி | ஆகின்றன. |

தாயே! லாவண்யமாகிய வெண்ணிலாவுடன் ப்ரகாசிக்கும் உனது நெற்றியானது கிரீடத்திலிருக்கும் அர்த்த சந்த்ரனைத் தவிர்த்து வேறான அர்த்த சந்த்ரன் மாதிரித்தோன்றுகிறது. ஏனென்றால் மேலும் கீழுமாக வித்யாஸமாக நோக்கியிருக்கும் வளைவுகளையுடைய இவையிரண்டையும் வளைவுகள் பொருந்தும்படியாகச் சேர்த்துவைத்தால் அம்ருதம் நிறைந்த பூர்ணிமா சந்த்ரன் மாதிரி ஆகுமல்லவா.

1. நெற்றியானது கீழ்நோக்கிய வளைவுடன் கூடிய அர்த்த சந்த்ரன்மாதிரி இருக்கிறது. கிரீடத்தில் தரித்திருக்கும் அர்த்த சந்த்ரனோ மேல் நோக்கிய வளைவுடன் கூடியது. இப்படி மாறுபாடாக நோக்கியிருக்கும் இரண்டு அர்த்த சந்த்ரன்களையும் சரியாகப் பொருத்தினால் பூர்ண சந்த்ரனாக ஆவதை இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது அம்பாளுடைய நெற்றியானது கிரீடத்திலிருக்கும் அர்த்த சந்த்ரனைப் பூர்ண சந்த்ரனாகச் செய்யும் அர்த்த சந்த்ரன் மாதிரி வளைந்தும் அழகாகவும் ப்ரகாசத்துடனும் இருப்பதாக வர்ணிக்கப்பட்டது.

2. 'அஷ்டமீசந்த்ர பிப்ராஜத் அலிகஸ்தல சோபிதா' என்று ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமத்தில் சொல்லியபடி அம்பாளுடைய நெற்றியானது அஷ்டமீ சந்த்ரன் (அதாவது அர்த சந்த்ரன்) போல இருக்கிறதாகச் சொல்லப்பட்டது.

भ्रुवौ भुग्ने किंचिद्भुवनभयभङ्गव्यसनिनि
त्वदीये नेत्राभ्यां मधुकररुचिभ्यां धृतगुणम् ।
धनुर्मन्ये सव्येतरकरगृहीतं रतिपतेः
प्रकोष्ठे मुष्टौ च स्थगयति निगूढान्तरमुमे ॥ ४७ ॥

ப்ருவௌ புக்னே கிஞ்சித் புவனபயபங்கவ்யஸனினி
த்வதீயே நேத்ராப்யாம் மதுகரருசிப்யாம் த்ருதகுணம் |
தனுர்மன்யே ஸவ்யேதரகர க்ருஹீதம் ரதிபதே:
ப்ரகோஷ்டே முஷ்டௌச ஸ்தகயதி நிகூடாந்தரம் உமே ||

| | |
|---|---|
| ஹே! உமே! | ஹே உமாதேவியே! |
| புவன் பய பங்க வ்யஸ னினி | சகல புவனங்களுக்கும் இருக்கப்பட்ட பயத்தைப் போக்கடிப்பதில் ச்ரத்தையோடு கூடியவளே |
| த்வதீயே | உன்னுடைய |
| கிஞ்சித் புக்னே | (கீழ்நோக்கியிருப்பதால்) கொஞ்சம் வளைந்த |
| ப்ருவௌ | புருவங்கள் |
| மதுகர ருசிப்யாம் | வண்டுகள் மாதிரி அழகுடன்கூடிய |
| நேத்ராப்யாம் | கண்களால் (கண்களாகிற) |
| த்ருத குணம் | ஏற்றிய நாண்கயிற்றுடன் கூடியதும் |
| ஸவ்யேதர கர க்ருஹீ தம் | வலது கையினுல் பிடிக்கப்பட்டதும் |
| ப்ரகோஷ்டே | முழங்கையின் கடைசி |
| முஷ்டௌ ச | விரல்பிடி இவைகளால் |
| ஸ்தகயதி (ஸதி) | மறைக்கப்பட்டதால் |
| நிகூடாந்தரம் | மறைந்துபோன நடுவையுடையதான |
| ரதிபதே: | மன்மதனுடைய |
| தனுர் (இதி) | வில் என்று |
| மன்யே | நினைக்கிறேன். |

ஸகல புவனங்களுக்கும் அபயம் கொடுத்திருக்கும் தாயே! கொஞ்சமாக வளைந்திருக்கும் உன்னுடைய புருவங்கள் உனது கண்களாகிற வண்டுகளை நாண்கயிறுக உடைய மன்மதனுடைய வில்லைப்போலவும் அதை மன்மதன் (உனது நாஸாதண்டமாகிய) தன் வலது முழங்கையினுல் பிடித்திருப்பதால் அப்படிப் பிடித்திருக்

கும் முஷ்டியினுல் மறைந்திருக்கும் நடுவுடன் கூடியதாகவும் தோன்றுகிறது.

1. அம்பாளுடைய புருவங்கள் மன்மதனுடைய வில்லுக்கு ஸமானமாக இங்கே வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மன்மதனுடைய வில்லுக்கு 'மௌர்வீ மதுகரமயீ' என்று 6-வது ச்லோகத்தில் சொன்னபடி வண்டுகளே நாண்கயிருக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே அம்பாளுடைய கண்கள் காதுவரையில் நீண்டு வண்டுகள்மாதிரியிருப்பதால் நாண்கயிருக இருக்கின்றன.

2. அம்பாளுடைய நாஸாதண்டமானது மன்மதனுடைய முழங்கைக்கும், புருவங்களின் நடுவானது மன்மதனுடைய முஷ்டிக்கும் ஸமானமாகச் சொல்லப்பட்டது. ப்ரகோஷ்டமென்பது மணிக்கட்டையொட்டிய முழங்கையின் மேல்புறம் என்று அர்த்தம்.

3. வலது கையினுலேயே பிடிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருப்பதால் பாணம் போடுவதை உத்தேசித்து அல்லவென்று ஏற்படுகிறது. (ஸவ்யமென்ருல் வலது என்று ஸாதாரணமாக அர்த்தமிருந்தாலும் இங்கே இடது என்று அர்த்தம். இதேமாதிரி அர்த்தத்தில் தான் 'ஸசாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா' என்று ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸவ்யேதரமென்ருல் ஸவ்யமில்லாதது, அதாவது வலது.)

4. வில்லாகிய புருவங்களுக்கு நடுவில் இடைவெளியிருப்பதையும் நாண்கயிருகிய கண்களுக்கு நடுவில் நாஸாதண்டமிருப்பதையும் தன்னுடைய வர்ணனைக்குப் பொருந்தும்படி சொல்லுகிருர். வில்லைக் குறுக்கே வலதுகையால் பிடித்தால் கைப்பிடியினுல் வில்லின் நடுபாகமும் முழங்கையினுல் நாண்கயிறின் நடுபாகமும் மறைந்துவிடுமல்லவா. அம்மாதிரி, அம்பாளுடைய புருவங்களாகிற வில்லை மன்மதன் தனது வலதுகையினுல் நடுவில் பிடித்துக்கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. (இடதுகையால் பிடித்தால் அம்மாதிரி மறைவுபடாது.)

5. பயத்தை நிவாரணம் செய்வதற்காகப் புருவங்களை நெறிப்பது எல்லாருக்கும் ஸஹஜம். ஸகல புவனங்களுடைய பயத்தையும் போக்கடிக்கும் எண்ணம் கொண்டபோது அம்பாளுடைய புரு

வங்கள் கொஞ்சம் நெறிக்கப்பட்டு வளைந்திருப்பதினால் நாணேற்றிய தனுஸுக்கு ஸமானமாக ஏற்படுகிறது.

6. 'ஸந்தாவதீ புவனஸந்தாரணே' என்று அம்பாஷ்டகத்தில் ஆசார்யாள் வர்ணித்திருக்கிறபடி அம்பாள் ஸகல புவனங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுப்பதற்காகவும் காப்பாற்றுவதற்காகவும் ப்ரதிக்ஞை செய்திருப்பதாகச் சொல்லப்பட்டது. அஸுரர்களுடைய கொடுமை அதிகரித்து ஜகத்துக்குக் கஷ்டம் ஏற்பட்டால் தான் அவதரித்து அவர்களை நாசம்செய்து காப்பாற்றுவதாய் அம்பாள் தேவர்களுக்கு ப்ரதிக்ஞை செய்துகொடுத்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'இத்தம் யதா யதா பாதா தானவோத்தா பவிஷ்யதி |
ததா ததா அவதீர்யாஹம் கரிஷ்யாம்யரிஸம்க்ஷயம் ||'
(தேவீமாஹாத்ம்யம்)

7. உமா என்பது விசேஷ அர்த்தங்களுடைய (அம்பாளுடைய) பெயர். அம்பாள் ஹிமவானுக்குப் புத்திரியாகப்பிறந்து பிறகு தபஸ்செய்யப் போகையில் தன்னுடைய தாயாரால் கூப்பிடப்பட்டு தடுக்கப்பட்டதினால் 'உமா' என்ற பெயர் ஏற்பட்டது. (உ என்பது கூப்பிடுவதையும் மா என்பது தடுப்பதையும் குறிக்கும்)

'ஏதோ நிரஸ்தா தபஸே வனம் கந்தும் து மேனயா |
உமேதி தேன ஸோமேதி நாம ப்ராப ததா ஸதீ ||
(காளிகாபுராணம்)

'அபர்ணு து நிராஹாரா தாம் மாதா ப்ரத்யபாஷத |
உமா இதி நிஷேதந்தீ உமேத்யேவ ததாபவத் ||
ஸா ததோக்த்வா தயா மாத்ரா தேவீ துச்சரசாரிணீ |
தேனைவ நாம்னா லோகேஷு விக்யாதா ஸுரபூஜிதா ||'
(ப்ரம்ஹபுராணம்)

'ததோ Zந்தரிக்ஷாத் திவ்யாவாக் அப்ராவீத் புவனத்ரயே |
உமேதி து த்வயா மேனே யதுக்தம் தனயாம் ப்ரதி |
உமேதி நாம தேனஸ்யா புவனேஷு பவிஷ்யதி ||'
(பத்மபுராணம்)

8. உ என்றால் பரமசிவன். அவருடைய மா-லக்ஷ்மீயாக இருப்பவள் உமா, அல்லது அவரை பரிச்சின்னம் (அளவில் அடங்குபவராக) செய்வள் உமா. 'உமாதஸீ ஹைமவதீ ஹரித்ரா கீர்த்தி காந்திஷு' என்றபடி உமா என்றால் அதஸீ புஷ்பம் (காயாம்பூ), மஞ்சள் (குங்குமப்பூ), கீர்த்தி, காந்தி யென்ற அர்த்தங்களுமுண்டு. அந்த புஷ்பங்கள் மாதிரி வர்ணமுடையவளென்றும் கீர்த்தி, காந்தி இவைகளையே ஸ்வரூபமாக உடையவளென்றும் சொல்லலாம். (யா தேவீ ஸர்வபூதேஷு காந்திரூபேண ஸம்ஸ்திதா).

9. உ என்றால் உத்தமமான, மா என்றால் சித்தவ்ருத்தி, உத்தமமான சித்த வ்ருத்தியுடையவள் உமா.

'பராநுபூதிம் பவ பாசநாசினீம் ஸதாசிவஸ்யாப்யதிசோபனாட்
[யாம் |
உமாபிதாம் உத்தமசித்தவ்ருத்திம் நமாமி நாநாவிதலோகவை
[பவாம் ||' (ஸூதஸம்ஹிதை)

10. ப்ரணவத்தினுடைய அக்ஷரங்களாகிய அகார உகார மகாரங்கள் இந்த 'உமா' சப்தத்தில் அடங்கியிருப்பதால் இது ப்ரணவாத்மகமான நாமமென்று சொல்லப்படும். இம்மூன்று அக்ஷரங்களுக்கும் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களென்றும் இன்னும் பலவிதமான அர்த்தங்களுமுண்டு. ஆகவே இந்த நாமத்தை தேவீப்ரணவம் என்று சொல்வது ரஹஸ்யமான விஷயம்.

'அகாரோகார மகாரா: மதீயே ப்ரணவே ஸ்திதா: |
உகாரம் ச மகாரம் ச அகாரம் ச க்ரமேரிதம் |
த்வதீயம் ப்ரணவம் வித்தி த்ரிமாத்ரம் ப்லுதமுத்தமம் |'
(லிங்கபுராணம்)
ஓம்கார ஸார சக்தித்வாத் உமேதி பரிகீர்த்திதா |'
(மஹாவாஸிஷ்டம்)

அதிலேயே உமா என்று பரமசிவனுடைய சிரஸிலிருக்கும் இந்து கலைக்கும் பெயரென்று சொல்லப்பட்டது.

'ஸுப்தானாம் அத புத்தீனாம் அமாத்ரோச்சாரணாத் ஹ்ருதி |
நித்யம் த்ரைலோக்ய பூதானாம் உமேதீந்துகலோச்யதே ||'

யோகிகளுடைய இச்சா சக்திக்கும் உமா என்று பெயர். 'இச்சா சக்திருமாகுமாரீ' (சிவஸூத்ரம்)

अहः सूते सव्यं तव नयनमर्कात्मकतया
त्रियामां वामं ते सृजति रजनीनायकतया ।
तृतीया ते दृष्टिर्दरदलितहेमाम्बुजरुचिः
समाधत्ते सन्ध्यां दिवसनिशयोरन्तरचरीम् ॥ ४८ ॥

அஹஸ் ஸூதே ஸவ்யம் தவ நயனம் அர்க்காத்மகதயா
த்ரியாமாம் வாமம் தே ஸ்ருஜதி ரஜனீ நாயகதயா |
த்ருதீயா தே த்ருஷ்டி: தரதளித ஹேமாம்புஜருசி:
ஸமாதத்தே ஸந்த்யாம் திவஸ நிசயோரந்தர சரீம் ||

| | |
|---|---|
| ஹே பகவதீ ! | அம்மணீ ! |
| தவ ஸவ்யம் நயனம் | உன்னுடைய வலது கண்ணானது |
| அர்க்காத்மக தயா | ஸூர்யனாக இருந்துகொண்டு |
| அஹஸ் ஸூதே | பகலை உண்டுபண்ணுகிறது |
| தே வாமம் நயனம் | உன்னுடைய இடது கண்ணானது |
| ரஜனீ நாயகதயா | சந்த்ரனாக இருந்துகொண்டு |
| த்ரியாமாம் ஸ்ருஜதி | ராத்ரியை உண்டுபண்ணுகிறது |
| தே த்ருதீயா த்ருஷ்டி: | உன்னுடைய நெற்றியிலிருக்கிற மூன்றாவது கண்ணானது |
| தர தளித ஹேமாம் புஜ ருசி: | கொஞ்சம் மலர்ந்த தங்கத்தாமரையின் காந்தியை யுடையதாய் |
| திவஸ நிசயோ: அந் தர சரீம் | பகல் இரவு இவைகளுக்கு நடுவிலிருக்கும் |
| ஸந்த்யாம் | (இரண்டு) ஸந்த்யாகாலத்தை |
| ஸமாதத்தே | உண்டுபண்ணுகிறது. |

தாயே! ஸூர்யரூபமான உன்னுடைய வலது கண்ணானது பகலையும் சந்த்ரரூபமான உன்னுடைய இடது கண்ணானது இரவையும் உண்டுபண்ணுகின்றன. கொஞ்சம் மலர்ந்ததும் தங்கத்தாமரையைப் போன்ற காந்தியுள்ளதும் அக்னிரூபமுமான உனது நெற்றிக் கண்ணானது இரண்டு ஸந்த்யாகாலங்களையும் உண்டுபண்ணுகிறது.

1. அம்பாளுடைய கண்களாலேயே பகல், இரவு, 'ஸந்த்யா இவைகள் ஸ்ருஷ்டிக்கப்படுவதால் அம்பாள் காலாதீதமானவள் என்று ஏற்படுகிறது.

2. ஹேமாம்புஜமானது சிகப்பான காந்தியோடு கூடியதாகையால் அவ்விதமான நெற்றிக்கண்ணனது ஸந்த்யாகாலத்தை உண்டுபண்ணுவதாகச் சொல்லப்பட்டது.

3. பரமசிவன் மாதிரி அம்பாளுக்கும் கிரீடத்தில் சந்த்ர கலை, த்ரிநேத்ரம் முதலியவை உண்டு. நெற்றியின் நடுவிலிருக்கும் நேத்ரமானது அக்னிஸ்வரூபம். மன்மதன் எரிந்தது இந்த நேத்ரத்தின் ஜ்வாலையினுல்தான். அக்னியின் நிறமும் ஹேமாம்புஜத்தின் நிறமும் ஸந்த்யாகாலத்தின் நிறமும் ஒரே மாதிரி. ஸந்த்யாகாலமானது சிகப்புநிறமாகவும் கொஞ்சம் வெளிச்சமும் இருட்டும் கலந்திருப்பது மாதிரியும் இருப்பதுபோல் இந்த லலாடநேத்ரமானது சிவந்ததாகவும் கொஞ்சம் திறந்தும் இருப்பதால் சற்று மலர்ந்திருக்கும் கனகாம்புஜத்துக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டது.

विशाला कल्याणी स्फुटरुचिरयोध्या कुवलयैः
कृपाधाराधारा किमपि मधुराऽऽभोगवतिका ।
अवन्ती दृष्टिस्ते बहुनगरविस्तारविजया
ध्रुवं तत्तन्नामव्यवहरणयोग्या विजयते ॥ ४९ ॥

விசாலா கல்யாணீ ஸ்புடருசிரயோத்யா குவலயை:
க்ருபாதாராதாரா கிமபி மதுரா (ஆ) போகவதிகா |
அவந்தீ த்ருஷ்டிஸ்தே பஹுநகர விஸ்தார விஜயா
த்ருவம் தத்தன் நாம வ்யவஹரண யோக்யா விஜயதே ||

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணீ |
| தே த்ருஷ்டி: | உன்னுடைய கண்ணனது (முறையே) |
| விசாலா | விசாலமானதும் |
| கல்யாணீ | மங்களகர்மானதும் |
| ஸ்புருடசி: | விரிந்த காந்தியையுடையதும் |
| குவலயை: அயோத்யா | இந்தீவர புஷ்பங்களால் ஜெயிக்கமுடியாததும் |
| க்ருபாதாராதாரா | கருணையின் ப்ரவாஹத்திற்கு ஆதாரமானதும் |

| | |
|---|---|
| கிமபி மதுரா | (வர்ணிக்கமுடியாத) ஏதோஒரு மாதுர்யத்தோடு கூடினதும் |
| ஆபோகவதிகா | ஆழ்ந்ததும் |
| அவந்தீ | (லோகங்களைக்) காப்பாற்றுகின்றதும் |
| பஹு நகர விஸ்தார விஜயா | (மேலேசொல்லிய) அனேக நகரங்களின் கூட்டங்களில் விஜயம் செய்கிறதும் |
| தத் த்த் | அந்தந்த நகரங்களுடைய |
| நாம வ்யவஹரண யோக்யா | பெயர்களால் அழைக்கும்படியான யோக்யதையையுடையதுமாக |
| த்ருவம் விஜயதே | நிச்சயமாய் விளங்குகிறது. |

தாயே! உனது கண்கள் விசாலமாக இருப்பதால் விசாலா என்றும் மங்களகரமானதால் கல்யாணீயென்றும் இந்தீவா புஷ்பங்களாலும் ஜெயிக்கமுடியாத அழகுடன் கூடியதாகையால் அயோத்யா என்றும் கருணையின் தாரைக்கு ஆதாரமாக இருப்பதால் தாரா என்றும் அனிர்வசனீயமான மாதுர்யத்தோடு கூடியதாகையால் மதுரா என்றும் ஆழ்ந்திருப்பதால் போகவதீ என்றும் லோகங்களைக் காப்பாற்றும் சக்தியுடையவையாகையால் அவந்தீ என்றும் அந்தந்த நகரங்களுடைய பெயர்களால் அழைக்கும்படியான குணங்களுடன் கூடியதாயும் அந்த நகரங்களில் விஜயம் செய்துகொண்டும் விளங்குகின்றன.

1. மேலே எட்டுவிதமான நகரங்கள் சொல்லப்பட்டன. அவையாவன – விசாலா, கல்யாணீ, அயோத்யா, தாரா, மதுரா, போகவதீ, அவந்தீ, விஜயா. இவைகளே அம்பாளுடைய எட்டுவித மான த்ருஷ்டி (பார்வை) களுக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்த்ரீகளுடைய எட்டுவிதமான த்ருஷ்டிகளில் விசாலா என்பது உள்ளாக மலர்ந்த பார்வை, கல்யாணீ என்பது ஆச்சர்யத்தோடுகூடியது, அயோத்யா என்பது நன்றாக மலர்ந்த பார்வை, தாரா என்பது களைப்போடு கூடியது, மதுரா என்பது சஞ்சலமானது, போகவதீ என்பது ப்ரியத்தோடுகூடியது, அவந்தீ என்பது மயங்கியது, விஜயா என்பது பாதி மூடினது. இந்த எட்டுவிதமான த்ருஷ்டிகள் எல்லா ஸ்த்ரீகளுக்கும் ஸஹஜமாக இருந்தபோதிலும் அம்பாளிடத்தில் இவை முறையே ஸம்க்ஷோபண, ஆகர்ஷண, த்ராவண, உன்மாதன, வச்ய, உச்சாடன, வித்வேஷண, மாரண சக்தி

கள் உடையவை. ஆகவே, அம்பாள் எந்த இடத்திலிருந்து கொண்டு அந்தர் விகாஸத்தோடு கூடிய விசாலா என்ற பார்வையினல் ஜனங்களுக்கு ஸம்க்ஷோபணம் (குழப்பம்) உண்டுபண்ணினளோ அந்த இடத்திற்கு விசாலா என்று பெயர். எந்த இடத்திலிருந்து கொண்டு பாதிமூடிய கண்களுடன் விஜயா என்ற த்ருஷ்டியினல் சத்ருக்களுக்கு மரணம் உண்டுபண்ணினளோ அந்த இடத்திற்கு விஜயா என்றுபெயர். இம்மாதிரியே மற்றைப் பெயர்களையும் அறியவேண்டும்.

**कवीनां सन्दर्भस्तवकमकरन्दैकरसिकं**
**कटाक्षव्याक्षेपभ्रमरकलभौ कर्णयुगलम् ।**
**अमुञ्चन्तौ दृष्ट्वा तव नवरसास्वादतरलौ**
**असूयासंसर्गादलिकनयनं किंचिदरुणम् ॥ ५० ॥**

கவீனும் ஸந்தர்பஸ்தபக மகரந்தைக ரஸிகம்
கடாக்ஷ வ்யாக்ஷேப ப்ரமர கலபௌ கர்ணயுகளம் |
அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா தவ நவரஸாஸ்வாத தரளௌ
அஸூயாஸம்ஸர்காத் அளிகநயனம் கிஞ்சித் அருணம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணி! |
| கவீனும் | கவிகளுடைய |
| ஸந்தர்பஸ்தபக | க்ரந்தங்களாகிய புஷ்பச்செண்டின் |
| மகரந்தைக ரஸிகம் | மகரந்த்தைப் பானம் பண்ணுவதிலேயே ப்ரிய முள்ள (அதாவது காவ்யங்களினுடையரஸத்தைப் பருகுவதில் ஆசையுள்ள) |
| தவ கர்ணயுகளம் | உன்னுடைய இரு காதுகளையும் |
| நவரஸாஸ்வாத தரளௌ | நவரஸங்களையும் ருசிபார்ப்பதற்கு ஆசையுள்ளதும் |
| கடாக்ஷ வ்யாக்ஷேப ப்ரமரகலபௌ | கடாக்ஷங்களாகிற வியாஜத்தையுடையதுமான உனது இருகண்களாகிற தேனீக்குஞ்சுகள் |
| அமுஞ்சந்தௌ த்ருஷ்ட்வா | விடாமலிருப்பதைப்பார்த்து |
| அஸூயாஸம்ஸர்காத் | பொறாமையினல் |
| அளிக நயனம் | உன்னுடைய நெற்றிக்கண்ணனது |
| கிஞ்சித் அருணம் | கொஞ்சம் சிவப்பாக (இருக்கிறதுபோலும்) |

தாயே! கவிகளுடைய க்ரந்தங்களாகிற புஷ்பங்களிலிருக்கும் மகரந்தத்தைப் பருகுவதில் ஆசையுள்ள உனது காதுகளை, நவ ரஸங்களையும் ருசிபார்ப்பதில் ஆசையுள்ள உன்னிருகண்களாகிய தேனீக்கள் விடாமல் சுற்றுவதைப் பார்த்த உனது நெற்றிக் கண்ணானது அதினால் பொறாமைகொண்டதுபோல் சிவந்ததாகத் தோன்றுகிறது.

1. அம்பாளுடைய கண்களிரண்டும் காதுவரையில் நீண்டு (கர்ணாந்த விச்ராந்தங்களாக) இருப்பதையும் நெற்றிக்கண்ணானது அக்னி ஸ்வரூபமானதால் சிவந்து இருப்பதையும் இவ்விதமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. அம்பாளுடைய காதுகளில் பக்தர்களுடைய வாக்குகளாகிற அம்ருதரஸம் எப்போதும் விழுந்துகொண்டிருக்கிறது. அதை அம்பாளுடைய கண்கள் இடைவிடாமல் கடாக்ஷங்கள் மூலமாக பானம்பண்ணுவதற்கு சுற்றிக்கொண்டிருப்பதுபோல் இருப்பதைப் பார்த்த நெற்றிக் கண்ணானது தான் உயரத்தில் இருப்பதால் தனக்கு அந்த அம்ருதத்தைப் பானம் பண்ணக்கிடைக்கவில்லையே யென்ற அஸூயையினால் சிவந்து இருக்கிறதென்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

शिवे शृङ्गारार्द्रा तदितरजने कुत्सनपरा
सरोषा गङ्गायां गिरिशचरिते विस्मयवती
हराहिभ्यो भीता सरसिरुहसौभाग्यजननी
सखीषु स्मेरा ते मयि जननि दृष्टिः सकरुणा ॥ ५१ ॥

சிவே ச்ருங்காரார்த்ரா ததிதரஜனே குத்ஸனபரா
ஸரோஷா கங்காயாம் கிரிச சரிதே விஸ்மயவதீ |
ஹராஹிப்யோ பீதா ஸரஸிருஹ ஸௌபாக்ய ஜனனீ
ஸகீஷு ஸ்மேரா தே மயி ஜனனி த்ருஷ்டிஸ் ஸகருணா ||

| | |
|---|---|
| ஹே ஜனனி! | தாயே! |
| தே த்ருஷ்டி: | உன்னுடைய பார்வையானது |
| சிவே | உன் புருஷனான பரமசிவனிடத்தில் |
| ச்ருங்காரார்த்ரா | ச்ருங்காரரஸத்தினால் ம்ருதுவானதும் |

| | |
|---|---|
| தத் இதா ஜனே | (அவரைத்தவிர) மற்றவரிடத்தில் |
| குத்ஸனபரா | வெருப்புடனும் |
| கங்காயாம் | (ஸபத்னியாகிய) கங்கையினிடத்தில் |
| ஸரோஷா | கோபத்துடனும் |
| கிரிச சரிதே | தன்புருஷனுன பரமசிவனுடைய (த்ரிபுரவிஜயம் முதலிய) லீலைகளில் |
| விஸ்மயவதீ | ஆச்சர்யத்தோடும் |
| ஹராஹிப்யோ | அவரால் அணியப்பட்ட ஸர்பங்களிடத்தில் |
| பீதா | பயத்துடனும் |
| ஸரஸிருஹ ஸௌபாக்ய ஜனனீ | தாமரஸபுஷ்பத்தின் சிவப்புநிறத்தை உண்டுபண்ணுகிறதும் |
| ஸகீஷு | ஸகீ ஜனங்களிடத்தில் |
| ஸ்மேரா | சிரிப்புடன் மலர்ந்ததும் |
| மயி | என்னிடத்தில் |
| ஸகருணா | கருணையுடன் கூடியதுமாக (விளங்குகிறது) |

தாயே! உனது கண்கள் சிவனிடத்தில் ச்ருங்காரபாவத்தோடும் (அவரைத்தவிர) மற்றவரிடத்தில் வெறுப்புடனும், ஸபத்னியான கங்கையிடம் கோபத்துடனும், சிவனுடைய லீலைகளினுல் அடைந்த ஆச்சர்யத்துடனும், அவரால் அணியப்பட்ட ஸர்ப்பங்களிடம் பயத்துடனும் (நெற்றிக்கண்ணுனது) தாமரஸபுஷ்பம் போல் சிவந்திருப்பதால் வீர ரஸத்துடனும், தன்னை ஸந்தோஷிக்கச்செய்யும் ஸகிஜனங்களின் வார்த்தைகளினுல் ஏற்பட்ட ஹாஸ்ய ரஸத்துடனும் என்னிடம் கருணையுடனும், இப்படி ஸர்வ ரஸாத்மகமாக விளங்குகின்றன.

1. இதில் பரஸ்பர விரோதங்களான ரஸங்கள் சேர்ந்தாற்போல் அம்பாளுடைய நேத்ரத்தில் இருப்பதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. பரமசிவன் விஷயமாக ச்ருங்காரரஸம், பிறரிடத்தில் பீபத்ஸரஸம் (வெறுப்பு என்பது பீபத்ஸரஸத்தினுல் ஏற்படும் மனோவிகாரம்), கங்கையிடத்தில் ரௌத்ர ரஸம், பரமசிவனுடைய லீலைகளைப்பற்றிக் கேழ்ப்பதில் அத்புதரஸம், அவர் தரித்திருக்கும் ஸர்ப்பங்களைக்கண்டு பயரஸம், தாமரஸ புஷ்பங்களின் சிகப்பைப் போலிருப்பதால் வீர ரஸம் (வீர ரஸமிருக்கும்போது கண்கள் சிவந்

திருப்பது வழக்கமாததால்), ஸகிகளிடத்தில் ஹாஸ்யரஸம் (சிரிப்பினல் மலர்ந்திருப்பது அவர்களுடைய ஹாஸ்யமான வார்த்தைகளால்), கவியினிடத்தில் கருணாரஸம், இம்மாதிரி எட்டுவிதமான ரஸங்கள் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. 'சாந்தஸ்ய நிர்விகாரத்வாத் ந சாந்தம் மேனிரே ரஸம்' என்றபடி சாந்தரஸத்தினல் மாறுபாடு ஏற்படாததால் அதை ரஸமாக பாவிக்கக்கூடாது என்று பரதர் அபிப்பிராயப்படுவதால் இங்கேயும் அதைச் சேர்க்கவில்லை. நவரஸங்களில் பாக்கியிருக்கும் எட்டு ரஸங்கள் சொல்லப்பட்டன.

4. 'கிரிச நயனே' என்ற பாடத்தில் மன்மதனை தஹித்ததாகிய நெற்றிக்கண்ணைப் பார்த்து ஆச்சர்யம் என்று அர்த்தம் பண்ணவும்.

5. 'ஸரஸிருஹ ஸௌபாக்ய ஜயினீ' என்ற பாடத்தில் காந்தியினல் தாமரஸ புஷ்பத்தை ஜெயித்ததின் மூலம் ஏற்பட்ட வீர ரஸத்துடனும் என்று அர்த்தம் பண்ணலாம்.

गते कर्णाभ्यर्णं गरुत इव पक्ष्माणि दधती
पुरां भेत्तुश्चित्तप्रशमरसविद्रावणफले
इमे नेत्रे गोत्राधरपतिकुलोत्तंसकलिके
तवाकर्णाकृष्टस्मरशरविलासं कलयतः ॥ ५२ ॥

கதே கர்ணப்யர்ணம் கருத இவ பக்ஷ்மாணீ தததீ
புராம் பேத்து: சித்தப்ரசமரஸ வித்ரரவண பலே |
இமே நேத்ரே கோத்ராதரபதி குலோத்தம்ஸகலிகே
தவாகர்ணக்ருஷ்ட ஸ்மரசரவிலாஸம் கலயத: ||

| | |
|---|---|
| ஹே கோத்ராதர பதி குலோத்தம்ஸ கலிகே | பர்வதங்களுக்குப் பதியான ஹிமவானுடைய குலத்திற்கு சிரோபூஷணத்தின் மொக்கு (மொட்டு) மாதிரி இருப்பவளே |
| தவ | உன்னுடைய |
| இமே நேத்ரே | இந்த கண்களிரண்டும் |
| கர்ணப்யர்ணம் கதே | காதுகளுக்கு ஸமீபம் போய் |
| பக்ஷ்மாணி | இமைகளின் மயிர்களை |

| | |
|---|---|
| கருத் இவ | கங்கபத்ரங்கள் (அம்பில் இருக்கும் இறகுகள்) மாதிரி |
| ததநீ | தரித்துக்கொண்டு |
| புராம் பேத்து: | புரங்களையழித்த பரமசிவனுடைய |
| சித்த ப்ரசமரஸ வித்ராவணபலே | சித்தத்தின் (கிராசையை) ஸந்துஷ்டியைப்போக்கடிப்பதான பலனையுடைய |
| ஆகர்ணாக்ருஷ்ட ஸ்மர சர விலாஸம் | காதுவரையில் இழுக்கப்பட்ட மன்மதபாணத்தின் அழகை |
| கலயத: | உடைத்தாயிருந்துகொண்டிருக்கின்றன. |

தாயே! காதுவரையில் நீண்டிருப்பதும் இமை மயிர்களை (அம்பிலிருக்கும் இறகுகள் மாதிரி) தரித்துக்கொண்டிருப்பதுமான உனது கண்கள் த்ரிபுராந்தகனான பரமசிவனுடைய மனதைக்கலக்குவதற்காக மன்மதனால் காதுவரையில் இழுத்துப்ரயோகம் செய்யப்பட்ட பாணங்கள் மாதிரியிருக்கின்றன.

1. அம்பாளுடைய கண்களையும் இமை மயிரையும் மன்மதனுடைய பாணங்களுக்கும் அவைகளிலிருக்கும் இறகுகளுக்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றன. பாணங்கள் வேகமாகச் செல்வதற்காக அவைகளில் இறகுகள் ஒட்டப்படுவது வழக்கம். பாணங்களை விடுவதற்கு வில்லின் நாண்கயிற்றுடன் அவைகளைக் காதுவரையில் இழுப்பது மாதிரி அம்பாளுடைய கண்கள் கர்ணாந்த விச்ராந்தமாயிருப்பதை இங்கே சொல்லப்பட்டது.

2. மன்மதனுக்கு பஞ்ச பாணங்களிருப்பதுடன் ஸ்த்ரீகளுடைய கடாக்ஷமானது ஆறுவது பாணமாகச் சொல்வது வழக்கம். ஆனாலும் அந்த கடாக்ஷமாகிற பாணமானது மன்மதனுடைய பாணபஞ்சகத்துக்கும் ஸமானமானதால் அதைத்தனி பாணமாகச் சொல்லாமல் பஞ்சபாணன் என்று மன்மதனைச் சொல்வது வழக்கத்தில் வந்துவிட்டது.

विभक्तत्रैवर्ण्यं व्यतिकरितलीलाञ्जनतया
विभाति त्वन्नेत्रत्रितयमिदमीशानदयिते ।
पुनः स्रष्टुं देवान् द्रुहिणहरिरुद्रानुपरतान्
रजः सत्त्वं बिभ्रत्तम इति गुणानां त्रयमिव ॥ ५३ ॥

விபக்த த்ரைவர்ண்யம் வ்யதிகரித லீலாஞ்ஜனதயா
விபாதி த்வன் நேத்ரத்ரிதயம் இதம் ஈசானதயிதே |
புன: ஸ்ரஷ்டும் தேவான் த்ருஹிணஹரிருத்ரான் உபரதான்
ரஜஸ்ஸத்வம் பிப்ரத் தம இதி குணானாம் த்ரயமிவ ||

| | |
|---|---|
| ஹே ஈசானதயிதே | மஹாதேவருடைய ப்ரியையாக இருப்பவளே ! |
| இதம் த்வன் நேத்ரத்ரிதயம் | இந்த உன்னுடைய மூன்று கண்களும் |
| வ்யதிகரித லீலாஞ்ஜனதயா | சேர்க்கப்பட்ட லீலாஞ்ஜனத்துடன் (அழகுக்காக இட்டுக்கொள்ளப்படும் மையுடன்) கூடியகாரணத்தால் |
| விபக்த த்ரைவர்ண்யம் | வெவ்வேறான சிகப்பு, வெளுப்பு, கருப்பு, இவைகளாகிய மூன்று நிறங்களை |
| உபரதான் | (கல்பாந்தத்தில்) தன்னிடம் மறைந்திருக்கும் |
| த்ருஹிண ஹரிருத்ரான் தேவான் | ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன இவர்களாகிய தேவர்களை |
| புன: ஸ்ரஷ்டும் | திரும்பவும் ஸ்ருஷ்டிப்பதற்காக |
| ரஜஸ் ஸத்வம் தம இதி | ரஜஸ், ஸத்வம், தமஸ் என்ற |
| குணானாம் த்ரயம் இவ | மூன்று குணங்களைப்போல் |
| பிப்ரத் விபாதி | தரித்துக்கொண்டு விளங்குகிறது. |

தாயே! அஞ்சனத்தை தரித்திருக்கும் உனது கண்கள் வெவ்வேறான வெளுப்பு, சிகப்பு, கருப்பு நிறங்களுடையவைகளாய், ப்ரளயகாலத்தில் உன்னிடம் மறைந்துபோன ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களைத் திரும்பவும் ஸ்ருஷ்டி செய்வதற்காக வேண்டிய ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களோடுகூடியது போல் விளங்குகிறது.

1. அம்பாளுடைய இரண்டு கண்களும் ஸூர்ய சந்த்ரர்கள் என்றும் நெற்றிக்கண்ணானது அக்னியென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. உத்தம புருஷர்கள் கண்களில் வெளுப்பு பாகத்தில் சிகப்பு நிறமான கோடுகள் இருப்பதாகச் சொல்லப்படும். ஆகவே ஒவ்வொரு கண்ணிலும் மணியினுடைய கருப்பும், அதைச் சுற்றியிருக்கும் பாகத்தின் வெளுப்பும் கோடுகளுடைய சிகப்பும் இருப்பதால் அவைகளை ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களுக்கு ஸமானமாகச்சொல்லப்பட்டது. ஸத்வகுணம் வெளுப்பென்றும், ரஜோகுணம் சிகப்பென்றும், தமோகுணம் கருப்பென்றும் சொல்வது வழக்கம்.

3. அதேமாதிரி, லோகங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரகர்த்தாக்களாகிய ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களே ஸத்வ, ரஜஸ், தமோ குணப்ரதானர்களாகச் சொல்லப்படும். இவர்கள் ப்ரளய காலத்தில் அழிவையடைந்து பரமேச்வரியாகிய அம்பாளிடம் லயம் அடைவதாகச் சொல்லப்படும். திரும்பவும் லோகங்களின்' ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் செய்யவேண்டியதற்காக இவர்களை உண்டுபண்ணும்படியான சக்தி அம்பாளுடைய கடாக்ஷத்திற்கே இருப்பதாகவும் அதற்கு அடையாளமாக அவர்களுடைய ப்ரதான குணங்களான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் அம்பாளுடைய நேத்ரத்திலேயே இருப்பதாகவும் இங்கே சொல்லப்பட்டது.

4. அக்னியாத்மகமான நெற்றிக்கண்ணின் மணியானது கருப்பாக இல்லாமலிருந்தாலும் அஞ்ஜனம் இடுவதனால் அதற்குக் கருப்பு ஏற்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டது.

पवित्रीकर्तुं नः पशुपतिपराधीनहृदये
दयामित्रैर्नेत्रैररुणधवलश्यामरुचिभिः ।
नदः शोणो गङ्गा तपनतनयेति ध्रुवममुं
त्रयाणां तीर्थानामुपनयासि संभेदमनघम् ॥ ५४ ॥

பவித்ரீகர்தும் ந: பசுபதிபராதீன ஹ்ருதயே
தயாமித்ரைர் நேத்ரை: அருணதவள ச்யாமருசிபி: |
நதச்சோணோ கங்கா தபனதனயேதி த்ருவம் அமும்
த்ரயாணம் தீர்த்தானாம் உபநயஸி ஸம்பேதம் அனகம் ||

| | |
|---|---|
| ஹே பசுபதிபராதீன ஹ்ருதயே | உன் புருஷனான பசுபதியிடம் ஈடுபட்ட மனதை உடையவளே! |
| தயாமித்ரை: | தயை (கருணை) யுடன் கூடியவையும் |
| அருண தவள ச்யாமருசிபி: | சிகப்பு, வெளுப்பு, கருப்பு நிறங்களையுடையவையுமான |
| நேத்ரை: | (உன்னுடைய) கண்களால் |
| சோணோ நத: | சோணமென்கிற நதி, |
| கங்கா | கங்கை, |
| தபன தனயா | காளிந்தீ |
| இதி | இம்மாதிரியான |

| | |
|---|---|
| த்ரயாணாம் தீர்த்தானாம் | மூன்று புண்யதீர்த்தங்களுடைய (அவைகளைப் போல்) |
| அமும் அனகம் ஸம்பேதம் | பாபங்களைப்போக்கக்கூடிய இந்த ஸங்கமத்தை |
| ந: | என்னைப்போன்றவர்களை |
| பவித்ரீகர்த்தும் | புனிதர்களாகச்செய்வதற்காக |
| உபநயஸி | ஏற்படுத்துகிறாய் என்பது |
| த்ருவம் | நிஜம். |

தாயே! லோகங்களைப் பரிசுத்தமாக்கும் சோணா, கங்கா, காளிந்தி இம்மூன்று நதிகளின் ஸங்கமம் மாதிரியிருக்கும் உனது கண்கள் அவைகள் மாதிரி சிகப்பு, வெளுப்பு, கருப்பு நிறங்களையுடையவைகளாய், என்னைப்போன்றவர்களைப் புனிதர்களாக ஆக்குவதற்காக ஏற்பட்டவைபோல் கருணையுடன் விளங்குகின்றன.

1. சோணநதீ என்பது சிகப்புநிறம், கங்கை வெளுப்பு காளிந்தீ என்கிற யமுனை கறுப்பு. இவைகள் மாதிரி, அம்பாளுடைய நேத்ரங்களிலும் முந்திய ச்லோகத்தில் சொல்லியபடி சிகப்பு, வெளுப்பு, கருப்பு இம்மூன்று நிறங்களுமிருப்பதால் அந்த நதிகளுக்கு ஸமானமாகச் சொல்லப்பட்டது. மேலும் அம்மூன்று நதிகளும் கூடும் இடத்துத் தீர்த்தத்திற்கு அதில் ஸ்நானம் பண்ணும் ஜனங்களுடைய ஸகல பாபங்களையும் போக்கடிக்கும்படியான சக்தியிருப்பதுபோல் அம்பாளுடைய நேத்ரங்களுக்கு பக்தர்களுடைய ஸகல பாபங்களைப் போக்கடிக்கும் சக்தியிருப்பதால் அந்த உபமானம் பொருத்தமாகவே இருக்கிறது.

2. இதனால் அம்பாளுக்கு பக்தர்களிடம் இருக்கும் வாத்ஸல்ய விசேஷமானது வர்ணிக்கப்பட்டது.

निमेषोन्मेषाभ्यां प्रलयमुदयं याति जगती
तवेत्याहुः सन्तो धरणिधरराजन्यतनये ।
त्वदुन्मेषाज्जातं जगदिदमशेषं प्रलयतः
परित्रातुं शङ्के परिहृतनिमेषास्तव दृशः ॥ ॥ ५५ ॥

நிமேஷோன்மேஷாப்யாம் ப்ரளயமுதயம் யாதி ஜகதீ
தவேத்யாஹு: ஸந்தோ தரணிதர ராஜன்ய தனயே |
த்வதுன்மேஷாஜ்ஜாதம் ஜகதிதம் அசேஷம் ப்ரளயத:
பரித்ராதும் சங்கே பரிஹ்ருத நிமேஷாஸ்தவத்ருச: ||

| | |
|---|---|
| ஹே தரணிதர ராஜன்ய தனயே | ஹே பர்வதராஜகுமாரியே ! |
| தவ | உன்னுடைய |
| நிமேஷோன் மேஷாப்யாம் | கண்கள் மூடுவதினாலும் திறப்பதினாலும் |
| ஜகதீ | ஜகத்தானது |
| ப்ரளயம் உதயம் | அழிவதையும் திரும்ப உண்டாவதையும் |
| யாதி இதி | அடைகிறது என்று |
| ஸந்த: ஆஹு: | சான்றோர் (யோகிகள், பெரியோர்)சொல்லியிருக்கிறார்கள் |
| த்வத் உன்மேஷாத் ஜாதம் | உன் கண்கள் திறப்பதினால் உண்டான |
| அசேஷம் இதம் ஜகத் | அசேஷமான இந்த ஜகத்தை |
| ப்ரளயத: பரித்ராதும் | ப்ரளயகாலத்திலிருந்து (நாசத்திலிருந்து) காப்பாற்றுவதற்காக |
| தவ த்ருச: | உன்னுடைய கண்கள் |
| பரிஹ்ருத நிமேஷா: இதி | இமைக்கொட்டுதல் இல்லாமல் இருக்கின்றனவென்று |
| சங்கே | ஸந்தேகப்படுகிறேன். |

தாயே! உனது கண்கள் திறப்பதினால் லோகங்கள் ஸ்ருஷ்டியாகின்றனவென்றும் மூடுவதினால் அழிந்துவிடுகின்றனவென்றும் ஸாதுக்கள் சொல்வதுண்டு. உனது கண்கள் திறந்திருப்பதினால் ஏற்பட்ட லோகங்களானவை (கண்களை) மூடிவிட்டால் நாசமடைந்துவிடுமே என்ற கருணையினால் அவைகளைக் காப்பாற்றுவதை உத்தேசித்துத்தான் நீ மூடாத கண்களுடன் இருக்கிறாய் என்று நினைக்கிறேன்.

1. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் 'உன்மேஷநிமிஷோத்பன்ன விபன்ன புவனாவளீ' என்று சொன்னபடி அம்பாள் தன் கண்களை திறப்பதினாலேயே ஸ்ருஷ்டிக்கிறாள் என்றும் மூடுவதினால் ஸம்ஹாரம் பண்ணுகிறாள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த

இரண்டு கார்யங்களையும் அவ்வளவு அனுயாஸமாகச்செய்கிருள் என்பது தாத்பர்யம். ஜகத்தை ஸ்ருஷ்டி பண்ணுவதற்காகத் திறக்கப்பட்ட கண்களை மூடிவிட்டால் ஜகத்துக்கெல்லாம் நாசம் ஏற்படுமே என்ற காரணத்தினுல் அதினுடைய க்ஷேமத்தைக்கோரி அம்பாள் தன் கண்களை மூடாமலேயே இருப்பதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. தேவர்கள் 'அனிமிஷாள்' அதாவது இமைக்கொட்டல் இல்லாதவர்கள் என்பது பிரஸித்தமான விஷயம். அந்த குணமானது அம்பாளிடத்திலிருப்பதற்குக் காரணம் லோகக்ஷேமார்த்தம் என்று இங்கு சொல்லப்பட்டது.

**तवापर्णे कर्णेजपनयनपैशुन्यचकिताः**
**निलीयन्ते तोये नियतमनिमेषाः शफरिकाः ।**
**इयं च श्रीर्बद्धच्छदपुटकवाटं कुवलयं**
**जहाति प्रत्यूषे निशि च विघटय्य प्रविशति ॥ ॥ ५६ ॥**

தவாபர்ணே கர்ணே ஜபநயன பைசுன்ய சகிதா:
நிலீயந்தே தோயே நியதம் அனிமேஷா: சபரிகா: |
இயம் ச ஸ்ரீர் பத்தச் சதபுடகவாடம் குவலயம்
ஜஹாதி ப்ரத்யூஷே நிசி ச விகடய்ய ப்ரவிசதி ॥

| | |
|---|---|
| ஹே அபர்ணே ! | (அபர்ணு என்று பெயருடைய) தாயே ! |
| தவ | உன்னுடைய |
| கர்ணேஜபநயன பைசுன்ய சகிதா: | காதுகளுக்கு ஸமீபத்திலிருக்கும் கண்களுடைய கோள்சொல்லுக்குப் பயந்து |
| சபரிகா: | பெண் மீன்கள் |
| அனிமேஷா: | கண்களை மூடாமல் |
| தோயே நிலீயந்தே | ஜலத்தில் ஒளிந்துகொண்டிருக்கின்றன என்பது |
| நியதம் | நிச்சயம் (மேலும்) |
| இயம் ச ஸ்ரீ: | இந்த (உன்னுடைய நேத்ர) லக்ஷ்மியும் |
| பத்தச்சதபுடகவாடம் | மூடப்பட்ட இதள்களாகிற கதவுகளையுடைய |
| குவலயம் | நீலோத்பல புஷ்பத்தை |
| ப்ராத்யூஷே | காலையில் |
| ஜஹாதி | விட்டுவிடுகிறது |

| | |
|---|---|
| நிசி ச | ராத்ரியிலோவென்றால் |
| தத் விகடய்ய | அந்த குவ்லய புஷ்பத்தைத் திறந்துகொண்டு |
| ப்ரவிசதி | அதில் ப்ரவேசிக்கிறது. |

தாயே! காதுகளையடுத்து நீண்டிருக்கும் உனது கண்கள் அங்கே தங்களைப்பற்றி கோள் சொல்லுகின்றனவோ என்று பயந்த பெண் மீன்கள் மூடாத கண்களுடன் ஜலத்திலேயே ஒளிந்து கொண்டிருக்கின்றன. (உனது நேத்ரங்களிலிருக்கும்) லக்ஷ்மியும் பகலில் நீலோத்பலங்களைவிட்டு உனது கண்களில் வந்து திரும்பவும் இரவில் அந்த புஷ்பங்களில் போய் ப்ரவேசம் செய்கிறது.

1. லோகத்தில் ஸ்த்ரீகளுடைய நேத்ரங்களுக்கு ஸமானமாகப் பெண் மீன்களையும் இந்தீவர புஷ்பங்களையும் சொல்வது வழக்கம்.

2. அம்பாளுடைய நேத்ரங்கள் மூடாமலிருப்பது மாதிரி மீன்களும் கண்களை மூடுவதில்லையாதலால் பொருத்தம் அதிகமாக ஏற்படுகிறது. தங்களுக்கு இருக்கும் ஸௌந்தர்யத்தை அதிசயித்த ஸௌந்தர்யம் அம்பாளுடைய கண்களிலிருப்பதையும், அந்தக் கண்கள் அம்பாளுடையகாதுவரையில் நீண்டிருப்பதினால் அவைகள் அம்பாளுடைய காதுகளில் தங்களைப்பற்றி(தங்களுடைய ஸௌந்தர்யத்தை அபஹரிக்கவேண்டுமென்ற உத்தேசத்துடன்)கோள்சொல்வது மாதிரித் தோற்றுவதையும் பார்த்த பெண் மீன்கள் பயந்துகொண்டு ஜலத்திற்குள் ஒளிந்துகொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. அங்கேயும் அந்த பயத்தினால் கண்ணைக்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லப்பட்டது.

3. ஆகவே ஜலத்திலிருப்பதும் கண்களைக் கொட்டாமல் இருப்பதும் மீன்களுக்கு ஸஹஜமாக இருந்தபோதிலும் இங்கே அதற்குக் காரணம் சொல்வதுபோல் அம்பாளுடைய நேத்ரங்கள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

4. இந்தீவர புஷ்பமானது இரவில் மலர்வதும் பகலில் மூடிக்கொள்வதும் ப்ரஸித்தம். லக்ஷ்மீயானது பகலில் இந்தீவர புஷ்பங்களை விட்டு அம்பாளுடைய கண்களுக்கு வந்து இரவுநேரத்தில் கண்கள் மூடும்போது அவைகளைவிட்டு இந்தீவர புஷ்பங்களுக்கு

வந்து சேருவதாகச் சொல்லப்பட்டது. அம்பாளுடைய நேத்ரங்கள் பகலில் மலர்கின்றன. இந்தீவர புஷ்பங்கள் இரவில் மலர்கின்றன. ஆகவே லக்ஷ்மீயானது பகலில் அம்பாளுடைய நேத்ரங்களிலும் இரவில் இந்தீவா புஷ்பங்களிலும் இருப்பதனால் வேறு இடத்தில் அந்த லக்ஷ்மீயானது ஒருபோதும் இல்லையென்று ஏற்பட்டது.

5. அம்பாள் பக்தர்கள் கேட்கும் வரன்களை உடனே கொடுத்து அவர்களுடைய ருணம் யாதொன்றுமில்லாதிருப்பதால் 'அபர்ணு' என்று பெயர். மேலும் அம்பாள் பார்வதியாகப்பிறந்து தபஸ்பண்ணும்போது (பர்ணம்) இலைகூட சாப்பிடாமல் கடுந்தவம் புரிந்ததினுல் 'அபர்ணு' என்று பெயர் ஏற்பட்டது.

'ஆஹாரே த்யக்த பர்ணு பூத்யஸ்மாத் ஹிமவத: ஸுதா |
தேன தேவைர் அபர்ணேதி கதிதா ப்ருதிவீ தலே ||'

(காளிகாபுராணம்)

'அபர்ணு து நிராஹாரா தாம் மாதா ப்ரத்யபாஷத |'

(ப்ரும்ஹபுராணம்)

दृशा द्राघीयस्या दरदलितनीलोत्पलरुचा
दवीयांसं दीनं स्नपय कृपया मामपि शिवे ।
अनेनायं धन्यो भवति न च ते हानिरियता
वने वा हर्म्ये वा समकरनिपातो हिमकरः ॥ ॥ ५७ ॥

த்ருசா த்ராகீயஸ்யா தரதளித நீலோத் பலருசா
தவீயாம்ஸம் தீனம் ஸ்னபய க்ருபயா மாமபி சிவே |
அனேனுயம் தன்யோ பவதி ந ச தே ஹானிரியதா
வனே வா ஹர்ம்யே வா ஸமகர நிபாதோ ஹிமகர: ||

| | |
|---|---|
| ஹே சிவே! | (பக்தர்களுக்கு) ஸமஸ்த மங்களங்களையும் கொடுப்பவளே! |
| த்ராகீயஸ்யா | அதிகமாக நீண்டிருப்பதும் |
| தரதளித நீலோத்பல ருசா | கொஞ்சமாக மலர்ந்த நீலோத்பல புஷ்பத்தின் காந்தியைப்போல் காந்தியுடையதுமான |

| | |
|---|---|
| த்ருசா | (உன்னுடைய) கடாக்ஷ த்ருஷ்டியினுல் |
| தவீயாம்ஸம் | (பக்தி அல்லது பாக்யக்குறைவினுல்)எட்டியிருப்பவனும் |
| தீனம் | எளியவனுமான |
| மாம் அபி | என்னையும் (பிறர்மாதிரி) |
| க்ருபயா | உன்னுடைய கருணையினுல் |
| ஸ்நபய | ஸ்நாநம் செய்வாயாகவும் |
| அனேன | அப்படிச்செய்வதால் |
| அயம் | இந்த மனிதன் (அடியேன்) |
| தன்யோ பவதி | க்ருதார்த்தனுக ஆவான் (மேலும்) |
| இயதா | இதனுல் |
| தே ஹானிர் ந ச | உனக்கு ஒருவிதமான நஷ்டமுமில்லை எப்படியென்ருல் |
| ஹிமகர: | சந்த்ரனுனவன் |
| வனே வா ஹர்ம்யே வா | காட்டிலும் சரி, மாடமாளிகையிலும் சரி |
| ஸமகர நிபாத: | தன் கிரணங்களால் ஸமமாக வியாபிக்கிருன் (அல்லவா.) |

தாயே! சந்த்ரனுனவன் வனமென்றும் அரண்மனையென்றும் பேதம் பாராட்டாமல் எங்கிலும் ஸமமாகத் தன் கிரணங்களை வீசுகிறதுபோல் தீர்கமாஃதும் நீலோத்பல புஷ்பத்தைபோன்ற காந்தயுடையதுமாகிய உன் கண்களின் கடாக்ஷத்ருஷ்டியானது எட்டியிருப்பவனும் பாக்யமில்லாதவனுமான என் மீதிலும் படும்படி செய்வாயாகவும். அதினுல் உனக்கு யாதொரு குறைவும் ஏற்படாது.

1. சந்த்ரனுனவன் எப்படி யாதொருவிதமான பக்ஷபாதமுமில்லாமல் எல்லா இடங்களையும் தன்னுடைய அம்ருதமயமான கிரணங்களால் முழுகச்செய்கிருனே அம்மாதிரி அம்பாளுடைய கருணையானது எவ்வித வித்தியாஸமுமில்லாமல் ஸகல ஜனங்களையும் தன்யர்களாகச் செய்துவிடுகிறது என்று சொல்லப்பட்டது. சுத்தமான அந்த:கரணத்தையுடையவர்கள் எல்லாரிடத்திலும் ஸமமாக இருப்பது அவர்களுக்கு ஸ்வபாவமான குணமென்பது கவியின் அபிப்ராயம்.

अरालं ते पालीयुगलमगराजन्यतनये
न केषामाधत्ते कुसुमशरकोदण्डकुतुकम् ।
तिरश्चीनो यत्र श्रवणपथमुल्लङ्घ्य विलसन्
अपाङ्गव्यासङ्गो दिशति शरसन्धानधिषणाम्॥ ॥ ५८ ॥

அராளம் தே பாளீயுகளம் அகராஜன்யதனயே
ந கேஷாம் ஆதத்தே குஸுமசர கோதண்ட குதுகம் |
திரச்சீநோ யத்ர ச்ரவணபதம் உல்லங்க்ய விலஸன்
அபாங்கவ்யாஸங்கோ திசதி சரஸந்தான திஷணாம் ||

| | |
|---|---|
| ஹே அகராஜன்யதனயே | பர்வதராஜகுமாரியாகிய தாயே ! |
| தே | உன்னுடைய |
| பாளீயுகளம் | (கண், காது இவைகளுக்கு நடுவிலிருக்கும்படியான) பொட்டு ப்ரதேசங்கள் இரண்டும் |
| அராளம் | வளைந்திருக்கிற |
| குஸுமசரகோதண்ட குதுகம் | மன்மதனுடைய வில்லுக்கிருக்கும்படியான அழகை |
| கேஷாம் | யாருக்குத்தான் |
| ந ஆதத்தே | தோன்றும்படியாகச் செய்கிறதில்லை! |
| | (அவச்யம் தோன்றும்படி செய்யும்) |
| யத்ர | எந்த பாளீ ப்ரதேசத்தில் |
| திரச்சீன: விலஸன் | கோணலாகத்தெரியும் |
| (தவ)அபாங்கவ்யாஸங்க: | உன்னுடைய நீண்ட கடைக்கண் பார்வையானது |
| ச்ரவணபதம் உல்லங்க்ய | காதுக்கு ஸமீபத்தில் |
| சரஸந்தான திஷணாம் | பாணம் பூட்டியிருப்பதான தோற்றத்தை |
| திசதி | உண்டுபண்ணுகிறதோ |

தாயே! வளைவுடன்கூடிய உனது பொட்டுப்ரதேசங்களிரண்டும் உனது காதுகள் வரையில் நீண்ட கண்களையே பாணங்களாகப் பூட்டிய மன்மதனுடைய தனுஸ் மாதிரியிருப்பதாக யாருக்குத்தான் தோன்றாது.

1. அம்பாளுடைய பாளீப்ரதேசமானது வளைந்திருப்பதினால் நாண் பூட்டப்பட்ட மன்மதனுடைய வில்லுக்கு ஸமானமாகத் தோன்றுகிறது. அது கண்பக்கமாக வளைந்திருக்கிறது. அம்பாளுடைய கடாக்ஷமான பார்வையானது அந்த வில்லின் வளைவுக்கு

எதிர்முகமாக இருப்பதாலும் அம்பாளுடைய கண்கள் கர்ணாந்த விச்ராந்தமானவைகளாதலாலும் அந்தக் கடாக்ஷமானது பாளீப்ர தேசமாகிற வில்லில் பூட்டப்பட்ட பாணம்போல் தோற்றுகிறது என்றும் அவை இரண்டும் மன்மதனுடைய வில்லுக்கும் பாணத்திற்கும் ஸமமானதென்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. 'ச்ரவணபதம் உல்லங்க்ய' என்பதினால் அம்பாளுடைய கண்கள் கர்ணாந்த விச்ராந்தமானவையாகையால் வில்லில் பூட்டிய பாணமானது வில்லுக்குமப்பால் நீண்டிருப்பதுபோல், பாளீப்ரதேசமாகிய வில்லைத்தாண்டி காதுவரையில் வந்திருப்பதைச் சொல்லப் பட்டது.

स्फुरद्गण्डाभोगप्रतिफलितताटङ्कयुगलं
चतुश्चक्रं मन्ये तव मुखमिदं मन्मथरथम् ।
यमारुह्य द्रुह्यत्यवनिरथमर्केन्दुचरणं
महावीरो मारः प्रमथपतये सज्जितवते ॥ ॥ ५९ ॥

ஸ்புரத் கண்டாபோக ப்ரதிபலித தாடங்கயுகளம்
சதுः சக்ரம் மன்யே தவ முகமிதம் மந்மதாதம் |
யமாருஹ்ய த்ருஹ்யத்யவனிரதம் அர்கேந்துசரணம்
மஹாவீரோ மாரः ப்ரமத பதயே ஸஜ்ஜிதவதே ||

| | |
|---|---|
| ஹே பகவதி! | தாயே! |
| ஸ்புரத் கண்டாபோக ப்ரதிபலித தாடங்கயுகளம் | ப்ரகாசிக்கின்ற கன்னங்களில் ப்ரதிபிம்பத்தோடு கூடியிருக்கும் இரண்டு தாடங்கங்களையுடைய |
| தவ இதம் முகம் | உன்னுடைய இந்த முகமானது |
| சதுः சக்ரம் மன்மதாம் | நான்கு சக்ரங்களையுடைய மன்மதனுடைய ரதமென்று |
| மன்யே | (நான்) நினைக்கிறேன் |
| | எப்பேர்ப்பட்ட ரதம் என்றால் |
| யம் ஆருஹ்ய | எதில் ஏறிக்கொண்டு |
| மாரः | மன்மதனானவன் |
| மஹாவீரः ஸன் | மஹாவீரனாக இருந்துகொண்டு |
| அர்கேந்து சரணம் | ஸூர்யன், சந்த்ரன் இவர்களைச் சக்ரங்களாக உடைய |

| | |
|---|---|
| அவனிரதம் | பூமியாகிய ரதத்தை |
| ஸஜ்ஜிதவதே | தயாராக உடைய (அதில் ஏறிக்கொண்டு யுத்த ஸன்னுஹத்தோடுகூடிய) |
| ப்ரமதபதயே | ப்ரமத கணங்களுக்கு அதிபதியான பரமேச்வரரை |
| த்ருஹ்யதி | பகைக்கின்ருனே. |

தாயே! உனது தாடங்கங்கள் கன்னத்தில் ப்ரதிபலிப்பதினுல் முகமானது நான்கு சக்ரங்களுடன்கூடிய மன்மதனுடைய ரதமாகத்தோன்றுகிறது. இம்மாதிரியான ரதத்தில் ஏறியிருப்பதினுல் மன்மதனுனவன், ஸூர்ய சந்த்ரர்களை சக்ரங்களாக உடைய பூமியாகிற ரதத்தில் ஏறிக்கொண்டு யுத்தஸன்னுஹமாக இருப்பவரும் ப்ரமதகணங்களால் சூழப்பட்டவருமான பரமசிவனேடேயே போர் புரியத் தயாராக இருக்கும் மஹாவீரனுக இருக்கிருன்.

1. அம்பாளுடைய கன்னங்கள் கண்ணுடிபோல் வழவழப்பாகவும் நிர்மலமாகவும் இருப்பதால் அம்பாளுடைய காதிலிருக்கும் இரண்டு தாடங்கங்களும் அவைகளில் ப்ரதிபலித்து நான்கு தாடங்கங்களாகத் தோன்றுகின்றனவென்றும் ஆகவே அம்பாளுடைய முகமானது நான்கு சக்ரங்களோடுகூடிய மன்மதனுடைய ரதமாக இருக்கிறதென்றும் சொல்லப்பட்டது.

2. இப்பேர்பட்ட ரதத்தில் ஏறிக்கொண்ட மன்மதன் தான் ஒருவனுக இருந்தும் ஏராளமான ப்ரமதகணங்களால் சூழப்பட்டவரும் அவர்களுக்கெல்லாம் ஈச்வரனுமான பரமசிவனுடன் யுத்தம் செய்யத்தயாராக இருப்பதாகச் சொல்லப்பட்டது. அவருடைய ரதமோவென்ருல் த்ரிபுரஸம்ஹாரத்தின்போது இருந்தது போல் பூமியே ரதமாகவும் சந்த்ர ஸூர்யர்கள் அந்த ரதத்திற்கு சக்ரங்களாகவும் இருக்கின்றன. அப்படியிருந்தும் மன்மதன் அவருடன் யுத்தம் செய்யத் துணிந்திருப்பதற்குக் காரணம் அம்பாளுடைய வதன ஸௌந்தர்யமே. அதனுடைய அதிசயத்தினுல் பரமசிவனே மன்மதனுக்குத் தோற்றவராக ஆகக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடுகிறதென்று சொல்லப்பட்டது.

3. பரமசிவனுடைய ரதத்திற்கு இரண்டு சக்ரங்கள். அம்பாளுடைய முகமாகிய மன்மத ரதத்திற்கோ நான்கு சக்ரங்களிருக்கின்றன.

सरस्वत्याः सूक्तीरमृतलहरीकौशलहरीः
पिबन्त्याः शर्वाणि श्रवणचुलुकाभ्यामविरलम् ।
चमत्कारश्लाघा चलितशिरसः कुण्डलगणो
झणत्कारैस्तारैः प्रतिवचनमाचष्ट इव ते ॥ ६० ॥

ஸரஸ்வத்யா: ஸூக்தீரம்ருதலஹரீ கௌசலஹரீ:
பிபந்த்யா: சர்வாணி ச்ரவண சுளுகாப்யாம் அவிரளம் |
சமத்காரச்லாகாசலித சிரஸ: குண்டலகணோ
ஜணத்காரைஸ்தாரை: ப்ரதிவசனமாசஷ்ட இவ தே ||

| | |
|---|---|
| ஹே சர்வாணி! | சர்வராகிய பரமசிவனுடைய பத்னியே! |
| அம்ருதலஹரீ கௌசல ஹரீ: | அம்ருத ப்ரவாஹத்தின் ஸௌபாக்யத்தை அபஹரிக்கின்ற |
| தே ஸூக்தி: | உன்னுடைய பேச்சுக்களை |
| ச்ரவண சுளுகாப்யாம் | கையையாகச்சாப்பிடுவதுபோல் தன்காதுகளால் |
| அவிரளம் | ஸாவதானமாக (அப்போதைக்கப்போது) |
| பிபந்த்யா: | குடித்துக்கொண்டிருக்கிறவளும் |
| சமத்காரச்லாகா சலித சிரஸ: | (அம்பாளுடைய பேச்சின்) ரஸத்தை மெச்சுவதினுல் அசைக்கப்பட்ட தலையை உடையவளுமான |
| ஸரஸ்வத்யா: | ஸரஸ்வதியினுடைய |
| குண்டலகண: | குண்டலங்களுடைய ஸமூஹங்கள் |
| தாரை: | (தங்களுடைய) உரத்த |
| ஜணத்காரை: | ஜண ஜண என்கிற த்வனியால் உன் பேச்சுக்களை |
| ப்ரதிவசனம் | (ஆமோதிக்கிற) பதில் |
| ஆசஷ்ட இவ | சொல்வதுபோல் (இருக்கின்றன) |

தாயே! ஸரஸ்வதியானவள் அம்ருதம்போல் இனிமையான உனது பேச்சுக்களை இடைவிடாமலும் ஆவலுடனும் கேட்டுக்கொண்டிருக்கையில் அவைகளிலிருக்கும் ரஸத்தினுல் வியப்படைந்து தலையை அசைத்தவண்ணமாகவே இருப்பதினுல் அவளுடைய காதுகளிலணிந்திருக்கும் குண்டலங்கள் தங்கள் ஜணத்கார சப்தத்தினுல் உனது பேச்சுக்களுக்கு ஆமோதித்து பதில் சொல்வது போலிருங்கின்றன.

1. அம்பாளுடைய பேச்சானது அம்ருதத்தின் பெருக்கு மாதிரி இனிப்பாக இருக்கிறது. ஒருவருக்கு அம்ருதம்கிடைத்தால்

அதை நிதானமாகவும் ருசியை அனுபவித்துக்கொண்டும் கைகையாகச் சாப்பிடுவதுபோல் ஸரஸ்வதியானவள் தன்னுடைய இரு காதுகளால் அம்பாளுடைய அம்ருதமயமான பேச்சைப் பருகுவதாகச் சொல்லப்பட்டது. அப்போது அந்தப் பேச்சிலிருக்கும் அதிசயங்களை ஸரஸ்வதியானவள் கண்டு அதை மெச்சும்போது தன்னுடைய சிரஸை அசைப்பதனல் அவளுடைய காதுகளில் தரிக்கப்பட்டிருக்கும் குண்டலங்கள் ஜணஜணவென்று பலமாக சப்தம் செய்கின்றனவென்றும் அந்த சப்தம் அம்பாளுடைய பேச்சுக்குப் புகழ்ச்சியான பதில் மாதிரி இருப்பதாகவும் வர்ணிக்கப்பட்டது.

2. வாக்தேவதையான ஸரஸ்வதியே இம்மாதிரி ஆதரவுடனும் வேறு கவனமில்லாமலும் சிர: கம்பனத்துடனும் கேட்கும்போது அம்பாளுடைய பேச்சின் மாதுர்யத்தைப் பற்றி அதிகமாக வர்ணிக்கத் தேவையில்லை.

3. பலமாகவும் இடைவிடாமலும் தலையை அசைப்பதனல் குண்டலங்கள் பலமாக சப்திக்கின்றனவென்று சொல்லப்பட்டது. இதனல் அம்பாள் பேசுவதெல்லாமே மதுரமாக இருப்பதைச் சொல்லப்பட்டது.

**असौ नासावंशस्तुहिनगिरिवंशध्वजपटि**
**त्वदीयो नेदीयः फलतु फलमस्माकमुचितम् ।**
**वहत्यन्तर्मुक्ताः शिशिरकरनिश्वासगलितं**
**समृद्ध्या यत्तासां बहिरपि च मुक्तामणिधरः ॥ ६१ ॥**

அஸௌ நாஸாவம்சஸ்துஹின கிரிவம்சத்வஜபடி
த்வதீயோ நேதீய: பலது பலமஸ்மாக முசிதம் |
வஹத்யந்தர் முக்தா: சிசிரகர நிச்வாஸகளிதம்
ஸம்ருத்யா யத்தாஸாம் பஹிரபிச முக்தாமணிதர: ||

| | |
|---|---|
| ஹே துஹின கிரிவம்ச த்ஜவபடி | ஹிமவானுடைய குலத்தின் த்வஜத்திற்குக் கொடி போன்றவளே! |
| த்வதீய: அஸௌ நாஸா வம்ச: | உன்னுடைய இந்த நாஸாதண்டமானது |
| அஸ்மாகம் | எங்களுக்கு |
| உசிதம் | தகுந்ததும் (யதேஷ்டமானதும்) |

| | |
|---|---|
| நேதீய: | சீக்ரம் கிடைக்கக்கூடியதுமான |
| பலம் பலது | பலத்தைக்கொடுக்கட்டும் |
| | (அந்த நாஸாதண்டமானது) |
| அந்த: | தனக்குள் |
| முக்தா: வஹதி | முத்துக்களை தரித்துக்கொண்டிருக்கிறது |
| யத் | எந்தக்காரணத்தால் |
| தாஸாம் ஸம்ருத்யா | அவைகள் (முத்துக்கள்) நிறைய இருப்பதால் |
| பஹிரபிச | வெளியிலும் கூட |
| சிசிரகர நிச்வாஸகளிதம் | (வாமநாடியின் மார்கமாகவரும்) சந்த்ர நிச்வாஸத்தால் நழுவிவந்த |
| முக்தா மணிதர: | முக்தாமணியை தரித்துக்கொண்டிருக்கிறதோ. |

தாயே! முக்தாமணியை தரித்துக்கொண்டிரும் உனது நாஸாதண்டமானது நாங்கள் கோரியவைகளை சீக்ரமாகக் கொடுக்கட்டும். அது தண்டம் (மூங்கில்) போல் முத்துக்கள் நிறைந்ததாக இருப்பதினால் அவைகளில் ஒரு முத்தானது நிச்வாஸத்தினால் வெளியில் வந்து மூக்குத்தியாக இப்பதுபோல் தோன்றுகிறது.

1. அம்பாளுடைய நாஸாதண்டத்தை (வம்சம்) மூங்கிலுக்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மூங்கிலுக்குள் முத்து இருப்பதாகச் சொல்லப்படும். அம்பாளுடைய மூக்கின் வெளிப்புறத்தில் முத்து அணியப்பட்டிருப்பதை அதற்குப் பொருத்தமாக வர்ணிக்கிறார். அதாவது அம்பாளுடைய நாஸா தண்டத்திலும் உள்புறத்தில் முத்துக்கள் நிறைய இருப்பதாகவும் அவை அவ்வளவு அதிகமாக இருப்பதால் அம்பாளுடைய இடது பக்கத்திய மூச்சானது வெளியில் வரும்போது ஒரு முத்து நழுவி வெளியில் வந்து விட்டதாகவும் சொல்லப்பட்டது. மூங்கிலிலிருப்பதுபோல் நாஸா தண்டத்திற்குள்ளும் முத்துக்கள் இல்லாமலிருந்தால் வெளியில் ஒரு முத்து தெரிவதற்குக் காரணம் இல்லையென்றும் கவியின் அபிப்ராயம்.

प्रकृत्याऽऽरक्तायास्तव सुदति दन्तच्छदरुचेः
प्रवक्ष्ये सादृश्यं जनयतु फलं विद्रुमलता ।
न बिम्बं तद्बिम्बप्रतिफलनरागादरुणितं
तुलामध्यारोढुं कथमिव विलज्जेत कलया ॥ ६२ ॥

ப்ரக்ருத்யா (ஆ) ரக்தாயாஸ் தவ ஸுததி தந்தச்சதருசே:
ப்ரவக்ஷ்யே ஸாத்ருச்யம் ஜனயது பலம் வித்ருமலதா |
ந பிம்பம் தத்பிம்ப ப்ரதிபலன ராகாத் அருணிதம்
துலாம் அத்யாரோடும் கதமிவ விலஜ்ஜேதே கலயா ||

| | |
|---|---|
| ஹே ஸுததி | அழகான பல்வரிசைகளையுடையவளே ! |
| ப்ரக்ருத்யா ஆரக்தாயா: | இயற்கையாகவே சிவந்திருக்கிற |
| தவ | உன்னுடைய |
| தந்தச் சதருசே: | அதரத்தினுடைய அழகுக்கு |
| ஸாத்ருச்யம் | உபமானமாக இருக்கின்ற வஸ்துவை |
| ப்ரவக்ஷ்யே | சொல்லுகிறேன் |
| வித்ருமலதா | பவழக்கொடியானது |
| பலம் | பழத்தை |
| ஜனயது | உண்டாக்கட்டும் |
| பிம்பம் | கோவைப்பழமோவென்றால் |
| தத் பிம்ப ப்ரதிபலன ராகாத் | அந்த உதட்டின் ப்ரதிபிம்பத்தினால் ஏற்பட்ட சிகப்பினால் |
| அருணிதம் | சிவந்ததாகச் செய்யப்பட்டதால் |
| கலயா (அபி) | கலை (வீசம்) பாகம்கூட |
| துலாம் | ஸமானமாக இருக்கும் தன்மையை |
| அத்யாரோடும் | அடைவதற்கு |
| கதம் ந விலஜ்ஜேத | ஏன் வெட்கப்படாது. |

தாயே! இயற்கையாகவே சிவந்திருக்கும் உன்னுடைய அழகான அதரத்திற்கு ஸமானமான வஸ்து ஏதாவது இருந்தால் அது ஒருக்கால் பவழக்கொடியில் பழுத்த பழமாகத்தான் இருக்கலாம். பிம்ப பலம் என்ற கோவைப் பழமோ உன்னுடைய அதா காந்தியின் ப்ரதிபிம்பத்தினால் உண்டான சிகப்பு நிறமுடையதாக இருப்பதால் அது உனது அதரகாந்தியின் வீச பாகத்திற்குக்கூட ஸமமாக இல்லாமல் வெட்கப்பட்டு இருக்கிறது.

1. அம்பாளுடைய அதரத்திற்கு ஸமானமான அழகை யுடைய வஸ்துவைச் சொல்லப்போகையில் கோவைப்பழம்கூட ஸமானமில்லையென்று சொல்லிவிட்டு பவழத்தைப் பற்றிச் சொல்லுகையில் அதன் கொடிகூட ஸமானமில்லையென்றும் அந்தக் கொடியில் பழுக்கும் பழம் ஒருவேளை ஸமானமாக இருக்கலாமென்றும்

சொல்லப்பட்டது. பவழக்கொடிக்கு பழம்கிடையாதாகையால் அம்பாளுடைய அதரத்திற்கு ஸமமான அழகுடைய வஸ்து யாதொன்றுமில்லையென்று ஏற்படுகிறது.

2. ஸாதாரணமாக ஸ்த்ரீகளுடைய அதரத்திற்கு ஸமானமாக கோவைப்பழத்தையும் பவழத்தையும் சொல்வது வழக்கம். அம்பாளுடைய அதரத்திற்கு இவையிரண்டும் ஸமானமில்லையென்றும் பவழக்கொடியில் பழம் பழுத்தால் அது ஒருவேளை ஸமானமாக இருக்கலாமென்றும் சொல்லப்பட்டது. சிகப்பு நிறமில்லாத கொடிகளில் உண்டாகும் பழங்களே சிகப்பாக இருக்கும். பவழக்கொடியே சிகப்பு. ஆகையால் அதில் உண்டாகக்கூடிய பழம் அதிக சிகப்பாக இருக்குமல்லவா.

3. கோவைப்பழத்திற்கு பிம்ப பலம் என்று பெயர். அதை இங்கே சமத்காரமாக உபயோகப்படுத்துகிறார். கோவைப் பழத்திற்கு இயற்கையாக சிகப்பு நிறமில்லையென்றும் அம்பாளுடைய அதரபிம்பமானது தன்னிடம் ப்ரதிபலிப்பதினால் அந்த அதரபிம்பத்தின் சிகப்பானது கோவைப் பழத்திலிருக்கும் அதின் ப்ரதிபிம்பத்திலும் ஏற்பட்டு அதனால் கோவைப்பழம் சிகப்பாகத்தோன்றுகிறதென்றும் சொல்லப்பட்டது. ஆகையால் கோவைப்பழத்தின் சிகப்பானது அம்பாளுடைய அதரத்தின் சிகப்பிற்கு ஒரு வீசமாத்ரம்கூட ஸமானமில்லையென்று வர்ணிக்கிறார்.

4. இம்மாதிரி அம்பாளுடைய அதரமானது பவழம், கோவைப்பழம் இவைகளைவிட அழகானது என்பதை

'நவவித்ரும பிம்ப ஸ்ரீ ந்யக்காரி தசனச்சதா'

என்று ஸ்ரீ லலிதாஸஹஸ்ர நாமத்திலும் சொல்லப்பட்டது.

स्मितज्योत्स्नाजालं तव वदनचन्द्रस्य पिबतां
चकोराणामासीदतिरसतया चञ्चुजडिमा ।
अतस्ते शीतांशोरमृतलहरीमाम्लरुचयः
पिबन्ति स्वच्छन्दं निशिनिशि भृशं काञ्जिकधिया ॥

ஸ்மித ஜ்யோத்ஸ்ன ஜாலம் தவ வதன சந்த்ரஸ்ய பிபதாம்
சகோராணும் ஆஸீத் அதிரஸதயா சஞ்சுஜடிமா |
அதஸ்தே சீதாம்சோ: அம்ருதலஹரீம் ஆம்லருசய:
பிபந்தி ஸ்வச்சந்தம் நிசி நிசி ப்ருசம் காஞ்ஜிகதியா ||

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணி |
| தவ வதன சந்த்ரஸ்ய | உன்னுடைய முகமாகிற சந்த்ரனுடைய |
| ஸ்மித ஜ்யோத்ஸ்ன ஜாலம் | புன்சிரிப்பாகிற நிலவுக்கூட்டத்தை |
| பிபதாம் | குடிக்கிற |
| சகோராணும் | சகோர பக்ஷிகளுக்கு |
| அதிரஸதயா | (அந்த நிலாவானது) அதிக மதுரமாக இருந்தபடியால் |
| சஞ்சு ஜடிமா ஆஸீத் | மூக்கு திகட்டி மறத்துப்போயிற்று |
| அத: | ஆகையினுல் |
| தே | அவைகள் |
| ஆம்லருசய: | (பற்கூசலைப்போக்குவதற்காக) புளிப்பில் ஆசையுடையவைகளாய் |
| சீதாம்சோ: | சந்த்ரனுடைய |
| அம்ருத லஹரீம் | (கிரணங்களாகிய) அம்ருத ப்ரவாஹத்தை |
| காஞ்ஜிகதியா | கஞ்சியென்று நினைத்து |
| ஸ்வச்சந்தம் | யதேஷ்டமாக |
| நிசி நிசி | பிரதி இரவிலும் (நிலாக்காலங்களிலெல்லாம்) |
| ப்ருசம் பிபந்தி | நிறையக்குடிக்கின்றன: |

தாயே! நீ புன்சிரிப்போடு இருக்கும்போது உன்னுடைய வதன சந்த்ரனிடமிருந்து பெருகும் நிலவைப்போன்ற கிரணங்களை அதிக ஸ்வாரஸ்யத்துடன்கூடச் சாப்பிட்ட சகோரபக்ஷிகளுக்கு அதின் மாதுர்யத்தினுல் மூக்குகள் திகட்டி மறத்துப்போனதினுல் அதை மாற்றிக்கொள்ள எண்ணி சந்த்ரனுடைய அம்ருதமயமான கிரணங்களை புளித்த கஞ்சியாக நினைத்து அதை இரவுகளிலெல்லாம் வேண்டிய அளவு குடிக்கின்றன.

1. ஸ்மிதம் என்ருல் புன்சிரிப்பு. அம்பாளுடைய புன்னகையின் அழகை இதில் வர்ணித்திருக்கிருர்.

2. அந்தப் புன்சிரிப்பினுல் நிலா ஏற்படுவதாகவும் அது சந்த்ரனுல் ஏற்படும் நிலாவைவிட அழகானதென்றும் சொல்லப்

பட்டது. அதாவது அம்பாளுடைய வதன சந்த்ரனுடைய நிலாவானது ஸாமான்ய சந்த்ரனுடைய நிலாவைவிட விசேஷமாகஇருப்பதாகச் சொல்லப்பட்டது.

3. சகோரபக்ஷிகள் சந்த்ரனுடைய நிலாவையே பானம் பண்ணுவதாகச் சொல்வது வழக்கம். ஆனால் இங்கே அவைகள் அம்பாளுடைய வதன சந்த்ரனின் நிலாவை விடாமல் சாப்பிட்டதாகவும் அவைகளுக்குத் திகட்டிப்போய் மூக்கு மறத்துப்போய் விட்டதாகவும் அதைப் போக்கடிப்பதற்காக புளிப்பான பதார்த்தத்தை தேடுவதாகவும் அதற்குத் தகுந்த புளிப்புடைய வஸ்து சந்த்ரனுடைய நிலவுதானென்று நினைத்து அதை பிரதி ராத்ரியிலும் வேண்டுமென்கிறவரையில் குடிப்பதாகவும் சொல்லப்பட்டது. அதாவது அம்பாளுடைய வதன சந்த்ர நிலாவானது அதிக மதுரமானதென்றும் அதற்கு ஒப்பிடும்போது சந்த்ரனுடைய நிலாவானது புளித்த கஞ்சி மாதிரியிருப்பதாகவும் சொல்லப்பட்டது.

अविश्रान्तं पत्युर्गुणगणकथाम्रेडनजपा
जपापुष्पच्छाया तव जननि जिह्वा जयति सा ।
यदग्रासीनायाः स्फटिकदृषदच्छच्छविमयी
सरस्वत्या मूर्तिः परिणमति माणिक्यवपुषा ॥ ६४ ॥

அவிச்ராந்தம் பத்யு: குணகண கதாம்ரேடனஜபா
ஜபாபுஷ்பச்சாயா தவ ஜனனி ஜிஹ்வா ஜயதி ஸா ।
யதக்ராஸீனாயா: ஸ்படிகத்ருஷதச்சச்சவி மயீ
ஸரஸ்வத்யா மூர்த்தி: பரிணமதி மாணிக்யவபுஷா ॥

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| தவ ஸா ஜிஹ்வா | உன்னுடைய அந்த நாக்கானது |
| அவிச்ராந்தம் | இடைவிடாமல் |
| பத்யு: | உன்புருஷனாகிய பரமசிவனுடைய |
| குணகண கதாம்ரேடன ஜபா | (த்ரிபுரவிஜயம் முதலிய) குணங்களுடைய கதையைத் திரும்பத்திரும்பச் சொல்லுகிறதான ஜபத்தோடு கூடினதாய் |
| ஜபாபுஷ்பச்சாயா | செம்பரத்தைப் புஷ்பத்தினுடைய காந்தியோடு |
| ஜயதி | உத்க்ருஷ்டமாக விளங்குகிறது. |

| | |
|---|---|
| யத் அக்ராவஸீனுயா: | எந்த நாக்கின் நுனியிலிருக்கும் |
| ஸரஸ்வத்யா: | ஸரஸ்வதீ தேவியினுடைய |
| ஸ்படிக த்ருஷத் அச்ச ச்சவிமயீ | ஸ்படிகக் கல்லின் வெண்மையான காந்திபோல் காந்தியுடன் கூடின |
| மூர்த்தி: | ரூபமானது |
| மாணிக்ய வபுஷா | பத்மராகத்தின் ரூபமாக |
| பரிணமதி | மாறுதல் அடைகிறதோ. |

"தாயே! பதிவ்ரதையான நீ உன் புருஷனுடைய லீலைகளில் ஈடுபட்டு அவைகளை எப்போதும் சொல்லிக்கொண்டிருப்பதால் உனது நாக்கானது செம்பரத்தைப் புஷ்பம்போல் சிவந்த காந்தியோடிருக்கிறது. அந்தக் காரணத்தால் அந்த நாக்கின் நுனியில் குடிகொண்டிருக்கும் ஸரஸ்வதீ தேவியின் சுத்த ஸ்படிகநிறமானது பத்மராகக்கல்லின் காந்தியோடு கூடினதாக மாறியிருக்கிறது.

1. அம்பாள் வேறு சிந்தனையில்லாமல் தன் புருஷனுடைய லீலா விசேஷங்களையே திரும்பத்திரும்பச் சொல்லிக்கொண் டிருப்பதாகவும் அதனுல் அம்பாளுடைய நாக்கானது சிவந்துபோயிருப்பதாகவும் சொல்லப்பட்டது. இதனுல் அம்பாளுடைய நாக்கின் காந்தியைச்சொல்வதுடன் அம்பாளுடைய பாதிவ்ரத்யத்தையும் விசேஷமாகச் சொல்லப்பட்டது.

2. அம்பாளுடைய நாக்கில் ஸரஸ்வதீ தேவி எப்போதும் இருப்பதாகச் சொல்வது வழக்கம். அவளுடைய நிறம் ஸ்படிக்கல் மாதிரி வெளுப்பு. அப்படியிருந்தும் அம்பாளுடைய நாக்கானது அதிகமான ரக்தவர்ணமாக இருக்கிறபடியால் அதனுல் ஸரஸ்வதீ தேவியும் நிறம் மாறி பத்மராகக்கல்லின் காந்தியோடு இருப்பதாகச் சொல்லப்பட்டது.

रणे जित्वा दैत्यानपहृतशिरस्त्रैः कवचिभिः
निवृत्तैश्चण्डांशत्रिपुरहरनिर्माल्यविमुखैः ।
विशाखेन्द्रोपेन्द्रैः शशिविशदकर्पूरशकला
विलीयन्ते मातस्तव वदनताम्बूलकबलाः ॥ ६५ ॥

ரணே ஜித்வா தைத்யான் அபஹ்ருத சிரஸ்த்ரை: கவசிபி:
நிவ்ருத்தை: சண்டாம்சத்ரிபுரஹர நிர்மால்ய விமுகை: |
விசாகேந்த்ரோபேந்த்ரை: சசிவிசத கர்பூர சகலா:
விலீயந்தே மாத: தவ வதனதாம்பூல கபளா: ||

| | |
|---|---|
| *ஹே மாத:* | *தாயே!* |
| *ரணே தைத்யான் ஜித்வா* | *யுத்தத்தில் அஸுரர்களை ஜெயித்து* |
| *நிவ்ருத்தை:* | திரும்பிவந்தவர்களும் |
| *அபஹ்ருத சிரஸ்த்ரை:* | (மகுடம்) தலைப்பாகையை எடுத்தவர்களும் |
| *கவசிபி:* | கவசங்களையுடையவர்களும் |
| *சண்டாம்ச த்ரிபுரஹர நிர்மால்ய விமுகை:* | சண்டனென்கிற ப்ரமதனுடைய பாகமாக இருக்கும் சிவநிர்மால்யத்தில் ஆசையற்றவர்களுமான |
| *விசாகேந்த்ரோ பேந்த்ரை:* | விசாகன், இந்த்ரன் உபேந்த்ரன் இவர்களால் |
| *சசிவிசத கர்பூர சகலா:* | சந்த்ரன்போல் வெளுப்பான பச்சைக்கர்ப்பூரத் துண்டுகளையுடைய |
| *தவ* | உன்னுடைய |
| *வதன தாம்பூல கபளா:* | வாயிலிருக்கும் தாம்பூலத்தினுடைய கபளங்கள் |
| *விலீயந்தே* | மென்று சாப்பிடப்படுகின்றன. |

*தாயே!* அஸுரர்களோடு யுத்தம் செய்யப்போயிருந்த விசாக, இந்த்ர, உபேந்த்ரர்கள் தாங்கள் ஜெயமடைந்ததை உனக்குத் தெரிவிப்பதற்காக நேராகவந்து தாங்கள் அணிந்த கவசங்களுடனும் கழற்றிய தலைப்பாகைகளுடனும் உன்னை நமஸ்கரித்து, சண்டனுக்குச் சொந்தமான சிவநிர்மால்யத்தை வெறுத்து, உன்னால் அனுக்ரஹார்த்தமாகக் கொடுக்கப்பட்டதும் பச்சைக்கல்பூரத்தோடு கூடியதுமான வதனதாம்பூலகபளங்களை ஆவலுடனும் பக்தியுடனும் மென்று சாப்பிடுகிறார்கள்.

1. *கார்யத்தை முடித்துக்கொண்டுவந்த ராஜஸேவகர்கள் ராஜாவினுடைய பேட்டிக்கு வரும்போது தலைப்பாகை முதலியவைகளை எடுத்துவிட்டு நமஸ்காரம் செய்வதுதான் முறை. அதேமாதிரி அஸுரர்களுடன் யுத்தம்செய்து திரும்பிவந்த விசாகன் முதலானவர்கள் அம்பாளுடைய தர்சனத்திற்கு வரும்போது தரித்த கவசங்களுடனும் எடுத்த தலைப்பாகையுடனும் வந்ததாகச் சொல்*

லப்பட்டது. ஸந்தோஷ ஸமாசாரத்தை அம்பாளிடம் சொல்ல யுத்தத்திலிருந்து க்ஷேமகவே வருவதால் கவசம், தலைப்பாகை முதலி யவைகளுடன் வந்ததாகச் சொன்னது.

2. விசாகன்- ஸுப்ரமண்யஸ்வாமி- தேவர்களுக்கெல்லாம் ஸேனுபதியானகயால்அவரை முதலில்சொன்னது. உபேந்த்ரன் என் றதுவிஷ்ணு. இந்த்ரன், உபேந்த்ரன்முதலியவர்களும்கூட தங்களுக்கு ஸேனுபதியும், தலைவனும் அம்பாளுடைய குமாரனுமான விசாகனை முன்னிட்டு அம்பாளை தர்சனம் செய்யவந்ததாகச் சொல்லப் பட்டது.

3. சிவனுடைய நிர்மால்யம் (அவருக்கு அர்ப்பணம் பண் ணப்பட்ட புஷ்பம், தாம்பூலம் முதலியவைகளில் அவர் எடுத்துக் கொண்டதுபோக பாக்கியிருப்பது) அவருடைய ப்ரமதகணங்களி லொருவரான சண்டன் என்பவருக்குமட்டும் சொந்தமாதலால் அதை (விசாகன் உள்பட) பிறர் எடுத்துக்கொள்ளக்கூடாது. ஆகை யினுல் அதில் ஆசையில்லாதவர்கள் என்று விசாகன் முதலானவர் களைச் சொன்னது. அல்லது, அந்த நிர்மால்யத்தைவிட அம்பாளு டைய நிர்மால்யத்தில் அவர்களுக்கு அதிக ஆசையிருப்பதால் சிவ நிர்மால்யத்தில் விமுகர்களாக இருப்பதாகவும் சொல்லலாம்.

4. இவர்கள் அம்பாளை நமஸ்காரம் செய்யும்போது அம் பாள் ப்ரீதியடைந்து தன் வாயில் கொஞ்சம் மென்றிருப்பதும் பச் சைக்கல்பூரம் முதலிய வாசனைத் திரவியங்களுடன் மணக்கிறது மான தாம்பூலத்தை அவர்களுக்கு நிர்மால்யமாகக் கொடுப்பதாகவும் அதை இவர்கள் பக்தியுடனும் ஆதரவுடனும் க்ரஹித்து அதை மென்று சாப்பிடுவதாகவும்சொல்லப்பட்டது. இப்பேர்ப்பட்டவிசே ஷமான அனுக்ரஹமானது விசாகனுக்குமட்டுமல்ல, அவரைமுன் னிட்டு வருகிறவர்களுக்கும் அம்பாளுடைய அனுக்ரஹம் ஏற்படுகி றதாகச் சொல்லப்பட்டது.

विपञ्चया गायन्ती विविधमपदानं पशुपते-
स्त्वयाऽऽरब्धे वक्तुं चलितशिरसा साधुवचने ।
तदीयैर्माधुर्यैरपलपिततन्त्रीकलरवां
निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम् ॥ ६६ ॥

விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதானம் பசுதே:
த்வயாரப்தே வக்தும் சலிதசிரஸா ஸாதுவசனே |
ததீயைர் மாதுர்யை: அபலபித தந்த்ரீ கலரவாம்
நிஜாம் வீணம் வாணீ நிசுளயதி சோளேன நிப்ருதம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே ! |
| பசுபதே: | பரமசிவனுடைய |
| விவிதம் அபதானம் | நானாவிதமான லீலைகளை |
| விபஞ்ச்யா காயந்தி | வீணையினால் பாடிக்கொண்டிருக்கும் |
| வாணீ | ஸரஸ்வதீ தேவியானவள் |
| சலித சிரஸா | (அதற்கு சந்தோஷப்பட்டு) அசைத்த தலையை யுடைய |
| த்வயா | உன்னால் |
| ஸாது வசனே | நல்லது, நல்லது என்று மெச்சுகிறவார்த்தையை |
| வக்தும் ஆரப்தே | சொல்ல ஆரம்பிக்கும்போது |
| ததீயை: மாதுர்யை: | அந்த உன்னுடைய வாக்கின் இனிமையினால் |
| அபலபித தந்த்ரீ கல ரவாம் | பரிஹாஸம் பண்ணப்பட்ட தந்திகளுடைய ஸ்வரத்தோடு கூடிய |
| நிஜாம் வீணம் | தன்னுடைய வீணையை |
| சோளேன | உரையினால் |
| நிப்ருதம் | வெளியில் தெரியாவண்ணம் |
| நிசுளயதி | நன்றாக மூடிவிடுகிறாள். |

தாயே! உன்னுடைய பதியான பரமசிவனுடைய நானாவிதமான லீலைகளை ஸரஸ்வதியானவள் வீணையினால் பாடிக்கொண்டிருக்கும்போது அதைக்கேட்டு ஸந்தோஷமடைந்த நீ பஹுமான வசனங்களால் அந்தப் பாட்டைப் புகழ ஆரம்பிக்கவே, அப்படி நீ சொல்லும் வார்த்தைகளின் யாழைப்பழித்த இனிமையினால் வெட்கமடைந்த ஸரஸ்வதியானவள் தன் வீணையை உரையால் நன்றாக மூடி மறைத்து வைத்துவிடுகிறாள்.

1. அம்பாளுடைய குரலானது வாக்தேவதையான ஸரஸ்வதியின் வீணையின் நாதத்தையும் தோற்கடிக்கும்படியான இனிமையுடையது என்று வர்ணிக்கப்பட்டது.

3. அம்பாள் (மஹாபதிவ்ரதையானதால்) தன் புருஷனுடைய லீலைகளைத்தான் எப்போதும் சொல்லிக்கொண்டிருப்பதுடன் அதைப் பிறர் சொல்லிக் கேட்பதிலும் ஆசையுள்ளவளாதலால் ஸரஸ்வதீ தேவியானவள் அம்பாள் ஸன்னதியில் தன் வீணையை வைத்துக்கொண்டு பகவானுடைய லீலாவிசேஷங்களை எப்போதும் பாடிக்கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. அப்படிப் பாடும்போது அந்தப் பாட்டினால் ஸந்தோஷமடைந்து அதற்கு மெச்சி அம்பாள் வார்த்தை சொல்ல ஆரம்பித்தவுடன் அந்த வார்த்தையின் மாதுர்யமானது தன் வீணையின் நாதத்தைவிட அழகாக இருப்பதைக்கண்ட ஸ்ரஸ்வதியானவள் வெட்கமடைந்து (தோற்றுப்போன வித்வான் செய்வதுமாதிரி) தன்னுடைய வீணைக்கு உரையைப்போட்டு மூடி பிறருக்குத் தெரியாதவிதமாக அதை வைத்துவிடுகிறாள் என்று சொல்லப்பட்டது.

4. பகவானுடைய லீலைகள் என்பது த்ரிபுரஸம்ஹாரம், தக்ஷயாக த்வம்ஸனம், ஹாலாஹலதாரணம், ஜலந்தரவதம், கஜாஸுரவதம் முதலியன. அவைகளை தான் சொல்லுவதிலேயே அம்பாளுக்கு மிகவும் ப்ரியமென்று 'அவிச்ராந்தம் பத்யு:' என்ற 64-வது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. அவைகளைப் பிறர் சொல்லிக் கேட்பதிலும் அம்பாளுக்கு ப்ரியமுண்டென்பது ஸர்வக்ஞையாகிய ஸரஸ்வதீதேவிக்குத் தெரியுமாகையால் அவைகளையே பாடுவதாகச் சொல்லப்பட்டது.

5. ஸரஸ்வதியின் வீணைக்கு 'கச்சபீ' என்று பெயர். இந்த வீணையின் நாதத்தை அம்பாளுடைய ஸல்லாபத்தின் இனிமையானது தோற்கடிப்பதாக

'நிஜஸல்லாப மாதுர்ய வினிர்பர்த்ஸித கச்சபீ'

என்று ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்திலும் சொல்லியிருக்கிறது.

करा्ग्रेण स्पृष्टं तुहिनगिरिणा वत्सलतया
गिरीशेनोदस्तं मुहुरधरपानाकुलतया ।
करग्राह्यं शंभोर्मुखमुकुरवृन्तं गिरिसुते
कथंकारं ब्रूमस्तव चुबुकमौपम्यरहितम् ॥ ६७ ॥

கராக்ரேண ஸ்ப்ருஷ்டம் துஹினகிரிணு வத்ஸலதயா
கிரீசேனேதஸ்தம் முஹுரதர பாஞகுலதயா |
கர க்ராஹ்யம் சம்போ: முகமுகுரவ்ருந்தம் கிரிஸுதே
கதம்காரம் ப்ருமஸ்தவ சுபுகம் ஔபம்யரஹிதம் ||

| | |
|---|---|
| ஹே ஹிமகிரிஸுதே | ஹே பார்வதீ ! |
| துஹின கிரிணு | உன்னுடைய பிதாவான ஹிமவானுல் |
| வத்ஸலதயா | குழந்தையான உன்னிடமிருக்கும் வாத்ஸல்யத்தினுல் |
| கராக்ரேண | கை (விரல்களின்) நுனியினுல் |
| ஸ்ப்ருஷ்டம் | தொடப்பட்டதும், |
| கிரிசேன | உன் புருஷனுன பரமசிவனுல் |
| அதரபானகுலதயா | உன்னுடைய அதரபானம் பண்ணுவதிலேயே அதிக ப்ரேமையுடையவராக இருப்பதினுல் |
| முஹு: | அடிக்கடி |
| உதஸ்தம் | உயரத் தூக்கப்பட்டதும், அதற்காக |
| சம்போ: | அவருடைய |
| கரக்ராஹ்யம் | கையால் பிடிக்கத் தகுந்ததும் |
| ஔபம்ய ரஹிதம் | உபமானமில்லாததும் (நிகாற்றதும்) |
| முக முகுர வ்ருந்தம் | முகமாகிற கண்ணுடிக்குக் காம்பு (பிடி)மாதிரியிருக்கும் |
| தவ சுபுகம் | உன்னுடைய முகவாய்க்கட்டை |
| கதம்காரம் ப்ரும: | எப்படியிருக்கிறதென்று வர்ணிப்போம். |

தாயே! உன்னிடம் வாத்ஸல்ய புத்தியுடைய ஹிமவானுல் தன் கைவிரல்களின் நுனியினுல் தொடப்பட்டதும், உன்னுடைய அதரத்தைப் பானம்பண்ணுகிறதிலேயே ஆசையுடைய உன் புருஷனுகிய பரமசிவனுல் அடிக்கடி உயரத்தூக்கப்பட்டதும் அவருடைய கைக்கு அடங்கியதும், ஸமானம் யாதொன்றுமில்லாததும், உனது முகமாகிய கண்ணுடிக்குக் காம்புபோன்றதுமான உன்னுடைய முகவாய்க்கட்டை நாங்கள் எப்படி வர்ணிக்கமுடியும்.

1. அம்பாளுடைய முகவாய்க்கட்டுக்கு ஸமானமான அழகுடையது யாதொன்றுமில்லையென்று ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்திலும் 'அனுகலித ஸாத்ருச்ய சிபுகஸ்ரீவிராஜிதா' என்ற நாமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

2. புத்ரன் முதலானவர்களிடத்திலிருக்கும் பாவமானது வாத்ஸல்யமென்றும் பத்னி முதலானவர்களிடத்திலிருக்கும் பாவமானது ப்ரேமையென்றும் சிஷ்யன் முதலானவர்களிடத்திலிருக்கும் பாவமானது அனுக்ரஹமென்றும் பெரியோர்களிடத்திலிருக்கும் பாவமானது பக்தியென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு அம்பாளிடத்தில் ஹிமவானுக்கிருக்கும் வாத்ஸல்யத்தையும் பரமசிவனுக்கிருக்கும் ப்ரேமையையும் சொல்லப்பட்டது.

3. முகத்தைக் கண்ணாடியாகவும் அதை உயரத்தூக்குவதற்காகக் கையால் தொடப்படுவதான முகவாய்க்கட்டை அந்தக் கண்ணாடிக்குக் காம்பாகவும் சொல்லப்பட்டது.

भुजाश्लेषान्नित्यं पुरदमयितुः कण्टकवती
तव ग्रीवा धत्ते मुखकमलनालश्रियमियम् ।
स्वतः श्वेता कालागुरुबहुलजम्बालमलिना
मृणालीलालित्यं वहति यदधो हारलतिका ॥ ६८ ॥

புஜாச்லேஷான் நித்யம் புரதமயிது: கண்டகவதீ
தவ க்ரீவா தத்தே முக கமல நாள ச்ரியமியம் |
ஸ்வதச்வேதா காலாகுரு பஹுள ஜம்பால மலிநா
ம்ருணாலீ லாலித்யம் வஹதி யததோ ஹாரலதிகா ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| தவ இயம் க்ரீவா | உன்னுடைய இந்தக் கழுத்தானது |
| புரதமயிது: | புரரிபுவான பரமசிவனுடைய |
| புஜாச்லேஷாத் | ஆலிங்கனத்தினால் |
| நித்யம் | எப்பொழுதும் |
| கண்டகவதீ | (மயிர்கூச்சலினால்) முள்ளுகளோடு கூடினது போலிருந்துகொண்டு |
| முக கமல நாள ச்ரியம் | முகமாகிற தாமரைக்கு தண்டு போன்ற அழகை. |
| தத்தே | தரிக்கிறது |
| யத் அத: | எதற்கு கீழாக இருக்கும் |
| ஹாரலதிகா | கொடிபோன்ற முக்தாஹாரமானது |
| ஸ்வத: ச்வேதா | இயற்கையாக வெளுப்பாயிருந்தபோதிலும் |
| காலாகுரு பஹுள ஜம்பால மலிநா | கருத்த அகுருவின் கெட்டியான சேற்றினால் கருத்ததாகப்போய் |

ம்ருணலீ லாலித்யம் தாமரைக்கொடியினுடைய அழகை
வஹதி வஹிக்கின்றது (உடைத்தாயிருக்கிறது.)

தாயே! பரமசிவன் உன்னை எப்போதும் ஆலிங்கனம் செய்வதினால் ஏற்படும் மயிர்க்கூச்சலினால் முள்ளுமுள்ளாக இருப்பதுபோல் தோன்றும் உன்னுடைய கழுத்தானது 'உன்னுடைய முகமாகிய கமலத்திற்குத் தண்டுபோல் தோன்றுகிறது. அதற்குக் கீழாக அணியப்பட்டிருக்கும் முக்தாஹாரமானது ஸ்வபாவமாக வெளுப்பாயிருந்தபோதிலும் அங்கே பூசப்பட்டிருக்கும் கறுப்பு அகுருவினால் கரிய நிறத்தைபடைந்து அந்த அகுருவாகிய சேற்றில் வேரோடியிருக்கும் தாமரைக்கொடிபோல் தோன்றுகிறது.

1. அம்பாளுடைய முகமாகிற தாமரைப்புஷ்பத்திற்கு கழுத்தானது தண்டுமாதிரி இருப்பதாகச் சொல்லப்பட்டது. அந்தத் தண்டில் முள்ளுமுள்ளாக இருப்பதுமாதிரி அம்பாளுடைய கழுத்தும் பரமசிவனுடைய ஆலிங்கனத்தால் ஏற்பட்ட மயிர்க்கூச்சலினால் முள்ளுமுள்ளாக இருப்பதுபோல் இருக்கிறது. தாமரைத்தண்டுக்குக் கீழிருக்கும் கொடியானது கருப்பாக இருக்கையில் அம்பாளுடைய கழுத்தில் கீழாக தரிக்கப்பட்டிருக்கும் முத்துமாலையானது வெளுப்பாக இருக்குமே என்கிற ஸந்தேகத்தைப் பரிஹாரம் செய்கிறார். அம்பாளுடைய கழுத்தில் கனமாகப் பூசப்பட்டிருக்கும் க்ருஷ்ணகுரு (கருப்பான அகுரு)வினால் அந்த முத்துமாலையும் கருப்பாகப்போய்விட்டதினால் உபமானம் பொருத்தமாகவே இருக்கிறதென்று சொல்லப்பட்டது.

**गले रेखास्तिस्रो गतिगमकगीतैकनिपुणे**
**विवाहव्यानद्धप्रगुणसंख्याप्रतिभुवः ।**
**विराजन्ते नानाविधमधुररागाकरभुवां**
**त्रयाणां ग्रामाणां स्थितिनियमसीमान इव ते ॥ ६९ ॥**

களே ரேகாஸ்திஸ்ரோ கதிகமக கீதைக நிபுணே
விவாஹ வ்யாநத்த ப்ரகுண குணஸங்க்யா ப்ரதிபுவ: |
விராஜந்தே நாநாவித மதுர ராகாகர புவாம்
த்ரயாணாம் க்ராமாணாம் ஸ்திதிநியம ஸீமானஇவதே ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| கதி, கமக, கீதைக நிபுணே | ஸங்கீத கதி. கமகம், கீதம் இவைகளில் அதிக ஸாமர்த்தியம் உள்ளவளே! |
| தே களே | உன்னுடைய கழுத்தில் (இருக்கும்) |
| திஸ்ரோ ரேகா: | மூன்று மடிப்புகள் |
| விவாஹ வ்யாநத்த ப்ரகுண | விவாஹகாலத்தில் நன்ருகக் கட்டப்பட்டதும் அனேக சரடுகளடங்கியதுமான ஸூத்ரத்தினுடைய |
| குண ஸங்க்யா ப்ரதிபுவ: | சரடுகளின் எண்ணிக்கையை ஞாபகம் செய்வன போலும் |
| நாநாவித | அனேக விதங்களான |
| மதுர ராகாகர புவாம் | இனிமையான ராகங்களுக்கு உத்பத்திஸ்தானமாகிற மேளகர்த்தா ராகங்களுக்கு இருப்பிடமான |
| த்ரயாணும் க்ராமாணும் | ஷட்ஜ, மத்யம, காந்தாரமென்கிற மூன்று க்ராமங்களுக்கு |
| ஸ்திதி நியம ஸீமான இவ | இயற்கை, பாகுபாடு இவைகளைக் குறிக்கும் எல்லைகள்மாதிரி |
| விராஜந்தே | விளங்குகின்றன. |

தாயே! உன்னுடைய கழுத்திலிருக்கும் மூன்று ரேகைகளானது உன்னைப்பரமசிவன் விவாஹம்செய்துகொண்டபோது அவரால் கட்டப்பட்ட கண்டஸூத்ரத்தின் அடையாளம் போலும் அந்த கண்டத்திலிருந்து வெளிவரும் ஸங்கீதத்திற்கு ஆதாரமான மூன்றூ க்ராமங்களுடைய லக்ஷணங்களைக்காட்டும் எல்லைகள் போலும் விளங்குகிறது.

1. அம்பாளுடைய கழுத்திலிருக்கும் த்ரிவளீ என்ற மூன்று ரேகைகளை இதில் வர்ணிக்கிருர்.

2. உத்தமஜாதி ஸ்த்ரீ, புருஷர்களுக்கு நெற்றி, கழுத்து, மத்யப்ரதேசம் இம்மூன்று இடங்களிலும் மும்மூன்று கோடுகள் மாதிரி மடிப்புக்கள் இருக்குமென்றும் அவையிருந்தால் விசேஷமான ஸௌபாக்யத்திற்கு அடையாளமென்றும் ஸாமுத்ரிகா சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

"லலாடே ச களே சைவ மத்யே சாபி வ்ளித்ரயம் |
ஸ்த்ரீ பும்ஸயோரிதம் ஞேயம் மஹாஸௌபாக்யஸூசகம் ||"

இந்த ரேகைகளை மூன்று விதமாக வர்ணித்திருக்கிருர்.

3. விவாஹகாலத்தில் மாங்கல்யதாரணம் செய்தபிறகு இடதுகையிலும் கழுத்திலும் ஸூத்ரங்களைச் சுற்றுவது வழக்கம். கையில் ஒரு ஸரமும் கழுத்தில் மூன்று ஸரங்களும் கணக்கு என்று சொல்லப்படும்.

'மாங்கல்ய தந்துனனேன பத்வா மங்களஸூத்ரகம் |
வாமஹஸ்தே ஸரம் பத்வா கண்டே ச த்ரிஸரம் ததா ||'

அம்பாளுடைய விவாஹகாலத்தில் பரமசிவனால் அம்பாளுடைய கழுத்தில் கட்டப்பட்ட கண்டஸூத்ரம் மாதிரித் தோன்றுகின்றனவாம் அங்கே இருக்கும் வளித்ரயமானது.

4. மேலும், அந்த வளித்ரயமானது ஒரு ஜாமீன்மாதிரி இருக்கிறதாம். கடன் கொடுத்தவன், கடன் வாங்கினவன் இவர்களுக்கு நடுவில், கடன் வாங்கினவனுக்காக ஜாமீன் கொடுத்தவன் முந்திய இருவர்களுக்குமிருக்கிற கடன் ஸம்பந்தத்தை எப்படி எப்போதும் ஸ்திரப்படுத்துவானே அதேமாதிரி இந்த வளித்ரயமானது அம்பாளுடைய கழுத்தில் பரமசிவனால் கட்டப்பட்ட கண்டஸூத்ரத்திற்கு அடையாளமாக இருந்துகொண்டும் அவர்களுடைய கல்யாணத்தை ஜாமீன்தார்மாதிரி ஞாபகப்படுத்திக்கொண்டும் விளங்குகிறதாக வர்ணிக்கப்பட்டது.

5. அம்பாளை ஸங்கீதத்தினுடைய கதி, கமகம், கீதம் இவைகளில் நிபுணையென்றும் அம்பாளுடைய வளித்ரயமானது மூன்று (ஸங்கித) க்ராமங்களுக்கு எல்லைமாதிரி இருக்கிறதென்றும் வர்ணிக்கப்பட்டது. கதி என்பது ஸங்கீதம் பாடும்வழி. அது மார்க்கம், தேசீ என்று இருவகைப்படும். கமகம் என்பது ஸ்வரத்தினுடைய (குரலுடைய) அசைவு, அ.து ஐந்துவிதமென்று பரதரால் சொல்லப்பட்டிருக்கிறது. கீதம் என்பது பாட்டு. அது தாது, மாது என்று இருவகைப்படும்.

'வாங் மாதுருச்யதே கேயம் தாதுரித்யபிதீயதே'

இம்மாதிரி ஸங்கீதத்தினுடைய ஸகல அம்சங்களும் அம்பாளுக்கு நன்றாய் தெரியுமென்று சொல்லப்பட்டது.

6. ஸங்கித ஸ்வரங்களைத் தொகுப்பதில் அவைகளை ஷட்ஜக்ராமமென்றும் மத்யமக்ராமமென்றும் காந்தாரக்ராமமென்றும்

பிரித்திருக்கிறார்கள். அதில் முதலிரண்டும்தான் பூலோகத்தில் அப்யாஸத்திலிருக்கின்றனவென்றும் காந்தாரக்ராமமானது தேவலோகத்தில்தான் இருக்கிறதென்றும் சொல்லப்படும். இந்த மூன்று க்ராமங்களிலிருந்துதான் எல்லா ராகங்களும் உண்டானதாகவும் அவைகளைப் பகுத்து ஒன்றோடொன்று கலக்காமல் இருப்பதற்காக ஏற்பட்ட எல்லைகள்மாதிரி அம்பாளுடைய வளித்ரயம் இருப்பதாகவும் சொல்லப்பட்டது.

7. இம்மாதிரி ஸகலவிதமான மதுராகங்களிலும் அவைகளுடைய உத்பத்திஸ்தானமாகிய மூன்று க்ராமங்களிலும் அம்பாளுக்கு ஸாமர்த்தியம் உண்டென்று சொல்லி அம்பாளுடைய கண்டத்தில் அதற்கு அடையாளமாகவும் அம்மூன்று க்ராமங்களுக்கு எல்லைகள்மாதிரியாகவும் அம்பாளுடைய வளித்ரயம் இருக்கிறதென்றும் சொல்லப்பட்டது.

मृणालीमृद्वीनां तव भुजलतानां चतसृणां
चतुर्भिः सौन्दर्यं सरसिजभवः स्तौति वदनैः ।
नखेभ्यः संत्रस्यन् प्रथममथनादन्धकरिपोः
चतुर्णां शीर्षाणां सममभयहस्तार्पणधिया ॥ ॥ ७० ॥

ம்ருணாளீ ம்ருத்வீனாம் தவ புஜலதானாம் சதஸ்ருணாம்
சதுர்பி: ஸௌந்தர்யம் ஸரஸிஜபவ: ஸ்தௌதி வதனை: ।
நகேப்ய: ஸம்த்ரஸ்யன் ப்ரதம மதனாத் அந்தகரிபோ:
சதுர்ணாம் சீர்ஷாணாம் ஸமம் அபய ஹஸ்தார்பணதியா ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| ம்ருணாளீ ம்ருத்வீனாம் | தாமரைத்தண்டுபோல் ம்ருதுவான |
| தவ | உன்னுடைய |
| சதஸ்ருணாம் புஜலதானாம் | நான்கு புஜங்களாகிற கொடிகளுடைய |
| ஸௌந்தர்யம் | அழகை |
| ஸரஸிஜபவ: | ப்ரம்ஹாவானவர் |
| ப்ரதம மதனாத் | (தன்னுடைய ஐந்து தலைகளில்) முதலான தலையைக்கிள்ளிவிட்டதனால் |
| அந்தகரிபோ: | பரமசிவனுடைய |

| | |
|---|---|
| நகேப்ய: | நகங்களுக்கு |
| ஸம்த்ரஸ்யன் | பயந்துகொண்டு |
| ஸமம் | ஏககாலத்தில் |
| சதுர்ணும் சிர்ஷாணும் | (பாக்கியிருக்கும்) நான்கு தலைகளுக்கும் |
| அபயஹஸ்தார்பண தியா | உன்னுடைய (நான்கு) ஹஸ்தங்களால் அபயப்ரதானம் செய்வாயென்ற எண்ணத்துடன் |
| சதுர்பிர் வதனை: | தன்னுடைய நான்கு முகங்களாலும் |
| ஸ்தௌதி | ஸ்தோத்ரம் செய்கிறார். |

தாயே! ப்ரம்ஹாவானவர் தன்னுடைய ஐந்தாவது தலையை பரமசிவன் கிள்ளியதினால் அவருடைய நகங்களுக்குப் பயந்துகொண்டு, உன்னை சரணமடைந்து, உன்னுடைய நான்கு கைகளாலும் தன்னுடைய நான்கு தலைகளுக்கும் ஏககாலத்தில் அபயம் கிடைக்குமென்ற எண்ணமுடையவராய், தாமரைத்தண்டுபோல் ம்ருதுவான உன்னுடைய நான்கு கைகளின் ஸௌந்தர்யத்தை தன்னுடைய நாலு முகங்களாலும் ஸ்தோத்ரம் செய்கிறார்.

1. அம்பாளுடைய புஜங்களின் ஸௌந்தர்யத்தைப் புகழ நான்கு முகங்களுடைய ப்ரம்ஹாவால்தான் முடியும், மற்றவர்களால் முடியாது என்று அர்த்தம்.

2. 'ப்ரதம மதனுத்' —ஏற்கனவே (தலையை) கிள்ளியிருப்பதிலிருந்து என்றும் அர்த்தம் சொல்லலாம்.

नखानामुद्योतैर्नवनलिनरागं विहसतां
करणां ते कान्ति कथय कथयामः कथमुमे ।
कयाचिद्वा साम्यं भजतु कलया हन्त कमलं
यदि क्रीडल्लक्ष्मीचरणतललाक्षारसचणम् ॥ ॥ ७१ ॥

நகாணும் உத்யோதை: நவநளின ராகம் விஹஸதாம்
கராணும் தே காந்திம் கதய கதயாம: கதம் உமே |
கயாசித் வா ஸாம்யம் பஜது கலயா ஹந்த கமலம்
யதி க்ரீடல் லக்ஷ்மீ சரணதல லாக்ஷாரஸ சணம் ||

| | |
|---|---|
| ஹே உமே | ஹே உமாதேவியே! |
| நகாணும் | நகங்களுடைய |
| உத்யோதை: | காந்தியினால் |

| | |
|---|---|
| நவ நளின ராகம் | புதிதாய் மலர்ந்த தாமரைப்புஷ்பத்தின் சிகப்பை |
| விஹஸதாம் | பரிஹாஸம் செய்யும் |
| தே காராணும் | உன்னுடைய கரங்களுடைய |
| காந்திம் | சோபையை |
| கதம் கதயாம: | எப்படி வர்ணிப்போம் |
| கதய | சொல்லு |
| கமலம் | தாமரைப்பூவும் |
| ஹந்த | ஹா! கஷ்டம்! |
| யதி க்ரீடல் லக்ஷ்மீ சரண தல | ஒருவேளை அதில் க்ரீடித்திருக்கும் லக்ஷ்மீ தேவியின் பாதத்திலுள்ள |
| லாக்ஷாரஸ சணம் | செம்பஞ்சுக் குழம்போடு கூடியிக்குமானல் |
| கயாசித்வா கலயா | ஒரு லேசமாவது |
| ஸாம்யம் | ஸமானமாக இருக்கும் தன்மையை |
| பஜது | அடையட்டும். |

தாயே! புதிதாய் மலர்ந்த தாமரைப்பூவின் காந்தியைவிட ப்ரகாசமுள்ள உனது கை நகங்களின் சோபையை நாங்கள் எப்படி வர்ணிக்க ஸமர்த்தர்களாவோம். ஒருக்கால் தாமரைப்பூவானது அதில் க்ரீடித்துக்கொண்டிருக்கும் லக்ஷ்மீதேவியின் சரணங்களிலிருக்கும் லாக்ஷாரஸத்தோடு கூடியிருக்குமானல் உன்னுடைய கரங்களின் சோபையில் ஒரு லேசம் அடைந்ததாக இருக்கும்.

1. புதிதாக மலர்ந்திருக்கும் தாமர புஷ்பத்தின் காந்தியை கூடத் தோற்கடிக்கும் காந்தியையுடைய அம்பாளுடைய நகங்களை என்னவென்று வர்ணிப்பது? ஆனாலும், போனல் போகிறது! பாவம்! அந்த தாமரைப்பூவானது (அதை வாஸஸ்தானமாக உடைய) லக்ஷ்மீதேவியின் பாதத்திலிருக்கும் லாக்ஷாரஸத்தோடு கூடியிருக்குமானல் அம்பாளுடைய நகங்களின் காந்தியின் ஒரு லேசத்திற்காவது ஸமமானதென்று இருக்கட்டுமே!

**समं देवि स्कन्दद्विपवदनपीतं स्तनयुगं**
**तवेदं नः खेदं हरतु सततं प्रस्नुतमुखम् ।**
**यदालोक्याशङ्काकुलितहृदयो हासजनकः**
**स्वकुम्भौ हेरम्बः परिमृशति हस्तेन झडिति ॥ ॥ ७२ ॥**

ஸமம் தேவி ஸ்கந்த த்விபவதன பீதம் ஸ்தனயுகம்
தவேதம் ந: கேதம் ஹரது ஸததம் ப்ரஸ்னுதமுகம் |
யதாலோக்யாசங்காகுலித ஹ்ருதயோ ஹாஸ ஜனக:
ஸ்வகும்பௌ ஹேரம்ப: பரிம்ருசதி ஹஸ்தேன ஜடிதி ||

| | |
|---|---|
| ஹே தேவி | அம்மணீ ! |
| ப்ரஸ்னுதமுகம் | (புத்ரர்களைக்காண்பதால்) வழிகின்ற பாலையுடைய காம்புகளோடு கூடியதும் |
| ஸமம் | ஒரேகாலத்தில் |
| ஸ்கந்த த்விபவதன பீதம் | சுப்ரமணியன், கணபதி இவர்களால் பருகப்பட்டதுமான |
| இதம் த்வ ஸ்தனயுகம் | இந்த உன்னுடைய ஸ்தனங்கள் |
| ந: கேதம் | எங்களுடைய துக்கத்தை |
| ஸததம் | எப்போதும் |
| ஹரது | போக்கடிக்கட்டும் |
| யத் ஆலோக்ய | எந்த ஸ்தனங்களைப்பார்த்து |
| ஆசங்காகுலித ஹ்ருதய: | (தெரியாத்தனத்தினால் அவைகள் தன்னுடைய கும்பங்கள் தானேவென்றும் அவைகளைத்தன் தாயாராகிய அம்பாள் அபஹரித்துக்கொண்டுவிட்டாளோ என்கிற) சந்தேகத்தால் கலங்கிய மனதுடைய |
| ஹேரம்ப: | கணபதியானவர் |
| ஹாஸ ஜனக: | (பரமசிவன், அம்பாள், குமரன் இவர்களுடைய) பரிஹாஸத்தை உண்டுபண்ணுகிறவராய் |
| ஸ்வகும்பௌ | தன்னுடைய கும்பங்களை |
| ஜடிதி | சீக்ரமாக |
| ஹஸ்தேன பரிம்ருசதி | தன் கைகளால் தடவிப்பார்த்துக்கொள்கிறாரோ. |

தாயே! உனது புத்ரர்களான கணபதி, ஸ்கந்தன் இவர்களால் ஏககாலத்தில் பானம் பண்ணப்பட்டவைகளும் அவர்களைக் கண்டதினால் பெருகும் பாலை எப்போதும் உடையவைகளுமான உன்னுடைய ஸ்தனங்கள் எங்களுடைய துக்கத்தை எப்போதும் போக்கடிக்கட்டும். அந்த ஸ்தனங்களின் பருமனைப்பார்த்த கணபதியான்வர் எங்கே தன்னுடைய கும்பங்களை நீ அபஹரித்து உன்னுடைய ஸ்தனங்களாக வைத்துக்கொண்டாயோ என்ற தெரியாத்தனமான புத்தியோடு தன் தலையைத் தடவிப்பார்க்கையில் உங்களுடைய பரிஹாஸத்திற்கு ஆளாக ஏற்படுகிறார்.

1. ஜகத்துக்கெல்லாம் பூஜ்யர்களான விநாயகர், குமாரன் இவர்களுக்குத்தாயாரென்றால் அம்பாளுடைய மஹிமையை அதிக மாக எடுத்துச்சொல்லத் தேவையில்லை.

2. அம்பாளுடைய ஸ்தனங்களுக்கு ஸமமான வஸ்து ஏதாயினுமிருந்தால் விநாயகருடைய கும்பங்களைத்தவிர வேறு யாதொன்றுமில்லையென்று அர்த்தம்.

अमू ते वक्षोजावमृतरसमाणिक्यकुतुपौ
न संदेहस्पन्दो नगपतिपताके मनसि नः ।
पिबन्तौ तौ यस्मादविदितवधूसङ्गरसिकौ
कुमारावद्यापि द्विरदवदनक्रौञ्चदलनौ ॥ ॥ ७३ ॥

அமூ தே வக்ஷோஜௌ அம்ருதரஸ மாணிக்ய குதுபௌ
ந ஸந்தேஹ ஸ்பந்தௌ நகபதிபதாகே மனஸி ந: |
பிபந்தௌ தௌ யஸ்மாத் அவிதித வதூஸங்க ரஸிகௌ
குமாரௌ அத்யாபி த்விரதவதன க்ரௌஞ்சதளநௌ ||

| | |
|---|---|
| ஹே நகபதிபதாகே | பர்வதராஜனான ஹிமவானுடைய விஜயத்வஜம் போல் இருப்பவளே! |
| அமூ தே வக்ஷோஜௌ | இந்த உன்னுடைய ஸ்தனங்கள் |
| அம்ருதரஸ மாணிக்ய குதுபௌ | அம்ருதரஸம் நிறைந்ததும் மாணிக்யங்களாலானது மான குடுவைகள் (என்பதற்கு) |
| ந: மனஸி | எங்களுடைய மனதில் |
| ஸந்தேஹ ஸ்பந்த: ந | ஸம்சயலேசம் கூட இல்லை. |
| யஸ்மாத் | ஏதனாலென்றால் |
| தௌ பிபந்தௌ | அவைகளைப்பானம் செய்கிற |
| த்விரத வதன க்ரௌஞ்ச தளநௌ | கஜானனனும் (க்ரௌஞ்ச பர்வதத்தைப் பிளந்த) குமாரனும் |
| அத்யாபி | இன்னமும் |
| அவிதித வதூஸங்க ரஸிகௌ | ஸ்த்ரீ ஸங்கமத்தின் ரஸம் தெரியாத |
| குமாரௌ | குழந்தைகளாகவே (இருக்கிறார்கள்.) |

தாயே! உன்னுடைய மார்பிலிருப்பது பால் நிறைந்த ஸ்தனங்களல்ல, அம்ருதரஸம் நிறைந்த மாணிக்ய குடுவைகள் தான், என்பதில் கொஞ்சம்கூட ஸந்தேஹமில்லை. (பாலுள்ள) ஸ்தனங்களாக இருந்தால் அந்தப்பாலைப் பருகும் கணபதி, ஸ்கந்தன் இருவரும் பால்யத்தைத்தாண்டி யௌவனம் முதலிய வளர்ச்சியை அடையமாட்டார்களா. அப்படிப்பட்ட ஸ்தனங்களாக இல்லாததினுல் தான் அவர்களிருவரும் ஸ்த்ரீ ஸங்கமம் தெரியாத குழந்தைகளாகவே இன்னமும் இருந்து வருகிருர்கள்.

1. அம்பாளுக்கு இருப்பது ஸ்தனங்களல்ல, மாணிக்யத்தினுல் செய்யப்பட்ட கடங்கள் என்றும் அவற்றிலிருப்பது பால் அல்ல, அம்ருதரஸம் என்றும் வர்ணிக்கிருர். பாலாக இருந்தால் அதைச்சாப்பிடும் குழந்தைகளுக்குக் கிரமமாக பால்யாவஸ்த்தை, யௌவனுவஸ்த்தை முதலியது ஏற்படும். ஆனுல் விநாயகனும் ஸுப்ரமணியனும் எப்போதும் சிசுக்களாகவே இருக்கிறபடியால் அவர்கள் சாப்பிடுவது தாயாருடைய பாலாக இருக்கமுடியாது, அது அம்ருத ரஸமாகத்தான் இருக்கவேண்டும். அதே காரணத்தால் அம்பாளுக்கிருப்பது (பாலுடன் கூடிய) ஸ்தனங்கள் அல்ல, அம்ருத ரஸம் நிறைந்த மாணிக்யமயமான கடங்கள் என்றும் சொன்னது. [அம்ருதம் சாப்பிட்டவர்களுக்கு வயதினுல் ஏற்படும் மாறுதல்கள் கிடையாது என்று சொல்லப்படும்.]

2. குழந்தைகள் ஸாதாரணமாக விளையாடுவதுபோல், அம்பாளுடைய ஒரு பிள்ளையான கணபதி யானைமுகத்தை (பூச்சாண்டி காண்பிப்பதுபோல்) வைத்துக்கொண்டும் மற்ருெரு பிள்ளையான ஸுப்ரமண்யன் எப்போதும் குமாரனென்ற பெயரோடும் பர்வதத்தைப் பிளப்பது முதலான லீலைகளைச் செய்துகொண்டுமிருப்பதனுல் இன்னமும் அவர்கள் குழந்தையாகவே இருப்பதாகச் சொல்லப்பட்டது.

वहत्यम्ब स्तम्बेरमदनुजकुम्भप्रकृतिभिः
समारब्धां मुक्तामणिभिरमलां हारलतिकाम् ।
कुचाभोगो बिम्बाधररुचिभिरन्तः शबलितां
प्रतापव्यामिश्रां पुरदमयितुः कीर्तिमिव ते ॥ ॥ ७४ ॥

வஹத்யம்ப ஸ்தம்பேரம தனுஜ கும்ப ப்ரக்ருதிபி:
ஸமாரப்தாம் முக்தா மணிபிர்மலாம் ஹாரலதிகாம் |
குசாபோகோ பிம்பாதர ருசிபிரந்த: சபளிதாம்
ப்ரதாப வ்யாமிச்ராம் புரதமயிது: கீர்த்திமிவ தே ||

| | |
|---|---|
| ஹே அம்ப | தாயே! |
| தே குசாபோக: | உன்னுடைய ஸ்தனங்களின் மத்ய ப்ரதேசமானது |
| ஸ்தம்பேரம தனுஜ கும்ப ப்ரக்ருதிபி: | கஜாஸுரனுடைய கும்பத்திலிருந்து உண்டான |
| முக்தாமணிபி: | முத்துமணிகளால் |
| ஸமார்ப்தாம் | நன்றாகக் சேர்க்கப்பட்டதும் |
| அமலாம் | தோஷங்களில்லாததும் |
| பிம்பாதர ருசிபி: | கோவைப்பழம்போல் சிவந்த உன் அதரத்தின் காந்தியினால் |
| அந்த: சபளிதாம் | உள்புறம் சித்ரவர்ணங்களோடு கூடியதாய்ச் செய்யப்பட்டதுமான |
| ஹாரலதிகாம் | கொடிபோன்ற ஹாரத்தை |
| புரதமயிது: | புரங்களையழித்தவரான பரமசிவனுடைய |
| ப்ரதாபவ்யாமிச்ராம் | பராக்ரமத்தோடு கலந்த |
| கீர்த்திமிவ | கீர்த்தியைப்போல் |
| வஹதி | தரித்துக்கொண்டிருக்கிறது. |

தாயே! உன்னுடைய ஸ்தனங்களின் மத்யப்ரதேசத்தில் கஜாஸுரனுடைய கும்பத்திலிருந்து உண்டான முத்துக்களால் கோர்க்கப்பட்ட ஹாரமானது விளங்கிக்கொண்டிருக்கிறது. அந்த முத்துக்களில் உன்னுடைய சிகப்பான அதர காந்தியானது படவே அவை வெளியில் சிகப்பாகவும் உள்ளே சித்ரமான வர்ணங்களோடு கூடியவைகளாயும் செய்யப்பட்டு அந்த ஹாரமானது த்ரிபுராந்தகரான பரமசிவனது பராக்ரமத்தோடு கலந்த கீர்த்திமாதிரித் தோன்றுகிறது.

1. முத்துக்கள் கஜகும்பம், மூங்கில், பாம்புப்படம், மேகம், முத்துச்சிப்பி, கரும்பு என்ற ஆறு இடங்களிலிருப்பதாகவும் அவைகளில் யானையின்முத்துக்கள் பல நிறங்கள் கலந்தவையென்றும் மற்றவை வேறுவிதமான நிறங்களுள்ளவையென்றும் சொல்லப்படும்.

'கஜகும்பேஷு வம்சேஷு பணஸு ஜலதேஷு ச |
சுக்திகாயாம் இக்ஷுதண்டே ஷோடா மௌக்திக ஸம்பவ: ||
கஜகும்பே கர்புராபா: வம்சே ரக்தாஸ்ஸிதாஸ் ஸ்ம்ருதா: |
பணஸு வாஸுகேரேவ நீலவர்ண: ப்ரகீர்த்திதா: ||
ஜ்யோதிர்வர்ணஸ்து ஜலதே சுக்திகாயாம் ஸிதாஸ் ஸ்ம்ருதா: |
இக்ஷுதண்டே பீதவர்ண: மணயோ மௌக்திகாஸ் ஸ்ம்ரு
தா: ||'

2. கஜாஸுரனை பரமசிவன் ஸம்ஹாரம் பண்ணிய பிறகு அவனுடைய கும்பத்திலிருந்து வெளிப்பட்ட முத்துக்களைக் கோர்த்து மாலையாக அம்பாள் தரித்துக்கொண்டிருப்பதாகச் சொல்லப் பட்டது. அந்த முத்துக்கள் பலவகை நிறங்கள் கலந்திருந்தபோதிலும் மாலையாக அம்பாள் கழுத்திலிருக்கையில் வெளியில் அம்பாளுடைய அதரத்தின் அத்யந்த சிகப்பு வர்ணத்தோடும் உள்ளாகப் பல நிறங்களுடையவைபாகவும் மாறுவதாக வர்ணிக்கப்பட்டது.

3. கீர்த்தியை வெளுப்பாகவும் பராக்ரமத்தை சிகப்பாகவும் மஹாகவிகள் வர்ணிப்பது வழக்கம். இங்கே பரமசிவனுடைய கீர்த்திக்கு ஸமானமாக முத்துமாலையையும் கஜாஸுர ஸம்ஹாரம், த்ரிபுரஸம்ஹாரம் முதலியவைகளில் வெளியான அவருடைய ப்ரதாபத்திற்கு ஸமானமாக அம்பாளுடைய அதராகாந்தியையும் சொல்லப்பட்டது.

4. 'ஸ்தம்பே ரம:' என்றால் யானை. தனுஜ: என்றால் அஸுரன். ஸ்தம்பேரம தனுஜ: என்றால் கஜாஸுரன்.

**तव स्तन्यं मन्ये धरणिधरकन्ये हृदयतः**
**पयः पारावारः परिवहति सारस्वतमिव ।**
**दयावत्या दत्तं द्रविडशिशुरास्वाद्य तव यत्**
**कवीनां प्रौढानामजनि कमनीयः कवयिता ॥ ॥७५॥**

தவ ஸ்தன்யம் மன்யே தரணிதரகன்யே ஹ்ருதயத:
பய: பாராவார: பரிவஹதி ஸாரஸ்வதமிவ |
தயாவத்யா தத்தம் த்ரவிட சிசுராஸ்வாத்ய தவ யத்
கவீனும் ப்ரௌடானும் அஜனி கமனீய: கவயிதா ||

ஹே தரணிதரகன்யே ஹே பார்வதி!

| | |
|---|---|
| தவ ஸ்தன்யம் | உன்னுடைய ஸ்தனங்களிலிருக்கும் பாலானது |
| ஹ்ருதயத: | ஹ்ருதயத்திலிருந்து உண்டான |
| பய: பாராவார: | க்ஷீரஸமுத்திரம் போலவும் |
| ஸாரஸ்வதமிவ | ஸரஸ்வதீமயமானது போலவும் |
| பரிவஹதி | பெருகுகின்றது |
| (இதி) மன்யே | என்று நினைக்கிறேன் |
| யத் | ஏனென்றால் |
| தயாவத்யா | கருணையோடு கூடிய உன்னால் |
| தத்தம் | கொடுக்கப்பட்ட |
| தவ (ஸ்தன்யம்) | உன்னுடைய பாலை |
| த்ரவிட சிசு: | த்ராவிடதேசத்துக் குழந்தையொருவன் |
| ஆஸ்வாத்ய | சாப்பிட்டுவிட்டு |
| ப்ரௌடானாம் கவீனாம் | ப்ரஸித்தர்களான கவிகளுக்கிடையில் |
| கமனீய: கவயிதா | வெகு அழகான காவ்யங்களைச் செய்கிறவனாக |
| அஜனி | ஆய்விட்டான் (அன்றோ) |

தாயே! உன்னுடைய ஸ்தன்யமானது ஹ்ருதயத்திலிருந்து உண்டான க்ஷீரஸமுத்திரம் போலவும் ஸாரஸ்வத ப்ரவாஹம் போலவும் பெருகுகின்றது என்று நினைக்கின்றேன். ஏனென்றால் உன்னால் கருணையுடன் கொடுக்கப்பட்ட அந்தப்பாலைப்பருகிய த்ராவிட தேசத்து சிசு ஒருவன் ப்ரஸித்தர்களான கவிகளும் மெச்சும்படியான கவியாக ஆய்விட்டானன்றோ.

1. அம்பாளுடைய ஸ்தன்யத்தின் பானத்தால் ஸரஸ்வதீ விலாஸம் ஏற்பட்டு எல்லாராலும் கொண்டாடத்தக்க கவியாக ஒரு த்ரவிட சிசு ஆனான் என்று சொல்லப்பட்டது.

2. 'பய: பாராவார:' என்பதற்குப் பதிலாக 'ஸுதாதாராஸார:' என்று ஒரு பாடம் உண்டு. அதாவது அம்ருத ப்ரவாஹம் போல் என்று அர்த்தம்.

3. பால் வெளுப்புவர்ணமாயிருப்பதால் ஸரஸ்வதி ஸம்பந்தமென்றும் மதுரமாயிருப்பதால் அம்ருதத்திற்கு ஸமானமென்றும் தாத்பர்யம்.

4. இங்கே சொல்லப்பட்ட த்ரவிட சிசு யார் என்பது இன்னமும் நிச்சயிக்கப்படவில்லை. லக்ஷ்மீதார் முதலிய சிலர் அப்படிச்சொல்லப்பட்டவர் இந்த ஸ்தோத்ர கர்த்தாவாகிய சங்கராசார்

யார் அவர்களே என்று சொல்லியிருக்கிறார்கள். அதேசார்பாக ஸௌபாக்யவர்தினீயென்று பெயருடைய (இந்த க்ரந்தத்தின்) வ்யாக்யானத்தில் ஆசார்யாள் குழந்தையாக இருக்கும்போது ஒரு ஸமயம் அம்பாள் அவருக்குத் தன்னுடைய ஸ்தன்யபானம் செய்து வைத்தாள் என்பதான வ்ருத்தாந்தம் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

5. ஸ்ரீமத் ஆசார்யாள் குழந்தையாக இருக்கும்போது அவருடைய பிதாவானவர் எப்பொழுதும் அம்பாளிடத்தில் பக்தியுள்ளவராதலால் தானிருக்கும் க்ராமத்திற்கு அருகிலுள்ள அம்பாளுடைய கோவிலுக்கு தினந்தோறும் போய் அம்பாளுக்கு பாலபிஷேகம் செய்து பூஜையை முடித்து நமஸ்காரம் செய்து திரும்பி வீட்டிற்கு வந்து பாக்கியிருக்கும் கொஞ்சம் பாலை தன் குழந்தையிடம் கொடுப்பது வழக்கம். இப்படி தினம் சாப்பிடுவதிலிருந்து குழந்தையானது தன் பிதா கொண்டுபோகும் பாலை அம்பாள் சாப்பிடுவதாகவும் பாக்கியைத் தன் பிதா தனக்குக் கொடுப்பதாகவும் நினைக்கலாயிற்று. இப்படியிருக்கும் நாளில் பிதாவானவர் வெளியூருக்குப் போகும்படி நேர்ந்ததால் அவர் தன் பத்னியைக் கூப்பிட்டு தான் வரும்வரையில் அம்பாளுக்கு பாலபிஷேகம் முதலியவையைத்தான் நடத்திவருவதுபோலவே அவள் நடத்திவரவேண்டுமென்றும் சொல்லிவிட்டுப்போனார். அந்த அம்மாளும் அதே மாதிரி செய்துகொண்டிருக்கும்போது ஒரு ஸமயம் கோவிலுக்குப்போக முடியாத அஸௌகர்யம் ஏற்பட்டது. அப்போது கோவிலுக்கு தனக்குப் பதிலாக அனுப்புவதற்கு வேறு யாருமில்லாததால் அந்த அம்மாள் குழந்தையை அழைத்து பாலைக் கொண்டுபோய் அம்பாளுக்கு அபிஷேகம், நிவேதனம் முதலியது செய்து பூஜையை முடித்துக்கொண்டு வரும்படி அனுப்பினாள். குழந்தையும் கோவிலுக்குப்போய் பூஜையைமுடித்து அம்பாள்முன்னாகப் பாலைவைத்து அந்தப் பாலை சாப்பிடும்படி அம்பாளைச்சொன்னான். வெகு நேரமாகியும் அம்பாள் அம்மாதிரி செய்யாததால் குழந்தை அழஆரம்பித்தது. கருணாரூபிணியான அம்பாள் இதைப்பார்த்து இரங்கி நேராக வந்து அந்தப்பாலைச்சாப்பிட்டாள். பாக்கிப்பால் கொஞ்சமுமில்லாமல் வெறும் பாத்ரம் மட்டுமிருப்பதைப் பார்த்த குழந்தையானது 'எனக்கு கொ

ஞ்சம் பால் பாக்கிவைக்காமல் எல்லாவற்றையும் நீயே சாப்பிட்டுவி ட்டாயே' என்று சொல்லித் திரும்பவும் அழ ஆரம்பித்தது. அப் போது ஜகதம்பிகையானவள் புன்னகைபுரிந்து குழந்தையைத் தன் மடியில் தூக்கிவைத்துக்கொண்டு தன் ஸ்தன்யத்தைப் பருகும்படி செய்தாள். அதைப் பானம் பண்ணினவுடனே குழந்தைக்கு ஸகல வித்யைகளும் ஸந்தேஹமறத் தெரிந்துவிடவே, திரும்பி வீட் டிற்குப் போகும்போதே ஆச்சர்யப்படத்தக்க விதமாக ஸ்தோத்ரம் செய்துகொண்டு வீடுசேர்ந்தது. அதற்குள் ஊருக்குத்திரும்பிய பிதாவானவர் குழந்தையின் தோற்றத்தையும் வாக்கின்விலாஸத்தை யும் பார்த்துவிட்டு ஆச்சர்யப்பட்டார். அம்பாளும் இரவில் அவரு க்கு ஸ்வப்னத்தில்தோன்றி 'குழந்தையால் லோகத்திற்கே க்ஷேமம் ஏற்படப்போகிறது. நீ யாதொரு கவலையும்படவேண்டாம். அவன் என்னுடைய குழந்தை' என்று சொன்னாள்.

6. மேலே சொல்லிய வ்ருத்தாந்தமானது ஸ்ரீமத் ஆசார் யாளின் வாக்விலாஸத்திற்கும் அப்ரமேயமான கவித்வத்திற்கும் ஒட்டியதாக இருந்தபோதிலும் நம்முடைய மனதிற்கு ஆஹ்லாத காமாக இருந்தபோதிலும் இதுவரையில் வெளியாகியிருக்கும் சங் கரவிஜயங்களில் ஒன்றிலும் காணப்படவில்லை. வேறு க்ரந்தங்களி லும் சொல்லப்படவில்லை. மேலும் இந்த ஸ்தோத்ரத்தின் கடைசி ச்லோகமாகிய 'ப்ரதீப ஜ்வாலாபி:' என்பதில் தன் விநயத்தை வெளியிட்டிருக்கும் நமது ஆசார்யாள் தன்னைப்பற்றித் தற்புகழ்ச்சி யாக 'கவீனாம் ப்ரௌடானாம் கமனீய: கவயிதா' என்று சொல்லிக் கொள்வாரா என்று நாம் யோசிக்கவேண்டும்.

7. டிண்டிமர் முதலிய இதர வ்யாக்யான கர்த்தாக்கள் வேறுவிதமான ஒருகதையைச்சொல்லுகிறார்கள். அதாவது—"முன் னொருக்கால் காஞ்சீ நகரத்திலிருந்த ஏழை பிராமணன் ஒருவனுக்கு ஸுப்ரமண்ய ஸ்வாமியின் அவதாரமான ஸம்பந்தன் என்ற குழந் தையிருந்தது. அது பால்மாறாத ஆறு மாதக்குழந்தையாக இருக் கும்போது பெற்றோர்கள் வீட்டைவிட்டு வேறுகார்யமாக வெளி யேபோயிருக்கையில் குழந்தையானது பால்குடிக்கவிரும்பி 'அம்மா அம்மா' என்று கதறவும் லோகமாதாவான பார்வதியானவள் ப்ர ஸன்னமாகித்தன் ஸ்தன்யத்தை அதற்குக் கொடுத்தாள். அதைப்

பருகிய குழந்தையானது அது முதல் சிறந்த கவியாக ஆயிற்று என்பது. இந்தக் கதையானது பின்னால் சொல்லப்படும் திருஞானஸம்பந்தருடைய சரித்ரத்தைச் சொல்லுகிறதென்றே வைத்துக்கொள்ளவேண்டும். குழந்தையின் பெயரும் அதேதான். ஆயினும் காஞ்சீ நகரமென்பது தவறு. அவர் அந்த ஊரில் பிறக்கவுமில்லை, குழந்தைப் பருவத்திலிருக்கவுமில்லை. கதையைப்பற்றிய விபரங்களும் சரியாகயில்லை.

8. ஸுதாவித்யோதினீ என்ற வ்யாக்யானத்தில் 'த்ரவிடசிசு' என்பது அந்த ஸ்தோத்ரம் செய்தவர் என்று சொல்லுகையில் அதைச் செய்தவரே ஸ்ரீமத் ஆசார்யாளல்லவென்றும் அது த்ரமிடதேசத்து அரசனாகிய ப்ரவரஸேனன் என்பவனால் செய்யப்பட்டது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதையொட்டி அந்த அரசனைப்பற்றி இதேமாதிரியான வ்ருத்தாந்தமும் சொல்லப்பட்டிருக்கிறது. குழந்தை பிறந்தவுடனேயே மலையில் கொண்டுபோய் விடப்பட்டதாகவும் அங்கே ஒரு புலி அதைக் கண்டெடுத்துத் தன் குகைக்குக் கொண்டுபோனதாகவும் அங்கேயிருக்கையில் பூர்வஜன்மத்திய உபாஸனாவிசேஷத்தினால் அம்பாளை த்யானம் செய்ததாகவும் அம்பாள் ப்ரஸன்னமாகித் தன்னுடைய ஸ்தன்யத்தைக் கொடுத்ததாகவும் அதுமுதல் சிறந்த கவியாகி ஸகல க்ஷேமங்களையுமடைந்து த்ரமிடதேசத்து அரசனானதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

9. மிகவும் ப்ரஸித்தமானதும் இந்த ச்லோகத்தையொட்டினதுமான வ்ருத்தாந்தம் திருஞானஸம்பந்தரைப்பற்றித் தமிழ் புராணங்களில் சொல்லியிருப்பதுதான். சீர்காழியில் அவர் அவதரித்த சில காலத்திற்குப் பிறகு ஒரு ஸமயம் தகப்பனார் ஸ்னானத்திற்காகக் குளத்திற்குப் போகும்போது கூட அழைத்துக்கொண்டு போனதாகவும் குளத்தில் தன் தகப்பனார் ஸ்னானம்செய்ய முழுகவே கரையிலிருந்த குழந்தை அவரைக் காணாது அழ ஆரம்பிக்கவும் பரமசிவன் அம்பாளுடன் வ்ருஷபாரூடராகத் தோன்றி தரிசனம் தந்து அம்பாள் தன் ஸ்தன்யத்தைக் கொடுத்து குழந்தையை ஸமாதானப்செய்து இருவரும் மறைந்துவிடவும் கரையேறிய தந்தை பாலும் வாயுமாக இருக்கும் குழந்தையை நோக்கி பால் கொடுத்தது யாரென்று வினவக் குழந்தை ஆகாயத்தை நோக்கி

'தேரடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதி சூடி' என்று பாடவாரம்பித்ததும் அதுமுதல் ஆச்சர்யமான பாடல்களைப் பாடிக்கொண்டும் அமானுஷ்யமான லீலைகளைச் செய்துகொண்டு வந்ததும் த்ராவிடதேசத்தில் எங்கிலும் ப்ரஸித்தமானது.

10. அப்படி ஞானஸம்பந்தரைப்பற்றி இங்கு சொல்லியிருப்பதாக வைத்துக்கொண்டால் ஆசார்யாள் அவருக்குப் பிற்காலத்தவராக ஏற்படும். ஆயினும் ஞானஸம்பந்தர் இருந்த காலமும் ஆசார்யாள் இருந்த காலமும் இவ்வளவு காலம் கழித்தும் தீர்மானமாகக் கண்டுபிடிக்கப்படவில்லையாதலால் அதைப்பற்றி இதற்குமேல் விபரமாக எழுதுவதற்கு இது இடமில்லை.

11. இந்த ஸ்தோத்ரத்தைத் தமிழில் மொழிபெயர்த்தவரும் மிகவும் வரப்ரஸாதியுமான கவிராஜ பண்டிதரும் இங்கு சொல்லப்பட்டவர் ஞானஸம்பந்தர்தான் என்பதாக அர்த்தம்பண்ணி

'தருண மங்கலை யுனது சிந்தைத ழைந்தபாலமு தூறினு
லருண கொங்கையி லதுபெருங்கவி யலைநெடுங்கட லாகுமே
வருண நன்குறு கவுணியன்சிறு மதலையம்புயல் பருகியே
பொருணயம்பெறு கவிதையென்றெரு புனிதமாரி
[பொழிந்ததே'

என்று சொல்லியிருக்கிறார். ஞானஸம்பந்தர் உத்தமமான ப்ராஹ்மண வருணத்தில் கவுணியகுலத்தில் (கௌண்டின்ய கோத்ரத்தில்) பிறந்தவராதலால் அவரை 'வருண நன்குறு கவுணியன் சிறு மதலை' என்று சொல்லப்பட்டது

12. தற்காலம் ஸ்ரீமத் ஆசார்யாளுடைய காமகோடி பீடத்தில் விளங்கிவரும் ஜகத்குரு அவர்களின் அபிப்ராயமும் இம்மாதிரியேதான் இருக்கிறது. (ஸ்ரீ சங்கரவிஜயம் 102-வது பக்கம் பார்க்கவும்.)

हरक्रोधज्वालावलिभिरवलीढेन वपुषा
गभीरे ते नाभीसरसि कृतसङ्गो मनसिजः ।
समुत्तस्थौ तस्मादचलतनये धूमलतिका
जनस्तां जानीते तव जननि रोमावलिरिति ॥ ॥ ७६ ॥

ஹரக்ரோதஜ்வாலாவலிபிராவலீடேன வபுஷா
கபீரே தே நாபீஸரஸி க்ருதஸங்கோ மனஸிஜ: |
ஸமுத்தஸ்தௌ தஸ்மாத் அசலதனயே தூமலதிகா
ஜனஸ்தாம் ஜானீதே தவ ஜனனி ரோமாவளிரிதி ||

| | |
|---|---|
| ஹே அசலதனயே | ஹே பார்வதி ! |
| மனஸிஜ: | மன்மதனானவன் |
| ஹரக்ரோத ஜ்வாலாவளிபி: | பரமசிவனுடைய கோபாக்னி ஜ்வாலையின் கூட்டங்களால் |
| அவலீடேன வபுஷா | சூழப்பட்ட சரீரத்தையுடையவனாய் |
| கபீரே | ஆழமான |
| தே நாபீஸரஸி | உன்னுடைய நாபியாகிற மடுவில் |
| க்ருதஸங்க: | ஏற்பட்ட ஸங்கத்தையுடையவனாக ஆனான் (முழுகினான்) |
| தஸ்மாத் | அப்படி எரிகின்ற அவனுடைய சரீரமானது உனது நாபீ ஸரஸ்ஸில் விழுந்தவுடன் |
| தூமலதிகா | புகையானது கோடிமாதிரி |
| ஸமுத்தஸ்தௌ | கிளம்பிற்று |
| தாம் | அதை |
| ஹே ஜனனி | ஹே தாயே ! |
| ஜன: | ஜனங்கள் |
| தவ ரோமாவளிரிதி | உன்னுடைய ரோமாவளியென்று |
| ஜானீதே | வர்ணிக்கிறார்கள் |

தாயே ! பரமசிவனுடைய நேத்ராக்னியினால் கொளுத்தப்பட்ட மன்மதனானவன் (அதிலிருந்து தப்பிப் போவதற்காக) ஆழமான உனது நாபியாகிய மடுவில் குதித்தபோது அதிலிருந்து உண்டான புகையை உன்னுடைய ரோமாவளியென்று (தெரியாத) ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

1. பரமசிவனுடைய நெற்றிக்கண்ணின் நெருப்பின்தாபம் தாங்கமுடியாமல் மன்மதன் அம்பாளுடைய நாபியாகிற மடுவில் குதித்துவிட்டதின்பேரில் அந்த நெருப்பு அணைந்து அதிலிருந்து (தணலில் ஜலம்பட்டால் கிளம்புவதுமாதிரி) கிளம்பிய புகையானது கொடிமாதிரி வெளியே வந்ததாகவும் அதைத்தான் ஸாமான்ய ஜனங்கள் ரோமாவளியென்று சொல்லுவதாகவும் இங்கு சொல்லப்பட்டது.

2. நாபியானது மன்மதஸ்தானங்களில் ஒன்றென்பது காமசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

यदेतत्कालिन्दीतनुतरतरङ्गाकृति शिवे
कृशे मध्ये किंचिज्जननि तव यद्भाति सुधियाम् ।
विमर्दादन्योन्यं कुचकलशयोरन्तरगतं
तनूभूतं व्योम प्रविशदिव नाभिं कुहरिणीम् ॥ ॥७७॥

யதேதத் காளிந்தீ தனுதர தரங்காக்ருதி சிவே
க்ருசே மத்யே கிஞ்சிஜ்ஜனனி தவ யத்பாதி ஸுதியாம் |
விமர்தாத் அன்யோன்யம் குச கலசயோரந்தரகதம்
தனூபூதம் வ்யோம ப்ரவிசதிவ நாபிம் குஹரிணீம் ||

| | |
|---|---|
| ஹே சிவே | பரமசிவன் பத்னியே! |
| ஜனனி | தாயே ! |
| தவ க்ருசே மத்யே | உன்னுடைய மெல்லியதான இடையில் |
| யத் எதத் | யாதொரு இந்த |
| காளிந்தீ தனுதர தரங் காக்ருதி | யமுனையின் மிகவும் மெல்லியதான அலைபோன்ற ரூபத்தோடு கூடின |
| கிஞ்சித் | ரோமாவளியாகிற ஒரு சின்ன வஸ்துவானது |
| ஸுதியாம் | நல்ல அறிவுள்ளவர்களுக்கு |
| யத் பாதி | எது புலப்படுகிறதோ அது |
| குச கலசயோ: | உன்னுடைய கலசங்கள்போன்ற ஸ்தனங்களின் |
| அந்தரகதம் | நடுவிலகப்பட்டுக்கொண்டதும் |
| அன்யோன்ய விமர் தாத் | அந்த ஸ்தனங்கள் ஒன்றோடொன்று உறைவதனல் |
| தனூபூதம் | அதி ஸூக்ஷ்மமானதுமான |
| வ்யோம | (நீல நிறமுள்ள) வானமானது |
| குஹரிணீம் நாபிம் | குகையோடுகூடிய (உன்னுடைய) நாபியை |
| ப்ரவிசத் இவ | ப்ரவேசிக்கிறது போலிருக்கிறது. |

தாயே! யமுனாநதியின் மெல்லியதான அலைபோன்ற ரூபத்தையுடைய உன்னுடைய ரோமாவளியானது உன்னுடைய நாபியில் முடிவடைவது, எப்படி வானமானது கலசங்கள்போலப் பருத்த உனது ஸ்தனங்களுக்கு நடுவிலகப்பட்டு அவைகள் உரைவதனல் அதிஸூக்ஷ்மமான ஆக்ருதியோடு கூடியதாய் உனது நாபியாகிற குகையில் ப்ரவேசிக்குமோ அதுபோல் தோன்றுகிறது.

1. காளிந்தி நதியின் ஜலம் கருப்பு. அதனுடைய மெல்லிய அலைபோலிருக்கிறதாம் ரோமாவளீ.

2. வானம் நீலவர்ணமானது. அது ஸ்தனங்களாகிற பர்வதங்களுக்கு இடையில் அகப்பட்டுக்கொண்டு அவை ஒன்றோடொன்று உரைவதால் மெல்லியதாய்ப்போய் கீழே நாபியிலிருக்கிற குகைக்குள் ப்ரவேசிப்பதாக வர்ணிக்கப்பட்டது.

स्थिरो गङ्गावर्तः स्तनमुकुलरोमावलिलता
कलावालं कुण्डं कुसुमशरतेजोहुतभुजः ।
रतेर्लीलागारं किमपि तव नाभिर्गिरिसुते
बिलद्वारं सिद्धेर्गिरिशनयनानां विजयते ॥ ॥ ७८ ॥

ஸ்திரோ கங்காவர்த: ஸ்தன முகுளரோமாவளி லதா
கலாவாலம் குண்டம் குஸுமசரதேஜோஹுத புஜ: ।
ரதேர் லீலாகாரம் கிமபி தவ நாபிர் கிரிஸுதே
பிலத்வாரம் ஸித்தே: கிரிசநயனானாம் விஜயதே ॥

| | |
|---|---|
| ஹே கிரிஸுதே | ஹே பார்வதி ! |
| தவ நாபி: | உன்னுடைய நாபியானது |
| ஸ்திர: | நாசம், சலனம் இவையில்லாத |
| கங்காவர்த: | கங்காநதியின் ஜலத்திலிருக்கும் சுழல்போலும் |
| ஸ்தன முகுள ரோமாவளி லதா | ஸ்தனங்களாகிற மொட்டுக்களோடு கூடிய |
| கலாவாலம் | ரோமாவளியாகிற கொடியின் வேருக்குப்பாத்தி போலும் |
| குஸுமசரதேஜோ ஹுத புஜ: | மன்மதனுடைய தேஜஸாகிற அக்னியின் |
| குண்டம் | ஹோமகுண்டம் போலும் |
| ரதே: லீலாகாரம் | (மன்மதனுடைய பத்னியான) ரதீதேவியின் விலாஸ க்ருஹம் போலும் |
| கிரிச நயனானாம் | பரமசிவனுடைய கண்களுக்கு |
| ஸித்தே: | (அவைகளுடைய) தபஸ்ஸின் ஸித்திக்கு |
| பிலத்வாரம் | பிலத்வாரம் (அந்த ஸித்தியடையுமிடம்) போலும் |
| கிமபி | வர்ணிக்கமுடியாத அழகுடன் |
| விஜயதே | விளங்குகிறது. |

, தாயே! உன்னுடைய நாபிப்ரதேசமானது கங்கா நதியின் ஜலத்திலிருக்கும் சுழல்போலிருக்கையில் நாசம், சலனம் இவையில்லாததாயும், ஸ்தனங்களாகிய மொட்டுக்களையுடைய ரோமாவளியாகிற கொடியின் வேருக்குப் பாத்திபோலவும், மன்மதாக்னியின் ஹோமகுண்டம் போலவும், ரதீதேவியின் லீலாக்ருஹம் போலவும், பரமசிவனுடைய கண்களின் தபஸுக்கு ஸித்தியேற்படும் பிலத்வாரம்போலவும் இன்னம் வர்ணனையிலடங்காத அழகுடனும் விளங்குகிறது.

1. அம்பாளுடைய நாபியின் அழகை இவ்வாறு பலவிதமாக வர்ணிக்கிறார்.

2. நாபியானது சுழல்மாதிரி வட்டமான வடிவோடும் ஆழம்தெரியாததுபோலுமிருப்பதால் அதற்கு ஸமானமாக வர்ணிக்கப்பட்டது. 'ஸ்திர:' என்றபதத்தினால் சுழல் சுற்றுவதுமாதிரியில்லாமல் நாபியானது சலனமல்லாமலிருப்பதாகவும், சுழல் மறைந்துபோவதுமாதிரியில்லாமல் நாபியானது விநாசரஹிதமாகவுமிருப்பதைச் சொல்லப்பட்டது.

3. நாபியாகிற பாத்தியிலிருந்து கிளம்பிய ரோமாவளியாகிற கொடியில் ஸ்தனங்களாகிற மொட்டுக்களிருப்பதாக வர்ணிக்கப்பட்டது. இதேமாதிரி ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில் 'நாப்யாலவாலரோமாளி லதாபலகுசத்வயீ' என்று ரோமலதையிலிருக்கும் பழங்களாக ஸ்தனங்களை வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

4. மன்மத யாகம் செய்யும் ஹோமகுண்டமென்பதனால் நாபியானது காமோத்தீபன ப்ரதேசம் என்பதைச் சொல்லப்பட்டது.

5. நாபியானது மன்மதன் இருக்குமிடமாகையாலும் அவனுடைய பத்னியாகிய ரதியும் அவனுடன் அதிலேயே எப்போதுமிருப்பதாலும் அதை அவளுடைய விலாஸக்ருஹமாகச் சொல்லப்பட்டது.

6. தபஸ்ஸித்தி அடைவதற்கு யோகிகள் குகைகளிலும் பிலங்களிலும் போயிருந்துகொண்டு தபஸ் செய்வதுபோல் பரமசிவனுடைய கண்கள் தங்களுக்கு அம்பாளுடைய ஸௌந்தர்யத்தின் தர்சனம் கிடைக்கவேண்டிச் செய்யும் தபஸ்ஸுக்கு ஸ்தானம்

போல் அம்பாளுடைய நாபி இருப்பதாகச் சொல்லப்பட்டது. குகையென்பது பூமிக்குமேல் (மலை முதலிய இடங்களில்) இருக்கும் துவாரதேசங்களுக்குப்பெயர். பிலம் என்பது பூமிக்குள்ளிருக்கும் அம்மாதிரியிடங்களுக்குப்பெயர். நாபியானது சரீரத்திற்குள் போவதினுல் பிலமாக வர்ணிக்கப்பட்டது.

निसर्गक्षीणस्य स्तनतटभरेण क्लमजुषो
नमन्मूर्तेर्नारीतिलक शनकैस्त्रुट्यत इव ।
चिरं ते मध्यस्य त्रुटिततटिनीतीरतरुणा
समावस्थास्थेम्नो भवतु कुशलं शैलतनये ॥ ॥ ७९ ॥

நிஸர்க க்ஷீணஸ்ய ஸ்தனதடபரேண க்லமஜுஷோ
நமன் மூர்தேர் நாரீதிலக சனகை: த்ருட்யத இவ |
சிரம் தே மத்யஸ்ய த்ருடித தடினீ தீரதருணு
ஸமாவஸ்த்தா ஸ்த்தேம்னே பவது குசலம் சைலதனயே ||

| | |
|---|---|
| ஹே நாரீதிலக ! | ஸ்த்ரீகளுக்குத் திலகம்போல் விளங்குகிறவளே ! |
| சைலதனயே! | பர்வதராஜகுமாரியே ! |
| நிஸர்க க்ஷீணஸ்ய | ஸ்வபாவமாகவே மெல்லியதானதும் |
| ஸ்தனதடபரேண | ஸ்தனப்ரதேசத்தின் பாரத்தினுல் |
| க்லமஜுஷ: | சிரமத்தையடைந்ததும் |
| நமன் மூர்தே: | (அந்த பாரத்தினுல்) வணங்கின ரூபத்தையுடையதும் |
| சனகை: | மெள்ள மெள்ள |
| த்ருட்யத இவ | ஒடிந்துபோவதுபோல |
| த்ருடித தடினீ தீர தருணு | இடிந்ததான ஆற்றின் கரையிலுள்ள மரத்திற்கு |
| ஸமாவஸ்த்தா ஸ்த்தேம்ன: | ஸமானமான ஸ்திரமான தசையிலிருந்துகொண்டிருக்கிற |
| தே மத்யஸ்ய | உன்னுடைய இடுப்பிற்கு |
| குசலம் | க்ஷேமமானது |
| சிரம் பவது | வெகுகாலம் ஏற்படட்டும். |

தாயே ! ஸ்வபாவமாகவே மெல்லியதான உன்னுடைய இடையானது ஸ்தனங்களின் பாரத்தைத் தாங்குவதினுல் ச்ரமத்தையடைந்தும் கொஞ்சம் வணங்கியதுமாக இருப்பதைப் பார்த்

தால், மெள்ள மெள்ள ஒடிந்துபோய்விடும்போலவும் ஆற்றின் கரையில் இடிந்ததான பாரிலுள்ள மரமானது எவ்வளவு ஸ்திரமாக இருக்குமோ அம்மாதிரி ஸ்திரமான தசையிலிருப்பதுபோலவும் தோன்றுவதால் அது அம்மாதிரி ஆபத்துக்களுக்கு அகப்படாமல் (ஒடிந்துபோகாமல்) வெகுகாலம் க்ஷேமமாக இருக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

1. உத்தமஜாதி ஸ்த்ரீகளுடைய இடுப்பானது மிகவும் சிறியதாக இருக்குமென்று சொல்லப்படும். அத்துடன், ஸ்தனங்களின் பாரத்தினால் எப்போது ஒடிந்துபோய்விடுமோ என்று அம்பாளுடைய இடுப்புஇருக்கிறதாம். ஆற்றங்கரையில் இடிந்துபோன பாரில் இருக்கும்படியான மரமானது எந்த ஸமயம் ஆற்றில் விழுந்துவிடுமோ என்றிருப்பதுபோல அம்பாளுடைய இடுப்பானது எந்த ஸமயம் ஒடிந்துவிடுமோ என்றிருக்கிறதாம். அம்மாதிரி அது ஒடிந்துபோகாமல் வெகுகாலம் க்ஷேமத்துடனிருக்கட்டுமென்று பிரார்த்திக்கிறார்.

कुचौ सद्यः स्विद्यत्तटघटितकूर्पासभिदुरौ
कषन्तौ दोर्मूले कनककलशाभौ कलयता ।
तव त्रातुं भङ्गादलमिति वलग्नं तनुभुवा
त्रिधा नद्धं देवि त्रिवलि लवलीवल्लिभिरिव ॥ ८० ॥

குசௌ ஸத்யஸ் ஸ்வித்யத் தடகடித கூர்பாஸ பிதுரௌ
கஷந்தௌ தோர்மூலே கனககலசாபௌ கலயதா |
தவ த்ராதும் பங்காத் அலமிதி வலக்னம் தனுபுவா
த்ரிதா நத்தம் தேவி த்ரிவளி லவலீவல்லிபிரிவ ||

| | |
|---|---|
| ஹே தேவி | தாயே! |
| ஸத்ய: | அப்போதே |
| ஸ்வித்யத் தடகடித கூர்பாஸ பிதுரௌ | வேர்வையினால் பக்கத்தில் ஒட்டிக்கொண்டிருக்கிற ரவிக்கையைக் கிழிக்கின்றவைகளும் |
| தோர்மூலே கஷந்தௌ | கைகளின் அடிப்பாகத்தோடு உறைகின்றவைகளும் |
| கநக கலசாபௌ | தங்கக் கலசங்கள்போல் ப்ரகாசிக்கின்றவைகளுமான |

| | |
|---|---|
| குசௌ | உன்னுடைய ஸ்தனங்களை |
| கலயதா | நிர்மாணம் செய்த |
| தனுபுவா | மன்மதனால் |
| வலக்னம் | (உன்னுடைய) இடுப்பை |
| பங்காத் அலம் இதி | ஒடிந்துபோவதிலிருந்து போதும் என்று (ஒடிந்து போகாமலிருப்பதற்காக) |
| த்ராதும் | காப்பாற்றுவதற்காக |
| த்ரிவளி தவ வலக்னம் | மூன்று மடிப்புக்களையுடைய உன்னுடைய இடுப்பை |
| லவலீவல்லிபி: | வள்ளிக்கொடிகளால் |
| த்ரிதா நத்தம் இவ | மூன்று சுற்று சுற்றப்பட்டதுபோல்(இருக்கிறது). |

தாயே! பருத்தவையும் உன்னதமானவையும் தங்கக் கலசங்கள் போன்றவையுமான உனது ஸ்தனங்களை மன்மதன் நிர்மாணம் செய்தபோது அவைகளின் பாரத்தினால் மெல்லியதான உன்னுடைய இடுப்பானது ஒடிந்துபோகாமலிருப்பதற்காக அங்கே வள்ளிக்கொடிகளால் மூன்று சுற்றுக்கள் சுற்றியதுபோல் உன்னுடைய இடுப்பிலிருக்கும் த்ரிவளியானது தோன்றுகிறது.

1. அம்பாளுடைய ஸ்தனங்களை நிர்மாணிக்கத்தகுந்த யோக்யதை ப்ரம்ஹாவுக்குக்கூடக் கிடையாதென்றும் அதற்கு மன்மதன்தான் யோக்யதையுடையவன் என்றும் அர்த்தம்.

2. அம்பாள் தன்னுடைய ப்ராணேச்வரரான பரமசிவனுடைய ரூபத்தை ப்ரதிக்ஷணமும் மனதில் அனுஸந்தானம்பண்ணுவதால் ஸ்தனங்கள் விம்மிப் பருத்துத் தங்களைக் கட்டியிருக்கும் ரவிக்கையைக் கிழித்துவிடுவதாக வர்ணிக்கப்பட்டது.

3. த்ரிவளீ என்ற மூன்று மடிப்புக்கள் உத்தம ஸ்த்ரீகளுடைய அடிவயற்றில் இருக்குமென்று ஏற்கனவேயே சொல்லப்பட்டது. அம்பாளுடைய இடுப்பானது மிகவும் சிறியதாயும் மேலேயிருக்கும் ஸ்தனங்களின் பாரத்தைத் தாங்கமுடியாமல் முறிந்து போய்விடும்போலுமிருப்பதைப் பார்த்த மன்மதன் அது அம்மாதிரி முறியாமலிருப்பதற்காக லவலீ (வள்ளி) கொடிகளால் சுற்றியிருப்பதுபோல இருக்கின்றனவாம் அந்த த்ரிவளியென்று சொல்லப்பட்டது. இதையேதான் ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்திலும் 'ஸ்தனபார தளன்மத்ய பட்டபந்த வளித்ரயா' என்று சொன்னது.

गुरुत्वं विस्तारं क्षितिधरपतिः पार्वति निजाम्
नितम्बादाच्छिद्य त्वयि हरणरूपेण निदधे ।
अतस्ते विस्तीर्णो गुरुरयमशेषां वसुमतीं
नितम्बप्राग्भारः स्थगयति लघुत्वं नयति च ॥ ८१ ॥

குருத்வம் விஸ்தாரம் க்ஷிதிதரபதி: பார்வதி நிஜாத்
நிதம்பாத் ஆச்சித்ய த்வயி ஹரணரூபேண நிததே |
அதஸ்தே விஸ்தீர்ணோ குருரயம் அசேஷாம் வஸுமதீம்
நிதம்ப ப்ராக் பாரஸ்த்தகயதி லகுத்வம் நயதிச ||

| | |
|---|---|
| ஹே பார்வதி | ஹே பார்வதி ! |
| க்ஷிதிதரபதி: | பர்வதராஜனான உன் தகப்பனார் |
| குருத்வம் | கனமாக இருக்கும் தன்மையையும் |
| விஸ்தாரம் | விசாலமாக இருக்கும் தன்மையையும் |
| நிஜாத் நிதம்பாத் | தன்னுடைய நிதம்ப ப்ரதேசத்திலிருந்து |
| ஆச்சித்ய | எடுத்து |
| த்வயி | உன்னிடத்தில் |
| ஹரணரூபேண | ஸ்த்ரீதனச்சீராக |
| நிததே | வைத்திருக்கிறார் |
| அத: | அந்தக்காரணத்தால் |
| அயம் | இந்த |
| குரு: | பருத்ததும் |
| விஸ்தீர்ண: | விசாலமானதுமான |
| தே நிதம்ப ப்ராக்பார: | உன்னுடைய நிதம்பத்தினுடைய முன்பாகத்தின் உருவமானது |
| அசேஷாம் வஸுமதீம் | பூமியின் ஸர்வபாகத்தையும் |
| ஸ்தகயதி | மறைக்கிறது |
| லகுத்வம் நயதி ச | (அந்த பூமியை) லேசாக இருப்பதுபோலும் செய்கிறதென்பதில் ஸந்தேகமில்லை. |

தாயே! உன்னுடைய நிதம்ப ப்ரதேசமானது தன்னுடைய பருமனினாலும் விசாலத்தினாலும் பூமியையே மறைத்து அதை லேசாக இருப்பதுபோல் செய்வதைப் பார்த்தால் அப்பேர்ப்பட்ட பருமனையும் விசாலத்தையும் உன் தகப்பனான ஹிமவான் தன்னுடைய அடிவாரத்திலிருந்து எடுத்து உனக்கு ஸ்த்ரீதனச் சீராகக்கொடுத்தார்போல் தோன்றுகிறது.

1. நிதம்பமானது விஸ்தாரத்தினுல் பூமியை மறைக்கிறது, கனமாக இருப்பதினுல் பூமியை லேசாக எண்ணும்படி செய்கிறது.

2. பர்வதத்தின் தாழ்வரையை அதனுடைய நிதம்பமென்று சொல்லப்படும். கனம், விஸ்தீர்ணம் இவையிரண்டும் பூமியில் தான் ஒருங்கே சேர்ந்திருக்கின்றன. ஆயினும் அதற்கும் அதிகமாக இந்த இரண்டு விசேஷங்களேயுடையது பூதாங்களுக்கெல்லாம் (பர்வதங்களுக்கெல்லாம்) அதிபதியான ஹிமவான் ஆகையாலும் அவர் தன்னுடைய நிதம்ப ப்ரதேசத்தை ஸ்த்ரீதனமாக அம்பாளுக்குக் கொடுத்திருப்பதாலும் அம்பாளுடைய நிதம்பப்ரதேசமானது குருத்வத்திலும் விஸ்தாரத்திலும் பூமியை ஜயித்ததாகச் சொல்வதில் ஒருவிதமான ஸந்தேஹத்திற்கும் இடமில்லையென்று சொல்லப்பட்டது.

करीन्द्राणां शुण्डान् कनककदलीकाण्डपटलीं
उभाभ्यामूरुभ्यामुभयमपि निर्जित्य भवति ।
सुवृत्ताभ्यां पत्युः प्रणतिकठिनाभ्यां गिरिसुते
विधिज्ञे जानुभ्यां विबुधकरिकुम्भद्वयमसि ॥ ॥ ८२ ॥

கரீந்த்ராணும் சுண்டான் கனககதளீ காண்ட படலீம்
உபாப்யாம் ஊருப்யாம் உபயமபி நிர்ஜித்ய பவதி |
ஸுவ்ருத்தாப்யாம் பத்யு: ப்ரணதி கடினப்யாம் கிரிஸுதே
விதிக்ஞே ஜானுப்யாம் விபுதகரிகும்பத்வயம் அஸி ||

| | |
|---|---|
| ஹே பவதி | அம்மணி! |
| கிரிஸுதே | பார்வதி! |
| விதிக்ஞே | வேதார்த்தங்களே அறிந்தவளே! |
| கரீந்த்ராணும் சுண்டான் | கஜராஜங்களுடைய தும்பிக்கைகளேயும் |
| கனக கதளீகாண்ட படலீம் | தங்கவாழையின் கட்டைகளின் கூட்டத்தையும் |
| உபயமபி | இவையிரண்டையும் |
| உபாப்யாம் ஊருப்யாம் | உன்னுடைய இரண்டு துடைகளால் |
| நிர்ஜித்ய | ஜெயித்து, |
| ஸுவ்ருத்தாப்யாம் | நன்ருய் உருட்சியானதும் |

| | |
|---|---|
| பத்யு: ப்ரணதி கடினுப்யாம் | புருஷனை பரமசிவனுக்கு அடிக்கடி நமஸ்காரம் பண்ணும்போது ஏற்படும் பூமி ஸ்பர்சத்தினுல் கடினமானதுமான |
| ஜானுப்யாம் | முழங்கால்களின் சில்லுகளால் |
| விபுதகரி கும்பத்வயம் | திக்கஜங்களின் கும்பங்களை (க்கூட) |
| நிர்ஜித்ய | ஜெயித்து |
| அஸி | விளங்கிக்கொண்டிருக்கிருய். |

தாயே! உன்னுடைய துடைகளிரண்டும் கஜராஜங்களின் தும்பிக்கைகளையும் தங்க வாழைமரங்களின் கட்டைகளையும் ஜெயித்ததான சோபையுடன் கூடியதாக இருக்கின்றன. உன்னுடைய முழங்கால்களின் சில்லுகளோ மிகவும் உருட்சியாயும் பதியான பரமசிவனுக்கு அடிக்கடி நீ நமஸ்காரம் பண்ணுவதினுல் கடினமானதாயும் இருப்பதால் திக்கஜங்களின் கும்பங்களைக்கூட ஜெயித்தவைகளாக விளங்கிக்கொண்டிருக்கின்றன.

1. அம்பாள் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அறிந்தவளாதலால் தான் எவ்வளவு மஹிமையுள்ளவளாக இருந்தபோதிலும் மஹா பதிவ்ரதையானபடியால் தன் புருஷனை பரமசிவனுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளில் கொஞ்சம்கூடக் குறைவில்லாமல் நடந்துகொள்கிருள் என்று 'விதிக்ஞே' என்றதாலும் 'பத்யு: ப்ரணதிகடினுப்யாம்' என்றதாலும் சொல்லப்பட்டது.

2. 'விதிக்ஞே' என்றதனுல் வேதார்த்தங்களை (வேதத்தில் சொல்லும் விதிகளை) அனுஷ்டிக்கிறவளென்றும் சொல்லலாம். அம்பாள் தன் புருஷனை தினமும் நமஸ்காரம் பண்ணுவதானது வேத வாக்யத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினுலே தவிற அவர் தன்னைவிட மேலானவர் என்பதினுல் அல்லவென்று வேடிக்கையாகவும் அர்த்தம் பண்ண இடமுண்டு.

पराजेतुं रुद्रं द्विगुणशरगर्भौ गिरिसुते
निषङ्गौ जङ्घे ते विषमविशिखो बाढमकृत ।
यदग्रे दृश्यन्ते दशशरफलाः पादयुगली-
नखाग्रच्छद्मानः सुरमकुटशाणैकनिशिताः ॥ ॥ ८३ ॥

பராஜேதும் ருத்ரம் த்விகுண சரகர்பௌ கிரிஸுதே
நிஷங்கௌ ஜங்கே தே விஷமவிசிகோ பாடம் அக்ருத |
யதக்ரே த்ருச்யந்தே தச சர பலா: பாதயுகளீ
நகாக்ரச்சத்மான: ஸுரமகுடசாணைகநிசிதா: ||

| | |
|---|---|
| ஹே கிரிஸுதே | ஹே பார்வதீ |
| விஷம விசிக: | மன்மதனானவன் |
| ருத்ரம் பராஜேதும் | பரமசிவனை ஜயிப்பதற்காக |
| த்விகுணசர கர்பௌ | (தன் பாணங்களை) இரட்டித்ததான பத்து பாணங்களோடு கூடிய |
| நிஷங்கௌ | அம்பராத்தூணிகளாக |
| தே ஜங்கே | உன்னுடைய கணைக்கால்களை |
| அக்ருத | செய்தான் (என்பது) |
| பாடம் | நிச்சயம் |
| யத் அக்ரே | எவைகளின் முன்பாகத்தில் |
| பாத யுகளீ நகாக்ர | இரண்டு பாதங்களுடைய விரல் நகங்களின் |
| ச்சத்மான: | நுனிகளென்கிற வ்யாஜத்தோடு |
| ஸுரமகுட சாணைக நிசிதா: | வணங்குகிற தேவர்களின் முகுடங்களாகிற சாணைக்கல்களாலேயே தீட்டப்பட்ட |
| தச சர பலா: | அந்தப்பத்து பாணங்களுடைய இரும்புக்கூர்கள் |
| த்ருச்யந்தே | காணப்படுகின்றனவோ. |

தாயே! உன்னுடைய கணைக்கால்கள் பரமசிவனை ஜெயிப்பதற்காக மன்மதனால் தயார்செய்யப்பட்ட (பத்துபாணங்களையுடைய) அம்பராத்தூணிகள் மாதிரி இருக்கின்றன. அந்த அம்பராத்தூணிகளின் முன்பாகத்தில்தெரியும் விரல்களிலிருக்கும் நகங்களின் நுனிகளானது அங்கே வணங்குகிற தேவர்களின் முகுடங்களாகிற சாணைக்கற்களால் தீட்டப்பட்டு (ஸாதாரணமாக பாணங்களின் நுனியிலிருக்கும்) இரும்புக்கூர்கள் மாதிரி காணப்படுகின்றன.

1. மன்மதன் தன்னுடைய பஞ்சபாணங்களினால் பரமசிவனை ஜயிக்கமுடியாததைப்பார்த்து அவனை ஜயிக்கத்தகுந்ததான பாணங்களையும் அவற்றிற்கு அம்பராத்தூணியையும் ஏற்படுத்திக் கொண்டதாகச் சொல்லப்பட்டது. அம்பாளுடைய கணைக்கால்களிரண்டும் அம்பராத்தூணிகள். அவற்றிலிருக்கும் அம்புகளின் இரும்புக்கூர்கள்மாதிரியிருக்கின்றன, அம்பாளுடைய பத்துக் கால்

விரல்களின் நகங்கள். எப்படி அந்தக்கூர்கள் சாணைக்கல்களால் எப்போதும் தீட்டப்பட்டிருக்குமோ அம்மாதிரி அம்பாளுடைய பாதங்களில் வணங்கும் தேவர்களுடைய மகுடங்கள் அடிக்கடி படுவதனால் அவைகளே சாணைக்கல்களாக இருந்து தீட்டப்பட்டவைகள் மாதிரி இருக்கின்றனவாம். இதினால் அம்பாளுடைய பாதங்களில் தேவர்கள் வணங்கினவண்ணமாகவே இருக்கிறார்களென்று சொல்லப்பட்டது.

2. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்திலும் 'இந்த்ரகோப பரிக்ஷிப்த ஸ்மரதூணாப ஜங்கிகா' என்று கணைக்கால்களை இம்மாதிரியே மன்மதனுடைய அம்பராத்தூணிகளாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. இந்த விதமான அம்பராத்தூணியிலுள்ள பாணங்களைக் கொண்டு மன்மதனானவன் ருத்ரனைக்கூட ஜெயித்துவிட்டதினால் அம்பாளுடைய கால்களின் அழகை அதிகமாக வர்ணிக்கத்தேவையில்லை.

श्रुतीनां मूर्धानो दधति तव यौ शेखरतया
ममाप्येतौ मातः शिरसि दयया धेहि चरणौ ।
ययोः पाद्यं पाथः पशुपतिजटाजूटतटिनी
ययोर्लाक्षालक्ष्मीररुणहरिचूडामणिरुचिः ॥ ॥ ८४ ॥

ச்ருதீனாம் மூர்தானோ தததி தவ யௌ சேகரதயா
மமாப்யேதௌ மாத: சிரஸி தயயா தேஹி சரணௌ |
யயோ: பாத்யம் பாத: பசுபதி ஜடாஜூட தடினீ
யயோர்லாக்ஷாலக்ஷ்மீ: அருணஹரிசூடாமணிருசி: ||

| | |
|---|---|
| ஹே மாத: | தாயே! |
| தவ யௌ சரணௌ | உன்னுடைய எந்த சரணங்களை |
| ச்ருதீனாம் மூர்தான: | வேதங்களுடைய சிரஸ்ஸுகள் (வேதாந்தங்கள்) |
| சேகரதயா | சிரோபூஷணங்களாக |
| தததி | தரிக்கின்றனவோ |
| ஏதௌ | அந்த சரணங்களை |
| மம சிரஸி அபி | என்னுடைய சிரஸிலும |
| தயயா | தயவுசெய்து |
| தேஹி | வைப்பாயாகவும் |

| | | |
|---|---|---|
| யயோ: | | எந்த சரணங்களுடைய |
| பாத்யம் பாத: | | பாதோதகமான ஜலமானது |
| பசுபதி ஜடாஜூட தடினீ | { | பரமசிவனுடைய ஜடைகளிலிருக்கும் கங்கையாகவும் |
| பயோ: | | எந்த சரணங்களுடைய |
| லாக்ஷாலக்ஷ்மீ: | | செம்பஞ்சுக் குழம்பின் சோபையானது |
| அருண ஹரிசூடாமணி ருசி: | { | விஷ்ணுவின் சூடாமணியான கௌஸ்துபத்தினுடைய சிவந்த காந்தியாகவும். |

(இருக்கின்றனவோ)

தாயே! எந்த சரணங்கள் வேதாந்தங்களுக்கு சிரோபூஷணமாக விளங்குகின்றனவோ, எந்த சரணங்களின் பாதப்ராக்ஷாளனமானது பரமசிவனுடைய ஜடையிலிருக்கும் கங்கையினால் நடைபெறுகிறதோ, எந்த சரணங்களில் செம்பஞ்சு தீட்டுவதானது அங்கே வணங்கும் விஷ்ணுவின் சூடாமணியின் காந்தியினால் ஏற்படுகிறதோ அப்பேர்ப்பட்ட உனது சரணங்களை என்னுடைய சிரஸிலும் தயவு செய்து நீ வைப்பாயாகவும்.

1. அம்பாளுடைய சரணங்கள் வேதங்களாலும் பரமசிவனாலும் விஷ்ணுவினாலும் சிரஸ்ஸினால் தரிக்கப்படுகின்றனவென்றும் அப்படியிருக்கும்போது தன்னுடைய சிரஸ்ஸிலும் அம்பாள் தன் சரணங்களை வைக்கவேண்டுமென்றும் கவியானவர் ப்ரார்த்திக்கிறார்.

2. அம்பாளுடைய சரணகமலங்களை ச்ருதிகளாகிற பெண்கள் தங்களுடைய சிரஸில் புஷ்பச்செண்டுமாதிரி வஹிக்கின்றார்களென்று சொல்லப்பட்டது. அதாவது வேதங்கள் அம்பாளை ப்ரதிபாதிக்கின்றனவென்று அர்த்தம். 'ச்ருதிகளின் சிரஸ்ஸுகள்' என்று உபநிஷத்துக்களைச் சொல்வது வழக்கம்.

3. அம்பாளுடைய சரணங்களில் வேதங்களாகிற ஸ்த்ரீகள் நமஸ்காரம் செய்யும்போது அந்த சரணகமலங்களின் மகரந்தம் போன்ற (சிகப்புநிறமான்) தூளியானது அந்த ஸ்த்ரீகளுடைய தலைமயிர் வகுட்டில் படிந்து அங்கு தரிக்கப்படும் ஸிந்தூரமாக ஆகிறதென்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தில்

'ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜ தூளிகா'

என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

4. வேதங்கள் அம்பாளே ஸ்தோத்ரம் செய்ததை வஸிஷ்ட ஸம்ஹிதையில்

'நமோ தேவ்யை மஹாலக்ஷ்ம்யை ச்ரியை ஸித்யை நமோநம:
ப்ரம்ஹவிஷ்ணு மஹேசான வேதகை: பூஜிதாங்க்ரயே ||
நமஸ்த்ரிபுரஸுந்தர்யை சிவாயை விச்வமூர்தயே |
.... .... .... .... ....
ஏவம் ஸ்துதா மஹாதேவீ ச்ருதிபி: ப்ரீதமானஸா |
ப்ராஹ தாம் ப்ரதி தாத்ருக்பி: வசோபிரமரேச்வரீ ||'

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

5. விஷ்ணுவானவர் ப்ரதிதினம் இரண்டு வேளைகளிலும் அம்பாளே தர்சனம் செய்யவந்து நமஸ்காரம் பண்ணும்போது அவருடைய கௌஸ்துப மணியின் சிவந்த காந்தியானது அம்பாளுடைய பாதங்களில் பட்டு அதினல் அவை செம்பஞ்சுக்குழம்பினல் அலங்கரிக்கப் பட்டவைமாதிரி ஏற்படுவதை இங்கே சொல்லியிருக்கிறார்.

6. ப்ரணய கலஹத்தால் அம்பாள் கோபமடைந்திருக்கும் போது அதைத் தணிக்கப் பரமசிவன் வந்து அம்பாளுடைய சரணங்களில் நமஸ்கரிக்கும்போது அவருடைய ஜடையிலிருக்கும்படியான கங்கையானவள் அம்பாளுடைய சரணங்களில் பிரவஹித்து அவைகளுக்கு பாத்யஜலம் மாதிரி ஆகிருள் என்று சொல்லப் பட்டது.

7. அம்பாளுடைய சரணங்களிலிருக்கும் லாக்ஷாரஸத்தின் காந்தியையே கௌஸ்துபமாக விஷ்ணுவானவர் தன் மார்பில் தரிக்கிருரென்றும் அந்த சரணங்களேக் கழுவின ஜலத்தையே கங்கையாக பரமசிவன் தன் சிரஸில் தரிக்கிருரென்றும் அர்த்தம் பண்ணலாம்.

'ப்ராதஸ் த்ரிபுரஸுந்தர்யா: பஜாமி பதபங்கஜம் |
யத் பாத்யம் அமலம் மூர்த்னி பாதி கங்கா மஹேசிது: ||'

8. அம்பாளுடைய சரணங்கள் வேதங்களுடைய சிரஸிலும், பரமசிவனுடைய சிரஸிலும், விஷ்ணுவின் சிரஸிலும் எப்போதும் இருப்பதினல் அவைகளுக்கு சிரஸின்மேல் ஸஞ்சரிப்பது ஸ்வபாவமாக இருக்கிறது. அந்தப் பழக்கத்தையொட்டி தன்சிரஸிலும்

அந்த சரணங்கள் இருப்பது ஸுலபமென்றும் அம்மாதிரி இருக்கட்டுமென்றும் கவியானவர் வேண்டுகிறுர்.

9. ப்ரபஞ்சத்திற்கு ஜனனியாகிய அம்பாளுடைய சரணங்களை அந்த ப்ரபஞ்சத்திற்கு உள்பட்டவர்களான ஹரிஹர ப்ரம்ஹாதிகளெல்லோரும் தங்களுடைய சிரஸால்தாங்கி அந்த சரணங்களைக் கழுவின ஜலத்தினுல் பரிசுத்தமாக்கப்பட்ட சரீரங்களையுடையவர்களாய் அவைகளினுடைய மஹிமையினுல் தங்கள் தங்கள் அதிகாரங்களைச் செலுத்துகிறுர்களென்று தாத்பர்யம்.

**नमोवाकं ब्रूमो नयनरमणीयाय पदयोः**
**तवास्मै द्वन्द्वाय स्फुटरुचिरसालक्तकवते ।**
**असूयत्यत्यन्तं यदभिहननाय स्पृहयते**
**पशूनामीशानः प्रमदवनकङ्केलितरवे ॥** ॥ ८५ ॥

நமோவாகம் ப்ரூமோ நயனரமணீயாய பதயோ:
தவாஸ்மை த்வந்த்வாய ஸ்புடருசிரஸாலக்தகவதே |
அஸூயத் யத்யந்தம் யதபிஹனனுய ஸ்ப்ருஹயதே
பசூனும் ஈசான: ப்ரமதவனகங்கேளிதரவே ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| தவ | உன்னுடைய |
| நயனரமணீயாய | கண்களுக்கு ரமணீயமானதும் |
| ஸ்புட ருசிரஸாலக்தக வதே | காந்தியோடு சோபிக்கிறதும் ஈரமுள்ள செம்பஞ்சுக் குழம்போடு கூடியதுமான |
| பதயோ: அஸ்மை த்வந்த்வாய | இந்த இரண்டு பாதங்களுக்கும் |
| நமோவாகம் | நமஸ்கார வார்த்தையை |
| ப்ரூம: | சொல்லுகிறேும் (நமஸ்காரம் செய்கிறேும்) |
| யத் அபிஹனனுய | எந்தப்பாதங்களால் உதைக்கப்படுவதை |
| ஸ்ப்ருஹயதே | விரும்புகிற |
| ப்ரமதவன கங்கேளி தரவே | உத்யானவனத்திலிருக்கும் அசோக வ்ருக்ஷத்தினிடத்தில் |
| பசூனும் ஈசான: | ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஈச்வரனுன பரமேச்வரர் |
| அத்யந்தம் அஸூயதி | அதிகமான பொருமையுடன் கூடியிருக்கிறுரோ, |

தாயே! எந்தப் பாதங்களினுல் உதைக்கப்படுவதற்கு ஆசைப்படும் அசோக வ்ருக்ஷத்தைப் பார்த்து (அதுகூட பிறருக்குக்கிடைக்கக் கூடாதென்றும் அது தனக்கு மட்டும்தான் உரியதென்றும் எண்ணத்துடன்) பரமசிவனுனவர் அஸூயையயடைகிருரோ, அப்பேர்ப்பட்டதும், கண்களுக்கு ரமணீயமானதும், ஈரமுள்ள செம்பஞ்சுக்குழம்பின் காந்தியோடு கூடியதுமான உனது சரணங்களுக்கு என் நமஸ்காரத்தைத் தெரிவிக்கிறேன்.

1. ப்ரணய கலஹகாலத்தில் கோபடைந்த நாயகியின் பாதங்களில் நாயகனுனவன் நமஸ்கரித்து மன்னிப்புக் கேட்டு ஸமாதானம் செய்து கொள்வது வழக்கம். அப்போது நாயகியானவள் முதலில் கோபத்துடனிருக்கையில் அப்படி நமஸ்கரிக்கும்நாயகனைக் காலால் உதைப்பதுவும் ஸஹஜமென்று சொல்லப்படும். அதையும் பொருட்படுத்தாது அந்த உதையை தன் நாயகியின் அனுக்ரஹமாக பாவித்து முகமலர்ச்சியுடனும் ஸந்தோஷத்துடனும் நாயகனுனவன் திரும்பவும் நாயகியை ஸமாதானம் செய்ய முயற்சி செய்வதாகவும் சொல்லப்படும். இங்கே பரமசிவனை இம்மாதிரி நாயகனுகவும் அம்பாளை இம்மாதிரி நாயகியாகவும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

2. உத்தமஜாதி ஸ்திரீகளுடைய கால்களால் உதைக்கப் பட்டால்தான் அசோக மரமானது புஷ்பிக்குமென்றும் அதை உத்தேசித்து அம்மரமானது அவர்களுடைய கால் படுவதற்கு ஆசையுடனிருப்பதாகவும் சொல்வது வழக்கம். அம்பாளுடைய உத்யான வனத்திலிருக்கும் அசோகமரமானது அம்பாளுடைய பாதஸ்பர்சத்திற்கு ஆசைப்படுவதைப் பார்த்த பரமசிவன் அது அசேதனவஸ்துவாகயிருந்தும் கூட அம்மரத்தினிடம் அதற்காக அஸூயை கொண்டதாகச் சொல்லப்பட்டது. ப்ரணய கலஹகாலங்களில் தனக்குக் கிடைக்கக்கூடிய அப்பேர்ப்பட்ட அனுக்ரஹத்தை அசோகமரமானது தான் அடையவிரும்பினுல் அவருக்கு அதன்பேரில் பொருமை ஏற்படுவது ஸஹஜம் தானே!

3. அசோகமரமானது ஸ்த்ரீகளின் கால்களால் உதையுண்டு மலர்கிறுப்போல் பரமசிவனும் ப்ரணய கலஹகாலத்தில் அம்பாளு

டைய பாதஸ்பர்சம் கிடைத்ததின் மூலம் ஏற்பட்ட ஸந்தோஷத்தின்பேரில் முகமலர்ச்சி அடைவதாகவும் சொல்லப்பட்டது.

मृषा कृत्वा गोत्रस्खलनमथ वैलक्ष्यनमितं
ललाटे भर्तारं चरणकमले ताडयति ते ।
चिरादन्तःशल्यं दहनकृतमुन्मूलितवता
तुलाकोटिक्वाणैः किलिकिलितमीशानरिपुणा ॥ ॥ ८६ ॥

ம்ருஷா க்ருத்வா கோத்ரஸ்கலனமத வைலக்ஷ்ய நமிதம்
லலாடே பர்தாரம் சரணகமலே தாடயதி தே |
சிராத் அந்த: சல்யம் தஹனக்ருதம் உன்மூலிதவதா
துலாகோடி க்வாணை: கிலிகிலிதம் ஈசானரிபுணா ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| ம்ருஷா | தவறுதலாய் (மறதியாய்) |
| கோத்ரஸ்கலனம் க்ருத்வா | வேறுஸ்த்ரீயினுடைய பெயரைச்சொல்லி |
| அத வைலக்ஷ்யநமிதம் | பிறகு அதனால் உனக்கு ஏற்பட்ட ப்ரணய கோபத்தைக்கண்டு இன்ன செய்வதென்று தெரியாமல் கால்களில் வணங்கிய |
| பர்தாரம் | புருஷனான பரமசிவனை |
| லலாடே | நெற்றியில் |
| தே சரணகமலே | உன்னுடைய பாதகமலங்கள் |
| தாடயதி ஸதி | அடிக்கும்போது (உதைக்கும்போது) |
| ஈசான ரிபுணா | அவருடைய விரோதியான மன்மதனால் |
| தஹனக்ருதம் | தன்னை அவர் நேத்ராக்னியினால் கொளுத்தியதின் பேரில் ஏற்பட்ட |
| சிராத் | வெகு காலமாக (இருக்கும்) |
| அந்த: சல்யம் | தன் மனதில் தைத்திருக்கும் பாணத்தை (பகையை) |
| உன்மூலிதவதா | வேரோடுபிடுங்கி எறிந்துவிட்டு |
| துலாகோடிக்வாணை: | அம்பாளுடைய கால்சிலம்பிலிருக்கும் சிறியமணிகளின் சப்தங்களால் |
| கிலிகிலிதம் | (ஜயகோஷம் மாதிரி) கிலிகிலியென்ற சப்தம் செய்யப்பட்டது. |

தாயே! பரமசிவன் தவறுதலாய் வேறு ஸ்த்ரீயின் பெயரைச் சொன்னதினல் உனக்கு ஏற்பட்ட ப்ரணயகோபத்தைத் தணிப்பதற்காக இன்ன செய்வதென்று தெரியாமல் அவர் உன்னை வணங்கும்போது, அப்படி அவர் செய்தும் நீ அவரை மன்னிக்காமல் அவரையுனது பாதங்களால் உதைக்க, அந்தப் பாதங்களிலிருக்கும் நூபுரத்தின் மணிகளால் அப்போது ஏற்பட்ட சப்தமானது, மன்மதனனவன் தன்னைப் பரமசிவன் கொளுத்தியதினல் ஏற்பட்ட வெகு காலத்திய பகையைக் களைந்துவிட்டு ஜயகோஷம் செய்தது மாதிரி தோன்றுகிறது.

1. அம்பாளுடைய ஸமீபம் பரமசிவன் வந்து ஆசைவார்த்தைகள் சொல்லிக் கொண்டிருக்கும்போது தன் மனதிலிருக்கும் வேறு நாயகியின் பெயரைத் தவறுதலாகச் சொல்லிவிடவே அம்பாளுக்கு அவரிடம் கோபமும் வெறுப்பும் உண்டானதின் பேரில் பரமசிவன் அம்பாளை ஸமாதானப் படுத்துவதற்காக வேறு வழியொன்றும் தோன்றமல் அம்பாளுடைய பாதங்களில் நமஸ்கரிப்பதாகவும் அப்போது அம்பாள் தன்னுடைய சரணகமலங்களால் அவரை உதைப்பதாகவும் (ச்ருங்கார சாஸ்திரங்களின் ரீதியை அனுஸரித்து) சொல்லப்பட்டது. அப்போது அம்பாளுடைய பாதங்களில் அணியப் பட்டிருக்கும் நூபுரங்களிலுள்ள மணிகள் சப்தம் செய்கின்றதை வர்ணிக்கிறர்.

2. தன்னைப் பரமசிவன் எரித்ததினல் மன்மதனுக்கு அவரிடத்தில் வெகுநாளாகப் பகை ஏற்பட்டிருந்தது. தன்னையெரித்த நெற்றிக்கண் இருக்கும்படியான நெற்றி ப்ரதேசத்தில் அம்பாளுடைய சரணங்களால் பரமசிவன் உதை படும்போது அப்படி அவர் அவமானப்படுவதைக்கண்டு மன்மதன் மகிழ்ந்து தான் கடைசியாக அவரை அம்பாள் மூலமாக ஜெயித்துவிட்டதை அம்பாளுடைய நூபுர மணிகளின் கிலிகிலா சப்தங்களின் மூலமாக வெளியிடுவதாகச் சொல்லப்பட்டது.

3. தன்னை எரித்ததினல் ஏற்பட்ட வருத்தமானது மன்மதனுடைய மனதிற்குள் ஒரு பாணம்போல் போய் எப்போதும் கஷ்டப் படுத்திக்கொண்டிருப்பதை 'அந்த: சல்யம்' என்றும் தான்

ஜயமடைந்தவுடன் மன்மதன் அந்த பாணத்தை வேரோடு பிடுங்கிக் களேயெடுத்து விட்டதாக 'உன் மூலயித்வா' என்றும் சொல்லப் பட்டது.

हिमानीहन्तव्यं हिमगिरिनिवासैकचतुरौ
निशायां निद्राणं निशि चरमभागे च विशदौ ।
वरं लक्ष्मीपात्रं श्रियमतिसृजन्तौ समयिनां
सरोजं त्वत्पादौ जननि जयतश्चित्रमिह किम् ॥ ८७ ॥

ஹிமாநீஹந்தவ்யம் ஹிமகிரி நிவாஸைக சதுரௌ
நிசாயாம் நித்ராணம் நிசி சரமபாகே ச விசதௌ |
வரம் லக்ஷ்மீபாத்ரம் ச்ரியமதிஸ்ருஜந்தௌ ஸமயிநாம்
ஸரோஜம் த்வத்பாதௌ ஜனனி ஜயத: சித்ரமிஹ கிம் ||

| | |
|---|---|
| ஹே ஜனனி | தாயே! |
| ஹிமகிரி நிவாஸைக சதுரௌ | பனிமலையாகிய ஹிமவானிடத்தில் இருப்பதில் மிகவும் ஸாமர்த்தியமுள்ளவையும் |
| நிசி | இரவிலும் |
| சரமபாகே ச | அதற்கடுத்த ஸந்த்யாகாலங்களிலும் பகலிலும் |
| விசதௌ | மலர்ந்திருப்பவையும் |
| ஸமயிநாம் | ஸமயாசாரமுடைய உன் பக்தர்களுக்கு |
| ச்ரியம் | லக்ஷ்மியை |
| அதி ஸ்ருஜந்தௌ | உண்டுபண்ணுகிறவையுமான |
| த்வத் பாதௌ | உன்னுடைய பாதங்கள் |
| ஹிமாநீ ஹந்தவ்யம் | பனியினால் நாசமடைகிறவும் |
| நிசாயாம் நித்ராணம் | இரவில் தூங்குகிறவும் (மூடிக்கொள்ளுகிறவும்) |
| வரம் லக்ஷ்மீபாத்ரம் | லக்ஷ்மிக்கு இஷ்டப்பட்ட ஸ்தானமாகிறவும் |
| ஸரோஜம் | தாமரைப் புஷ்பத்தை |
| விஜயத: | ஜயிக்கின்றன. |
| இஹ சித்ரம் கிம் | இதில் ஆச்சர்யம் என்ன! |

'தாயே! பனிமலையிலேயே இருக்கக்கூடியவையும், இரவு பகல், ஸந்த்யாகாலம் இந்த எல்லாப் பொழுதிலும் மலர்ந்திருப்பவையும், ஸமயாசாரமுடைய பக்தர்களுக்கு லக்ஷ்மியைக் கொடுக்கின்றவையுமான உனது பாதங்கள், பனியினால் நாசமடைகிறவும் இர

வில்° தூங்குகிறவும் (மூடிக்கொள்கிறவும்) லக்ஷ்மீ இஷ்டப்பட்டால் வந்திருக்கக் கூடியதுமான தாமரைப் புஷ்பத்தை ஜயிக்கிறதில் ஆச்சர்யம் யாதொன்றுமில்லை.

1. உத்தம ஸ்திரீகளுடைய சரணங்களை தாமரை புஷ்பங்களுக்கு ஸமமாக வர்ணிப்பது வழக்கம். ஆயினும் அம்பாளுடைய பாதகமலங்கள் தாமரை புஷ்பங்களைவிட ச்லாக்யமானவை யென்பதைப் பல முகாந்திரங்களால் நிரூபிக்கிறார்.

2. தாமரஸ புஷ்பம் பனியால் கருகிவிடும். இரவில் மூடிக்கொள்ளும். அது லக்ஷ்மிக்கு இஷ்டப்பட்டால் இருப்பிடமே தவிறவேறல்ல. அம்பாளுடைய பாதங்களோ எப்போதும் பனியிருக்குமிடமும் தன் பிதாவுமாகிய ஹிமவானிடத்தில் ஸர்வதா இருந்துகொண்டிருப்பவை. (ஹிம என்றால் பனி. ஹிமவான், ஹிமாலயம் என்றால் பனி எப்போதும் இருக்குமிடம்.) அதனால் சிறிதும் மாறுதல் அடையாதவை. மேலும் அந்த சரணங்கள் பகல், இரவு, ஸந்த்யா என்ற எல்லாக் காலங்களிலும் மலர்ந்திருப்பவை. மேலும் அவை லக்ஷ்மிக்கு இருப்பிடமாகமட்டும் இராமல் தங்களுடைய பக்தர்களுக்கும் அந்த லக்ஷ்மியைக் கொடுப்பவை.

3. இவ்வளவு அதிகமான வித்யாஸங்களிருப்பதால் அம்பாளுடைய சரணங்கள் தாமரஸ புஷ்பங்களை ஜெயித்து விடுவதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது.

पदं ते कीर्तीनां प्रपदमपदं देवि विपदां
कथं नीतं सद्भिः कठिनकमठीकर्परतुलाम् ।
कथं वा बाहुभ्यामुपयमनकाले पुरभिदा
यदादाय न्यस्तं दृषदि दयमानेन मनसा ॥ ॥ ८८ ॥

பதம் தே கீர்த்தீனாம் ப்ரபதம் அபதம் தேவி விபதாம்
கதம் நீதம் ஸத்பி: கடினகமடீகர்பர துலாம் |
கதம் வா பாஹுப்யாம் உபயமனகாலே புரபிதா
யதாதாய ந்யஸ்தம் த்ருஷதி தயமானேன மனஸா ||

| | |
|---|---|
| ஹே தேவி | அம்மணீ |
| கீர்த்தீனாம் பதம் | கீர்த்திக்கு ஸ்தானமாகவும் |
| விபதாம் அபதம் | ஆபத்துக்களுக்கு ஸ்தானமில்லாததுமான |
| தே ப்ரபதம் | உன்னுடைய உள்ளங்காலானது |
| ஸுதபி: | ஸாதுக்களால் (கவீந்த்ரர்களால்) |
| கடின கமட கர்பர துலாம் | கடினமான ஆமையினுடைய முதுகு ஓட்டின் ஸாம்யத்தை |
| கதம் நீதம் | எப்படி அடையும்படி செய்யப்பட்டது (அதற்கு ஸமானமென்று எப்படிச்சொல்லப்பட்டது) |
| தயமானேன மனஸா | தயவோடுகூடியமனதுடைய |
| புரபிதா | பரமசிவனால் |
| உபயமனகாலே | உன்னுடைய விவாஹகாலத்தில் |
| எத் | எந்த பாதங்களை |
| பாஹுப்யாம் ஆதாய | கைகளால் எடுத்து |
| த்ருஷதி | அம்மியின் மேல் |
| கதம் வா ந்யஸ்தம் | எப்படித்தான் வைக்கப்பட்டது |

தாயே! கீர்த்திக்கு ஸ்தானமானதும் ஆபத்துக்கள் அணுக முடியாததுமான உன்னுடைய உள்ளங்காலை கடினமான ஆமையின் முதுகு ஓட்டிற்கு ஸமானமென்று கவிகள் எப்படித்தான் வர்ணித்தார்களோ! அது போகட்டும். இவ்வளவு தயவுள்ள பரமசிவன் உன்னுடைய விவாஹ காலத்தில் இப்படி ம்ருதுவான உன் பாதத்தைத் தன் கைகளால் எடுத்து(பாராங்கல்லால் செய்யப்பட்ட) அம்மியின்பேரில் வைக்க எப்படித்தான் மனது வந்ததோ!

1. அம்பாளுடைய பாதங்கள் பக்தர்களுக்குக் கீர்த்தியைக்கொடுத்து அவர்களுக்கு ஏற்படும் ஸகலவிதமான ஆபத்துக்களையும் போக்கடிக்கக்கூடிய மஹிமையுள்ளவை யென்று சொல்லப் பட்டது.

2. அம்பாளுடைய உள்ளங்காலானது அழகாக வளைந்திருக்கிறபடியால் அதை ஆமையின் முதுகு ஓட்டைவிட அழகாக இருப்பதாய் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்திலும் 'கூர்ம ப்ருஷ்ட ஜயிஷ்ணு ப்ரபதான்விதா' என்று ஆமையின் முதுகை ஜெயித்த அழகையுடையதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

3. விவாஹத்தின் போது ஸப்தபதீ காலத்தில் வரனானவன் வதூவினுடைய பாதத்தைத் தன் கைகளால் எழுப்பி அம்மியின்மேல் வைப்பது ஸம்ப்ரதாயம். ஆனால் அம்பாளுடைய சரணங்கள் இவ்வளவு ம்ருதுவாக இருக்கையில் அவைகளை கடினமானதும் கருங்கல்லில் செய்யப்பட்டதுமான அம்மியின்பேரில் வைப்பது சற்றும் தயவு இல்லாத காரியம். பரமசிவன் ஸ்வபாவமாக தயவுடன் கூடியவராக இருந்தும் அம்பாளைக் கல்யாணம் செய்து கொள்ளும்போது ஸப்தபதீ ஸமயத்தில் அம்பாளுடைய ம்ருதுவான பாதத்தைத்தூக்கி அம்மிக்கல்லின் மேல் வைத்தாரே, அது எப்படித்தான் செய்தாரோ என்று ஆச்சர்யப்படுகிறார். அவ்வளவு ம்ருதுவான சரணங்களை கடினமான கல்லின்மேல் வைக்க எப்படித் துணிந்தார் என்று சொல்லுகிறார். அதேமாதிரி அந்த சரணங்களை கடினமான ஆமை முதுகு ஓட்டிற்கு ஸமானமானதென்று கவிகள் வர்ணிப்பதைப் பார்த்தும் ஆக்ஷேபிக்கிறார்.

4. ப்ரபதமென்பது பாதாக்ரம், பாதத்தின் முன்பாகம்.

नखैर्नाकस्त्रीणां करकमलसंकोचशशिभिः
तरूणां दिव्यानां हसत इव ते चण्डि चरणौ ।
फलानि स्वःस्थेभ्यः किसलयकराग्रेण ददतां
दरिद्रेभ्यो भद्रां श्रियमनिशमह्नाय ददतौ ॥ ॥ ८९ ॥

நகைர் நாகஸ்த்ரீணாம் கரகமலஸங்கோச சசிபி:
தருணாம் திவ்யானாம் ஹஸத இவ தே சண்டி சரணௌ |
பலானி ஸ்வஸ்த்தேப்ய: கிஸலயகராக்ரேண தததாம்
தரித்ரேப்யோ பத்ராம் ச்ரியமனிசம் அன்ஹாய தததௌ ||

| | |
|---|---|
| ஹே சண்டி | எல்லோருக்கும் மங்களத்தைக்கொடுப்பவளே ! |
| கிஸலயகராக்ரேண | துளிர்களாகிற கைகளின் நுனிகளால் |
| ஸ்வஸ்த்தேப்ய: | ஸ்வர்கத்தில் ஸகலஸம்பத்துக்களோடு ஸுகமாக இருப்பவர்களாகிய தேவர்களுக்குமட்டும் |
| பலானி தததாம் | பலன்களைக்கொடுக்கிற |
| திவ்யானாம் தருணாம் | தேவலோகத்திய கல்பகம் முதலிய வ்ருக்ஷங்களை |
| தரித்ரேப்ய: | தரித்ரர்களுக்கும்கூட |
| பத்ராம் ச்ரியம் | புஷ்கலமான ஐச்வர்யத்தை |

| | |
|---|---|
| அனிசம் | எப்போதும் (எந்த ஸமயத்திலும்) |
| அன்ஹாய | வெகு சீக்ரமாக |
| ததெளா | கொடுக்கிற |
| தே சரணௌ | உன்னுடைய பாதங்கள் |
| நாகஸ்த்ரீணாம் | சசி முதலான தேவலோகத்து ஸ்த்ரீகளுடைய |
| கரகமல ஸங்கோச சசிபி: | கைகளாகிற தாமரஸ புஷ்பங்களை மூடச் செய்வதில் சந்த்ரனைப்போல காந்தியுள்ள |
| நகை: | நகங்களால் |
| ஹஸத: இவ | பரிஹஸிப்பது போல் இருக்கின்றன. |

தாயே! தேவலோகத்திலிருக்கும் கல்பகம் முதலிய வ்ருக்ஷங்கள், தங்களுடைய துளிர்களாகிற கைகளினல், ஸ்வர்க்கத்தில் ஸகல ஸம்பத்துக்களோடு ஸௌக்யமாகயிருக்கும் தேவர்களுக்கு மட்டும், ஆசையளவான, பலன்களைக் கொடுக்கின்றன. உன்னுடைய பாதங்களோ தரித்ரர்களுக்கும் கூட புஷ்கலமான ஐச்வர்யத்தை ஸதாகாலமும் அதி சீக்ரமாகவும் கொடுக்கக் கூடியவை. இதனுல் உன்னுடைய பாதங்கள் தங்களுடைய நகங்களின் காந்தியினுல் தேவலோக வ்ருக்ஷங்களைப் பரிஹாஸம் செய்வது போல் தோன்றுகின்றன. மேலும் உன்னுடைய பாதங்களை தேவலோகத்து ஸ்த்ரீகள் கூப்பிய கைகளுடன் வணங்குவதால் அவர்களுடைய கராரவிந்தங்களை மூடச்செய்யும் காந்தியோடு சந்த்ரனைப் போல் உனது பாதங்கள் விளங்குகின்றன.

1. அம்பாளுடைய சரணங்கள் ஸ்வர்கலோகத்திலிருக்கும் கல்பகவ்ருக்ஷம் முதலியவைகளைப் பழித்த மஹிமையோடு கூடியிருக்கின்றனவென்று சொல்லப்பட்டது. அவைகள் தேவதைகளுக்குத்தான் பலன்களைக்கொடுக்கின்றன. தேவர்களோ ஸாதாரணமாகஎவ்விதமான தேவையுமில்லாதவர்கள். அப்படிக் கொடுப்பதிலும் துளிர்களான கைகளால்(கைகையாக)கொடுப்பதால் மெதுவாகவும் குறைச்சலாகவும் தான் கொடுக்கமுடியும். அம்பாளுடைய சரணமோ பக்தர்கள் எவ்வளவு தரித்ரர்களாக இருந்தபோதிலும் அவர்களுக்கும் ஸதாகாலமும் சீக்ரமாகவும் வேண்டிய அளவிற்கு மேலாகவும் ஸகல ஸம்பத்தையும் கொடுப்பதால் அந்த சரணங்களுக்கு ஒப்பிட்டு கல்பக வ்ருக்ஷம் முதலியவைகளைச் சொல்லவே முடியாது.

2. ஆகவே அந்த மரங்களின் சக்திக் குறைவைக் கண்டு அம்பாளுடைய சரணங்கள் பரிஹாஸம் செய்கின்றனவாம். அம்பாள் பாதவிரல்களுடைய நகங்களின் காந்தியானது அந்த பரிஹாஸச் சிரிப்பு மாதிரி இருக்கிறது என்று சொல்லப்பட்டது.

3. தேவலோகத்து ஸ்த்ரீகள் அம்பாளுடைய சரணங்களில் வணங்கும் போது தங்கள் கைகளைக் கூப்பிக் கொள்வதை வர்ணிக்கப் பட்டிருக்கிறது. சந்த்ரனைக் கண்டால் அவனுடைய கிரணங்களால் தாமரைப் புஷ்பங்கள் மூடிக் கொள்வதாகச் சொல்லப்படும். அம்மாதிரி அம்பாளுடைய பாதவிரல்களின் நகங்களாகிற சந்த்ரனைக் கண்டவுடன் அவற்றின் காந்தியினால் தேவஸ்த்ரீகளுடைய கரங்களாகிற கமலங்கள் குவிந்து மூடிக் கொள்கின்றனவென்று சொல்லப்பட்டது. நகங்களின் காந்தியை சந்த்ரனுடைய கிரணங்களுக்கு ஒப்பிடப்பட்டது.

ददाने दीनेभ्यः श्रियमनिशमाशानुसदृशीं
अमन्दं सौन्दर्यप्रकरमकरन्दं विकिरति ।
तवास्मिन्मन्दारस्तबकसुभगे यातु चरणे
निमज्जन्मज्जीवः करणचरणः षट्चरणताम् ॥ ॥९०॥

த்தானே தீனேப்ய: ச்ரியமனிசம் ஆசானுஸத்ருசீம்
அமந்தம் ஸௌந்தர்ய ப்ரகர மகரந்தம் விகிரதி l
தாவஸ்மின் மந்தாரஸ்தபகஸுபகே யாது சரணே
நிமஜ்ஜன் மஜ்ஜீவ: கரணசரண: ஷட்சரணதாம் ll

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே! |
| தீனேப்ய: | எளியவர்களுக்கு |
| ஆசானு ஸத்ருசீம் | அவரவர்கள் கோரியப்ரகாரம் |
| ச்ரியம் | ஸம்பத்தை |
| அனிசம் ததானே | எப்போதும் கொடுப்பதும் |
| அமந்தம் | அதிகமாக (பூர்ணமாக) |
| ஸௌந்தர்ய ப்ரகர மகரந்தம் | லாவண்ய ஸமூகமாகிற மகரந்தத்தை |
| விகிரதி | இரைக்கிறதும் |

| | |
|---|---|
| மந்தாரஸ்தபக ஸுபகே | கல்பக வ்ருக்ஷத்தின் புஷ்பங்களின் கொத்துப்போல் அழகாயுமிருக்கிற |
| அஸ்மின் தவ சரணே | இந்த உன்னுடைய பாதகமலங்களில் |
| நிமஜ்ஜன் | நன்றாக முழுகினதாய் |
| கரண சரண: | (பஞ்சேந்திரியங்களாகிய த்வக், சக்ஷுஸ்: ச்ரோத்ர, ஜிஹ்வா, க்ராணனுடன் கூடிய மனதாகிற) கரணங்களே கால்களாக உடைய |
| ஷட்சரணதாம் | வண்டாக இருக்கும் தன்மையை |
| மஜ்ஜீவ: | என்னுடைய ஆத்மாவானது |
| யாது | அடையட்டும். |

தாயே! எளியவர்களுக்கும் கூட ஆசைப்பட்ட அளவு ஸம்பத்தை எப்போதும் கொடுப்பதும், லாவண்யமாகிற மகரந்தத்தை வாரியிரைப்பதும், கல்பக வ்ருக்ஷங்களின் பூங்கொத்துப்போல் அழகானதுமான உன்னுடைய பாதகமலங்களில் (ஷட் சரணங்களோடு கூடிய) வண்டாக இருக்கும் தன்மையை (ஷட்கரணங்களோடு கூடிய) என் ஆத்மாவானது அடையட்டும்.

1. மகரந்தத்தால் நிறைந்த புஷ்பங்களில் வண்டுகள் வந்து அடைகிறது வழக்கம். அம்பாளுடைய சரணங்கள் தெய்வலோகத்து மந்தார புஷ்பங்களின் கொத்துமாதிரியும் அம்பாளுடைய சரணங்களின் ஸௌந்தர்யமானது அந்தப் புஷ்பங்களிலிருக்கும் மகரந்தம் மாதிரி ஸதா பெருகிக்கொண்டிருப்பதாகவும் சொல்லப்பட்டது. ஆகவே அந்த சரணங்களில் வண்டுகள் வந்து சேர்வது ஸஹஜமாக இருக்கிறது.

2. அப்பேர்ப்பட்ட சரணங்களாகிற புஷ்பங்களில் தன்னுடைய ஆத்மாவாகிற வண்டு வந்துசேரட்டுமென்று பிரார்த்திக்கிறார். வண்டுக்கு ஆறு கால்களிருப்பதால் அதற்கு ஷட்சரணம் என்று பெயர். அம்மாதிரி ஜீவனுக்கு (பஞ்ச ஞானேந்த்ரியங்கள், மனஸ் என்ற) ஆறு கரணங்களாகிற சரணங்கள் இருப்பதால் அது வண்டுக்கு ஸமானமாக இருக்கிறது.

3. அந்த வண்டானது அம்பாளுடைய சரணமாகிற புஷ்பத்தில் வந்து சேர்ந்து அங்குள்ள லாவண்யமாகிற மகரந்தத்தில் நன்றாகவும் எப்போதும் முழுகினதாக இருக்கட்டும் என்பதனால்

அம்பாளுடைய சரணங்கள் எப்போதும் தன் மனதிலிருக்கட்டும் என்று வேண்டிக்கொள்கிறார்.

पदन्यासक्रीडापरिचयमिवारब्धुमनसः
स्खलन्तस्ते खेलं भवनकलहंसा न जहति ।
अतस्तेषां शिक्षां सुभगमणिमञ्जीररणित-
च्छलादाचक्षाणं चरणकमलं चारुचरिते ॥ ॥ ९१ ॥

பதந்யாஸக்ரீடா பரிசயமிவாரப்து மனஸ:
ஸ்கலந்தஸ்தே கேலம் பவனகலஹம்ஸா ந ஜஹதி |
அதஸ்தேஷாம் சிக்ஷாம் ஸுபக மணிமஞ்ஜீர ரணிதச்
சலாத் ஆசக்ஷாணம் சரணகமலம் சாருசரிதே ||

| | |
|---|---|
| ஹே சாருசரிதே | அழகிய சரித்ரத்தையுடையவளே ! |
| தே பவன கலஹம்ஸா: | உன் வீட்டிலிருக்கும் அன்னபக்ஷிகள் |
| பதன்யாஸ க்ரீடா பரிசயம் | பாதங்களை அழகாக வைத்து நடப்பதாகிய விளையாட்டின் அப்யாஸத்தை |
| ஆரப்து மனஸ: இவ | ஆரம்பிக்க எண்ணம்கொண்டவைபோல் |
| ஸ்கலந்த: | தட்டுத்தடுமாறி நடந்துகொண்டு |
| தே கேலம் | உன்னுடைய அழகிய நடையை |
| ந ஜஹதி | விடுகிறதில்லை (நீ நடக்கும்போது உன்னுடைய அழகிய நடையைப் பார்த்து தாங்களும் உன்னைப் பின்பற்றி நடந்து பார்க்காமலிருக்கிறதில்லை) |
| அத: | ஆகையினாலே |
| சரணகமலம் | உன்னுடைய பாதாரவிந்தங்கள் |
| ஸுபக மணி மஞ்ஜீர ரணிதச்சலாத் | அழகிய பாதஸரமணிகளின் இனிய சப்தத்தின் மூலமாக |
| தேஷாம் சிக்ஷாம் | அந்த அன்னபக்ஷிகளுடைய சிக்ஷையை (சொல்லிக்கொடுப்பதை) |
| ஆசக்ஷாணம் இவ | சொல்வதுபோலிருக்கின்றன. |

தாயே! உன் வீட்டிலிருக்கும் அன்னபக்ஷிகள் உன்னுடைய அழகிய நடையைப்பார்த்து அம்மாதிரி தாங்களும் பாதங்களை அழகாகவைத்து நடக்கக் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற எண்ணமுடையவைகளாய் நீ நடக்கையில் உன்னைப் பின்பற்றித்

தட்டுத்தடுமாறி நடந்து பழக்கம் பண்ணிக்கொள்ளும்போது உன்னுடைய பாதகமலங்கள் தாங்களணிந்திருக்கும் பாதஸரமணிகளின் இனிய சப்தத்தின் மூலமாக அந்த அன்ன பக்ஷிகளுக்கு நடக்கச் சொல்லிக்கொடுப்பவைபோல் தோன்றுகின்றன.

1. வீட்டில் வளர்க்கும் அன்னபக்ஷிகளுக்கு பவன கலஹம்ஸங்கள் என்று பெயர்.

2. அன்னபக்ஷியின் நடையானது மிகவும் அழகாக இருக்கும். அம்பாளுடைய வீட்டிலிருக்கும்படியான அன்னபக்ஷிகள் அம்பாளுடைய அழகிய நடையைப் பார்த்து அம்மாதிரி நடக்கத் தாங்கள் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் அம்பாள் நடக்கும்போது தாங்களும் பின்பற்றித் தட்டுத்தடுமாறி நடக்கின்றதுகளாம். அப்போது அம்பாள் கால்களில் அணிந்திருக்கும் பாதஸரத்தின் மணிகள் சப்தம் செய்வதானது அந்த அன்னபக்ஷிகளுக்கு நடக்கச் சொல்லிக்கொடுக்கும் சப்தம் மாதிரி இருக்கிறதென்று சொல்லப்பட்டது. அம்பாளுடைய நடையின் அழகை இம்மாதிரி அன்னங்களின் நடையைக்கூட அதிசயித்ததாக வர்ணிக்கப்பட்டது.

இம்மாதிரி 'கதைர்மாணிக்யத்வம்' என்ற 42வது ச்லோகம் முதல் இந்த ச்லோகம் வரையில் அம்பாளுடைய தேஹஸௌந்தர்யத்தை கிரீடம் முதல் பாத நகங்கள் வரையில் வர்ணித்துவிட்டு இதற்கு மேல் அம்பாளைப் பொதுவாக ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பிக்கிறார்.

गतास्ते मञ्चत्वं द्रुहिणहरिरुद्रेश्वरभृतः
शिवः स्वच्छच्छायाघटितकपटप्रच्छदपटः ।
त्वदीयानां भासां प्रतिफलनरागारुणतया
शरीरी शृङ्गारो रस इव दृशां दोग्धि कुतुकम् ॥ ९२ ॥

கதாஸ்தே மஞ்சத்வம் த்ருஹிண ஹரி ருத்ரேச்வரப்ருத:
சிவஸ் ஸ்வச்சச்சாயா கடித கபட ப்ரச்சதபட: |
த்வதீயானும் பாஸாம் ப்ரதிபலன ராகாருணதயா
சரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருசாம் தோக்தி குதுகம் ||

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணி ! |
| த்ருஹிண ஹரி ருத் ரேச்வா ப்ருத: | பரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் இவர்களா கிய லோக அதிகார புருஷர்கள் |
| தே மஞ்சத்வம் | உன்னுடைய கட்டிலாக (இருக்கும் தன்மையை) |
| கதா: | ஆகிவிட்டார்கள் |
| சிவ: | ஸதாசிவனுனவர் |
| ஸ்வச்சச்சாயா கடித கபட | வெண்மையான காந்தியோடு கூடின |
| ப்ரச்சதபட: | மேல்விரிப்பு என்கிற வ்யாஜமான ரூபத்தோடு |
| த்வதீயானும் | உன்னுடைய |
| பாஸாம் | சிகப்பான காந்தியின் |
| ப்ரதிபலனராகா ருணதயா | ப்ரதிபலனத்தால் சிகப்பாக மாறியதினுல் |
| சரீரீ | உருவமெடுத்த |
| ச்ருங்காரோ ரஸ இவ | ச்ருங்கார ரஸம் மாதிரி |
| த்ருசாம் | உன்னுடைய கண்களுக்கு |
| குதுகம் | ஆனந்தத்தை |
| தோக்தி | உண்டுபண்ணுகிறுர் (கொடுக்கிறுர்) |

தாயே! லோகாதிகார புருஷர்களான ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் இவர்கள் உனது கட்டிலின் கால்களாக ஆகிவிட்டார்கள். அதற்கு மேல்விரிப்பாக இருக்கும் ஸதாசிவனுளர் தான் வெண்மையான காந்திகளோடு கூடியவராக இருந்தும் உன்னுடைய சிகப்பான காந்தியின் ப்ரதிபலனத்தால் சிகப்பாக மாறி ச்ருங்காரரஸமே உருவெடுத்தாற்போல் தோன்றி உன்னுடைய கண்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கிறுர்

1. அம்பாளுடைய கட்டிலுக்கு ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் இந்த நாலுபேரும் கட்டில் கால்களாகவும் ஸதாசிவன் மேல் விரிப்பாகவும் (மாறுவேஷத்துடன் போல) இருப்பதாகச் சொல்லப்பட்டது. ப்ரம்ஹா முதலிய நால்வரும் லோகத்தின் அதிகார புருஷர்களாக இருந்தும் அம்பாளுடைய ஸாமீப்ய ஸேவையைச் செய்யவேண்டுமென்கிற ஆசையுடன் அம்பாளுடைய கட்டில்கால்களாகவாவது இருப்போமென்ற எண்ணங்கொண்டிருக்கிறுர்கள் என்று அர்த்தம். இதைப்பற்றி ஏற்கனவே 'ஸுதாஸிந்தோர்மத்யே' என்ற எட்டாவது ச்லோகத்தில் சொல்லியிருக்கிறது.

2. ச்ருஸ்காராஸம் சிகப்பு வர்ணமுடையது என்று மஹா கவிகள் சொல்வது வழக்கம்.

3. சக்தி தத்வமானது இருபத்தைந்தாவது தத்வமான ஸதாசிவ தத்வத்துடன் இரண்டறக் கலந்து இருபத்தாறுவது தத்வமானதும் சிவசக்தி ஸம்மேளனமுமான ஸாதாக்ய தத்வமாக இருப்பதை இங்கு அம்பாள் காந்தியினல் வெளுப்பாக இருக்கும் ஸதாசிவன் (ச்ருங்கார ரஸம் மூர்த்திகரித்தாற்போல்) சிகப்பாக ஆனரென்று சொல்லப்பட்டது.

4. இப்படி ஸாதாக்யதத்வத்திலிருக்கும் இவர்களுடைய ஸாமரஸ்யத்தை அம்பாள் ஸதாசிவனுடைய மடியில் உட்கார்ந்திருப்பதாகச் சொல்லப்பட்டது. இதையொட்டி ஸதாசிவனே 'பரமசிவ பர்யங்க நிலயாம்', 'சிவாகாரே மஞ்சே', 'சிவாத்மகே மஹாமஞ்சே' என்று சொல்லப்பட்டபடி அம்பாளுடைய கட்டிலாகவும், 'பலகஸ் து சதாசிவ:' என்றபடி ப்ரம்ஹா முதலானவர்களைக் கால்களாக உடைய கட்டிலின் மேல் (பலகை) தட்டாகவும், இந்த ச்லோகத்தில் சொல்லியபடி அப்படிப்பட்ட கட்டிலின் மேல்விரிப்பாகவும் பலவகையாகச் சொல்லப்படும்.

अराला केशेषु प्रकृतिसरला मन्दहसिते
शिरीषाभा चित्ते दृषदुपलशोभा कुचतटे ।
भृशं तन्वी मध्ये पृथुरुरसिजारोहविषये
जगत्त्रातुं शंभोर्जयति करुणा काचिदरुणा ॥ ॥ ९३ ॥

அராளா கேசேஷு ப்ரக்ருதி ஸரளா மந்த ஹஸிதே
சிரீஷாபா சித்தே த்ருஷதுபலசோபா குசதடே |
ப்ருசம் தன்வீ மத்யே ப்ருதுருரஸிஜாரோஹவிஷயே
ஜகத் த்ராதும் சம்போர் ஜயதி கருணா காசிதருணா ||

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணி ! |
| கேசேஷு அராளா | கூந்தலில் வக்ரமாயும் (வேறு அம்சங்களில் வக்ரமில்லையென்றர்த்தம்) |
| மந்த ஹஸிதே | மந்தஹாஸமான சிரிப்பில் |
| ப்ரக்ருதி ஸரளா | ஸ்வபாவமான ஸுகுமாரத்தோடும் |

| | |
|---|---|
| சித்தே | மனதில் |
| சிரீஷாபா | சிரீஷ குஸுமம்போல் ம்ருதுவாயும் |
| குசதடே | ஸ்த்னப்ரதேசத்தில் |
| த்ருஷதுபலசோபா | கருங்கல்போல் கடினமாயும் |
| மத்யே | மத்யப்ரதேசத்தில் (இடுப்பில்) |
| ப்ருசம் தன்வீ | மிகவும் மெலிந்ததாகவும் |
| உரஸிஜாரோஹ விஷயே | ஸ்தனப்ரதேசத்திலும், நிதம்ப ப்ரதேசத்திலும் |
| ப்ருது: | பருத்ததாயும் |
| அருணா | சரீரம் முழுவதும் சிவந்ததாயுமுள்ள |
| சம்போ: காசித் கருணா | பரமசிவனுடைய சொல்லமுடியாத அழகுடைய ஏதோ ஒரு கருணாமூர்த்தியானது |
| ஜகித் த்ராதும் | லோகங்களைக் காப்பாற்றுவதற்காக |
| விஜயதே | ஸர்வோத்க்ருஷ்டமாக விளங்குகிறது. |

தாயே! கூந்தலில் மட்டும் வக்ரமாயும், மந்த ஸாஹஸத்தில் ஸ்வபாவமான ஸுகுமாரத்தோடும், மனதில் சிரீஷகுஸுமம்போல் ம்ருதுவாயும், ஸ்தனப்ரதேசத்தில் கடினமாயும், மத்ய ப்ரதேசத்தில் மெல்லியதாயும், ஸ்தனப்ரதேசம், நிதம்பம் இவைகளில் பருத்ததாயும், சரீரம் முழுவதும் சிவந்ததாயும், இன்னதென்று வர்ணிக்க முடியாத அழகுடையதுமான பரமசிவனுடைய கருணாமூர்த்தியானது லோகங்களையெல்லாம் காப்பாற்றுவதற்காக ஸர்வோத்க்ருஷ்டமாக விளங்குகின்றது.

1. இவ்வாறு வெவ்வேறு குணங்களுடையவளென்றும் மூர்த்தீகரித்துவந்த கருணைபோன்றவளென்றும் அனிர்வாச்யமான மஹிமையோடு கூடினவளென்றும் அம்பாளை வர்ணிக்கிறார்.

2. த்ருஷதுபலமென்றால் பாராங்கல்லில் செய்த அம்மிக் குழவி. காடின்யத்தில் ஸ்தனங்கள் அதுமாதிரி இருக்கிறதாகச் சொல்லப்பட்டது.

3. கருணாரஸத்தை அருணவர்ணமாக வர்ணிப்பது வழக்கம். அம்பாளை அருணவர்ணமான கருணையானது மூர்த்தீகரித்து வந்தாற்போலிருப்பதாகச் சொல்லப்பட்டது. இப்படியே 'காருண்யவிக்ரஹா' என்று ஸ்ரீலலிதா த்ரிசதியில் ஒரு நாமமிருக்கிறது.

4. 'அருணு' என்பதினுல் அந்தப்பெயரையுடைய சக்தியைச் சொன்னதாகவும் சொல்லலாம்.

कलङ्कः कस्तूरी रजनिकरबिम्बं जलमयं
कलाभिः कर्पूरैर्मरकतकरण्डं निबिडितम् ।
अतस्त्वद्भोगेन प्रतिदिनमिदं रिक्तकुहरं
विधिर्भूयो भूयो निबिडयति नूनं तव कृते ॥ ॥ ९४ ॥

களங்க: கஸ்தூரீ ரஜனிகரபிம்பம் ஜலமயம்
களாபி: கர்பூரைர் மரகத கரண்டம் நிபிடிதம் |
அதஸ்த்வத் போகேன ப்ரதி தினமிதம் ரிக்த குஹரம்
விதிர் பூயோபூயோ நிபிடயதி நூனம் தவ க்ருதே ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே ; |
| களங்க: | சந்த்ரமண்டலத்தில் களங்கம்மாதிரித் தோன்றுவதானது களங்கமல்ல |
| கஸ்தூரீ | அது கஸ்தூரியாக்கும் |
| ரஜனிகரபிம்பம் | சந்த்ரபிம்பம்மாதிரித் தோன்றுவது |
| ஜலமயம் | பன்னீராக்கும், இவைகளுடனும் |
| களாபி: | கலைகளாகிற |
| கர்பூரை: | பச்சைக்கர்ப்பூரப் பொடிகளோடும் |
| நிபிடிதம் | நிரம்பிய |
| மரகத கரண்டம் | மரகதத்தால் செய்யப்பட்ட கரண்டம் (சிமிழ்) தான் சந்த்ரமண்டலம். |
| அத: | அந்தக் காரணத்தால் |
| ப்ரதிதினம் | தினந்தோரும் |
| த்வத் போகேன | உன்னுடைய உபயோகத்தினுல் |
| ரிக்த குஹரம் | காலிசெய்யப்படும் இந்த சிமிழை |
| விதி: | ப்ரம்ஹாவானவர் |
| பூயோபூய: | திரும்பத்திரும்ப |
| தவ க்ருதே | உனக்காக |
| நிபிடயதி | நிரப்பிவைக்கிறுர், என்பது |
| நூனம் | நிஜமே |

தாயே! இந்த சந்த்ரமண்டலமானது களங்கமாகிற கஸ்தூரியுடனும் சந்த்ர பிம்பம் மாதிரித் தோன்றும் பன்னீருடனும் கலைகளா

கிற பச்சைக்கர்ப்பூரப் பொடிகளோடும் நிரம்பிய மரகதச் சிமிழாக இருக்கிறது. இப்படி உன்னுடைய ஸ்னனத்திற்காக அதில் வைக்கப்பட்டிருக்கும் ஸாமக்ரிகளை நீ தினந்தோறும் உபயோகிப்பதினல் காலிசெய்யப்படும் இந்த சிமிழை ப்ரம்ஹாவானவர் திரும்பத் திரும்ப உனக்காக நிரப்பிவைக்கிருர்.

1. கஸ்தூரி, பன்னீர், பச்சைக்கர்பூரப்பொடி இவையெல்லாம் அம்பாளுடைய ஸ்நானத்ரவ்யங்கள். இவைகளையுடைய பெட்டியைத் தான் சந்த்ரமண்டலம் என்று நாம் நினைப்பது. களங்கம் கஸ்தூரி மாதிரி கருப்பு நிறமானதாலும் சந்த்ர பிம்பமானது உருட்சியான பெட்டிக்குள்ளிருக்கும் பன்னீர் போல் தளதளவென்றிருப்பதாலும் சந்த்ரகிரணங்கள் பச்சைக்கர்ப்பூரப் பொடிபோல் வெள்ளையாயிருப்பதாலும் இந்த உபமானம் ஸரியாக இருக்கிறது.

2. சந்த்ரமண்டலமானது ஒரு பக்ஷத்தில் குறைந்துகொண்டும் மற்றொரு பக்ஷத்தில் வளர்ந்துகொண்டும் வருவதை இம்மாதிரி வர்ணிக்கப்பட்டது. பௌர்ணமியின்போது மேலே சொல்லிய வாஸனைத்ரவ்யங்கள் நிறைந்த பெட்டியாக இருக்கும் சந்த்ர மண்டலத்திலிருந்து அம்பாள் தினம் தன்னுடைய ஸ்நானத்திற்காக அந்த த்ரவ்யங்களை உபயோகித்து வருவதால் அவை தினம் குறைந்துகொண்டு வருவதாகவும் பிறகு அதைக் கொஞ்சம் கொஞ்சமாக ப்ரம்ஹா நிரப்பிக்கொண்டு வருவதாகவும் சொல்லப்பட்டது.

पुरारातेरन्तःपुरमसि ततस्त्वच्चरणयोः
सपर्यामर्यादा तरलकरणानामसुलभा ।
तथा ह्येते नीताः शतमखमुखाः सिद्धिमतुलां
तव द्वारोपान्तस्थितिभिरणिमाद्याभिरमराः ॥ ॥ ९५ ॥

புராராதே ரந்த: புரமஸி ததஸ் த்வச்சரணயோ:
ஸபர்யா மர்யாதா தரளகரணுனும் அஸுலபா |
ததா ஹ்யேதே நீதா: சத மக முகாஸ் ஸித்திம் அதுலாம்
தவ த்வாரோபாந்தஸ்திதிபிரணிமாத்யாபிரமரா: ||

| | |
|---|---|
| ஹே பகவதி | அம்மணி ! |
| த்வம் | நீ |
| புராராதே: | த்ரிபுரஸம்ஹாரியான பரமசிவனுடைய |
| அந்த: புரம் அஸி | பட்டமஹிஷியாக இருக்கிறாய் |
| அத: | அந்தக் காரணத்தால் |
| த்வச் சரணயோ: | உன் பாதங்களுடைய |
| ஸபர்யா மர்யாதா | பூஜாப்ரகாரமானது |
| தரளகரணாநாம் | சஞ்சலமான சித்தத்தை யுடையவர்களுக்கு |
| அஸுலபா | ஸுலபமாய்க் கிடைக்கக்கூடியதில்லை |
| ததாஹி | அதனால்தான் |
| ஏதே சதமகமுகா: அமரா: | இந்த இந்த்ரன் முதலிய தேவர்கள் |
| தவ | உன்னுடைய |
| த்வாரோபாந்தஸ்திதிபி: | வாசற்படியின் ஸமீபத்திலிருந்துகொண்டிருக்கிற |
| அணிமாத்யாபி: (ஸஹ) | அணிமா முதலிய அஷ்டஸித்திகளோடு |
| அதுலாம் ஸித்திம் | நிகரில்லாத மனோரதஸித்தியை |
| நீதா: | அடைய நேரிட்டது. |

தாயே! நீ த்ரிபுராந்தகனை பரமசிவனுடைய பட்டமஹிஷியாக இருப்பதால் உனது பாதபூஜையானது சபல சித்தமுடையவர்களுக்கு கிடைக்கக்கூடியதில்லை. அதினால்தான் இந்த்ராதி தேவர்கள்கூட உன்னுடைய க்ருஹத்தின் வாசற்படியின் ஸமீபத்திலிருந்துகொண்டு காவல்புரியும் அணிமாதி ஸித்திகளுடன் ஸமமான ஸ்திதியை உடையவர்களாய் அந்த வாசற்படியின் ஸமீபத்திலேயே இருக்கும்படி நேரிடுகிறது.

1. ஸாதாரண ராஜாவின் ஸ்திரீயைக்கூட சஞ்சல சித்தமுடையவர்கள் போய்ப்பார்ப்பதற்கு முடியாது. அதிலும் த்ரிபுராந்தகனை பரமேச்வரனுடைய பட்டமஹிஷியான அம்பாளை அம்மாதிரியானவர்கள் பார்க்கவே முடியாது என்பதைச் சொல்லப்பட்டது.

2. அம்பாளுடைய சிந்தாமணிக்ருஹத்தின் ஒன்பதாவது வாசலில் அணிமாதி ஸித்திகள் எப்போதும் இருந்துகொண்டு காவல் புரிவதாகவும் அவர்களுடைய உத்திரவு இல்லாமல் ஒருவரும் உள்ளே போக முடியாதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த்ரன் முத

ஷிய தேவர்கள் வந்தாலும் அவர்கள் இந்த்ரிய நிக்ரஹமில்லாமல் சபலசித்தர்களாக இருக்கிறபடியால் அவர்களை உள்ளே போகக் கூடாதென்று தடுத்து அவர்களையும் (தங்கள் மாதிரி) வாசற்படியிலி ருப்பவர்களாகச் செய்துவிடுகிறார்கள். அதைத்தான் இங்கு சொல் லப்பட்டது. இருவர்களுக்கும் வித்யாஸமென்னவென்றால் அணி மாதிஸித்திகளுக்கு த்வாரஸ்தானமானது ஏற்பட்ட இடமாக இருக் கையில் இந்த்ராதிகளுக்கு அதைத்தாண்டிப்போக யோக்யதையில் லாதபடியால் அங்கேயே நின்றுவிடும்படியாக ஏற்பட்டது.

3. அப்படியிருந்தும் அந்த த்வாரஸ்தானத்திலிருப்பதே மிகவும் சிலாக்யமான பதவியென்று சொல்லப்பட்டது. அதாவது அங்கேவந்து ஸேவிக்கும் இந்த்ராதிகளுக்கு அஷ்டமஹாஸித்திகள் அம்பாளுடைய பூஜையின் பலனாகக் கிடைத்தனவென்பதாக அர்த்தம்.

कलत्रं वैधात्रं कतिकति भजन्ते न कवयः
श्रियो देव्याः को वा न भवति पतिः कैरपि धनैः ।
महादेवं हित्वा तव सति सतीनामचरमे
कुचाभ्यामासङ्गः कुरवकतरोरप्यसुलभः ॥ ॥९६॥

களத்ரம் வைதாத்ரம் கதிகதி பஜந்தே ந கவய:
ச்ரியோ தேவ்யோ: கோ வா ந பவதி பதி: கைரபி தனை: |
மஹாதேவம் ஹித்வா தவ ஸதி ஸதீனாம் அசரமே
குசாப்யாம் ஆஸங்க: குரவகதரோரப்யஸுலப: ||

| | |
|---|---|
| ஹே ஸதீ ! | ஹே பதிவ்ரதாசிரோமணியே ! |
| வைதாத்ரம் களத்ரம் | பிரம்ஹாவினுடைய பத்னியாகிய ஸரஸ்வதீயை |
| கதிகதி கவய: | எத்தனை கவிகள் |
| ந பஜந்தே | அடையவில்லை |
| கோவா | எவன்தான் |
| கைரபி தனை: | கொஞ்சம் ஐச்வர்யமிருந்தால் |
| ச்ரியோ தேவ்யா: | லக்ஷ்மீதேவிக்கு |
| பதி: | புருஷனாக |
| ந பவதி | ஆகிறதில்லை |

| | |
|---|---|
| ஹே ஸதீனும் அசரமே! | பதிவ்ரதைகளுக்குள் முதன்மையானவளே! நீயோவென்றால் |
| மஹாதேவம் ஹித்வா | உன் புருஷனை மஹாதேவரைவிட்டு |
| தவ | உன்னுடைய |
| குசாப்யாம் ஆஸங்க: | (ஸ்தனங்களோடு செய்யும்) ஆலிங்கனமானது |
| குரவகதரோ: அபி | குரவக வ்ருக்ஷத்திற்குக்கூட |
| அஸுலப: | அரிதாக இருக்கிறது. |

தாயே! ப்ரம்ஹாவினுடைய பத்தினியாகிய ஸரஸ்வதியை எத்தினை கவிகள் தான் அடையவில்லை? அதேமாதிரி, கொஞ்சம் ஐச்வர்யமிருப்பவன்கூட லக்ஷ்மீக்குப் பதியாக ஆகவில்லையா? பதிவ்ரதைகளுக்குள் முதன்மையான உன்னைப்பற்றி அந்தமாதிரி சொல்லவேமுடியாது. உன்னுடைய (ஸ்தனங்களோடு செய்யும்) ஆலிங்கனமானது உன் புருஷனை மஹாதேவரைத் தவிர்த்து வேறு ஒருவருக்கும், குரவகவ்ருக்ஷத்திற்குக்கூட, கிடைப்பதில்லை.

1. லோகத்தில் மந்த்ரஜபாதிகளால் வாக்விசேஷத்தையடைந்தவர்களை ஸரஸ்வதீ வல்லபர்களென்றும் தனதான்யஸம்ருத்தியுடையவர்களை லக்ஷ்மீபதிகள் என்றும் சொல்வது வழக்கம். ஆனால் அம்பாளைப்பற்றி இம்மாதிரி ஒரு விஷயத்திலும் சொல்வது கிடையாதாகையால் அம்பாளுடைய பாதிவ்ரத்யமானது அவர்களுடையதைவிடச் சிறந்ததென்றும் வாசாமகோசரமானதென்றும் சொல்லப்பட்டது.

2. ஏற்கனவே வந்த 85வது ச்லோகமாகிய 'நமோவாகம் ப்ரூமோ' என்ற ச்லோகத்தில் அசோகமரமானது உத்தம ஜாதி ஸ்த்ரீகளுடைய பாதத்தால் உதைபட்டால்தான்புஷ்பிக்கும் என்று சொல்லப்பட்டது. குரவகம் என்கிற பருதாணிமரமோ இன்னம் ஸொகுசுடன் கூடியது. அது உத்தம ஜாதி ஸ்த்ரீகளால் ஆலிங்கனம் செய்யப்பட்டால் தான் புஷ்பிக்கும். ஸ்த்ரீயின் ஆலிங்னமானது அவளுடைய பதிக்கே உரித்தானது. அசேதனவஸ்துவான குரவக வ்ருக்ஷத்தை ஆலிங்கனம் செய்வதனல் பாதிவ்ரத்யபங்கம் ஏற்படாது என்று வைத்துக்கொண்டாலும் அந்தப் பேச்சுக்கூட அம்பாள் விஷயத்தில் கிடையாதென்றும் அம்பாளுடைய ஆலிங்கனமானது தன் பதியான மஹாதேவருக்கே கிடைக்குமென்றும்

இருப்பதனுல் அம்பாளை 'ஸதீனும் அசாமே' என்று சொன்னது எவ்விதத்திலும் பொருத்தமுள்ளதாக இருக்கிறது.

3. அம்பாள் தக்ஷப்ரஜாபதியின் பெண்ணுக (தாக்ஷாயணியாக) அவதரித்து பரமசிவனை மணம் புரிந்தபின் ஒரு ஸமயம் தன் தகப்பனுர் தன் புருஷனை அவமானம் செய்ததைத் தாங்கமாட்டாமல் அப்பேர்ப்பட்ட பிதாவினிடமிருந்து வந்த சரீரம் வேண்டாமென்று த்யாகம் பண்ணித் தன்னுடைய உயிரையே விட்டதினுல் அம்பாளுடைய பாதிவ்ரத்யம் ஒப்பு உயர்வில்லாதது என்பது வெளியிடப்பட்டது. அம்பாளுக்கு இதினுலேயே ஸதீ என்று பெயர்.

4. பர்த்தாவானவர் விஷ்ணுவைப்போல் தேஹ ஸௌந்தர்யமுடையவராக இருந்தால் அவரிடம் ப்ரேமையோடிருப்பது ஸஹஜம். பரமசிவனே கோரஸ்வரூபி, ச்மசானத்திலிருப்பவர், உரகபூஷணர், பஸ்மத்தை தரிப்பவர். இப்படியிருந்தும் அவரிடம் அம்பாளுக்கிருக்கும் ப்ரியமும் மரியாதையும் அளவிடமுடியாதிருகையால் அம்பாளுடைய பாதிவ்ரத்யமானது அத்யாச்சர்யமாக இருக்கிறதை 'ஸ்தீனும் அசாமே' என்பதினுல் சொல்லப்பட்டது.

गिरामाहुर्देवीं द्रुहिणगृहिणीमागमविदो
हरेः पत्नीं पद्मां हरसहचरीमद्रितनयाम् ।
तुरीया कापि त्वं दुरधिगमनिःसीममहिमा
महामाया विश्वं भ्रमयसि परब्रह्ममहिषि ॥ ॥ ९७ ॥

கிராமாஹுர் தேவீம் த்ருஹிண க்ருஹிணீம் ஆகமவிதோ
ஹரே: பத்னீம் பத்மாம் ஹர ஸஹசரீம் அத்ரிதநயாம் |
துரீயா காZபி த்வம் துரதிகமநிஸ்ஸீம மஹிமா
மஹாமாயா விச்வம் ப்ரமயஸி பரப்ரம்ஹ மஹிஷீ ||

| | |
|---|---|
| ஹே பரப்ரம்ஹ மஹிஷீ | பரப்ரம்ஹமான ஸதாசிவருடைய ராணியாகிய தாயே ! |
| ஆகமவித: | ஆகம (வேத) ரஹஸ்யங்களைத் தெரிந்தவர்கள் |
| த்வாம் | உன்னை |
| த்ருஹிண க்ருஹிணீம் | ப்ரம்ஹாவினுடைய பார்யையான |
| கிராம் தேவீம் | வாக்தேவதையான ஸரஸ்வதியென்றும் |

| | |
|---|---|
| ஹரே: பத்னீம் பத்மாம் | விஷ்ணுவினுடைய பத்னியான லக்ஷ்மியென்றும் |
| ஹரஸஹசரீம் அத்ரி தனயாம் | ருத்ரனுடைய பார்யையான பார்வதியென்றும் |
| ஆஹு: | சொல்கிருர்கள், ஆனுலும் |
| த்வம் | நீ |
| துரீயா | இவர்களல்லாத நாலாவதாக |
| காZபி | இன்னதென்று வர்ணிக்கமுடியாதவளாய் |
| துரதிகம நிஸ்ஸீம மஹிமா | அடையமுடியாததும் எல்லையற்றதுமான மஹிமையோடு கூடினவளாய் |
| மஹாமாயா | மஹாமாயாஸ்வரூபிணியாய் |
| விச்வம் ப்ரமயஸி | ஸர்வ ப்ரபஞ்சத்தையும் மோஹிக்கச்செய்து சுழலும்படிச் செய்துகொண்டிருக்கிருய். |

தாயே! ஆகமரஹஸ்யங்கள் தெரிந்தவர்கள் உன்னை ஸரஸ்வதியென்றும் லக்ஷ்மியென்றும் பார்வதியென்றும் சொல்லுகிருர்கள். ஆயினும் நீ இவர்களல்லாத துரீய ரூபமுடையவளும், இன்னதென்று வர்ணிக்கமுடியாதவளும் அடையமுடியாததும் எல்லையற்றதுமான மஹிமையோடு கூடினவளுமான மஹாமாயா ஸ்வரூபிணியாய் ஸர்வ ப்ரபஞ்சத்தையும் மோஹிக்கச்செய்து ப்ரமணத்திலிருக்கும்படி செய்கிருய்.

1. அம்பாள் ஸரஸ்வதியுமன்று, லக்ஷ்மியுமன்று, குணியான ருத்ரனுடைய பத்னியுமன்று. ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் இவர்களைக்காட்டிலும் மேலானவரான ஸதாசிவருடைய பத்னியாக இருந்துகொண்டு சுத்தவித்யையில் அடங்கிய மஹாமாயாஸ்வரூபிணியாய் ஸகல ப்ரபஞ்சத்தையும் ப்ரமணம் செய்வதாகச் சொல்லப்பட்டது.

2. 'நிஸ்ஸீம மஹிமா' என்பதனல் தேச, கால, வஸ்துக்களாகிய அளவுகளுக்கு உட்படாதவள் என்று அர்த்தம்.

कदा काले मातः कथय कलितालक्तकरसं
पिबेयं विद्यार्थी तव चरणनिर्णेजनजलम् ।
प्रकृत्या मूकानामपि च कविताकारणतया
कदा धत्ते वाणीमुखकमलताम्बूलरसताम् ॥ ॥ ९८ ॥

கதா காலே மாத: கதய கவிதாலக்தக ரஸம்
பிபேயம் வித்யார்த்தீ தவ சரண நிர்ணேஜனஜலம் |
ப்ரக்ருத்யா முகாஞமபி ச கவிதாகாரணதயா
கதா தத்தே வாணீ முககமலதாம்பூல ரஸதாம் ||

| | |
|---|---|
| ஹே மாத: | தாயே ! |
| கவிதாலக்தகரஸம் | (உனது காலிலிருக்கும்) லாக்ஷாரஸத்தோடு கலந்திருந்த |
| தவ சரண நிர்ணே ஜன ஜலம் | உனது பாதங்களை அலம்பின ஜலத்தை |
| வித்யார்த்தீ | ப்ரம்ஹஞானத்தை அடையவிரும்பும் நான் |
| கதா காலே | எந்தக்காலத்தில் |
| பிபேயம் | சாப்பிடுவேன் |
| கதய | தயவுசெய்து சொல்லு. அந்த ஜலத்தின் மஹிமை என்னவென்றுல் |
| ப்ரக்ருத்யா | இயற்கையாய் |
| மூகாஞம் அபி | ஊமையாக இருப்பவர்களுக்குக்கூட (கேழ்ப்பதற்கும் பேசுவதற்கும் திறமையில்லாதவர்களுக்குகூட) |
| கவிதாகாரணதயா | கவித்வ சக்தியைக் கொடுப்பதினுல் |
| வாணீமுககமல தாம்பூலரஸதாம் | ஸரஸ்வதீதேவியினுடைய வாயிலிருக்கும் தாம்பூலத்தின் ரஸமாக இருக்கும் தன்மையை |
| கதா தத்தே | எப்போது அடைகிறதோ |

தாயே ! பிறவியிலேயே ஊமையாயிருப்பவர்களுக்கும்கூட கவிதாசக்தியை உண்டுபண்ணுவதில் ஸரஸ்வதியின் தாம்பூல ரஸத்திற்கு ஸமமான சக்தியுடையதும் உனது காலில் பூசப்பட்டிருக்கும் லாக்ஷாரஸம் சேர்ந்ததினுல் அந்தத்தாம்பூல ரஸம்போல் சிவந்ததுமான உனது பாதப்ரக்ஷாளன ஜலமானது ப்ரம்ஹ ஞானத்தையடைய விரும்பும் எனக்கு எப்போது கிடைக்குமோ !

1. அம்பாளுடைய பாதப்ரக்ஷாளன ஜலமானது ஸரஸ்வதீ தேவியின் தாம்பூலரஸம் மாதிரி உட்கொள்ளுகிறவர்களுக்கு (அவர்கள் எப்பேர்ப்பட்ட ஊமையாக இருந்தாலும்ஸரி) அபாரமான கவிதா சக்தியைக்கொடுக்கிறபடியால் அது தனக்குக் கிடைக்கும்படி ப்ரார்த்திக்கிருர்.

2. லாக்ஷா ரஸத்தை (செம்பஞ்சுக் குழம்பை) உதடுகளுக்கும் பாதங்களுக்கும் அலங்காரத்திற்காகத் தடவிக்கொள்வது வழக்கம். அம்பாள்காலில் விடப்பட்ட ஜலத்தில் அந்த லாக்ஷாரஸமானது சேர்வதால் அது சிகப்புநிறமுடையதாய் தாம்பூலரஸம் மாதிரி ஆகிறது. அந்த சிகப்புநிறமுள்ள பாத்யத்தை பக்தர்கள் சாப்பிடும் போது அது அவர்கள் வாயில் ஸரஸ்வதியின் தாம்பூலரஸம் மாதிரி தெரிகிறது. அவர்களும் புருஷரூபத்தையடைந்த ஸரஸ்வதீமாதிரித் தோன்றுகிறார்கள்.

3. இங்கு வர்ணிக்கப்பட்டது ஸமயமதத்தின்படியிருக்கும் ஸ்வரூபம். கௌலமதத்தின்படி ஆராதிக்கப்படும் குண்டலினீசக்தியானவள் ஸர்ப்பம்போன்ற ரூபத்தோடு இருக்கிறபடியால் சரணமும் கிடையாது, அதையலம்பிய ஜலமும் கிடையாது.

4. ஆசார்யாள் சில ஊமைகளுக்கு தன் ஹஸ்தத்தை அவர்கள் சிரஸில்வைத்து (ஹஸ்த மஸ்தக ஸம்யோகத்தால்) அவர்களை லகுஸ்தோத்ரம், சர்ச்சாஸ்தோத்ரம் இவைகளைச் சொல்லும்படி செய்ததாகவும் அதினால் அம்பாள் ஸந்தோஷமடைந்து தன்னுடைய பாத நிர்ணேஜன ஜலத்தை அவர்களுக்கு அனுக்ரஹித்ததாகவும் சொல்லப்படும். அந்த ப்ரஸாதத்தைத் தனக்கும் கொடுக்கும்படி இங்கே ப்ரார்த்திக்கிறார்.

सरस्वत्या लक्ष्म्या विधिहरिसपत्नो विहरते
रतेः पातिव्रत्यं शिथिलयति रम्येण वपुषा ।
चिरं जीवन्नेव क्षपितपशुपाशव्यतिकरः
परानन्दाभिख्यं रसयति रसं त्वद्भजनवान् ॥ ॥९९॥

ஸரஸ்வத்யா லக்ஷ்ம்யா விதிஹரி ஸபத்னோ விஹரதே
ரதே: பாதிவ்ரத்யம் சிதிலயதி ரம்யேண வபுஷா |
சிரம் ஜீவன்னேவ க்ஷபித பசு பாசவ்யதிகர:
பராநந்தாபிக்யம் ரஸயதி ரஸம் த்வத் பஜனவான் ||

| | |
|---|---|
| ஹே பகவதி | தாயே ! |
| த்வத் பஜனவான் | உன்னை உபாஸிக்கிறவன் |
| ஸரஸ்வத்யா | ஸரஸ்வதி அவனிடமிருப்பதனாலும் |

| | |
|---|---|
| லக்ஷ்ம்யா | லக்ஷ்மி அவனிடமிருப்பதனுலும் |
| விதிஹரி ஸபத்ன: | ப்ரம்ஹா, விஷ்ணு இவர்களுடைய அஸூயைக்கு இடமாக இருந்துகொண்டு |
| விஹரதே | ஆனந்தமாகக் காலத்தைக் கழிக்கிருன் |
| ரம்யேண வபுஷா | அதிஸுந்தரமான ரூபத்தினுல் |
| ரதே: பாதிவ்ரத்யம் | ரதீதேவினுடைய பாதிவ்ரத்யத்தை |
| சிதிலயதி | தளர்ச்சியடையச் செய்கிருன். |
| சிரம் ஜீவன்னேவ | சிரஞ்ஜீவியாக இருந்துகொண்டு |
| க்ஷபித பசுபாச வ்யதிகர: | பசு, பாசம் இவைகளின் ஸம்பந்தத்தைப் போக்கடித்தவனுய் |
| பரானந்தாபிக்யம் ரஸம் | ப்ரம்ஹானந்தம் என்று சொல்லப்படும் ஸுகத்தை |
| ரஸயதி | அனுபவிக்கிருன். |

தாயே! உன்னை உபாஸிக்கிறவனிடத்தில் ஸரஸ்வதியிருப்பதால் அவன் ப்ரம்ஹாவுக்கு ஸபத்னனுகவும், லக்ஷ்மியிருப்பதால் அவன் விஷ்ணுவுக்கு ஸபத்னனுகவும் இருந்துகொண்டு, ரதியினுடைய பாதிவ்ரத்யத்திற்கும்கூட தளர்ச்சியுண்டாக்குகிற ஸுந்தரரூபத்துடன் சிரஞ்ஜீவியாக இருந்துகொண்டு பசு, பாச ஸம்பந்தங்களிலிருந்து விடுபட்டவனுய் ப்ரம்ஹானந்த ஸுகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிருன்.

1. அம்பாளுடைய கருணையினுல் பக்தனுக்கு வித்யை, ஸம்பத்து, ஸௌந்தர்யம் இவை மூன்றும் அன்யாத்ருசமாக ஏற்படுவதால் அதை இங்கு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

2. வித்யை ஏற்படுவதினுல் அவன் ஸரஸ்வதிக்குப் பதியாகப் போய்விடுவதினுல் ப்ரம்ஹாவுக்கு அவனிடம் அஸூயை ஏற்படுகிறது. அதேமாதிரி, ஸம்பத்து ஏற்படுவதினுல் அவன் லக்ஷ்மிக்கும் பதியாகி விடுகிருன். அதினுல் விஷ்ணுவுக்கு அவனிடம் அஸூயை ஏற்படுகிறது. மேலும் அவனுடைய ஸுந்தரமான ரூபத்தைப் பார்த்து மன்மதனுடைய பத்னியாகிய ரதிக்குக்கூட அவனைச் சேரவேண்டுமென்ற மஹாவிகாரம் ஏற்பட்டு அவளுடைய பாதிவ்ரத்யத்திற்கு மோசம் வந்துவிடும்போல் ஏற்படுகிறது.

3. இப்படி அம்பாளுடைய பக்தன் (எல்லாராலும் விரும்பப்படும் வஸ்துக்களான) வித்யை, லக்ஷ்மீ, ஸௌந்தர்யம் இவைக

ளைப் பூர்ணமாக அடைந்து இந்த லோகத்து ஸுகங்களை நிறைய அனுபவித்து சிரஞ்ஜீவியாக இருந்துகொண்டு பரலோக ஸௌக்யத்திற்கு முடிவாகிய ப்ரம்ஹானந்தத்தையும் இங்கேயே அடைந்து விடுகிறுன் என்று சொல்லப்பட்டது.

4. பசு என்பது ஜீவன், பாசம் என்பது மாயை, அவித்யை. இந்தப் பாசத்திலகப்பட்ட ஜீவனுனவன் பஞ்சபூதாத்மகமான தேஹத்தைத் தான் என்று நினைத்து இந்த்ரியங்கள் மூலமாக வ்யவஹாரம் பண்ணுகிறுன். ஜீவனுனவன் தனக்குப் பாப்ரம்ஹத்தோடு இருக்கும் ஐக்யத்தை அறிந்துகொண்டால் தன்னைக்கட்டிய பாசத்திலி ருந்துவிடுபட்டு தான் பசுவாக இருப்பதிலிருந்து பதியாக ஆகி அந்த பரப்ரம்ஹமாகிய பசுபதியின் ஜ்யோதிஸ் ஸ்வரூபத்தில் மனதை லயம்செய்து ஸர்வோத்க்ருஷ்டமான ப்ரம்ஹானந்த ஸுகத்தை அனுபவிக்கிறுன் என்று சொல்லப்பட்டது.

5. 'சிரம் ஜீவன்னேவ'— எப்போதும் உயிருடன் இருந்து கொண்டு என்று அர்த்தம். இஹலோக ஸுகங்களை அனுபவித்து விட்டு கபிலர், மார்கண்டேயர் முதலானவர்கள் போல் நித்யஸித்தனுகவும், ஜீவன்முக்தனுகவும் ஐஹிகலோகத்தியதான ப்ரம்ஹானந்த ஸுகத்தை இங்கேயே அனுபவித்துக் கொண்டிருக்கிறுனென்று சொல்லப்பட்டது.

6. இப்படி அவித்யையிலிருந்து விடுபட்ட ஜீவன்முக்தர்களுக்கும் (குலால சக்ரப்ரமணந்யாயமாக)குயவன் சக்ரத்தை சுற்றி விட்டால் அது பிறகு தானுகவே எப்படி சுழன்றுகொண்டிருக்குமோ அம்மாதிரி தேஹஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்பட்டது.

'ஸம்யக் ஞானுதிகமாத் தர்மாதீனும் அகாரணப்ராப்தௌ |
திஷ்டதி ஸம்ஸ்காரவசாத் சக்ரப்ரமவத் த்ருதசரீர: ||'

இப்படிப்பட்ட தேஹஸம்பந்தத்தையுடைய ஜீவன்முக்தன் செய்யும் ஸகல கார்யங்களும் பரப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பாளுடைய பூஜைதான் என்பதை 'ஜபோஜல்ப: சில்பம்' என்ற ச்லோகத்தில் சொல்லப்பட்டது.

प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनाविधिः
सुधासूतेश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।
स्वकीयैरम्भोभिः सलिलनिधि सौहित्यकरणं
त्वदीयाभिर्वाग्भिस्तव जननिवाचां स्तुतिरियम्॥ ॥१००॥

ப்ரதீப ஜ்வாலாபி: திவஸகர நீராஜன விதி:
ஸுதாஸூதே: சந்த்ரோபலஜல லவைரர்க்யரசனு |
ஸ்வகீயை ரம்போபி: ஸலில நிதி ஸௌஹித்யகரணம்
த்வதீயாபிர் வாக்பிஸ்தவ ஜனனி வாசாம் ஸ்துதிரியம் ||

| | |
|---|---|
| ஹே வாசாம் ஜனனி | வாக்குகளுக்கு உத்பத்திஸ்தானமாகிய தாயே ! |
| த்வதீயாபி: | உன்னுடையதான |
| வாக்பி: | வாக்குகளால் (செய்யப்பட்ட) |
| தவ இயம் ஸ்துதி: | இந்த உன்னைப்பற்றிய ஸ்துதியானது |
| ப்ரதீப ஜ்வாலாபி: | கைதீவட்டிகளின் ஜ்வாலையினுல் |
| திவஸகர நீராஜன விதி: | (லோகத்திற்கே வெளிச்சத்தைக் கொடுக்கிறவனை) ஸூர்யனுக்கு ஹாரத்தி செய்வதுபோலும் |
| ஸுதாஸூதே: | அம்ருதத்தை வர்ஷிக்கும் கிரணங்களையுடைய சந்த்ரனுக்கு |
| சந்த்ரோபல ஜல லவை: | சந்த்ர காந்தக்கல்லில் (அவனுடைய கிரணங்கள் படுவதனுலுண்டாகும்) ஜலத்துளிகளால் |
| அர்க்ய ரசனு | அர்க்யப்ரதானம் செய்வதுபோலும் |
| ஸ்வகீயை: அம்போபி: | தன்னுடைய ஜலங்களாலேயே |
| ஸலிலநிதி ஸௌஹித்ய கரணம் | ஜலத்துக்கு நிதியாகிய ஸமுத்ரத்திற்கு (தர்ப்பணம் முதலியவைகளால்) த்ருப்தி செய்வதுபோலும் இருக்கிறது. |

தாயே! உன்னுடைய வாக்குக்களால் இயற்றப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தினுல் உன்னை நான் ஸ்துதிப்பதானது, கைதீவட்டிகளின் ஜ்வாலையினுல் ஸூர்யனுக்கு ஹாரத்தி செய்வதுபோலும், அம்ருதத்தை வர்ஷிக்கும் கிரணங்களையுடைய சந்த்ரனுக்கு சந்த்ர காந்தக்கல்லின் ஜலத்துளிகளால் அர்க்ய ப்ரதானம் செய்வதுபோலும், ஜலநிதியாகிய ஸமுத்ரராஜனுக்கு அவனுடையதான ஜலங்களாலேயே தர்ப்பணம் முதலியவைகள் செய்து த்ருப்திப்படுத்துவதுபோலும் இருக்கிறது.

1. இந்தக்கடைசி சுலோகத்தில் ஆசார்யாள் தான் இந்த ஸ்தோத்ரத்தை அம்பாளுடைய அனுக்ரஹத்தின்பேரில் செய்ததாக வும் அதில்தான் ஒருவிதமான கௌரவமும் பாராட்டவில்லையென் றும் தன்னுடைய விநயத்தை வெகு அழகாக வெளியிட்டிருக்கிறார். அம்பாளுடைய வாக்குகளால் செய்யப்பட்ட ஸ்தோத்ரமும் அம்பா ளுடையதுதானே, அதில் செய்தவன் தான் என்று நினைப்பதற்குக் காரணம் யாதொன்றுமில்லையென்பதை அதற்கு மிகவும் பொருத்த மான உபமானங்களுடன் சொல்லி தன்னுடைய ஸ்தோத்ரத்தை முடிவுசெய்தார்.

2. 'ஸ்வகீயை:' என்ற பதத்தை ஸூர்யன், சந்த்ரன், ஸமுத்ரம் இந்த மூன்று இடத்திலும் சேர்க்கவேண்டும். தீவட்டி யின் ஜ்வாலையும் ஸூர்யனுடையதுதான். சந்த்ரகாந்தக் கல்லின் ஜலத்திற்காதாரமான கிரணங்களும் சந்த்ரனுடையதுதான். எவ்வித ஜலத்திற்கும் உத்பத்தி ஸமுத்ரத்தில்தான். அதேமாதிரி ஸகலமா ன வாக்குகளுக்கும் அம்பாள்தான் ஜனனீ என்று சொல்லப்பட்டது.

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:



ஸ்ரீ ஜகத்குரு சரணாரவிந்தாப்யாம் நம:



சுபமஸ்து.



அனுபந்தம்

உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

வீரை

கவிராஜபண்டிதரியற்றிய

# ஆனந்த லஹரீ,

# ஸௌந்தர்ய லஹரீ



ஸ்ரீ ஜனார்த்தன பிரிண்டிங் ஒர்க்ஸ், லிமிடெட்.,

கும்பகோணம்.

1936

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:

# ஆனந்த லஹரீ, ஸௌந்தர்ய லஹரீ.

## பாயிரம்.

### விநாயகர் வணக்கம்.

1 மொழிந்தமறை நூலியற்று முகபடா
மணிந்துமுது ஞான தானம்
பொழிந்துதன திணைமணியென் றிருசுடரும்
புனைகளிற்றைப் போற்றல் செய்வாம்
வழிந்துபெரும் புனல்பரந்து வடவரையிற்
றுலகேழு மேழு மொக்க
அழிந்திடினும் அழியாத அபிராமி
பாடல்வளம் அளிக்க என்றே.

### இந்நூல் செய்தற்குக் காரணம்

2 இத்தனைநாள் நீயிருக்க வாயிருக்க
இயலிருக்க அருள்பா டாமல்
மத்தனையா ளுங்கொடியை இப்போதென்
வழுத்துகின்ற வாறென் பீரேற்
பித்தனையா ரேவல்கொள்வார் பித்தொழிந்தா
லுரியவர்கள் அடிமை போலக்
கொத்தனையா ரேவல்கொள்ளார் கொள்ளும்போ
தெவனுலே குழப்ப லாமே.

### அவையடக்கம்

3 யாமளைதன் பெரும்புகழை யாதிமறை
நாவின்வடித் தெடுத்த நூலை
நாமகள் தன் பாடலிதென் றனுர்க்கு
நவில அவர் நகைசெய் தன்றே
பாமகளை யருகழைத்துப் பருப்பதத்திற்
பொறித்திருந்த பரிசு காட்டுஞ்
சேமநிதிப் பாடலையென் புன்கவியாற்
கொள்வதவள் திறமை யன்றே.

முன் இந்நூலை வடமொழியிற் செய்தவரை வியத்தல்

4 அரன்கயிலைப் புறத்தெழுதப் படுநூலை
அருந்தவத்துப் புட்ப தந்தன்
பரந்தவட வரையழுத்த அதைக்கவுட
பஃதருளம் பதித்து முற்றுந்
தரம்பெறுசொல் லமுதெனப்பின் சங்கரமா
முனிக்கருள அந்த மேகஞ்
சுரந்துலகில் வாடுமுயிர்ப் பயிர்தழைப்பச்
சொரிந்ததெனச் சொல்வர் நல்லோர்.

இந்நூலைத் தமிழ்செய்தவர் பெயர்

5 இன்ன தன்மைய நூலி னைக்கவி
ராச ராசவ ரோதய
மன்னன் நம்பிர மாத ராயன்
வடித்த ரும்பொருள் கூறவே
கன்ன லஞ்சிலை வேளெ னுங்கவி
ராச பண்டிதன் வீரையான்
சொல்ந யம்பெறு காவியக்கவி
சொல்வ லென்றுதொ டங்குவான்.

தேவி சரித்திறத் திரம்

6 வடமொழி எனும்பழைய விரிகடல்பி றந்திறைவர்
மணையிடையி ருந்து சிலைமேல்
இடமொடுத வழ்ந்துதன திடுபெயர்ச வுந்தரிய
லகரியென நின்று வளர்மாது
அடலரசு முன்பினுள பலமதப்ர பந்தமெனும்
அடுபகைது ரந்தென் மணிநா
நடமிடுபெ ருங்கவிதை மதகரியொ டும்புவியை
நகரிவலம் வந்த திதுவே.

பாயிர முற்றிற்று.

# ஆனந்தலஹரீ.

சக்தியையன்றிச் சிவத்துக்கோர் செயலில்லை

1 சிவமெ னும்பொருளும் ஆதி சக்தியொடு
சேரி னெத்தொழிலும் வல்லதாம்
இவள்பி ரிந்திடின் இயங்கு தற்குமரி
தரிதெ னமறை யிரைக்குமால்
நவபெ ரும்புவன மெவ்வ கைத்தொழில்
நடத்தி யாவரும்வ ழுத்துதாள்
அவனி யின்கணொரு தவமி லார்பணிய
லாவதோ பரவ லாவதோ.

தேவி பாததூளியே முத்தொழிற்குங் காரணம்

2 பாத தாமரையி னுண்டு கள்பரம
அணுவி னிற்பலவி யற்றினல்
வேத நான்முகன் விதிக்க வேறுபடு
விரித லைப்புவனம் அடையமால்
மூத ராவடிவெ டுத்த னந்தமுது
கணப ணுடவி பரிப்பமேல்
நாத னர்பொடி படுத்து நீறணியின்
நாமு ரைத்தெனவள் பான்மையே.

எல்லா நன்மைக்கும் தேவியே காரணம்

3 அறிவி லர்க்கிதய திமிர மீருமள
வற்ற ஆதவ ரளப்பிலா
எறிக திர்ப்ரபை குழைத்தி ழைத்தனைய
தீவி யாமளைநி னைப்பிலார்
செறிம திக்கிணரி னெழுகு தேனருவி
தெறுக லிக்கருள்ம ணிக்குழாய்
பிறவி மைக்கடல்வி ழாதெ டுப்பதொரு
பெருவ ராகவெண்ம ருப்பரோ.

தேவி பாதமே யாவையுங் கொடுக்கும்

4 தேள னப்புகழ அகில்நி மிர்ந்துநிகர்
செப்பு வாரபய வரதமாம்
பாவ கத்தபிக யத்தொ டுற்றகை
பரப்பி யென்பய மொறுக்குமே
யாவ ருக்குமஃ தரிது நின்பதம்
இரப்ப யாவையும் அளிக்குமால்
மூவ ருக்குமொரு தாவ ரப்பொருளென்
மூல மேதழையு ஞாலமே.

தேவியை வந்தித்தோர் பெறுபயன்

5 மாயன் வணங்கியுன் மால்வடி வங்கொள
வாடும் அரன்துயர் போதாதோ
தூயம தன்தொழ ஆண்வடி வம்புணர்
தோகைகண் வண்டியி றேனேபோல்
மேடவ ழுங்குமு ரூபம தென்சொல
மேலிது கண்டவர் வாழ்வாரோ
நீயதி ரஞ்சகி மோகன வஞ்சகி
நீசெய்வ தொன்றல மாதாவே.

தேவி யருளின் செய்கை

6 தொடுக ரச்சிலைதொ டப்பொ ருமலர்
சுரப்பு நாணிடுவ தைந்துகோல்
அடுப டைத்தலைவ னர்வ சந்தமலை
தென்றல் தேருருவம் அருவமா
முடுகு கொற்றமத னெருவ னிப்புவன
முற்றும் வெற்றிகொள முடிவிலா
நெடும லர்க்கணருள் சிறித ளித்தனைகொல்
நீலி யேகரக பாலியே.

தேவியை என்முன் வந்தருளெனல்

7 மேகலை பொங்கம தாசல கும்பமெ
ழுமலை கண்டிடை சோராநீர்
மாகவ ளங்கெழு நாள்நிறை யம்புலி
வாண்முக மம்புவில் விடார்போ

தேகநெ டுங்கழை பாசமொ டங்குசம்
ஏர்பெற வந்தருள் காபாலி
நீகம லந்திகழ் தாள்வரு டென்றான்
நீர்மையின் விஞ்சிய கோமாதே.

தேவி யோகநித்திரை கொள்ளுந் தானம்

8 ஆரமு தின்கடல் வேலிசெ ழுந்தரு
வாய்மணி பம்பிய தீவூடே
பாராக டம்படர் கானில ருங்கொடை
பாய்மணி மண்டப வீடூடே
கோரசி வன்பர மேசனுன் மஞ்சமொர்
கூர்பரி யங்கமெ னுமேலே
சீரட ரும்பர ஞானமு றுங்களி
தேவர ருந்துவர் பூமாதே.

குண்டலிசக்தி தன்னிடம் விட்டுச் செல்லுமாறு

9 மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு
முதுகளம்விற் புருவநடு மொழிவ தாறு
ஞாலமுமென் புனலும் அனற் பிழம்புங் காலும்
நாதமுறு பெருவெளியு மனமு மாக
மேலணுகிக் குளபதத்தைப் பின்னிட் டப்பால்
மென்கமலத் தாயிரந்தோட் டருண பீடத்து
ஆலவிடம் பருகியதன் மகிழ்ந ரோடும்
ஆனந்த முறும்பொருளை யறிய லாமே.

குண்டலிசத்தி தன்னிடத்தை மீண்டடையுமாறு

10 தாளிணைக் கமல மூறித் தருமமிழ் துடல மூழ்க
மீள அப் பதங்கள் யாவும் விட்டுமுற் பழைய மூலம்
வாளர வென்ன ஆகம் வளைத்துயர் பணத்தினோடு
நாளுமைக் கயற்கண் துஞ்சு ஞானவா னந்தி மின்னே

தேவி இருக்குஞ் சக்கரம்

11 சிவகோண முற்பகர்வ தொருநாலு சத்திநெறி
செறிகோண மத்தொடரு மருவுகோள்
நவகோண முட்படுவ தெழுமூவி ராட்டியொரு

நவில்கோண முற்றதுவும் வலயமாய்
இவாநி ரைத்ததள மிருநாலு மெட்டிணையும்
எழிலாய வட்டமொடு சதுரமாய்
உவமான மற்றதனி தனிமூவ கைக்கணுமென்
உமைபாத முற்றசிறு வரைகளே.

தேவியினது திருவழகை வியத்தல்

12 ஆதி சுந்தரி வடிவினை அயன்முதற் புலவோர்
ஏது கண்டன விடுவது தமையிகழ் இமையோர்
மாத ரிங்கிவள் மகிழ்நரோ டுறைகுவ மெனினேர்
பேதை கொங்கைகள் பெருகுவ மெனமறு குவரால்.

தேவியினது கருணையை வியத்தல்

13 அறக்கிழவன் மனிதன்விர கில்லாக் கொச்சை
அழகிருந்த வூரிலிருந் தரியா னேனும்
உறக்கருணை கொழிக்குமுன தமுத வாரி
ஊடணுகி னவனை அர மகளி ரெல்லாம்
நறைக்குழலுஞ் சரிந்திடஉத் தரீயஞ் சோர
நாணழிய வளைசிதற உடுத்த ஆடை
புறத்துவிழ மயலொடும்பின் தொடர்வ ரென்றாற்
பொற்கொடிநின் புதுமையெவர் புகழ வல்லார்.

தேவிபாதம் ஷடாதாரகிரணங்களின்மே லிருக்குமெனல்

14 பணைபார் புனற்கனலி வளிவான் மனத்திலறு
பதின்னா லொழித்ததமுன் னடைவிலே
இணைநா லொழித்தது இரு கதிரேற உற்றதமு
இணைபோயது எட்டிநெடு கதிர்கள்நா
லணையாநி ரைத்ததுஉறு கதிர்நா லடுத்ததகன்
அளவாயி லக்கமறு வகையினல்
உணரா உரைத்தகதிர் களின்மே லிருக்குமென
துமைபாத செக்கர்விரி கமலமே.

மதுர கவிபாட வேண்டினோர் தியானிக்குமியல்பு

15 உனதுசாற் காலமதி யனைய மெய்யும்
உடல்குழைத்த பிறைச்சடையுங் கரங்கள் நான்கும்

அன்வாத முறுமபய வாத ஞான
அருட்பளிங்கு வடமொடுபுத் தகமு மாக
நினைகிலர்முன் வழுத்திலர்பின் வணங்கா ரெங்ஙன்
நிறைத்தபசுந் தேனும்அடு பாலுந் தூய
கனியுமென மதுரம்விளைந் தொழுகு பாடற்
கவிதைபொழி வதுகயிலைக் கடவுள் வாழ்வே.

இன்பக்கவிதை பாடவேண்டினோர் தியானிக்குமுறை

16 வாரின்ப முலைமலை மடந்தைகவி நாவலர்
மனக்கமல வனமலரநீள்
தேரின்ப இளவெயில் தழைக்கும்ப்ர பைச்செய்ய
செவ்விநிற முணரும்உரவோர்
தாரின்ப நறவொழுகு சுருளோதி இருள்விரவு
தவளநிற வாணிகலைதேர்
பேரின்ப மதுரவலை எறியமுத கவிதைகொடு
பேருலகை மகிழ்விப்பரே.

காவியம் செய்யவேண்டினோர் தியானிக்குமியல்பு

17 இந்துசிலை யைப்பிளந் துண்ணிறம் வகுத்தனைய
எழில்வசனி யாதி மடவார்
அந்தஇணை நால்வர்புடை சூழமலை மங்கைதனது
அருணவடி வுணர அறிவோர்
கொந்தவிழ விரிதவள மலர்மங்கை முககமல
கோலபரி மளக விதையாற்
செந்தமிழின் வடகலையின் முதுமொழிக் காவியத்
தெளிபாடல் செய்யு மவரே.

மகளிர் வசியம் வேண்டினோர் தியானிக்குமியல்பு

18 உனதுநிற மெனுமிளைய கதிரிரவி வெயில்முழுகும்
உலகடைய வெனநினைகுவோர்
வினைகெழுமு கொலைமறலி அனையவிழி உருவசிமுன்
விரவுமர மகளிர் விழைவோர்
அனவர மெனதமுது பொழிகவியும் உனதருளும்
எனதுடலும் உயிரும் உயிர்சூழ்

மனமுமதி னுணர்வும்வரு களியுமென நினைவுருக
மலையரைய னுதவு மயிலே.

மோகிப்பிக்க வேண்டினோர் தியானிக்குமியல்பு

19 ஆதி விந்துவை முகமென இணைமுலை
கீழி ரண்டதன் வடிவென அருகுதாழ்
கோத றுஞ்சுட ரெழஅழ கொழுகுக்ரி
கோண மொன்றென உனதெழி லிரதிதோய்
காத லன்கலை தமதிட நினைபவர்
காணு மங்கையர் கலைகொள லரியதோ
ஓதி லிங்கிரு சுடர்முலை யனையவு
லோக மங்கையை மயல்செய்வர் கமலையே.

விஷமுஞ்சுரமுந் தீர்க்கவேண்டினோர் தியானிக்குமியல்பு

20 ஆட லம்பிகை இமகர சிலைவடி
வாளு நெஞ்சினுள் வழிவுறு கிரணமேல்
ஓடி யெங்கணும் உடல்பெரு கமிழ்தென
ஊடெ ழும்ப்ரபை தமதிடம் உணர்குவோர்
நாட வுங்கொடு விடமொரு கலுழனை
நாடும் வெங்கொலை அரவென முறியுமேல்
மூட ருஞ்சுரம் விழிபொழி அமுதினின்
மூழ்க என்பொடும் அழலுடல் குளிருமே.

சமாதியும் நிட்டையு முடையோர் தரிசிக்கு மியல்பு

21 ஆன மின்கொடி போலுமென் முண்டகம்
ஆறின் மண்டல மூவகை யின்கணோர்
பானு அம்புலி தீயின் நிறங்கிளர்
பான்மை கொண்டித ழாயிர கஞ்சநீள்
கானி லுன்களி ஞான முறுங்கலை
காழ்ம லங்களின் மூவகை போன்றியே
போன சிந்தையின் மாயை யொழிந்தவர்
போத மின்புறு மாதியொ டந்தமே.

தேவி விரைந்து வரங்கொடுத்தல்

22 பேரு றுங்கயி லாசன்ம கன்பெறு
பேர னன்புறு பேரனெ னுஞ்சொலால்

வாரம் அன்பொடு பார்வை வழங்கெனை
வாய்திறந்திட ஓடிவ முங்கினுய்
வேரி முண்டகன் மான்மகு டங்களின்
வீச ரும்பரபை தீபஃஉ வந்ததாள்
சேரு நன்பெரு வாழ்வும்வ ழங்குவை
தேட ருஞ்சிவ மாயம தங்கியே.

அர்த்தபாகமா யிராத தேவியைச் சிறப்பித்தல்

23 ஆதி சங்கரர் பாதியு டம்பினி
தாளு மம்பிகை பாதியும் விஞ்சுமோ
நீதி யன்றென நாயகர் பங்கையு
நீக வர்ந்தனை யாலவ ரெங்குளார்
சோதி செங்கதிர் மேனிநி றைந்தது
தூய கண்களு மூவகை கொங்கையோ
ஈதி ரண்டுஉடல் கூனுமி ளம்பிறை
ஏர்பொ ழிந்தது நீண்முடி யெங்குமே.

தேவி புருவத்தால் ஏவுதலை வியத்தல்

24 ஆதி முண்டகன் மால்சிவ னண்டர்ம
கேச னந்தச தாசிவ னைந்துபேர்
மேத குந்தொழில் போலவ னைந்தருள்
வீறும் அங்கு அதன் ஊறலு முண்டென
யாது மின்றியு மேனியொ டெங்கணு
மாயை தந்தது ஞானமிரங்குமோர்
நீதி யுந்திரு வேபுரு வங்கொடு
நீசொ லிங்கித ஏவல்பு ரிந்ததே.

தேவி பாத பூசை மகிமை

25 மூவ ருக்குமு தற்பி றப்புநின்
முக்கு ணக்கட லென்றுமுன்
சேவ டிக்கணி ருப்பர் சென்னிகு
வித்த செங்கைபி ரிக்கிலார்
பூஎ டுத்தவர் சென்னி வைத்திடு
போத முற்றவர் அம்மைநின்

காது லர்ப்பொறி தாளில் வைக்கவு
மூவர் சென்னிக ளிக்குமே.

தேவி மங்கலநாண் சிறப்பு

26 வேத ரஞ்சகன் மால்பு ரந்தரன்
வேக சண்டகு பேரனோடு
ஆதி எண்திசை பாலர் பொன்றவும்
ஆதி யந்தமி லாததோர்
நாதர் பொன்றில ரேதுன் மங்கல
நாணு றுந்திற மாதலால்
நீத ழைந்தது யோக மம்பிகை
நீலி யென்பது பாவமே.

என்னை அளித்தல் வேண்டுமெனல்

27 மொழிவ துன்செபம் முத்திரை பாணியின்
முயல்வ தெங்கு நடப்பன கோயில்சூழ்
தொழில்அ ருந்துவ முற்றும்உன் ஆகுதி
துயில்வ ணங்கல்க ளிப்பன யாவுநீ
ஒழிவ றுங்களி என்செயல் யாவையும்
உனது நன்சப ரிச்செய லாகவே
அழிவ றும்பதம் வைத்தருள் பேரொளி
அளிவி ளைந்துக ளிப்பெழு நாதமே.

தேவியினது தோட்டின் சிறப்பு

28 பிரம னிந்திரன் முற்பிற தேவர்க ளுமெலாம்
நரைபெ ருந்திரை யற்றநல் லாரமு தேகொலாம்
ஒருவர் தங்கிலர் நின்சிவ னுண்விடம் வாழ்வன்மாது
இருபெ ருங்குழை யிட்டபொன் னோலையின் வாசியே.

ஏவலாளர் மங்கல மொழி

29 முதுமறைசொ லிளவனிதை அயனொடரி குலிசனுமே
முறைபணியு நெறியி னிடையே
பதறியுன தருகுவரும் அரனையெதிர் கொளஉனது
பரிசனமு னடிவ ளமையால்
இதுபிரமன் மகுடம் அரி மகுடமிது குலிசன்முடி

இதுகடினம் இடறும் இருதாள்
சதிஅமா அமரவழி விலகிவர வாஎமது
கடவுளெனு மொழித ழைகவே.

தியானிப்போர் அடையுந் தன்மை.

30 அம்மேநின் மெய்ப்பிரிவாம் அணிமாதி தொழுமழியா
இம்மேனி தம்மேனி யெனத்தெளிந்து பாவிப்பார்
செம்மேனி அரன்வாழ்வுஞ் சிதைவதெனப் புறக்கணித்து
வெம்மேனி ஊழியனல் தீபமிட விளங்குவார்.

தேவி வித்தை வந்தவாறு

31 பசுபதிதன் நீதிகொண் டறுபத்து நாலுபல
கலைஞான முங்க ருணையால்
வசிவற நெடும்புவன மாயையின் மயக்கியதன்
வழிவரு பெரும்ப யனெலாம்
இசைபெற விளைத்ததுவும் பின்னுமுன தேவலால்
இணையிலுன தாக மமெலாம்
விசைபெற விளைத்தவையும் இதுதர அளித்ததுவும்
விமலையுன துரிமை யலவோ.

தேவியினது மூல மந்திரம்

32 அரியதா குஞ்சிவம் சத்திமதன் அவனிபின்பு
ஆதித்தன் மதிம தனவேள்
பெருகுவான் இந்திரன் பின்புபரை மதனன்மால்
பேசின்முக் கண்ட மடைவே
உரியதாம் அந்தத்தின் மாயைமும் முறையமைத்
துறுபொழுக் தடைய உணர்வால்
தெரியினு மத்திஙெடு முனதுறுப் பாமென்று
செப்புநான் மறைகள் உமையே.

அம்மந்திரத்துட னெழுத்துக்கள் கூட்டிச் சேபிக்கு முறைமை

33 மோக போக விழைவி னர்உன்
மூல வித்தை தன்னின்முன்
ஞக மாரன் யோனி பொன்ன

ணங்க மைத்து நெய்யினுல்
யோக மார்சி வத்த ழற்குள்
ஓம முற்று விமலையே
தியாக மாம ணிக்கொ டக்க
வலய முட்செ விப்பரே.

சத்திவடிவுஞ் சிவன்வடிவும் ஒன்றெனல்

34 இருசுடர் மூலத்துணைச் சிவன்வடிவு நீயதனை
யானும்நவ மாக நினைவேன்
உருவுநிறை தன்னிலள வொத்தபர மானந்தம்
உடையபர னுடுப ரையுமாய்
மருவுமினி தாமுங்கள் கூட்டமது சேடமு
மறுத்ததனை யுடைய துவுமாய்
அருகிலிரு வர்க்குமொரு பொதுவாகி நிற்குங்கொல்
அழிவற்ற ஞான முதலே.

இது அதன்கருத்தை வெளிப்படுத்தல்

35 மனமுநீ வெளியுநீ வளியுநீ கனலுநீ
மற்புனலு நீபு வியுநீ
நினைவிநீ பரமற வளர்ந்தொளி பாந்துவிடின்
நீயன்றி யொன்று முளதோ
உனதுமா ஞானவா னந்தவுரு வைப்புவன
உருவென வகுத்த ருளவோ
அனையுமாய் மகவுமா மாறுபோல் நீசத்தி
அருணவடி வாய துமையே.

ஆக்கினைச் சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

36 அருளுமுன தாக்கினைத் திகிரிக்கு ளுட்பட்டு
அருக்கன்மதி யனைய வடிவாய்ப்
பருவமுதிர் பாசின் மயத்தொடுறு பான்மையாம்
பரமசிவ னைப்ப ணிகுவாம்
ஒருபொழுதி லிப்பரம சிவனையெழு கதிர்மதிய
ஒளிகடந் தொளிரு மொருபாற்

பெருகுபா மானந்த மிழைவொளி நினைப்பதுகொல்
பெறுமுத்தி சத்தி யொளியே.

விசுத்திச் சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

37 இறைவிநின் விசுத்தித் தலத்திடை பளிங்குநிற
எழிலொடுல கருடங் கையாய்
உறையுமொரு சிவனையு மவன்போலு மாரம்பம்
உடையவனை யும்ப ணிகுவாகும்
நிறைமதி யொளிக்கொத்த நெறியேகு மும்மதொளியின்
நிலவுண்டு பசிக ளைவதோர்
முறைபெறுச கோரமென வுலகுபா தகவிருள்
முடித்துக் களித்து றையுமே.

அனுகத சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

38 முன்னைத் தபோதனர்த மிதயமா னதவாவி
முதுஞான முளரி நறவார்ந்து
அன்னத்தின் வடமொழிப் பெயர்பெற்று மொழிபயிலும்
அறுமூன்று விஞ்சை விரிவாற்
பன்னப் பொதிந்ததீ வினைநீரில் நற்குணப்
பால்பிரித் துண்டு களியா
மன்னப் படுஞ்சிறைப் புள்ளிணையை நாடொறும்
வழுத்துது மலர்க்க மலையே.

மணிபூரக சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

39 நிலைபெறு சுவாதிட் டான
நின்சிவ அனலு நீயும்
இலகிய தன்மை நெஞ்சத்
திறைஞ்சுவம் உரைக்க மாட்டேம்
உலகமப் பார்வை செந்தீக்
குருகில்நின் கருணை பொங்கி
அலையெறி யமுதப் பார்வை
அளித்தினி தருளு மம்மே.

சுவாதிட்டான சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

40 விரித்தவிருள் விழுங்குசத்தி மின்னெடும்பன்

மணியிந்த்ர வில்லி னேடுந்
தரித்தமறை பரவுசிவ தபனகதிர்
எறிப்பவதிற் றழன்று தீயிற்
புரித்துலகங் குளிரவொளி தழைத்தொளிரப்
பொழியமுத தாரை மாரி
பரித்தமணி பூரகத்துன் பச்சைமுகில்
பணிவனருள் பழுத்த கொம்பே.

மூலாதாரச் சக்கரத்திலே தரிசிக்கு மியல்பு

41 நீநந்து மூலவா தாரத்தி லானந்த
நிர்த்தமிடு மிறைவி நின்னேடு
ஆனந்த தாண்டவம் விளைத்துநவ வடிவுபெறும்
ஆதிசிவ னேப்ப ரவுவாம்
வானந்தொ டுத்துலக மடையப் படைத்திடுமிவ்
வகையின் புணர்ச்சி யலவோ
ஞானங்கொ டனைதந்தை யெனவுலகு தெளிவுற
நடத்துவது ஞான வொளியே.

ஆனந்தலஹரீ முற்றிற்று.



உ

ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுர ஸுந்தர்யை நம.

# ஸௌந்தர்ய லஹரீ.

திருக்கூந்தற் புகழ்ச்சி

42 அந்தா மணித்தபனர் பலமணியின் வடிவெடுத்
தமருமுன தம்பொன் முடிமேல்
இந்துகலை நவமணியி னெழுகுபல நிறமடைந்து
இலகுமதி சயவ டிவினற்
சந்த்ரகலை நன்றுநன் றென்பர்சிலர் அன்றன்று
சந்த்ரகலை இந்த நிறமோ
இந்த்ரசிலை இந்த்ரசிலை யென்பர்சில ராதலால்
யாதென வுழுத்த உமையே.

43 அலர்ந்தகரு நெய்தலங் காடெனக் கடைகுழன்று
அறநெய்த் திருண்டு செறிவோடு
இலங்குறு மியற்கைமணம் எண்திசை யளப்பவதில்
இதழ்மூழ்கு நறைவி ன்ழவினற்
பொலன்கொண்முடி யாகண்ட லேசர்பொற் றுணர்விரி
பொதும்பர்மது மலர்ப டிவதோர்
சிலஃம்பளி பாந்தஉன தோதியென் மனத்திருட்
செறிவுதெற அருள்க மலையே.

44 மோதிய வெங்கதிர் மீளவெ ரூண்டிருள்
மூடஒ துங்கிய வாறேயோ
சோதிமு கங்கவி னேறி வழிந்தன
சோரவி டுங்கவர் காலேயோ
ஓதிபி ணைந்து பின்வீழவ கிர்ந்ததன்
ஊடெழு தும்ப்ரபை யாதேயோ
கோதறு சிந்தூர ரேகைவ ளம்பிறர்
கூறுவ தன்றிது மாதாவே.

## திருமுகப் புகழ்ச்சி

45 கூரெயிற்றின் அகஇதழுங் கொண்கர்விழி வரிவண்டுங்
குழற்படிந்த மதுகரத்தின் குழாமுங் கூடிப்
பேரியற்கை மணம்பொதிந்து புன்மூரல் முகையவிழப்
பிறழுமுன தருணமுக கமல மென்றால்
ஓரியற்கை வாடுமிதழ் பொறிவண்டே படிவதுமற்
றோரியற்கை செயற்கைமணம் போது செய்யும்
நீரியற்கை மலர்க்கமல மிதற்குடைந்து பங்கமுறல்
நீதியென்ப தியாதியார் நிகரில் மாதே.

## திருநுதற் புகழ்ச்சி

46 கோதை நீண்முடி கொண்டொளிர் திங்கள்சேர்
பாதி வாள்நுத லென்று படிந்ததோ
ஈது கூடி யிரண்டு நிறைந்ததோ
சித பூரணத் திங்கள் சிறந்ததே.

## திருப்புருவப் புகழ்ச்சி

47 கருவிழிச் சுருப்பு நாண்உன்
கண்மல ரம்பு கன்னற்
புருவவில் நடுவொ ழித்தல்
போன்றது வளைத்துப் போர்மேல்
வருமதன் பிடித்த கைக்குள்
மறைந்தது போலு மென்றால்
திருமகள் பரவு மம்மே
சிலையிது புருவ மன்றே

## திருவிழிப் பகழ்ச்சி

48 ஒருமலர்க்கண் இரவிவலத்
துதித்தருளு நண்பகலும்
ஒருமலர்க்கண் மதியமிடத்
துதித்தருளும் பேரிரவுந்
திருநுதற்கட் பொற்கமலச்
செங்நிறத்தீ விளைத்தருளும்

சிரவுசெக்கர் மாலையுமுன்
　　விழைவகலா விழுப்பொருளே.

49 கோலநகர் விசாலையாய் நிரந்தரகல் யாணியாய்க்
　　குவலயத்தா லயோத்தியாய்க் குலமதுரை தானுய்ச்
சாலஒளிர் போகவதி யாய் அமுத தாரையாய்த்
　　தண்ணளியால் அவந்தியாய்ச் சகவிசையை யெனலாய்
நீலவிழி புடைபரந்து நெடுநகரப் பெயர்கவர்ந்து
　　நீண்டுசேந் தரிபரந்து நிகரொழிக்கு மென்றால்
ஆலவிட மமுதெனக்கொண் டருந்தியவுன் மத்தர்புரம்
　　அதனிலொரு புறங்கவர்த லதிசயயோ தாயே.

50 இருசெவியுண் பலகவிதை
　　யிணையொழுகு பசுந்தேனிற்
பெருகுநவ ரதமருந்திப்
　　பிறழ்ந்திடுமுன் பிணைவிழியாங்
கருநிறவண் டிணைகளிப்பக்
　　கண்டுபொரு தென்னேயோ
வரிநுதற்கண் அளிசிவந்த
　　வளம்பாராய் மலர்க்கொடியே.

51 அரனிடத்திற் பேரின்ப மருளும் அவ னல்லார்பால்
　　அருவருக்கும் அவன்முடிமே லணிநதியைச் சீறும்
பாவுநுதல்விழி அழல்முன்பார்த்திலபோ லதிசயிக்கும்
　　பணியாய பணிவெகுளப் பயந்தனபோ லொடுங்கும்
விரைமுளரிப் பகைதடிந்து வீரதம் படைக்கும்
　　வினவுதுணைச் சேடியற்கு விருந்துநகை விளைக்கும்
இரவுபக லடிபரவும் எளியனைக்கண் டருள்புரியும்
　　இத்தனையோ படித்தனஉன் இணைவிழிகள் தாயே.

52 இகல்பொரக் குழையை முட்டும்
　　இமைமயி ரொழுங்கிற் றாவல்
நிகாறு நித்தர் யோக
　　நீக்கிவெம் போக நல்கும்
சிகரவெற் பரசன் தொல்லைத்

திருமா பென்னுந் தெய்வ
மகுடமா மணிநின் கண்கள்
வயமதன் வாளி தானே.

53 வரிவிழிச் செம்மை வெண்மை
வனப்புறு கருமை மூன்றும்
எரிதெறு கற்ப காலத்
திறந்தமுப் பொருளுந் தோன்றுங்
கருஎனக் குணங்கள் மூன்றின்
காரண மென்னப் பெற்ருல்
அருமறைப் பொருளே உன்றன்
அருளலா துலக முண்டோ.

54 அம்மைநின் கருணை பொங்கி
அலையெறி நயன வேலை
மும்மணி கெழுமுன் தொண்டர்
மும்மலங் களைய மூழ்கச்
செம்மைநன் சோணை யாறு
தெளிகங்கை யமுனை மூன்றுந்
தம்மயத் தொடும்வந் துற்ற
தன்மையீ தென்பர் மிக்கோர்.

55 இணைவிழி யிமையா நாட்டம்
எய்திய தலாத் தோன்றும்
பணைநெடும் புவனம் இந்தப்
பார்வைசற் றிமைக்கு மாயில்
துணையிழந் தழிவ தெண்ணித்
துணிந்தநின் கருணை யென்ருற்
கணையினுங் கொடிய தென்னக்
கடவதோ கடவுண் மாதே.

56 இடம்படர் கொடியே நின்கண்
இருசெவிக் குரைப்ப தேதென்று
அடர்ந்தெழு கயலின் கண்கள்
அடைப்பில பயப்பட் டம்மா
கடும்பகற் கமல வீடுங்

கங்குல்வாய் நெய்தல் வீடும்
அடைந்தனள் கமலை யொன்றோன்
றடைப்பன கண்டு கண்டாய்.

57 நெடியகண் கரிய நெய்தல்
நிறையருட் சலதி யெய்தாக்
கொடியனேன் பிறவித் துன்பக்
குறைகடல் கடந்து மூழ்க
விடினதிற் குறைவ துண்டோ
மெய்த்தவர்க் கொழிந்து ருதோ
கடிநகர் நிலவு காட்டிற்
காயுமே கருணை வாழ்வே.

58 கருங்குழல் நுதற்கட் பின்னற்
கவின்கடைக் கபோலங் தாழ்ந்த
அருங்குழை கடந்த கண்ணின்
அயிற்கடை அனங்க சாப
நெருங்குறத் தொடுத்த ஏவின்
நிமிர்தலை யேய்க்கு மென்றால்
மருங்கில்பொற் றிருவே யாருன்
மதர்விழி பரவ வல்லார்.

திருச்செவிப் புகழ்ச்சி

59 தோகைநின் கபோலஞ் சார்ந்த
துணைநிழற் சுவடுந் தோடும்
ஆகவிவ் வுருளை நான்கின்
ஆனன இரதம் வாய்த்தோ
ஏகநன் புடவி வட்டத்
திருசுட ராழித் திண்தேர்ப்
பாகரைப் பொருது மாரன்
பழம்பகை தீரப் பெற்றான்.

60 வேரி நாள்ம லர்க்குள் வாணி
விலையில் பாட லமுதெலாஞ்
சேர மாம டந்தை நின்செ

விக்கு ஞஅ ருத்தவே
ஆர மாலே முடிய சைப்ப
ஆடி யெற்று குண்டலம்
பூரை பூரை யென்ற சொற்பொ
லிந்த ஓசை பெற்றதே.

திருநாசிப் புகழ்ச்சி

61 இமய மன்னன் மாபில் வெற்றி
இடப தாகை அனையளன்
அமலே யுன்றன் வதன துண்ட
அணிசி றந்த மணியையோ
விமல மன்னு கவினுர் முத்தை
வெற்பில் வல்லி யலர்வதோர்
கமல மன்னு குமிழ ளித்தல்
கண்ட தல்ல என்பதே

திருஇதழ்ப் புகழ்ச்சி

62 இறைவி நின்னி தழ்ச்சி வப்பி
யற்கை யித்தொ டிணைசொனல்
நிறைகொள் கொவ்வை யிங்கி றத்தின்
நீழல் பெற்று விம்பமாய்
உறைதல் கொண்டு நாணு மற்ளுேர்
உவமை யில்லே உண்டெனு
அறைக டல்து கிர்ப்ப மூக்கின்
அன்று சொல்வன் அளியனே.

திருநகைப் புகழ்ச்சி

63 அன்பு முற்றிவடி வாய அம்மைநின
தான னத்துமதி நகைநிலா
நன்பு றத்தமுத மொழுகு மாமதா
நறைகொள் சீதளம யின்றவாய்
இன்பு ளிப்பலது உவட்டு ருதினியெ
னத்தெ விட்டியச கோரம்வான்
முன்ப ரப்புநில வுண்ணு மானது

மூா லுக்குநிகர் மூாலே.

திருவாய்ப் புகழ்ச்சி

64 விள்ள நாவுரை எழுந்தொ றுந்தலைவர்
வீரமும் புகழும் அழகுமே
தெள்ளு பாடல்மது ரம்ப ழுத்தனைய
செய்ய கேழொளிவ னப்பினல்
அள்ளல் மாமலரை விட்டு வாணியுனது
அருண நாவுறைய வெள்ளையாய்
உள்ள மேனியுமெ னம்மை நீயருள
உன்னி றம்பெறுவ தொத்ததே.

5 அற்றையருட் சிவசேடஞ் சண்டனுண
அது பொரு தாவல் தீரக்
கற்றைமலர்க் குழலுமைநின் கருப்பூர
சகலமதிச் சகலம் போல
உற்றதிருத் தம்பலத்தி னொருசகல
மேனுமினி துண்டு வாழப்
பெற்றிலரேல் அமரரெனும் பெயர்பெறவும்
இருந்தனரோ பிழைப்பில் விண்ணோர்.

66 பசுத்தமலர்க் கொடிகருணை பழுத்தனைய
கொம்பேநின் பரமர் பொற்றோள்
விசைத்தொழிலைக் கலைவாணி தனிற்பாடிப்
பாடியவண் மெலிவ தல்லால்
அசைத்திலர்பொன் முடியுனது மதுரமொழிக்
கசைத்தனரென் றதற்கு நாணி
இசைத்தொழிலைக் கைவிட்டாள் எழில்வீணை
உறையிலிட்டா ளேது செய்வாள்.

திருச்சுபுகப புகழ்ச்சி

67 மகவாசை யாலிமைய மலையரையன்
மலர்க்கைதொட மனத்து ளன்பு
புகஆசை யாலிறைவன் காத்தேந்தப்
பொலிவுறுநின் சுபுகம் போற்றின்:

முகவாசி அரன்படிமக் கலம்பார்க்க
விட்டமுகிழ்க் காம்பு போலுஞ்
சகவாழ்வை இகழ்ந்திதயந் தனித்தவர்தந்
தவக்கொழுந்து தழைத்த கொம்பே.

திருக்கழுத்தின் புகழ்ச்சி

68 வயங்குறுநின் தாளவட மான்மதச்சே
றனையமது மத்தர் மேனி
முயங்குதொறும் எழுபுளக முட்பொதிந்த
பசுங்கழுத்து முகமுங் கண்டால்
இயங்குபுனற் கருஞ்சேற்றின் எழும்வலய
முள்ளரைத்தா ளீன்ற கஞ்சம்
பயம்புகுதல் கடனன்றோ மாற்றிலாப்
பசுமையொளி பழுத்த பொன்னே.

69 செந்திருநின் திருமணத்திற் சேர்ந்தசா
மூன்றழுந்தித் திகழ்வ தென்கோ
மந்தாமத் திமதார மூவகைநா
தமுமெல்லை வகுத்த தென்கோ
கொந்திரையுந் துணர்ப்பூகங் கொழுத்தபசுங்
கழுத்தின்வரைக் குறிகள் மூன்றும்
இந்திரையுஞ் சயமகளுங் கலைமாதும்
புகழ்வதல்லால் யானென் சொல்வேன்.

திருத் தோள் புகழ்ச்சி

70 முன்னமொரு தலைசினவுன் முதல்வரால்
இழந்த அயன் முகங்கள் நான்கால்
உன்னழகுக் கேற்றபசுங் கழைமணித்தோள்
ஒருநான்கும் வழுத்து கின்றான்
இன்னமொரு சிற்றமெழுந் தரிதலையை
எனினுமிவள் தடமென் தோளைச்
சொன்னதலைக் கழிவிலையென் றதிற்றுணிந்த
துணிவன்றோ சுருதி வாழ்வே.

திருக் கைப் புகழ்ச்சி

71 திருமகள்தன் சீறடியால் துவண்டும் அதிற்

செம்பஞ்சாற் செங்கேழ் பெற்றும்
மருமுளரி எழில்படைத்த திதுவோநம்
இயற்கையெதிர் அலர்வ தென்றே
இருகாமு நகைத்தநகை ஒளியையுனது
எழிலுகிரென் றிறைஞ்சி நாளும்
அருமறைகள் வழுத்துகின்ற ததிசயமோ
பேதைமையோ அன்போ அம்மே.

திரு முலைப் புகழ்ச்சி

72 நித்தரொரு பக்கமயில் நிற்களிறுன் வட்டமுலை
நிற்குமெழி லில்த னதுசீர்
மத்தகமெ னத்தனில யிர்த்தொருக ரத்தைமுடி
வைத்துறவு றத்த டவுமால்
முத்தமுலை செப்புவதெ னக்களிறு பிற்குமரன்
முற்புதல்வர் துய்த்த அமுதால்
அத்தலைமை பெற்றனர் அதில்திவலை கிட்டினுமென்
அற்பவுயிர் முத்தி பெறுமே.

73 முக்கணிறை வர்க்குமயல் முற்றஎழின் முற்றும்முலை
முட்டியசு ரப்பொ ழுதுபால்
மக்களிரு வர்க்கருள அக்களிறும் இக்குகனும்
மட்டிளமை முற்று கிலரால்
அக்கடலு தித்த அமு தத்தினையெ டுத்ததில
டைத்திருகண் முத்தி ரையின்வாழ்
செக்கர்மணி மெய்க்கலச மத்தனையுன் வட்டமுலை
செப்பலம லைப்பு தல்வியே.

74 கொற்ற வாரண முகம கன்பொரு
குஞ்ச ரானன நிருதனுர்
இற்ற கோடு திர் ஆர மாலிகை
இதழ்ம ணிப்ரபை தழையவே
பெற்ற பாகபி ஞகை பாணிப்ர
தாப மோடணை புகழெனு
உற்ற தாயினும் உனது பொற்றனம்

உரைப டாநிறை செல்வியே.

75 தருண மங்கலை உனது சிந்தை
தழைந்த பாலமு தூறினல்
அருண கொங்கையி லதுபெ ருங்கவி
அலைநெ டுங்கட லாகுமே
வருண நன்குறு கவுணி யன்சிறு
மதலை அம்புயல் பருகியே
பொருள் ந யம்பெறு கவிதையென்றொரு
புனித மாரிபொ ழிந்ததே.

திரு உரோமரேகைப் புகழ்ச்சி

76 மூல மேநின் மகிழ்நர் கோப
முதுக னற்பொ ருதுவேள்
கோல நாபி மடுவி னிற்கு
ளிப்ப வந்த வெம்மையான்
மேல வாவு தூம ரேகை
வேரொ ழுங்கொ ழுந்தையோ
நீல ரோம ரேகை யென்று
நீள்நி லங்கு றிப்பதே.

77 முளரி மாதுன் முலையி னோடு
முலைநெ ருக்க இடையில்வான்
வெளியில் நீல மோடி யுந்தி
வியன்மு ழைக்குள் நுழையவே
தெளியு நீரில் யமுனை நீவு
சிறுத ரங்க மனையபே
ரொளியின் ஞால மருளு மீது
ரோம ரேகை யென்னவே.

திருநாபிப் புகழ்ச்சி

78 தூய கங்கை நிலைப டைத்த
சுழித னத்து முகையினல்
ஆய துங்க ரோம வல்லி
ஆல வாலம் விரகவேள்

தீய ரும்பும் ஓம குண்டம்
இறைவர் செங்க ணிடைவிடா
மேய கஞ்ச மடுவி னுந்தி
வேறு ரைத்தென் விமலையே.

திருஇடைப் புகழ்ச்சி

79 நரைம டந்தை பரவு மங்கை
தனத டம்பொ ருதுநின்
திரும ருங்கு லறவ ளைந்து
சிறுகி மூவி ரேகையாய்
வரைபி ளந்தொ ரிடிக வைக்குள்
வாழ்ம ரத்தொ டொத்ததால்
உரைக டந்து விடுமுன் மற்றொ
ருறுதி தேட நாடுமே.

80 வம்பைத் தொலைத்துதறி யிறுகிக் கனத்திளகி
வருபுடை நெருக்கி வளர்மாக்
கும்பக் கடாக்களிற் றிணையிணைய உனதுமுலை
கொடிதுகொடி தென்று வெருவா
அம்பொற் றனிக்கமல இறைபொரு திடையென
அழுத்துபூ ணென முனிவரோடு
உம்பர்க்கு முளமருள ஒளிகெழுமி ரேகைமூன்
றுலகமோ தெளிவ துமையே.

திருநிதம்பப் புகழ்ச்சி

81 கொத்துவிரி யலர்சோலை யிமயவெற் பாசன்மெய்க்
குலமலைப் பக்க மெனவாழ்
அத்தனைவி ரிந்தவக லத்தொடுபெ ரும்பாரம்
அடையவுன்நி தம்ப விடையே
எத்தனைபெ ரும்புவனம் இற்றாலும் அழிவிலை
இதற்கெனச் சேம நிதிபோல்
வைத்தது பரந்திடங் கொண்டுவகை யிடமற
வருத்தவோ மதுர அமுதே.

## திருத்தோடை முழந்தாள்களின் புகழ்ச்சி

82 பொற்கதலி புறங்காட்டுந் துறங்கால் வேழப்
புழைக்கைதடிந் துஞ்சிவனைப் பணிந்து தேய்ந்த
வற்கடின முழந்தாளிற் கும்பஞ் சாய்த்து
மணிமருப்பைக் கனதனத்தால் வளைத்து மம்மே
நிற்கடின கோபமம ராமை கண்டோ
நித்தாதன் தொக்குரித்த துடுத்த நேயம்
பிற்கருதி யிவளுருப்போ டுவமை வீறு
பெற்றநிது என்னுமிந்தப் பெருமை கண்டோ.

## திருக்கணைக்காற் புகழ்ச்சி

83 உம்பர்தொழுந் தொறுமகுடச் சாணை தீட்டி
ஒளிருநக நுனைக்கணையோர் ஐந்தும் ஐந்துஞ்
செம்பொன்மணிக் கணைக்காலாம் இணைப்பொற் றூணி
சேர்த்தன்றோ சிவன்பகைவேள் தீருகின்றான்
அம்பொருபத் தளித்தனையின் றன்று போல
ஐங்கணைதொட் டழியினது பழுதென் றன்றோ
வம்பமருங் கனதனப்பொற் றிருவே உன்றன்
மனவிரகின் செயலொருவர் மதிப்ப தன்றே.

## திருவடிப் புகழ்ச்சி

84 உளமகிழ் மகிழ்நர் சென்னி
உறுநதி விளக்க மாயோன்
கிளர்முடிப் பதும ராகக்
கேழொளி செம்பஞ் சேய்க்கும்
முளரிநின் பதங்கள் வேத
முடியுறப் பதித்த தவ்வாறு
எளியஎன் தலைமேல் வைக்க
இரங்குவ தென்று தாயே.

85 அரியமென் காவில் நீபுக்கு
அசோகினிற் பாத மேற்ற
உரியநம் பதத்தை யீதோ
உறுமெனப் பொருது மெம்மான்

எரியுற மரத்தை நோக்கும்
இயல்பினைக் கேட்டும் யானுன்
வரிமலர்ப் பாதம் போற்றும்
வளமினி தினிது மாதே

86 மறுமட ந்தையை மொழிய நின்பத
மலர்வெ குண்டா னுதலிலோர்
முறைய றைந்திட விழியி னும்பட
முதுப ழம்பகை கருதிவேள்
இறையை வென்றனன் விழியை வென்றனன்
எனமு ழங்கிய குரலெனுதை
அறைசி லம்பெழும் அரவ மென்பதென்
அருண மங்கல கமலையே.

87 இமநெ டுங்கிரி உலவி யுங்கவின்
எழுநி ரந்தா மலருமேல்
அமர்பெ ருந்திரு அருளு நின்பத
அருண முண்டக மனையதோர்
கமல மென்பது பனியில் வெந்திதழ்
கரிய கங்குலின் முகுளமாய்
விமலை யின்திரு மனையெ னும்பெயர்
விளைவ தொன்றல முதல்வியே.

88 பஞ்ச மூத்தினும் வாடு நின்பத
பங்க யத்தினை ஒப்பென
விஞ்சை கற்றவர் வன்பு றக்கம
டத்தை வீணில் வியப்பராம்
அஞ்ச னப்புயல் தங்கை நின்வரர்
அம்மி மீதிலும் வைப்பராம்
வஞ்ச கக்கொடு நெஞ்ச ரத்தனை
வல்ல ரல்லர் நினைக்கினே.

89 ஆற்ற வர்க்கருள் செய்யு மம்மைநின்
அற்பு தப்பத மம்பொன்னாடு
உற்ற வர்க்கருள் பொற்ற ருத்தா
ஊட றிந்தில மென்னவே

முற்று பொற்பர மாதர் கைத்தல
முண்ட கங்குவி வெண்நிலா
நற்றி றத்தொடு நாடி நாடிந
கைக்க வாளுகி ரென்பரே.

90 அன்பினர்இ ரப்பதின்இ ரட்டியருள் செய்யும்
நின்பதத ருத்துணர்கி றைந்தொளிர்வ னப்பாம்
இன்பமுறு தேன்முழுகு மென்னிதய வண்டின்
தன்புளக மெய்க்களி தழைக்கவருள் தாயே.

91 நாடியுன தற்புத நடைத்தொழில்ப டிக்கும்
பேடைமட அன்னமொடு பேதநடை கூறும்
ஆடகம ணிப்பரிபு ரத்தரவம் அம்மே
ஏடவிழ்ம லர்ப்பதமி ரைக்குமறை போலும்.

நாடோறுந் தியானித்துப் பணியுமாறு.

92 மூவர்ம கேசன் முடிகொளு மஞ்சத் தொழிலாயும்
மேவிய படிகத் தனதொளி வெளிசூழ் திரையாயும்
ஓவறு செங்கேழ் விம்பம நின்பத் துருவாயும்
பாவைநி னகலா இறையொடு நின்னைப் பணிவாமே.

பல அவயவங்களின்மேலும் எழுமுள்ளன்பு.

93 ஓதியிருள் மூரலொளி உற்றகுழை வாக
மோதுமுலை யற்பஇடை முற்றுமு னிதம்பம்
ஆதிபா னின்னருள் திரண்டருண மாகு
மாதுநின்ம லர்ப்பதம னத்தெழுதி வைத்தேன்.

செல்வப்புகழ்ச்சி.

94 தூயமதி மரகதச்செப் பொளிர்கலையுங்
களங்கமுநேர் சொல்லுங் காலைக்
காயுமதி தவளகருப் பூரசக
லத்தொடுகத் தூரி போலும்
நீ அருந்த அருந்தவவை குறைதொறுமவ்
விரண்டும் அயன் நிறைத்தல் போலும்
தேயுமது வளருமது திங்களெளி
தோவுனது செல்வ மம்மே.

95 தேவியுன் இல்லஞ் சிவனுறை அந்தப் புரமானல்
யாவ ருனைக்கண் டெய்துவ ரிமையோர் முதலானோர்

ஆவல்கொ டெய்த்தன் வாயிலில் அணிமா திகளாலே
மேவிய சித்திப் பேறுெடு மீள்வா ராஞரே.

கற்புப்புகழ்ச்சி

96 கலைமகளும் பொதுமடந்தை கமலையுமற் றவளே
மலைமகள் நீ கற்புடைய வனிதையெனப் பகருங்
குலமறைக ளெதிர்கொடுநின் குரவினையும் அணையா
முலைகுழையப் புணர்வதுநின் முதல்வால திலையால்.

சத்தி வடிவெல்லாந் தேவிவடிவு

97 வேதியர்க ளயன்நாவில் விஞ்சைமக ளென்றும்
சீதரன்றன் மணிமார்பிற் செழுங்கமலை யென்றும்
நாதரிடத் தரிவையென்று நாட்டுவரெண் ணடங்க
ஆதிபரன் மூலபரை யாமளையுன் மயக்கால்.

பாதோதகத்தின் மஹிமை.

98 செய்ய பஞ்சுகு ழம்பெ ழும்புனல்
செல்வி நின்பத நல்கவே
துய்ய பங்கய வாணி தம்பல
ஊறல் துய்த்தசொல் வாணர்போல்
மையல் நெஞ்சுறு மூம ருங்கவி
வாண ராகிம லிந்ததால்
மெய்ய டங்கலு மூழ்கு முன்கவி
வீறு நாவில டங்குமோ.

அடியார் பெறும் இருமைப் பயன்கள்.

99 சுந்தரிநின் தொண்டர்தமைத் தோய்வதற்கு நாமகளும்
இந்திரையு மலரயன்மா விடருழப்ப இரதியின்கண்
அந்தமில்பே ரழகொடுகற் பழித்துநெடு நாள்கழியச்
சிந்தையுறு பாசம்போய்ச் சிவமயத்தைச் சேர்குவரால்.

தன் வினயத்தை வெளியிடுதல்.

100 ஆதவனுக் கவன்கிரணத் தங்கியைக்கொண்
டாலத்தி சுழற்ற லென்கோ
சீதமதிக் கவன்நிலவி னெழுகுசிலைப்
புனல்கொடுப சரிப்ப தென்கோ
மோதியமைக் கடல்வேந்தை அவன்புனலால்
முழுக்காட்டும் முறைமை யென்கோ

நீதருசொற் கவிகொடுனேப் பாடியுனது
அருள்பெறுமென் நீதி அம்மே.

---

தாமாக உனை நினைவோர் தவமிகுகத் தனமிகுகி
மாமோகப் புன்முறுவல் மனங்கவரக் கடைவிழியாற்
காமாதி பலருகிப்பக் கடம்பலர்க்கே மூறச்சிவனீ
யாமாமென் றயிர்ப்பமயல் அளிப்பரா லரும்பொருளே.

---

சேமநிதி யேஅமுதே தேனேநற் குணக்கடலே
யாமளையே அன்பர்மனத் திருந்துமுரைக் கடங்காத
கோமளமே அம்மேநின் கோகனகத் தாள்வழுத்து
மாமறைபோலென்பாடல் வண்தமிழுங் கொள்வாயால்.

---

வேத நண்பொ ருள் ஆதி சுந்தரி
ஈற டங்கலு மாயமே
ஈத நிந்துவி டாசொ லுங்கவி
ராசபண்டிதன் வீரையான்
நாத ரஞ்சகி தாள்பெ றுந்திரு
நாம மொன்பது நூறுமே
ஓதி னின்பல போக முஞ்சிவ
லோக மும்பெறு வார்களே.

ஸௌந்தர்ய லஹரீ முற்றிற்று.

மங்களம்.

---